அனைத்திந்திய நூல் வரிசை

# சோறு, தண்ணீர்

ஒரிய மூலம் : கோபிநாத் மஹாந்தி

இந்தி வழி தமிழாக்கம் : பானுபந்த்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் – விநியோகிப்பாளர்

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,

41 - பி, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை - 600 098.

ISBN 81-237-0499-2

---

*1993 (சக 1914)*



ரூ. 64.00

Original Title : Danapani (Oriya)
Tamil Translation : Choru, Thanneer

வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஏ-5, கிரீன் பார்க், புது டில்லி - 110 016.

# முன்னுரை

பழங்காலத்து நாடோடிக் கதைகளிலும், காப்பியங்களிலும் இப்பொழுது நாவல் என்று கூறப்படும் இலக்கியம் விதைக்கப் பட்டு முளைத்து, பதினெட்டாம் நூற்றாண்டில் தனக்கே உரித் தான உருவம் பெற்று 19ம் நூற்றாண்டில் இலக்கியத்தில் நன் றாக வளர்ந்து செழிக்க முற்பட்டது. 20ம் நூற்றாண்டில் அது உலக இயலையும் மாறுபாடுகளையும், கொள்கைகளையும் சித் தரிக்கும் ஒரு ரஸமான, முழுமையான, சிருஷ்டியாய் உருப் பெற்று, இப்பொழுதுள்ள பெருமையை நிலைநாட்டிக் கொண் டுள்ளது.

நம் நாட்டிலும், புராணக்கதைகளிலும், புத்த ஜாதகங்களிலும், நாடோடிக் காவியங்களிலும், ஸமஸ்கிருத கவிதைகளிலும் நாவலின் சாயை இருந்தது. ஆனால் இங்கும் 19ம் நூற்றாண்டு வரையில் அது முழுமையைப் பெறவில்லை. அச்சமயம் மேலை நாட்டு இலக்கியமும் அவற்றின் பண்பும், நம் நாட்டில் மணம் பரப்பி, புதுமையைப்புகுத்தி ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தி, நம் நாட்டு இலக்கியத்தின் வசன நடையிலும், காவிய நடையிலும் மாறுபாடுகளையும் உண்டாக்கின. இம்மாறுபாடுகள் காரணமாக நாவல் என்ற இலக்கியம் பிறந்தது. 19ம் நூற்றாண்டில் பாரத மொழிகளில் இந்த இலக்கியம் மெல்ல வளர ஆரம்பித்தது. ஹிந்தியில் வெளிவந்த ஈஷா அல்லா கானின் (1798 – 1803–க்கு நடுவில்) 'ராணி கேதகியின் கதை', 1823 யில் பிரசுரிக்கப்பட்ட பிரமத் நாத் சர்மாவின் (மறுபெயர் பவானி சங்கர் கோபாத்யாய) 'நவபாபு விலாஸ்' ஆகிய இரு நாவல்களைத் தவிர, மராத்தி, ஹிந்தி, மலையாளம், தமிழ், ஒரியா, தெலுங்கு, வங்கம் முதலிய மொழிகளிலும் நாவல் உருப்பெற்றிருந்தது.

1877–78 ல் ஒரியா நாடக இயலின் கர்த்தாவான ராம் சங்கர் ராயின் 'சௌதாமினி' என்ற நாவல் 'உத்கல் மதுப்' என்ற பத் திரிகையில் தொடர் கதையாக வெளிவர ஆரம்பித்தது. ஆனால் அது நடுவில் நின்றுவிட்டது. அதனால் உமேஷ் சந்திர சர்காரின் 'பத்மமாலி' (1888) யைத் தான் ஒரியா பாஷையில் முதல் முழுமை யான நாவலாகக் கருத வேண்டும். நீலகிரி என்ற ஒரியா சமஸ் தானத்தில் 1835ல் நடந்த ஒரு உண்மையான நிகழ்ச்சியை ஆதார மாகக் கொண்டு எழுதப்பட்ட காதல் கலந்த சரித்திர நாவல் இது. கதை, வர்ணனை, அறம், நீதி இவைகளுக்கு அதிக மதிப்புக் கொடுத்து படைக்கப்பட்டிருக்கும் இந்த நாவலிலிருந்து

சமகால சமூக வாழ்வைப் பற்றியும், பழக்க வழக்கங்களைப் பற்றியும் ரொம்பக் குறைவாய்த் தான் தெரிய வருகிறது. இது நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்ட நாவல். எழுத்து நடையும் இடைக்காலத்தில் பிரபலமாயிருந்த அலங்கார காவிய பாணியை ஒட்டியது. இந்த நாவலுக்குப் பிறகு 1891ல் ராம்சங்கர் ராயின் 'விவாஸினி' வெளிவந்தது. இதில் 18ம் நூற்றாண்டில் சமூகத்தில் மிளிர்ந்த பிரச்னைகளையும், முரண்பாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர் கதையையும் பாத்திரங்களையும் உருவாக்கி இருக்கிறார். ஒரிஸ்ஸாவில் மராட்டியர் நடத்திய அநீதிகளும் அக்கிரமங்களும் இந்நாவலில் கதைப் பொருளாய் விளங்குகின்றன. யதார்த்த பூமியில் உயர்வான லட்சியங்களை நிலைநாட்ட முயன்றிருக்கிறார், ஆசிரியர். இந்நூலில் பலவிதக் குறைகளிருந்தும் கூட, ஒரியா இலக்கியத்தின் ஆதிபருவத்தில் நாவலின் எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கையும் ஆசையும் கொள்ள வழிவகுத்தது 'விவாஸினி'. பின்னர் வெளிவந்த வியாஸகவி ஃபகீர் மோகன் சேனாபதியின் நாவலும் கோபால் வல்லபரின் நாவலும் இந்நம்பிக்கையை ருசுப்படுத்தின.

ஒரியா இலக்கியத்தின் வசன நடைக்குப் புதுமையையும், உயிர்ப்பையும் கொடுத்தவர் வியாஸ கவி ஃபகீர் மோகன் சேனாபதி (1843-1918). வசன நடையிலும் காவிய நடையிலும் ஒப்பற்றவராய்த் திகழ்ந்தவர் இவர். கதைகளும் நாவல்களும் இவருடைய கைப்பட்டு ஒளிர்ந்தன. இவர் எழுதிய நான்கு நாவல்களும் ('சமாண்ஆட்குண்ட்' 'லச்மா', மாமு, பிராயச்சித்த) 1898லிருந்து 1916ற்குள் வெளிவந்தன. அதாவது அவருடைய 55லிருந்து 73வது வயதிற்குள் எழுதப்பட்டன. சரித்திர நாவலான 'லச்மா' வைத்தவிர மற்ற மூன்று கதைகளும் ஒரிஸா மக்களின் சாதாரண வாழ்க்கையையும், சமூக நிலைமையையும் ஆதாரமாகக் கொண்டவை. இந்நான்கு நாவல்களையும் படித்தால், அவருடைய கண்கள் மூலம், இரண்டு நூற்றாண்டுகளாக முகலாய, மராட்டிய, ஆங்கிலேய அதிகாரத்தின் கீழிருந்த ஒரிஸாவின் சமூக வாழ்க்கையைப் பற்றியும், கலாசாரம் குறித்தும் தெளிவான சித்திரம் தெரிய வரும். அனுபவங்களும், நினைவுகளும் நிறைந்த வாழ்க்கை என்னும் பள்ளியில் பயின்றவரான ஃபகீர் மோஹனின் திறமை, சுத்தமான ஒரியா சூழ்நிலையில் சரளமான நடையின் உதவியுடன் மனிதனின் தெய்வ-அசுர உருவத்தை தெளிவாக்குகிறது. உலகில் அல்லல்படும் வெவ்வேறு பாத்திரங்களை அவர் கருணையுடனும் தயையுடனும் உருவாக்கியுள்ளார்.

இங்கு அவருடைய திறமையும் விசாலமான உதார மனமும் வெளிப்படுகின்றன. அவருடைய சமூக ஞானமும், நியாயத்திற்காக வழக்கிடும் குணமும் அவரை உயரத்தில் தூக்கி வைக்கின்றன. கடைசி நாவலான 'பிராயச்சித்'தில் 'பணத்தை வீசி எறிந்தால் என்னதான் கிடைக்காது ?' என்று அவர் கேட்கிறார். ஒரு பாவச்செயலை அடிவாரமாகக் கொண்டு எழும்பி வளர்ந்த பண்புச் சுழலில், அந்தப் பாவத்திற்கு வேறு எவ்விதமாவது, வேறு எங்காவது பிராயச்சித்தம் செய்ய வேண்டி வருமோ ? – என்ற கேள்வியை எழுப்புகிறார். இந்தக் கேள்வி இக்காலத்திலும் கேட்கப்படக்கூடியது. இங்கு வாழ்க்கையின் குறிக்கோளைப் பற்றியும் அதை அடையும் வழிகளைப் பற்றியும் பிரச்னையை எழுப்பியிருக்கிறார். அவருடைய அமர சிருஷ்டியான 'சமான் ஆப்குண்ட்'டில் காணப்படும் பாத்திரப்படைப்புத் திறனும், நடையின் மேன்மையும் அவருக்கு ஒரியா நாவல் இலக்கியத்தில் 'கிளாஸிக்' என்ற சிரஞ்சிவியான பதவியை அளித்திருக்கின்றன.

ஃபகீர் மோஹனின் திறமைகளும் கலாரஸனைகளும் ஒளிர்ந்த இதே சமயத்தில் கோபால் வல்லபதாஸ் 'பீமாபுயா' (1908) என்ற நாவலை எழுதிப்பிரசித்தமானார். ஒரிஸ்ஸாவின் ஆதிவாசிகளின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது இந்த நூல். காதல் கதை என்றாலும் ஒரு ஆதிவாசி பூயா ஜாதி வாலிபனுக்கும், உயர்குல அரசிளங்குமரிக்கும் நடுவில் அன்பு என்னும் வலையை வீச வெகு தைரியத்துடன் பின்னி இருக்கிறார். அவருடைய விரிந்த கொள்கைகளும், காதல் நெஞ்சமும் இங்கு தெரிகின்றன. ஆனால் பாத்திரங்களைச் சீர்தூக்கி மதித்தல், சூழ்நிலை வர்ணனைகள், தத்ரூப சித்திரங்கள் ஆகிய நோக்குகளில் இந்நூல் பின் தங்கிவிட்டது. அவருடைய அலங்காரமான மொழிநடையும், காவிய பாணியும் கதையின் போக்கைத் தளரச் செய்து விடுகின்றன. என்றாலும் அவர் கையாண்ட துணிச்சலான கருப்பொருளுக்காக ஒரியா இலக்கியத்தில் சிறப்பான ஓர் இடம் பெறுகிறார். ஆதிவாசிகளைப் பற்றி நாவல் வரைவதில் கோபால வல்லப தாஸ் முன்னோடி என்றால், கோபிநாத் மஹாந்தி இவ்வகை நாவலை முழுமையான பரிமாணங்களுடன் அமைத்தவர் என்று கூறலாம்.

ஃபகீர் மோஹனின் காலத்திற்குப் பிறகு ஒரியா நாவல் இலக்கியம் பலவித மாறுதல்களுடன் முன்னேறி உச்சநிலையை அடைந்தது. 20ம் நூற்றாண்டில் நாட்டினுள்ளும், வெளிநாடுகளிலும் ஏற்பட்ட கலை ஆர்வத்தால் வசீகரப்பட்ட ஒரியா

எழுத்தாளர்கள் தங்கள் நாட்டு பிரச்னைகளைப்பற்றியும், மனிதனின் மனதில் எழும் முரண்பாடுகளைப் பற்றியும் முறையாய் ஆராய முற்பட்டார்கள். கிராம வாழ்க்கையை எதிர்த்து யந்திர வாழ்க்கை எழும்பிய போது, மனிதனின் கொள்கைகளும், நோக்கங்களும் மாறி பலம் குறைய ஆரம்பித்தன. மனப் போராட்டத்தின் காரணமாக மனிதனின் அனுபவங்களும் வெற்றிகளும் வேறு விதமாய் அமைந்தன. ஃபகீர் மோஹனுக்குப் பிறகு பல கவிகள் சிந்தாமணி மஹந்தி, நந்த கிசோர்பள், குந்தளா குமாரி ஸாமத் காந்தகவி லக்ஷ்மி காந்த், கோதாவரீச மிஸ்ர, கோதாவரீச மஹபாத்ர, பிராணகிருஷ்ண ஸாமல், டாக்டர் மாயாதர் மான்சிங், ஞானீந்திர வர்மா, சச்சிதானந்த ராவுத்ராய் முதலியவர்கள் – நாவல் எழுதத் தலைப்பட்டனர். ஆனால் நந்த கிசோரின் 'கனகலதா' (1925), சச்சிதானந்த ராவுத்ராய் எழுதிய 'சித்திரக்ரீவ் (1936), காந்த கவி லக்ஷ்மிகாந்தின் 'கணாமாகு' (1937–41), என்ற வெகு சில நாவல்களைத் தவிரப் பிறவெல்லாம் காலத்தை வென்று, கலை சிருஷ்டியாய்த் திகழும் பெருமையை உடையவையாயில்லை. கவிகளாகப் புகழ் பெற்றிருந்த சிலர் நாவல் எழுதுவதிலும் தங்கள் திறமையை நிலைப்படுத்திக் கொண்டார்கள். அவர்களுள் டா. காலிந்தி சரண் பாணிகிரஹியும் (மாடீர் மணிஷ்', 'லுஹார் மணிஷ்' முக்தா – கடர் க்ஷுதா', 'அமர் சிதா') நித்தியானந்த மஹாபாத்ரவும் ('ஜீயந்தமா மணிஷ்', 'ஹிட்மாடி', 'மங்காஹாட்', 'ஜீவன் லக்ஷ்ய') முன் வரிசையில் உள்ளவர்கள். வாழ்க்கையின் உயர்ந்த கொள்கைகளையும் ஆத்மீக லட்சியத்தையும் அடிப்படையாகக் கொண்ட 'மாடீர் மணீஷ்' (மண் மனிதன்) என்ற நூலும், அன்பின் வேதனையையும், அதன் மனோதத்துவ ஆராய்ச்சியையும் பொருளாகக் கொண்ட 'ஜீயந்தா மணிஷ்' (உயிருள்ள மனிதன்) என்ற நாவலும் ஒரியா இலக்கியத்தில் உயர்ந்த இடம் பெற்றுள்ளன. நகர வாழ்க்கையை ஒட்டி எழுதப்பட்டுள்ள மற்றொரு மனோதத்துவ நாவலான 'வாஸந்தி'யும் இங்கு குறிப்பிடப்பட வேண்டும். ஒரியா இலக்கியத்தைச் செழிப்படையச் செய்வதர்களுள், இன்னும் சில பெயர்கள் பெருமை உடையன. அவர்களுள் வைலாவு சரண் தாஸ் (மனோமனே) உபேந்திர கிஷோர் தாஸ் (மலாஜன்ய) திவ்யசிங் பாணிக்கிரஹி (தூமோ மா), ராஜ்கிஷோர் பட்டநாயக் (சலாபட்), கமலாகாந்த தாஸ் (போஉ), ஹரே கிருஷ்ண மஹதாப் (பிரதிபா), லக்ஷ்மிதர் நாயக் (ஹே மோர் துர்பாகா தேஷ்), அனந்த பிரஸாத் பண்டா (குலி), ராமசந்திர மிச்ர (நாக்கடா சித்ராகார்), வஸந்த குமாரி பட்டநாயக் (அம்டாபாட்), வாம சரண மித்ர

(சந்திர ஒசம்பா), சுரேந்திர மஹாந்தி ('அந்த திகந்த' மற்றும் 'நீல சைல'), சந்திர சேகர் ரத் ('யப்ராரூட்', 'அஸூர்ய உபனிவேஷ்'), சாந்தனுகுமார் ஆசார்ய (நரகின்னர், சதாப்தீர் நசிகேதா), மஹாபாத்ர நீலமணி ஸாஹூ (தாமஸி ராதா), பாரிஸ்டர் கோபிந்த தாஸ் (அமாவச்யார் சந்திர), ஹரிஹர வாஹனிபதி (காரார் மயிஷ்), விபூதி பட்டநாயக் (சபல சந்திர) என்ற பெயர்கள் முக்கியமானவை.

இவர்களுள் அநேகர் ஒன்றிற்கு மேற்பட்ட நாவல்கள் எழுதியுள்ளனர் என்றாலும், கற்பனைக்காகவும், விசேஷ கலா மகத்துவத்திற்காகவும் பெருமை பெற்ற நூல்களை மாத்திரமே இப்பட்டியலில் சேர்த்திருக்கிறோம்.

கடந்த நாற்பது வருடங்களுள் ஒரியா நாவல் இலக்கியத்திற்கு மேலும் புகழ் தேடிக் கொடுத்தார்கள் – கானு சரண் மஹாந்தி, கோபிநாத் மஹாந்தி என்ற இரு சகோதரர்கள். சமூக ஞானமும், நுண்ணிய மனோ தத்துவ ஆராய்ச்சியும், மானிட மதிப்புக்களை இழப்பதால் நேரிடும் பரிதாபமும், மனக்கிலேசமும், சூழ்நிலை வர்ணனையும், உயர்ந்த ரக பாத்திரங்களும், வாழ்க்கையின் உள்ளர்த்தத்தைத் தேடி எடுக்கும் முயற்சியும் இவ்விருவரின் நூல்களில் செழித்துக் கிடக்கின்றன. கானு சரண் மஹாந்தியின் வெளியீடுகளான 'ஹா அன்ன', ஸாஸ்தி', 'அதேக்கா ஹாத்',.'ஜஞ்ஜா' 'துண்டபாயித்', 'கா', 'பரி', 'ஸர்பரி', 'தமஸாதீர்' முதலியவை வாழ்க்கையின் விதம் விதமான கோணங்களை எழுப்பி நிறுத்தி, மிக ரம்மியமாய்க் கதையை நடத்திப் போவதால் பெருமை பெற்றன. 'பரஜா', 'அமிருதர்சந்தான்', 'தாதிபுடா', 'சிவபாயி', 'அபஹஞ்ச்', 'ஹரிஜன்', 'தானாபாணி' முதலியன கோபி நாதரின் அளவற்ற மேதமைக்கு எடுத்துக்காட்டுகள். வாழ்க்கையின் பரந்த தன்மையையும், அதன் விசித்திர போக்கையும், விரிவையும் மிகவும் அழகாய் விவரிப்பதிலும், பாத்திரங்களை உருவாக்கும் நிபுணத்துவத்திலும் கோபிநாத் மஹாந்தி ஒப்புயர்வற்று தோன்றுகிறார்.

தன் நம்பிக்கைகளையும் ஆசைகளையும், கலையுணர்ச்சியுடன் குழைத்து ஆதிவாசிகளின் வாழ்க்கையை மிகவும் தெளிவாகவும் சரளமாகவும் 'பரஜா' 'அமிருதர்ஸந்தான்', 'தாதிபூடா', 'சிவாபாயீ', 'அபஹஞ்ச்', என்ற நாவல்களில் சித்திரித்திருக்கிறார். இங்கு அவருடைய உருவம் ஒன்றாகவும் பலவாகவும் தெரிகிறது. ஹரிஜன ஜீவனை வருணிக்கும் 'ஹரிஜன்' என்ற நாவலில் காணும் அவருடைய சகஜமான ஆனால் கவர்ச்சியான எழுத்து

நடை அவருக்கு இந்திய இலக்கியத்தில் விசேஷ இடத்தை அளிக்கிறது. 'தனாபானி' 'லய்விலய்','ராஹுர் சாயா', 'மன் கஹீரர் சாஷ்", 'மாடி மடால்' என்ற நாவல்களில் வாசகர் களுக்கும் இக்காலத்து வாழ்க்கைப் போரின் வேதனையின் அனுபவம் கிட்டுகிறது. கூடவே இந்தக் காலத்து மானுடன் தன் உள்ளார்ந்த கொள்கைகளை இழந்து, போரிட்டு, கடைசியில் அமைதியை நாடுவதும் தெரிகிறது. 'பரஜா' (1946), 'அமிருதர்சந்தான்' (1949), 'மாடிமடால்' (1964) என்ற மூன்று நாவல்களும் மானுட வாழ்க்கையின் அகன்ற சித்திரங்களாய் அமைந்து, பெருங்காவியங்களாகவே கருதப்படுகின்றன. ஒரியா இலக்கியத்தில் பெருங் காவிய நாவல்களை வெற்றிகரமாய் இயற்றிய முதல்வர் கோபி நாத் மஹாந்தி என்பதில் சந்தேக மில்லை. கற்பனையை அறிவுடனும் தெளிவுடனும் அவர் உபயோகிக்கிறார். அதனால் தான் அவருடைய ஒவ்வொரு நாவலும் வெவ்வேறு விதமாயும், கவர்ச்சியுடனும், இருக்கின் றன. ஆசிரியரின் மேதமையை நிலைநிறுத்த மிகவும் பலமான தூண்களாக 'பரஜா'வும் 'மாடிமடாலும்' கருதப்படுகின்றன என் றாலும், 'தானாபானி', 'ஹரிஜன்' (1948), 'லயவிலய' (1961), 'ராஹுர் சாயா' – என்ற புத்தகங்களும் சூழ்நிலை என்னும் கான் வஸில் பளிச்சென்ற வாழ்க்கைச் சித்திரங்களைத் தாங்கி அவருடைய திறமை என்னும் ஒளியை அள்ளி வீசுகின்றன. 'ஏஹி மணிஷ் ஸே ஜேவு வர்ண ரே ஹேட, ஜேதே தூர தாவு பசே, மோ டி தா டி ஏகா ரக்தர் தாரா' என்று கூறினார் அவர். (இந்த மனிதன் எந்த ஜாதியைச் சேர்ந்தவனானாலும், எவ்வளவு தூரத்தில் இருப்பவனானாலும் என் உடம்பிலும் அவன் உடலிலும் ஒரே உதிரம் தான் ஓடுகிறது) அவருடைய கற்பனை உலகில் சஞ்சரிப்பவர்களைக் கூர்ந்து கவனித்தால் அவருடைய யதார்த்த நோக்கும், அறிவும், பண்பும், பரந்த உள்ளமும் தெளிவாய்த் தெரிகின்றன. ஆனால் இதற்கெல்லாம் மேலாகத் தோன்றும் அவருடைய மனிதப் பிரீதியும், வாழ்க்கை ரசனையும் அவரை ஒரு கலை உணர்ச்சி நிரம்பியவராகவும், சிறந்த எழுத்தாளராகவும் நிலைநாட்டுகின்றன.

மொழியைக் கையாளுவதில் அவர் ஜால வித்தை செய்கிறவர். இயற்கை வர்ணனையிலும், மனித உள்ளத்தில் தோன்றும் விகாரங்களை எடுத்துரைப்பதிலும், அவர்களுடைய ஆதி அனு பவங்களை விவரிப்பதிலும் அவருக்கு மிஞ்சியவர் சிலரே. வாசகர்களின் மனதில் இந்த வர்ணனைகள் மெல்லிய இசையை

எழுப்பி விடுகின்றன. அவைகளின் யதார்த்தமும் அந்தரங்கத் தன்மையும் அவருடைய எழுத்து வன்மையின் அடிப்படையான லட்சணம். அவருடைய பாத்திரங்கள் சாதாரண அன்றாட வாழ்க்கையில் நாம் காண்பவர்கள்தான் என்றாலும் அவரு டைய கைபட்டு அவர்கள் வசீகரமான உருவங்களைப் பெற்றுத் திகழ்கின்றனர். நாவல், கதை இலக்கியத்தில் ஃபகீர் மோஹனுக்குப் பிறகு இவருடைய சிருஷ்டிகள்தாம் புகழ் பெற்று விளங்குகின்றன. சிருஷ்டி காரியத்தில் அவருடைய திறமை இன்றும் வெற்றிகரமாய்த் திகழ்ந்து வருவது நம் சௌபாக்கியம் என்றே சொல்ல வேண்டும். அவருடைய 'மாடி மடால்' என்ற நூலுக்கு 1973 ம் வருடத்து ஞானபீடப் பரிசு அளிக்கப்பட்டது.

'தானாபானி' 1955ல் பிரசுரிக்கப்பட்டது. தற்கால வாழ்க்கைப் போரில் ஊண் உணவிற்கான தீவிர போராட்டமும், வேலையில் முன்னேற்றத்திற்காகப்படும் கஷ்டங்களும் இந்த நூலின் கதையாய் அமைகின்றன. அதில் ஒரு பாத்திரமான பனு, "ஓ! சோறும் நீரும் திரட்டுவதிலேயே எல்லோரும் மூழ்கியிருக்கின் றனர் – அது இருந்தால் தானே வாழ முடியும்" என்கிறார். நாவலின் முக்கிய பாத்திரமான பலிதத் வேலையில் முன் னேற்றத்திற்காகவும், வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்காக வும், கூச்சமில்லாமல் தன் அறிவையும், மனிதப் பண்பையும் தியாகம் செய்து விடுகிறான். இந்த இழப்பின் மூலம் மெள்ள மெள்ள மேலேறி வருகிறான். கடைசியில் வாழ்க்கை என்னும் யாகத்தீயில் தன் மனைவி சரோஜினியின் கற்பையும், மறு யோசனையின்றி, அர்ப்பணித்து விடுகிறான். பரிதாபமான கதைதான். 'ஏதோ பெயரற்ற சந்தில் வளர்ந்த சாதாரண மனிதன் இந்த பலிதத். ஆனால் அவன் உயர்ந்த நிலையை விரும்பினான்." என்று ஆசிரியா அவனை அறிமுகப் படுத்து கிறார். வாழும் ஒவ்வொரு ஜீவனும் தன வாழ்க்கை நீடிப்பதற் காக முயல வேண்டியிருக்கிறது. ஆனால் கல்விபயின்ற சமூகத் தில் இந்த முயற்சி எவ்வளவு கொடுமையாக மனிதனைப் பாதிக்கிறது என்பதை ஆசிரியர் [illegible]தை மூலம் அறியச் செய்கிறார். தன் கல்வி, பண்பு, ருசி, அறம் எல்லாவற்றையும் அர்ப்பணித்து விட்டு, தன் நலத்திற்காக உக்கிர உருவம் எடுத்துப் பிறருக்குக் கெடுதல் செய்வதற்கும் தயங்காமல் முன் னேறும் தன்மையை ஆசிரியர் அப்படியே கண் முன் நிறுத்துகிறார். அவருடைய திறமையான எழுத்தின் மூலம் சாதாரண ஆபிஸ் பியூனிலிருந்து, அதிகாரிகள், துரை வரை

எல்லோருடைய மனக்கிடக்கையையும், நியாயமற்ற செயல்களையும் படம் பிடித்துக் காட்டுகிறார்.

'தானாபானி' அநேகம் பாத்திரங்கள் அடங்கிய ஒரு காட்சிசாலை. உயிரை வளர்க்கும் நெல் மணிகளைப் பொறுக்க அவர்கள் ஒருமித்துப் போட்டியிடும் பரிதாபமான சித்திரம். எவ்வித பாரபட்சமும் இல்லாமல் தன்னை மறந்து அவர்களுடைய நடை உடைகளில் ஒன்றிப் போய் அவர்களுடைய போராட்டத்தை விவரித்திருக்கிறார் ஆசிரியர். இந்நூலில் வரும் பாத்திரங்கள் ஒரு விதத்தில் பொதுவான சில வார்ப்படங் களில் உருவான பொம்மைகள். ஆனாலும் ஒவ்வொருவரும் தத்தம் தனிப்பட்ட தன்மையை இழக்காமல் தனியே பிரகாசிக்க ஆசிரியர் வாய்ப்பு அளித்திருக்கிறார். தற்காலத்திய உலகில் எந்தத் துறையிலும் தனி மனிதன் தானாகவே உந்தித்தான் முன் னேற வேண்டும், என்றாலும், மொத்தமாகப் பாாக்கும் பொழுது சமூக நலனிற்கும், அறநிலைக்கும் கேடும், இழுக்கும் தேடித் தருபவர்களாகவே தோன்றுகிறார்கள் இந்தச் சுய நலவாதிகள். இவர்களுடைய பலவீனங்கள் தெரிகின்றன. ஆனால் வாசகரின் மனதில் இந்நூலில் சஞ்சரிக்கும் ஆண் பாத்திரங்கள் பாலும், பெண்கள் பாலும் அன்பு நிறைந்த தயையை, அனுதாபத்தைத் தட்டி விடுகிறார், மனிதாபிமானம் மிக்க ஆசிரியர்.

ஃபகீர் மோஹனின் 'பிராயச்சித்த' என்ற நாவலில் வருவது போலவே இங்கும் 'உத்தேசமும் உபாயமும்', அதாவது 'இலக்கும் அதை அடையப் பயன்படும் கருவியும்' என்ற பிரச்னை எழும்புகிறது. விஸ்தாரமானதும் சமகாலத்தை ஒட்டினதுமான கதையாக இருப்பதுடன், சிறப்பாக எழுதப்பட்டி ருப்பதாலும் 'தானாபானி' சிறந்த ஒரு யதார்த்தச் சித்திரமாக அமைந்திருக்கிறது. உத்தேசத்தின் பிரதிபிம்பம் தான் உபாயம் என்ற கொள்கையைத் தன் ஒரே லட்சியமாகக் கொண்டு வாழ்ந்தான் பலிதத் – அந்த உபாயம் நாளடைவில் உத்தேசமாக மாறிவிடுகிறது. இந்த பலிதத் பதவி உயர்வில் மேல் படியை அடையும் பொழுது, தான் பிதா ஆகப்போகும் பெருமையில் உன் மத்தனாய் விடுகிறான். அதை ஒட்டி, "வம்சத்தை விளங்க வைக்கப் பிள்ளை இல்லையென்றால் பணத்தினால் ஒரு பிரயோசனமுமில்லை. பெயரை நீண்ட நாள் வரை இழுத்துக் கொண்டு போகக் கயிறு இல்லை." என்கிறார் ஆசிரியர். மனதைக் கிளுகிளுக்கச் செய்யும் ஒரு அனுபவத்தை பலிதத் உணர்ந்தான். ஆனால் வேலை உயர்விற்காக அநேக இரவுகளும் பகல்களும் சிரமப்பட்டு விட்டான். அவன் உடல் நெருப்பாய்ச்

சுட்டது. குளுமையை அனுபவிக்க விடாத தகிப்பு – இது தான் பலிதத்தின் பரிதாபமான நிலை. இன்னொரு புறம் கதாநாயகியான சரோஜினி. அவள் பெண். உண்ண உணவும், உடுக்க உடையும், அணிய நகையும் கிடைத்திருக்கின்றன. ஆனால் இவை தானா முக்கியம்? பெண்மைக்கு அத்தியாவசிய மானது என்ன என ஆராயப் புகுகிறாள், சரோஜினி. கடைசியில் பிறர் ஏச்சுக்கு ஆளாகிறாள் – நிலை தவறியவள் என்று. ஆனால் தன் பார்வையில் அவள் முழுமை அடைந்தவளாகவும், பலன ளிப்பவளுமாகத் தோன்றுகிறாள். அமைதியற்றவளாய், தன் மன விருப்பம் எது என்ற ஆராய்ச்சியில்,அவளுக்கு அநேக துக்கங்களும் கஷ்டங்களும் நேரிடுகின்றன. அவளுடைய மன நிலையில் மாறுதல் ஏற்படும் பொழுது 'அவள்' என்னும் தன் மைக்கு நம்பிக்கையை அளிக்கும் புனர்ஜன்மம் கிட்டுகிறது. 'இன்று சிப்பியுள் மழைத்துளி சிறைப்பட்டு, அது மூடிக் கொண் டும் விட்டது!... வயலிற்கு விதையும் நிலத்திற்கு முளையின் உஷ்ணமும் கிடைத்து விட்டன. சிருஷ்டியை எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. கருத் தரித்திருக்கும் பூரிப்பில் கர்ப்பிணியான மண் எதையும் தேடி அலைவதில்லை. ஏனென்றால் அது பரிபூர்ணமாகி விட்டது. வேறு எதுவும் அதற்குத் தேவையில்லை' என்று ஆசிரியர் சரோஜினி யின் நிலையை வருணிக்கிறார். இனிமேல் அவளைக் கற்பிழந்த வள் என்று பழிக்க முடியாது. ஏனென்றால் அவளுடைய பெண்மையின், தாய்மையின் தவிப்பும் வேதனையும் மாறி முழுமை என்ற வெற்றியில் திளைக்கும் சரோஜினி நம் அன்பிற்கும் ஆதரவிற்கும் பாத்திரமாகி விடுகிறாள். தாய்மைக்கு ஏங்கும் எண்ணற்ற பெண்களிடம் நமக்கு அனுதாபமும் கருணையும் பிறக்கின்றன.

பல பாத்திரங்களை உருவாக்கி உயிர் வழங்கும் வேலையுடன் ஆசிரியர் சமகால சாதாரண வாழ்க்கையை நுட்பமாய் அறிந்து சித்திரிக்கத் தவறவில்லை. 'இப்பொழுதுள்ள உலகில், படித்து வேலை பார்க்கும் உங்களிடம் தன்னம்பிக்கையில்லை. ஆனந் தத்தின் விதை இல்லை. அதை விதைக்கும் சக்தி கூட அவர் களிடம் கிடையாது.' என்கிறார் ஆசிரியர். மேலும் 'பேடண்ட் மருந்துகளைப் போல் பேடண்ட் கருத்துக்களும் உலகத்தை வசமாக்கிக் கொண்டிருக்கின்றன. அதனால் தான் எவ்வளவு முயன்றும் உலகில் பண்பும் சீலமும் நிலைப்பதில்லை, போரும் கலவரமும் நீங்குவதில்லை!' என்கிறார்.

'கையாளப்படும் உபாயமே உத்தேசமாகி விடுகிறது. தன் நெஞ்சை இந்தக்கல் சக்கரங்களுக்குக் கீழ் பரப்பி விடுகிறான்

மனிதன். ஒன்று குளிர்ந்த கல், மற்றொன்று யந்திரம். ரத்தமோடும் தன் உடம்பைப் பற்றி எப்போதாவது அவன் கவலைப்படுவதுண்டா ? அவனுடைய பஞ்சுபோன்ற நெஞ்சில் எழும் இரகசியக் கதை எல்லாம் அங்கேயே பொசுங்க வேண்டியதுதானா ? சக்கரம் உருள உருள வயதும் ஏறிக்கொண்டே போகிறது' என்கிறார். தற்கால யந்திர யுகத்தில் மனதைக் கெடுக்கும் கருத்துக்களுக்கு மனிதன் இரையாவதைத் தெளிவாக்குகிறார். கூடவே அவனுடைய மறுஜன்மத்திற்காக அறிவும் எச்சரிக்கையும் எடுத்துரைக்கிறார். எக்காலத்திலும் சமூக நலனுக்காக எச்சரிக்கை செய்யும் 'தானாபானி" அதன் ஒரு பகுதியை மட்டுமே சித்திரிக்கிறது என்றாலும் தற்காலத்து யந்திர வாழ்வு தத்ரூபமாகவும், யதார்த்தமாகவும் விளங்கும் ஒரு பெருமை மிக்க நூலாக விளங்குகிறது. இதன் கலாரூபமும், உன்னதமான கருத்துக்களும் இதற்கு ஒரியா இலக்கியத்தில் மேன்மையான ஒரு இடத்தை அளித்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை.

பலிதத் தோளில் கூடை ஏந்திப் பன்றிகளின் தொழுவத்தை நோக்கிப் புறப்பட்டான். பன்றியின் எரு வேண்டியிருந்தது அவனுக்காக அல்ல, துரையின் தோட்டத்திற்காக.

"இந்த ரோஜாச் செடிகளுக்குக் கொஞ்சம் பன்றி எரு போட்டால் பெரிய பெரிய பூவாகப் பூக்கும்". துரையின் சீமாட்டி மாலியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். "ரோஜாவிற்குப் பன்றி சாணமும், குரோட்டன்சுக்கு குதிரை லத்தியும் நிறையத் தண்ணீரும் ரொம்ப அவசியம்."

பலிதத் தோட்டக்காரனல்ல. ஒரு வியாபாரக் கம்பெனியில் கௌரவமான வேலை பார்க்கும் வாலிபன்.

காலையில் ஆஃபீஸுக்குப் போய்விட்டு மத்தியானம் வீட்டுக்குத் திரும்பும் பொழுது வழியில் சீமாட்டி தோட்டக்காரனிடம் எருவைப் பற்றி உத்தரவிடுவது அவன் காதில் விழுந்தது. அவ்வளவு தான். யாரும் அவனிடம் ஒன்றும் சொல்லாமலேயே பீஷ்ம சபதம் ஒன்றை பறை சாற்றினான். "பன்றிச் சாணமா வேண்டும்? இதோ நானே போய் எவ்வளவு வேண்டுமோ கொண்டு தருகிறேன்" என்றான்.

சீமாட்டி லேசான புன்னகை ஒன்றை உதிர்த்தாள். அந்தப் புன்னகையை நம்பி அவன் உடனே கூடையுடன் சேரிப்பக்கம் நடந்தான். நல்ல வெய்யில். ஸூட், டை அணிந்து அந்த வெய்யிலில் வெந்து கொண்டே, காலி வயிறு ஓலமிட, போய்க் கொண்டிருந்தான். காலையில் உண்ட பழையமுது எப்பொழுதோ ஜீரணமாகி விட்டிருந்தது. அழுக்குக் கைக்குட்டையால் வியர்வையைத் துடைத்துக் கொண்டான். ஆனால் வியர்வை ஓட்டம் நிற்கவில்லை. சேரியின் குப்பை கூளத்திலிருந்து பன்றி சாணத்தை திரட்டி எடுக்க போய்க்கொண்டிருந்தான். இந்தக கடும் சாதனையில் நடுநடுவேயும், மின்னி மறைந்து வெற்றி நம்பிக்கை அவனை அதைரியப்படச் செய்தது. விழிப்பு நிலையிலேயே கனா காண ஆரம்பித்தான்.

"இதோ ஆகிவிட்டது ஐயா. கூடை நிரம்பி விட்டது, மேலே என்ன?" என்று சுமை தூக்குபவன் வினவினான்.

"எங்கே நிறைந்தது? மேல் வரையில் நிரப்ப வேண்டும். அவர்கள் தோட்டத்தில் எவ்வளவு ரோஜாச் செடிகள் இருக்கின்றன தெரியுமா? நீ தான் பார்த்திருக்காயே"

சுமையாளி பெருமூச்சு விட்டான். வெய்யிலில் உடல் தளர்ந்து போய்விட்டது. வியர்வை ஒழுகும் அவனுடைய முதுகைத் தட்டிக் கொடுத்து, மெல்லிய குரலில் நயமாக, "கூலி கிடைக்கும் உனக்கு

ஏன் இப்படிச் சோம்பல் படுகிறாய்? உம் புறப்படு போகலாம்" என்றான் பலிதத்.

உரத்துடன் திரும்பும் வழியில் சைக்கிளை ஓட்டிக் கொண்டு வரும் மஹாபாத்ர பாபு எதிர்பட்டார். அவர் ஸூட் அணிந்திருந் தார் – கம்பெனியின் அதிகாரி அல்லவா?

"என்ன, பலிதத் பாபு, வெய்யிலில் எங்கே இப்படி?" மஹாபாத்ரவின் பேச்சுத் தொடங்கியது. அவருடைய எண்ணம் பலிதத்திற்குப் புரிந்து விட்டது. அவன் வாயைக் கிண்டி செய்தி திரட்ட இப்படி அவனை எவ்வளவோ முறை அணுகி இருக் கிறார் மஹாபாத்ர.

"என்ன விசேஷம்? எல்லாம் சரிதானே?"

"ஆமாம், எப்பவும் போல நடக்கிறது".

"உஹூம் –நான் எழுதி அனுப்பினேனே ஒரு நோட், துரை அதைப் பார்த்து என்ன எழுதினார்?"

"அந்த ஃபைல் இன்னும் துரையிடமிருந்து திரும்பி வரவில்லை. எனக்கு எப்படித் தெரிய முடியும்?"

"இன்று காலையில் நான் அங்கு போயிருந்தேன், புரிந்ததா பலிதத் பாபு? துரை என்ன செய்தார் தெரியுமா? 'உட்காருங்கள்' என்றார். அப்புறம் தன் சிகரெட் கேஸிலிருந்து ஒரு சிகரெட் எடுத்து எனக்குத் தந்தார். நான் அதை நிர்ப்பந்தமாய்ப் பிடிக்க வேண்டிவந்து விட்டது. எனக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய் விட்டது".

"நீங்கள் எங்களைப் போலவா என்ன? இந்தத் துரை உங்களைவிட எந்த விதத்தில் உயர்ந்தவர்? படிப்பிலா இல்லை வேறு எந்த விஷயத்திலாவதா? வெள்ளையர் கம்பெனியில் வெளுப்பு நிற மனிதர் – அவ்வளவு தான். நீங்களே இந்தக் கம்பெனிக்குத் தலைமை அதிகாரியாய் வரப்போவதை என் கண் கள் பார்க்கத் தான் போகின்றன. கம்பெனியின் வேர்களான இவர்கள் எல்லாம் ஏழு சமுத்திரங்களையும் கடந்து போய் விடுவார்கள். அப்புறம் நீங்கள் தான் இந்த டிப்போவை நடத்தப் போகிறீர்கள்." பலிதத் அவரை உற்சாகப் படுத்தினான்.

"இந்தா, வெற்றிலை போட்டுக் கொள். ஆனால் ஜாக்கிரதை அதில் புகையிலை இருக்கிறது" என்று பீடாவை நீட்டினார் மஹாபாத்ர.

"உங்கள் பீடாவா? தவளையின் வயிற்றில் நெய் செரிக்குமா என்ன?"

"அடடே, போட்டுக் கொள். சோக்ரா பயலே, எனக்கு இப்பொழுது வயது நாற்பதாகி விட்டது. உன்னைப் போன்ற

வயதில் நான் என்னென்ன சாப்பிட்டிருக்கிறேன் தெரியுமா? கேட்டால் ஆச்சரியப்படுவாய்" இனிமேல் தப்ப முடியாது. சொல்லத் தான் வேண்டும். இதற்குள் சீமாட்டி போய்விட்டிருந் தால் பலிதத் அவளுக்காக சுமை உரம் கொண்டு வந்ததை அறிய மாட்டாள். சுமை ஆளும் நின்றவாறு ஏதோ முணுமுணுத்தான். அவனைப் பார்த்து, "போய்க் கொண்டே இரு. ஏன் நின்று விட்டாய்?" என்று பலிதத் மிரட்டினான்.

"இதெல்லாம் என்ன விஷயம்" என்று மஹாபாத்ர கேட்டார். "இரண்டு பாத்தி காய்கறி போட்டிருக்கிறேன். கொஞ்சம் உரம் கொண்டு போகிறேன்". "என்ன விலைக்கு வாங்கினாய்? நானும் கத்திரி செடி போட்டிருக்கிறேன். உரம் இல்லாமல் இலைகள் வெளிரிப் போய் விட்டன. உனக்கு எங்கிருந்து கிடைத்தது இந்த உரம்?"

"என் வீட்டிலும் ஒரு சுமை உரம் போட்டு விடு" என்று சுமையாளைப் பார்த்து உத்தரவு போட்டார் மஹாபாத்ர.

சொர்க்கத்திற்குப் படிக்கட்டு இல்லாதது போல பெரியவர்கள் வார்த்தைக்கு மறு பேச்சு கிடையாது.

பலிதத்தின் முகமும் வியர்க்க ஆரம்பித்தது. உமிழ் நீரை முழுங்கிக் கொண்டே, "இதுவும் ஒரு பேச்சா? நானே போய்க் கொடுத்து வருகிறேன். துரைக்கு உங்களிடம்தான் மிக்க அக்கறை ஐயா............."

"அது உனக்கு எப்படித் தெரியும்? யார் சொன்னது? என்ன எழுதினார் என்று கட்டாயம் உனக்குத் தெரியும். சொல்லேன். வெய்யில் ஏறி விட்டது. என்னுடன் வீட்டிற்கு வா. என்ன தயக்கம்? வா போகலாம்" என்று பலிதத்தை வற்புறுத்தினார் மஹாபாத்ர. "உங்களுக்குத் தானாகவே தெரியப்போகிறது ஐயா, எங்களுக் காக மிட்டாய் தயாராக வையுங்கள். ஏதோ விஷயமாய் துரை என் னைத் திரும்பக் கூப்பிட்டிருக்கிறார். கொஞ்சம் அவசரம் எனக்கு".

"சரி, அப்படியானால் போ. நீ வேலையில் ரொம்பக் கருத் துள்ளவன் பலிதத் பாபு. இவ்வளவு இளம் வயதில் இத்தனை பொறுப்புணர்ச்சி ரொம்பவும் துர்லபம். எப்படியோ, எல்லாம் சரிதான் இல்லையா? அதனால்தான் சிகரெட் தந்தார் போலும் எனக்கு ரொம்ப ஆச்சரியமாய்ப் போய் விட்டது. வேறு எவருக் கும் அவர் இந்த மாதிரி உபசாரம் செய்ததில்லையே, என்று வியந்தேன். காட்டு மிருகத்தை வீட்டிற்காகப் பழக்குவது சுலபமான காரியம் அல்ல"

பலிதத் லேசாய்ச் சிரித்துக் கொண்டான். அந்தச் சிரிப்பு பிறருக்கு மையிடுவதுபோல் தனியே வரும். மஹாபாத்ர சைக்கிளில் ஏறி பறந்து விட்டார், தான் சிகரெட் பெற்ற பெருமையை விளம்பரப்படுத்த.

இடது பக்கத்தில் ஒரு பள்ளிக்கூடம். தோரணங்களும் வரவேற்பு மாலைகளும் அதன் வாசலை அலங்கரிக்கத்தன. இன்று பிற்பகலில் இங்கு ஏதோ விசேஷம். துரை வருவார். அவரை வரவேற்க பள்ளிப் பிள்ளைகள் பாடப் போகும் பாட்டை பாட்டு வாத்தியார் அருண் பாபுவின் மேற்பார்வையில் அவர்கள் பழகிக்கொண்டிருந்தனர்.

'ஜன கன மன அதி நாயக ஜய ஹே' –இந்தக் கூத்தை யெல்லாம் பார்த்துக்கொண்டே போனான் பலிதத். இப்படி ஒரு வாய்ப்பு தனக்குக் கிட்டமுடியாதே என்று மனதின் ஆழத்தில் பொறாமை எழும்பியது. ஆனால் அறிவுள்ளம் வெகுண்டெழுந் தது – இது எப்பேர்ப்பட்ட அவமானம் அருண் பாபுவிற்குக் கொஞ்சம் கூட யோசனை இல்லையா 'பலிதத் பாபு, நீங்களா?'

'அது சரி. துரை என்ன நினைப்பார், நீங்களே சொல்லுங்கள். நீங்கள் நிஜமாகவே......'

'உங்களுக்குப் புரியவில்லையே. ஒரே அம்பினால் இரு வேட்டை. துரை சரியாய் புரிந்து கொள்வார். அவர் எவ்வளவு உயர்ந்தவர் –' 'பாரத பாக்ய விதாதா' தங்களுக்குப் பிரியமான பாட்டைக் கேட்டு வெளி மனிதர்களும் ஆனந்தப்படுவார்கள். பாட்டு பாட்டுத்தான்–அதில் என்ன தடை? இன்று முகஸ்துதி செய்ய வேண்டிய நாள் –நீங்கள் ஏன் புரிந்து கொள்ளவில்லை? அவரை விட்டால் நமக்கு வேறு யார் இருக்கிறார்கள்'?

பலிதத் ஹே–ஹே–ஹே–என்று சிரித்துவிட்டான். அவனுக் கென்ன? அருண்பாபு புத்திசாலி, பிறர் வார்த்தையை அவன் ஏன் மதிக்க வேண்டும்?

★ ★ ★

சுமையாளுடன் போய்க்கொண்டிருந்தான். மணி ஒன்று, உக்கிரமான வெய்யில். சீமாட்டியைக் காணவில்லை. தோட்டக் காரனும் தூங்கி விட்டான். உரத்தை அங்கே இறக்கினால் தோட்டக்காரன் தான்தான் கொண்டு வந்ததாகச் சொல்லி பீற்றிக் கொள்வான். அதனால் சீமாட்டி வரும் வரை காத்திருக்க நிச்சயித்தான் பலிதத்.

நாலா பக்கமும் பூஞ்சோலை. அந்தக் கடும் வெய்யிலில்கூட அங்கு நிழல். உடலைத் தடவியது மென்மையான பூங்காற்று.

இயற்கையின் சோம்பிய தோற்றத்தின் அழகே அழகு. ஒரு புறம் கோழி தன் குஞ்சுகளுடன் தானியம் பொறுக்கிக் கொண்டிருந்தது. குதிரை லாயத்திலிருந்து குதிரையின் கனைப்பு. கையளவு நீண்ட நாக்கைத் தொங்கவிட்டபடி பெரிய நாயொன்று வராந்தாவில் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது. இன்னொரு புறம் இளவயதினளான ஒரு ஆயா துணி உலர்த்திக் கொண்டிருந்தாள். விரிந்த கூந்தலும், இறுக்கமான சுருக்கமான ரவிக்கையும், குளுமையான பார்வையும் அவளை ஏதோ மிருகம் போல் தோன்றச் செய்தன. பார்ப்பதற்கும், யோசிப்பதற்கும் எவ்வளவோ விஷயங்கள்.

ஆனால் பலிதத் இதையெல்லாம் ஒன்றும் கவனிக்கவில்லை. மர நிழலில் வியர்வையைத் துடைத்தவாறு தன்னைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தான்.

குறுகிய உடல் கட்டு. முடிந்த அளவு அலங்கரித்தாலும் பெரிதாகத் தெரிய மாட்டாதது. படிப்பும் கொஞ்சம் தான். பெயருக்குப் பிறகு எழுதிக் கொள்ளப் பட்டம் ஒன்றுமில்லை. எங்கேயோ தூரதேசத்தில் பொயிரில்லாத ஏதோ சந்தில் வேய்ந்த கூரையுடன் வீடும், அழுக்கும் கடன் பளுவும் அவனுக்கு உரிமை. வராந்தாவில் இருமிக் கொண்டு கிடக்கும் வாதநோயால் பீடிக்கப்பட்ட கிழத்தந்தை. எந்தச் சந்து பொந்தின் மண்ணில் வளர்ந்த அனாமதேய மனிதனோ இந்த பலியா!

ஆனால் அவன் உயர்நிலையை அடைய விரும்பினான். அவனுக்கு அறிவு வந்த நாள் முதல், முன்னோர் இட்டிருந்த அடிவாரத்தை ஏற்க மறுத்துவிட்டான். சண்டைபோடக் கற்றான். அமர் கொடியைப் போல் பிறந்து அதைப் போலவே பிறர் தயவில் வளரவும் கற்றான். ஒட்டிக்கொள்ளக் கற்றான். எவரையும் ஏற்று தழுவிக் கொள்ளக் கற்றான். இந்தப் பலவிதக் கல்விமேல் காலை பலமாக வைத்துத் தலை தூக்கினான். தன் முயற்சியாலேயே உயர்ந்தவன் பலிதத். இன்னமும் உயர விரும்வினான் அவன்.

சுமையாள் குரல் கொடுத்தான். 'பாபு, போகட்டுமா?'

'சரி போ. இங்கேயே கொட்டிவிடு.'

பெருமூச்செறிந்தான் பலிதத். அதிருப்தியுடன் திரும்பும் பொழுது வெய்யிலின் கொடூரமும், பசியின் வேகமும் அவனுக்கு நினைவு வந்தன. சரோஜினி அவனுடைய இளம் மனைவி!

'பதி பரம குரு' என்று பொறிக்கப்பட்ட ப்ரூச் புடவையை இடது தோளுடன் இணைத்திருக்கும், வகிட்டில் விவாக நிலையைக் குறிக்கும் சிந்தூர், விரலில் பலிதத்தின் பெயர்

பொறிக்கப்பட்ட மோதிரம், படுக்கை அறையின் சுவரில் ஒரு ஃபோட்டோ—கறுப்புப் படுதாவின் முன் உட்கார்ந்தபடி அவளும் பலிதத்தும் ஒரே அளவில் ஒரே மாதிரி கூட்டிவிடப்பட்டிருந்த சிறியவீடுகளின் அணியில் ஒன்றில் இவர்கள் குடித்தனம். முன் புறம் அகன்ற ரஸ்தா —அதன் மற்றொரு பக்கத்தில் கொஞ்சம் பெரிய வீடுகளின் சாரி.

சிறிய அறையில் பலிதத்—சரோஜினியின் குடும்ப வாழ்க்கை நடந்தேறியது. சிறிய முற்றத்துள் அடங்கிய சிறிய தோட்ட மொன்று —அங்கே கீரை, கத்திரி, வெண்டை வளர்ந்தன. வெளி யில் கக்கூஸின் பக்கத்தில் ஒரு மாமரம் — அதன் நிழலில் சில வாழைகள், கீழே பிரசாரிணி கொடி, முற்றத்தின் ஓரத்தில் காய்த்துக் குலுங்கிய ஒரு எலுமிச்சை மரம். படுக்கை அறையில் இரண்டு பெட்டிகளில் அவர்களுடைய சம்பத்து எல்லாம் அடங்கியிருந்தது. கூரையிலிருந்து கட்டிவிடப்பட்டிருந்த இரு மூங்கில்கள் மேல் அவர்களுடைய துணிகள் தாறுமாறாய்த் தொங்கின. உக்கிராண உள்ளில் ஒன்றிரண்டு பாத்திரங்களும், வாங்கின மளிகை சாமான்களும் பத்திரப்படுத்தப்பட்டிருந்தன. அப்புறம் சமையலுள், வெளியில் ஒரு கட்டில் கிடந்தது.

எல்லாவற்றையும் சுற்றிக் பார்க்க சரோஜினிக்கு வேண்டிய பொழுது கிடைப்பதுண்டு. அவளுக்கு அதில் ஒரு திருப்தி —அங்கு அடங்கிய பொருள்களெல்லாம் தனக்கே சொந்தமானவை என்ற எண்ணம் இனித்தது. சாவிக் கொத்து கலகலக்க அவள் துடைப்பம் எடுத்து வீட்டைக் கூட்டும்பொழுது நன்றிப் பெருக் கால் மனம் நிரம்பிவரும். துடைப்பத்தை கெட்டியாகப் பிடித்துக் கொள்வாள்.

ஆனால் உடலமைப்பிலோ, மன நிலையிலோ அவள் பலிதத்தை ஒத்திருக்கவேயில்லை. உயரத்தில் அவள் கணவனை விட நான்கு அங்குலம் பெரியவள், உடற்கட்டில் அவனைவிடப் பருத்தவள். பலிதத்தின் சிறிய கூம்பிய முகத்திற்கு நேர்மாறாக அகன்ற உருண்ட முகம் அவளுக்கு. பெரிய பல்வரிசை. அவளுடைய மனமும், வீடு குடும்பம் என்று கட்டிப் போடப்படாமல் சுயேச்சையாக இருந்தது. வீட்டில் வேலையும் அதிகமில்லை, எவ்விதத் தொந்திரவும் இல்லை. அதனால் அவள் எதையோ எதிர் பார்ப்பது போல் தொலைவில் நோக்கிக் கொண்டு யோசனையிலாழ்ந்து அமர்ந்திருப்பாள். ஆபீஸி லிருந்து வீடு வரும் இரண்டு வேளையும் பலிதத் அவளை இந்த நிலையில்தான் காண்பான். ஒரு அந்தரங்க ஆனந்த அலை அவள் உடலைச் சிலிர்க்க வைக்கும். அவள் தனக்காகவே

காத்திருக்கிறாள் என்று எண்ணிப் பெருமூச்சு விடுவான். கண்கள் கண்களைச் சந்தித்துப் பேசும். இலேசாய்ச் சிரித்துக் கொண்டு சரோஜினி எழுந்து வந்து கதவைத் திறப்பாள்.

பகல் இரண்டு மணிக்கு பலிதத் வீடு திரும்பும்பொழுது அவன் மனம் தன் வேலையைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தது. வாழ்க்கையின் பாதை கரடு முரடானது ஆனாலும் மலை ஏறியே ஆக வேண்டும். அப்புறம்? அப்புறம்?

எதிர் வீட்டில் அவ்வீட்டுக்காரரின் மருமகன் லீவிற்கு வந்திருந்தான். காலேஜில் படிப்பவன். மலையாகக் குவிந்திருந்த புத்தகங்கள் முன் அமர்நது வாசித்துக் கொண்டிருக்கும் பொழுதே திடீரென்று எதிர் வீட்டு ஜன்னல் கண்ணில் பட்டது. அப்புறம் வழக்கம்போல் இரண்டு மணிக்கு உடற்பயிற்சி செய்ய ஆரம்பித்தான். கைகளைத் தூக்கி, மார்பை உயர்த்தி கைகளில் பளபளக்கும் டம்பெல்ஸ் தூக்கி முழுபலத்துடன் பயிற்சி ஆரம் பித்து விட்டான். கரடியைப் போன்ற மார்புடன் பார்க்கவே பயமாயிருந்தது. உடல் கல் தான். முதலில் சரோஜினி வாயில் துணியை திணித்துக் கொண்டு சிரிப்பை அடக்கப் பார்த்தாள். அப்புறம் அந்தச் சிரிப்பு உதடு வரை வந்து அங்கே மறைந்து விட்டது. கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். மெல்ல மெல்ல அவள் பெருமூச்சு விட ஆரம்பித்தாள். உடலில் ஒவ்வொரு நரம்பிலும் ஒருவித நடுக்கம் பரவியது – தானே உருகிப் போவது போல் அவளுக்குத் தோன்றியது. உடலைத் தளர விட்டு, சுவரில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தாள். வாய் கொஞ்சமாய்த் திறந்திருந்தது. நெற்றியில் வியர்வைத் துளிகள், பார்வை எங்கோ தூரத்தில் நிலைத்து நின்றது. பளபளக்கும் கண்களில் ஏதோ சோகத்தின் சாயல்.

உடற்பயிற்சி நடந்து கொண்டிருந்தது. மாணவன் ஓரக்கண்ணால் எதிர்வீட்டில் பதுமை போல உட்கார்ந்திருநதவளைக் கவனித்தான். ஆனால் அவள் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கவில்லையே! அவனுக்கு ஏமாற்றமாகி விட்டது. பூ – இவ்வளவு தானா இப்பெண்களின் ரசிகத்தன்மை. கலியாணமே செய்து கொள்வதில்லை என்று பிரதிக்ஞை செய்தான். அதை விட இந்த உடற் பயிற்சியே எவ்வளவோ மேல். நடுப்பகலில் அனாவசியமாய் ஒழுகின வியர்வையைத் துடைத்துக் கொள்ள அவன் வீட்டிற்குள் போய்விட்டான்.

ஆனால் சரோஜினி உட்கார்ந்தபடியே இருந்தாள். சிரிப்பது போல் கொஞ்சமாய்த் திறந்திருந்த வாய் – எங்கோ தொலை தூரத்தில் பதிந்திருந்த வெற்றுப் பார்வை....இந்தக் காட்சி தான்

வந்து கொண்டிருந்த பலிதத்தின் கண்ணில்பட்டது. ஒரு வினாடி அவன் மனம் பேதலித்தது – தன் வேலையோ துறையோ, வேலையில் உயரும் ஆசையோ நினைவிற்கு வரவில்லை. நாக்கு வறண்டு போன நாய் தன் பிரக்ஞை இல்லாமல் தண்ணீரைக் குடித்துக் கொண்டேயிருப்பது போல் அவனது கண்களும் வேட்கையுடன் தன் மனைவி மீது நிலைத்துப் போயின.

சரோஜினி அவனைப் பார்த்தாள். "என்ன ஜபமா செய்கிறாய்?" என்று சொல்லியவாறு ஹோ வென்று சிரித்தான் பலிதத். திடுக்கிட்டு எழுந்தாள் சரோஜினி. அவளை வருத்திக் கொண்டிருந்த எண்ணச் சுமை கவிழ்ந்து விட்டது. 'பதி பரம குரு' அவனுடைய சிரிப்பும் பார்வையும் சக்தி வாய்ந்தவை தாம். கதவைத் திறக்கும் அவசரத்தில் கையில் பட்டுவிட்டது. அபசாரத்திற்குப் பிராயச்சித்தம் போல், பூனையைப் போல் குடுகுடுவென்று சமையலறையை நோக்கி ஓடினாள். போகும் பொழுதே ஆதங்கக் குரலில் "இவ்வளவு நாழியா? காலையில் கொஞ்சம் சாப்பிட்டது தானே. இன்னுமா பசி எடுக்கவில்லை? உடல் இப்படி எரிந்தவிறகைப் போல் கருத்துப்போய்விட்டதே. அம்மம்ம! என்ன வேலையோ இது! உங்களுக்கு சொர்க்க போகமா அளிக்கப் போகிறது இந்த வேலை?" என்றாள்.

"சரி, சரி. எது தருகிறாயோ சீக்கிரமாய்க் கொடு. திரும்பிப் போகவேண்டும்."

மனையை போட்டு, குடிநீர் வைத்து சாதமும் பருப்பும் பரிமாறினாள். பிறகு ஈ ஓட்டிக் கொண்டு பக்கத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். "ராம் பாபுவின் வீட்டிற்குத் திரும்பக் கூடைகள் வந்தன" "நிஜமாகவா?" ராம் பாபு பக்கத்து வீட்டுக்காரன். "இரண்டு மூன்று கிராமத்து ஜனங்கள் வந்திருந்தனர். ஒரு கூடை அரிசி, நெய், வாழைக்குலை, வலையில் சுற்றியிருந்த பெரிய ஒரு மீன் – இவ்வளவும் கொண்டு வந்தனர். கண் மூடித் திறப்பதற்குள் ராம் பாபுவின் மனைவி சாமான்களைப் பெற்றுக் கொண்டு கதவை அடைத்து விட்டாள். மீன் பொரிக்கும் சப்தம் கேட்கிறது, கவனியுங்கள்."

வாயில் சாதத்துடன் திருத்தமற்ற பேச்சில் "போகட்டும் போ. நமக்கென்ன அதனால். எல்லோரும் ராம் பாபு ஆக முடியாது" என்றான் அவன்.

"நான் வெறுமனேதான் சொன்னேன். ஆனால் இப்படிப் பகலும் இரவும் பாவம் செய்து சம்பாதிப்பவர்கள் அந்த வரும்படியை எப்படித்தான் செரித்துக் கொள்கிறார்களோ தெரியவில்லை. அவர்களுக்கு ஒன்றும் ஆகாதா?"

"ஆகாமலா போகும்? ஆகும் ஆகும். சமயம் வரும்" என்று உரக்கச் சொல்லி கொண்டே ஒரு டம்ளர் தண்ணீர் குடித்தான், அவன். கணவனின் கழுத்தில் ஒரு பெரிய உருண்டை மேலும் கீழுமாய்க் குதிப்பதைப் பார்த்து சரோஜினி சிரித்தாள். திடுக்கிட்டு, "ஏன் சிரித்தாய்" என்று பலிதத் விசாரித்தான். "இப்பொழுது சொன்னீர்களே, சமயம் வரும் பொழுது எல்லாம் ஆகும் என்று துரையின் காதில் இந்த விவகாரம் விழுந்தால் ராம் பாபுவின் மனைவியின் தடபுடல் எல்லாம் அடங்கி விடும். அந்தத் தடிச்சி மேலும் மேலும் நகை செய்துகொண்டே போகிறாள், ஜோடி ஜோடியாய். என்னவோ நல்ல காலம் ராம் பாபுவிற்கே உரிமை என்பது போல். அவருக்குப் படிப்பும் அதிகமில்லை என்று நீங்கள் சொல்லவில்லையா? நீங்கள் என்ட்ரென்ஸ் வரை படித்தவர், அவரோ மிடில் பாஸ் மட்டும், உங்கள் துரையிடம் பேசினால்......"

கணவனின் முகத்தையும், அந்த முகத்திற்கு பின்னாலே எப்பொழுதோ வரப்போகும் செல்வக் கொழிப்பையும் ஆசையுடன் பார்த்தவாறு இருந்தாள். அந்த வருங்காலத்தில் அவள் வீட்டைத் தேடியும் கூடைகள் வரும், நகையும் நட்டும் செய்து கொள்ளலாம், தினம் மீன் பொரித்துச் சாப்பிடலாம் – அமோக செல்வாக்குடன். அவளுக்கு அகங்காரம் ஏறிற்று.

பலிதத் நகைத்தாவாறு, 'பொறு பொறு பழம் பழுக்கும்' என்றான்.

சரோஜினி வெற்றிலைப் பெட்டியுடன் அமர்ந்தாள். பலிதத் வெளிப்புறத்து அறைப்பக்கமாய்ப் போனான். அன்றைய நிகழ்ச்சியைச் சொல்லுவதா வேண்டாமா என்று யோசித்தான். வெகு நாட்களாக உள்ளே நுழைய வழியைத் தேடித் கொண்டிருந்தான். ஆனால் முடியவில்லை. வழி தெரியவில்லை. அன்று ஒரு வழி தெரியும் போலிருந்தது. சரோஜினியிடம் சொன்னால் ஒரு வேளை அவள் அதைப் பற்றி பேசி டமாரம் அடித்து விடுவாளோ? அனர்த்தமாகி விடுமே. இரகசியங்களை தன்னுள்ளேயே அடக்கிப் போட அவனுக்குத் தெரியும் – அது வழக்கம் தான். அதனால் எல்லா விஷயங்களையும் மனைவியிடம் அவன் சொல்லுவதில்லை. அவன் மனம் கணக்குப் போடுவதில் லயித்து விட்டது ; முன்னேற்றத்திற்கான திட்டங்கள். சரோஜினி அவனிடம் மடித்த வெற்றிலையைக் கொடுத்து விட்டு, பாத்திரங்களை எடுத்தலம்பப் போனாள். தூரத்தில் குதிரையின் குளம்புத் தாளம் கேட்டது. 'துரை!' என்று மனம் அறிவுறுத்தியது. வாயிலிருந்த வெற்றிலையைத் துப்பிவிட்டு புத்துயிருடன் என்ஜின்

ஆவியை விடுவதுபோல் மெல்ல புஸ் புஸ் என்று சரோஜினியைக் கூவி அழைத்தான்.

"ஏ சரோஜா – துரை, துரை! ..."

"அப்பாடி !. எதைப் பார்க்க வேண்டும் நான் ? அந்த வழுக்கைத் தலை குரங்கைத்தானே ?" "சட், ஏ சரோஜ் – வாயேன் – அதோ துரை – துரை" சிரித்தப்படி சரோஜினி அவன் பக்கத்தில் வந்து நின்றாள். கடா கட், கடாகட் என்று குதிரையின் அடி ஓசை அணுகிக் கொண்டிருந்தது. ஜன்னலின் கம்பிகள் வழியாய்க் குனிந்து வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். எதிர் வீட்டு காலேஜ் மாணவனும் எதையோ உருப் போட்டபடி இந்தப் பக்கமே பார்த்துக் கொண்டிருந்தான். பலிதத் சரோஜினியின் முதுகின் மேல் குனிந்து வெளிறிய முகத்துடன் வெளியே பார்த்துக் கொண்டிருந்தான். துரை வந்து கொண்டிருக்கிறார்.

தினமும் இரு முறை அவர் இவ்வழியாகத்தான் எல்லோரும் தரிசிக்கும்படி குதிரை சவாரி செய்வார். ஆனால் – இதென்ன! கறுப்புக் குதிரை அம்பைப் போல் பாய்ந்து போயிற்று. ஆளைக் காணோம். பலிதத் சரோஜினியைக் கூவி அழைத்தான். 'சரோஜ், சரோஜ் ! சீக்கிரம் என் துணிகளை எடுத்துக் கொடு – சீக்கிரம் சீக்கிரம்" சுறுசுறுப்புடன் அந்தத் துணிகளை அணிந்து கொண்டான். என்ன செய்கிறோம் என்று அவனுக்கு உணர்வேயில்லை. கதவைத் திறந்து கொண்டு குதிரை வந்த திசையை நோக்கிப் பைத்தியம் போல் ஓடினான். மக்கள் அவனை ஆவலுடன் கவனித்தார்கள். அவனை எவரும் எதுவும் கேட்கும் முன்பே காற்றாய் பறந்து விட்டான். தெரு நாய்கள் சில அவனைத் துரத்திக் கொண்டு ஓடின. பலிதத் மனதிற்குள்ளேயே தேவியை ஸ்தோத்திரம் செய்தான், 'அம்மா தாரா, தாரா' என்று. சரியாய்ப் பொத்தான்களைப் போடாமலும், ஷூவின் நாடாக்களைக் கட்டி விடாமலும் தலை தெறிக்க ஓடினான், அதிருஷ்ட தேவதையைப் பிடிக்க ஓடுவது போல – "தாரா, தாரா!" பலிதத் ஓடிக் கொண்டிருந்தான்.

அதிக தூரம் போக அவசியமேற்படவில்லை. வழியிலேயே தரையிலிருந்து எழுந்து வரும் துரையைக் கண்டுவிட்டான் மேலெல்லாம் ஒரே புழுதி, காயமும் பட்டிருந்தது –இது என்ன கோலம் ! வாய் குளற ஏதேதோ பேசிக்கொண்டு பலிதத் துரையைச் சுற்றிச் சுற்றி வந்தான் – பதிலுக்கு துரையிடமிருந்து வசை மாரி மட்டும். துரைக்கு அனுதாபம் பிடிக்காது என்ற பலிதத்திற்கு நினைவு வந்தது. நொண்டிக் கொண்டே குதிரை போன திக்கில் துரை நடக்க ஆரம்பித்தார். குதிரையைத் தேடிப்பிடிக்க

ஆட்களை ஏவினான் பலிதத். குதிரைக்காரனைக் கூப்பிட்டனுப்பினான். அப்புறம் என்ன செய்வதாம். அடிமேல் அடி வைத்துத் துரையைத்தொடர்ந்தான்.

ஒரு சிறு ஊர்வலமே புறப்பட்டு விட்டது. முன்னே துரை. பின்னாலேயே கொஞ்சம் தூரத்தில் வாமன பலிதத். அசட்டுத் தைரியத்துடன் பின் தொடர்ந்த பலிதத். ஜனங்களைப் பார்த்து கர்வமாய்ச் சிரித்தபடி நடந்தான், பாக்கிய லக்ஷ்மி தனக்காக நற் சந்தர்ப்பத்தைக் கொண்டு வந்திருப்பதாய் நினைத்துக் கொண்டான். துரையின் வீழ்ச்சியில் தன் உயர்வைக் கண்டான். கூட வேலை செய்பவர்கள் கும்பலாக அங்கும் இங்கும் நின்று பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களை மிரட்ட விரும்பினான். துரை என்ன சொல்லுவாரோ என்றறிய ஓரக் கண்ணால் அவரைக் கவனித்தான். ஆனால் அவர் பேசாமல் நடந்தார்.

குதிரைக்காரன் குதிரையைப் பிடித்து வந்தான். அது கனைத்தது. அதன் முதுகைத் தடவிக் கொடுத்து, குனிந்து, அதன் கால்களைக் கவனிக்கலுற்றார் துரை.

"என்ன ஆச்சரியம்! குதிரையிடம் இவ்வளவு அன்பா?" கூட்டத்தில் ஒருவித ஆச்சரியக் கும்மாளம். பலிதத்தும் குனிந்து குதிரையின் கால்களைக் கவனித்தான். குதிரைக் காலைப்பற்றி அவன் முன்பின் நினைத்தது கூட இல்லை. அதில் என்ன விசேஷமோ! அதை துரை அவ்வளவு கவனமாயப் பார்க்க என்ன காரணமோ ? நாமும் பார்த்துத்தான் ஆகவேண்டும், என்று அவன் எண்ணினான். துரை திடீரென்று 'மிருக டாக்டர்' என்று கூவியவாறு தன் வீட்டுப் பக்கம் சுட்டிக் காட்டினார். பலிதத் பக்கத்தில் நின்ற ஒருவனிடமிருந்து சைக்கிளைப் பிடுங்கிக் கொண்டு அதில் ஏறி சூ . . . என்று காற்றாய்ப் பறந்தான். அந்த ஆள் ஆச்சரியத்தில் ஊமையாய் நின்றான்.

சைக்கிளை காற்றின் வேகத்தில் ஓட்டிப் போகும் பொழுது அவன் மனம் ஆனந்தத்தில் மிதந்தது. இதுதான் விடிவு என்று மனப்பறவை கூவியது. அவசரத்தில் கால்கள் நடுங்க மூச்சேற ஓடும்பொழுது புத்திக்குள் கலிங்கம் என்று பறவை இதுதான் விடிவு, இதுதான் விடிவு என்று கூவிற்று. இந்த ஆனந்தத்தில் தன்னையே இழந்து விட்டான் பலிதத். மிருக வைத்தியருடன் அவன் திரும்பியபொழுது குதிரை நின்று கொண்டிருந்தது. துரை புல் தரையில் மண்டியிட்டவாறு அதன் காலைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தார்.

தன்னையே மறந்து ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருந்த பலிதத்திற்கு தானும் குதிரையின் கால்களை பரிசோதிக்க வேண்டும் என்று தோன்றிற்று. கண் சிமிட்டும் நேரத்தில் அவன் குதிரையை அணுகிய பொழுது அது ஒரு உதை விட்டது. நல்ல வேளையாய் அது உடலில் படவில்லை. ஆனால் பின்னுக்கு ஒதுங்குகையில் கால் தவறிக் கீழே விழுந்தான். துரை கர்ஜித்த வாறு சிவந்த கண்களுடன் நின்றார்.

ஒரே மோதலில் தன் சௌபாக்கியம் என்ற மாட்டுவண்டி குப்புறப் புரண்டு விட்டதைப் போல் தலையைக் குனிந்து கொண்டு நின்றான். பாவம், பலிதத்.

★ ★ ★

"குட் மார்னிங்" என்றான்.

"குட் ஈவினிங் பாபு". பலிதத் நாக்கைக் கடித்துக்கொண்டான். உண்மையில் மாலை நேரமல்லவா அப்பொழுது. அவனுடைய கலவரத்தைக் கண்டு கொண்டாள் சீமாட்டி. ஆனால் அவன் முயற்சியை விடத் தயாராயில்லை. கைகளை ஆட்டி ஆட்டி, காலையில் தான் கொண்டு வந்து கொட்டியிருந்து உரக் குவியலைக் காட்டி விளக்கினான். குதிரை லத்தி எதுவென்றும் பன்றிச் சாணம் எதுவென்றும், அதை தான் எப்படி சேகரித் தான் என்பதையும் விரிவாக விளக்கினான். சீமாட்டி தலை ஆட்டினாள். அவனுடைய ஆனந்தம் கரை புரண்டு ஓடியது. மேலும் மேலும் வார்த்தைகளைக் கொட்டினான். 'ஓ! ஐ ஸீ, மாலி இதை எல்லாம் எடுத்துப் போடு" என்று பூச்செடிகள் பக்க மாய்ப் போய்விட்டாள். சக ஊழியர்கள் பார்த்துக் கொண்டிருந் தனர். அப்போதும் துரை முழந்தாளிட்டு குதிரையின் பக்கத்திலிருந்தார்.

ஃபைல்களுடன் மூவர் காத்துக் கொண்டிருந்தனர். "அவரச மான காரியம் ஹுஜுர்" என்றார் கிழவரான குலமணிபாபு. "அவசரம்". "அவசரம்". துரை கத்தி, பலிதத்தைக் கூப்பிட்டார். "பாபு, பாபு ஓ .." ஓடிவந்து ஸலாம் செய்தான் அவன். "பாபு, இம்முறை யாரும் யோக்கியமுள்ளவர்களாய் எனக்குத் தெரிய வில்லை என்று எழுதிவிடு"

டாக்டர், குதிரையை நன்றாய்ப் பாருங்களேன்!

தூரத்தில் எதிர்ப்பார்ப்புடன் காத்துக் கிடந்த உத்தியோகஸ் தர்களின் முகத்தில் கரி பூசினால் போல் ஆகிவிட்டது. பலிதத் ஃபைல்களுடன் புறப்பட்டு விட்டான். வெவ்வேறு திசை

களிலிருந்து அவனை அழைத்தார்கள். ஆனால் அவன் பேசாமல் போய்க்கொண்டிருந்தான்.

★ ★ ★

"உன் கணவன் குதிரையை மாதிரியே ஓடினானேடீ" என்றாள் ராம் பாபுவின் மனைவி. "எனக்கு ஒரே ஆச்சரியமாயப் போய் விட்டது. நிஜமாகவே நல்ல உடல் பயிற்சி உள்ளவன்தான், எப் படிப் பறந்தே போய்விட்டான்" என்ன பதில் சொல்வது என்று சரோஜினி யோசித்தாள். சிரித்துக் கொண்டே "ஓட முடியாதபடி எல்லோருக்குமா தொந்தி விழுந்து விட்டது?" என்றாள்.

"ஆமாம் அடி. ஓடு ஓடு. மியா மஸ்ஜித் வரை தானே ஓடுவான். எவ்வளவுதான் கேலி செய்தாலும், அவன் அறுபது ரூபாய் வாங்குகிறவன் தானே. அது எப்படி ஏறமுடியும்? இப்படி ஓடுவதால் என்ன பயன்? நடப்பது நடக்கும், இந்த மாதிரி ஏன் ஓட வேண்டும்?"

"எப்படி நடக்கும் நீயே சொல் அக்கா. முன் வாசல் வழியாக வும், பின் வாசல் வழியாகவும் எல்லோருக்குமா அதிருஷ்டம் கிட்ட முடியும்? முயற்சி செய்தால் தானே கிட்டும்?"

"யாரைப் பற்றிச் சொல்லுகிறாய்? யாருக்கு இப்படி முன் வாசலிலும், பின் வாசலிலும் செல்வம் காத்துக் கிடக்கிறது?"

"யார் ஆனால் என்ன?"

"ஆமாம். கலியுகமோ இல்லையோ. ஒருவன் முன்னேறுவதைக் கண்டு பிறர் வெந்து போகின்றனர். என்ன சொல்லி விட்டாயடி நீ! அவரவர்கள் அந்தஸ்தைக் காட்டிக் கொள்வதை யாரும் தடுக்கவில்லை. இப்படி வயிறு எரிந்தால் நீயே வெந்து போவாய். உன்னைத்தேடி ஒன்றும் வராது"

"நான் ஏன் வேக வேண்டும் அக்கா?"

வாக்குவாதம் முற்றும் முன்பு உள்ளே குழந்தை அழும் குரல் கேட்டது. "அம்மா, ஓ அம்மா!", ராம் பாபுவின் மனைவி உள்ளே போய் விட்டாள். அவளுடைய பேச்சு வெறும் பேச்சா என்ன? தேனில் முழுகிய கத்தி முனைகள் அல்லவா.

சரோஜினி மனஞ்சலித்து உட்கார்ந்து விட்டாள். அழுகையும் பொத்துக் கொண்டு வந்தது. ஆனால் அழுகையைக் கேட்டு தன்னை சமாதானப்படுத்த யாரும் இல்லையே. அழுதும் பிரயோசன மில்லை.

ஒரு விஷயம் நினைவில் வந்தது. அவள் கணவன் கேலிக்கு இலக்காகி விட்டான். அவள் மனதிலிருந்த விஷயத்தை, சித்திர வதை செய்து கொண்டிருந்த விஷயத்தை, ராம் பாபுவின்

வாயாடி மனைவி வெளிப்படுத்தி விட்டாள். இப்பொழுது அந்த விஷயம் இன்னமும் கீழ்த்தரமாய்த் தோன்றியது. அதைப் பற்றி நினைக்கவே பிடிக்கவில்லை. ஆனால் யோசிக்காமலிருக்க முடியாது. இந்த தூர தேசத்தில் அவளுக்குத் துணை இந்த அலசிப் பார்க்கும் குணம் மட்டுமே.

'நல்ல இடம் நல்ல இடம்' என்று சொன்னார்கள். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள் அவள். கடைசி பெண். பகலில் விளையாட்டின் நடுவே அவள் தன் கலியாணத்தைப் பற்றிய பேச்சை மறைந்து நின்று கேட்பாள். நல்ல இடம் என்றார்கள். தோழிகளின் கேலியும் சீண்டலும் அவளுக்கு உற்சாகம் ஊட்டின. தன் மாப்பிள்ளை 'படித்தவனாய், வேலை பார்ப்பவனாய் இருக்க வேண்டும் என்று அவளுடைய தந்தை பிடிவாதம் பிடித்தார். மாப்பிள்ளைக்கு பொன் சங்கிலியுடன் கடியாரமும், சைக்கிளும் கொடுப்பதாய் நிச்சயமாயிற்று. பிற மாப்பிள்ளைகளுக்கு இதெல்லாம் இல்லை.

மாப்பிள்ளை கிராமத்திற்கு வந்தான். வாத்திய கோஷமும் வாண வேடிக்கையும் அவனை வரவேற்றன. அப்புறம் அவனுடைய தோற்றத்தையும் உருவத்தையும் பற்றிக் கிண்டலான பேச்சு நடந்தது. "ஆஹா, நம் சகோதரிக்கு இந்த வரனா! பொன் கிண்ணத்தில் நாகப் பழத்தை வைப்பது போலல்லவா இது!" என்றார்கள். கல்யாணத்திற்கு முன்பு கிராமவாசிகளுக்கும் நகரத்திலிருந்து வந்திருந்த மாப்பிள்ளை வீட்டாருக்குமிடையே சிறு பூசல், சண்டை கைகலப்பு வரை எட்டிவிட்டது.

பலர் கோபித்துக் கொண்டு போய்விட்டனர். எல்லா சமாசாரமும் அவள் வரை எட்டிக்கொண்டிருந்தது. புறப்படும் பொழுது அவள் தந்தையின் கைகளைப் பிடித்துக்கொண்டு அழுதாள். "அப்பா என்னை இப்படித் தள்ளிவிட்டீர்களே" என்று.

அப்புறம் வாழ்க்கை எப்படியோ போய்க் கொண்டிருந்தது. கற்பனையில் தான் கண்டு காதலித்த அரசகுமாரன் எங்கே, நாலடி ஒன்பது அங்குல பலிதத் எங்கே !

ஆனால் கூடவே அவளுடைய தன்மானம் 'இவன் உன் உடைமை' என்று நினைவுபடுத்தியது. எப்படிப்பட்டவனானாலும் அவன் என் கணவன்" என்று தேறினாள். எல்லோரும் ஒரே மாதிரி இருக்க முடியுமா? இங்கு தான் அவளுடைய உலகம். கடவுள் கிருபையால் இங்கிருந்தவாறேதான் வளர்ந்து, முன்னுக்கு வந்து பெருமை பெற வேண்டும். காலையிலும் மாலையிலும் கடவுளை வேண்டிக் கொள்வாள். தலைதூக்கி கர்வத்துடன் நடந்தாள். கணவனைப் போஷிப்பதில் ஈடுபட்டாள். அவன்

சுகதுக்கங்களைப் புரிந்து பகிர்ந்து கொண்டாள். அந்தச் சிறிய மனிதனின் முன் தலை குனிந்து தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும் பொழுது, ஒரு தாய்க்கேற்படும் பாசத்தை அனுப வித்தாள்.

ஆனால், நடு நடுவே, சுக அனுபவங்களின் மத்தியிலும், அவளுக்கு எரிச்சல் வந்துவிடும். தலையும், நெருப்பாய் எரியும். நாள் முழுவதும் வேலை செய்யும் களைப்புடனும், மாலையில் எதிர்கால திட்டங்களை வகுத்த பிறகும், பலிதத் குறட்டை விட்டுக் கொண்டு உறங்கும் பொழுது, சரோஜினி பாம்பைப் போல் புஸ் புஸ் என்று பெரு மூச்சு விட்டுக் கொண்டு, அமைதி யற்றுப் புரளுவாள். அடிக்கடி எழுந்து உட்கார்ந்து கலவரம் செய்வாள். தூங்கும் கணவனைப் பார்க்கும்பொழுது தன் தோளில் பொருத்தப்பட்டுள்ள பளபளக்கும் பித்தளை ப்ரூச்சின் 'பதிபரம குரு' என்ற வசனம் நினைவிற்கு வராது. கொதிக்கும். மனதிலிருந்து எரியும் கண்கள் வழியாய் குரூரமான விஷத்தைப் பாய்ச்சுவாள். மனத்தின் மூட்டம் மாறும் குணமுடையது. ரொம்ப நாழிகைக்கு அப்புறம் தூக்கம் வரும். காலையில் திரும்ப மலர்ந்த முகத்துடன் தன் வீட்டுக் காரியங்களில் ஈடுபட்டு விடுவாள்.

ராம் பாபுவின் மனைவியின் தயை அற்ற கேலிப் பேச்சு அவளுடைய பாவனைகளை மேலெழச் செய்தது. கண்களிலி ருந்து நீர் சொரிய அடுப்படியில் அமர்ந்திருந்த சரோஜினி 'மனிதர்கள்' ஏன் இவ்வளவு நிஷ்டூரமாயிருக்க வேண்டும்? பிற ரைக் காயப்படுத்துவதில் என்ன சுகத்தை அனுபவிக்கிறார்கள்? உலகில் ஏன் இவ்வளவு துன்பம்? என்று நொந்து கொண்டாள்.

வாழ்க்கையில் கடினமான சந்தர்ப்பங்களில் கடவுளை மனம் அழைக்கும் பொழுது அது கிராமத்தையும் அவளுடைய பிறந்த வீட்டையும் நோக்கிப் பரவும். அங்குள்ள பூஜை அறை கண் முன் நிற்கும். மரப் பீடத்தின் மேல் பித்தளையில் ராதாகிருஷ்ணனின் பிரதிமை, கீழே சிவந்த துணி மேல் சாலிக்கிராமக் கல் வைக்கப் பட்டிருக்கும். மணி அடித்து, தீபாராதனை நடக்கும். மணி ஓசையைக் கேட்டு நைவேத்திய பிரசாதத்திற்காகக் குழந்தைகள் கூடி விடுவார்கள். இனிப்பின் வாசனையை முகர்ந்து பூச்சிகள் வெளிவரும். அங்கு தாய் பக்தியுடன் நமஸ்கரித்தவாறு இருக்க, தந்தை உரக்க 'ஜணாண' கடவுளிடம் துக்கங்களை முறையிடும் பிரார்த்தனை கீதம் பாடுவார். துக்கம் தளும்பும் குரலில், சரோஜினி நிமிர்ந்து நிற்பாள்.

கண்ணீர் பளபளக்கும் கண்கள். கண்ணீர் வழியே எதிரே எரியும் நெருப்பு தெரிந்தது. பரிச்சயமான காட்சிதான். பழக்க

மான அரிசி கொதிக்கும் தாளம் கேட்கிறது. வழக்கமான வாசனை, தேவதையின் பீடம். எல்லாமே சாரமற்ற வாழ்க்கை யின் சின்னங்கள். அவளால் அதை ஒப்புக் கொள்ள முடிய வில்லை. ஆனால் அதற்காகவே அவள் தயாராக்கப்பட்டி ருந் தாள். மனதின் அடிதளத்தில் அடைப்பட்டுக் கிடந்த அவளுடைய தன்மானம் தெரிந்தது அவளுக்கு. அதன் நிழலில் நொறுங்கிப் போயிருக்கும் அவளுடைய கனவுகளும் ஆசைகளும், மரத் தடியில் சிதறிக் கிடக்கும் மண் பானைகளையும் கூடைகளையும் போல் காட்சியளித்தன.

யாருமே இல்லை – தனிமை மட்டுமே நிலவியது.

அடுப்பில் விறகு எரிய எரிய சமையல் வேலையும் துரிதமாய் நடைபெற்றது. ஏதோ யந்திர இயக்கம் போல். பழைய எண் ணங்கள், மனதின் ஓலம் எல்லாம் பழகிப் போனவைதான். மனோபாவங்கள் ஒன்றொன்றாய் மனத்திரையில் தோன்றி மறைந்தன. மனமும் அடங்கி விடுகிறது. பிறகு விவஸ்தையும் ஆரோக்கியமும் உள்ள சாதாரண மிருக குணத்திற்கேற்ப, எதிர் காலத்திட்டம் வகுக்க முற்பட்டாள் – தன் வயிற்றிலிருந்தே நூலை எடுத்து வலை பின்னும் எட்டுக்கால் பூச்சியைப் போல், மயங்கிய நிலையில் சுகமான கனா காண்கிறாள். அவளுடைய சுபாவப் படி இந்தக் கனவு உல'கத்தைத் தன் உரிமையாக்கிக் கொள்கிறாள். வாழ்க்கையின் ஒரு ஆறுதல் போலும் இது. இந்த எதிர்காலக் கனவுலகில் தன்னை நிலை நாட்டிக் கொள்ளப் பிரதிக்ஞை செய்துகொண்டாள்.

சமையலறையில் அதிகநேரம் உட்கார்ந்த அவளுக்குத் தலையைச் சுற்றியது, கண்கள் அலுப்பைக் காட்டின. தினம் இவர் ஏன் இப்படி நேரம் கழித்து வருகிறார் என்று சலித்தாள். எங்கும் ஒரே வெறுமை.

சமையலறையை மூடிக் கொண்டு வெளி அறைக்கு வந்தாள் சரோஜினி. எதிர் வீட்டில் அந்தக் காலேஜ் மாணவன் புத்தகக் குவியலுடன் அமர்ந்திருந்தான். விளக்கை ஏற்றினாள். அதற்கு அவசியமில்லைதான். அந்த வெளிச்சத்தில் தன் உருவம் வெளியில் நன்றாய்த் தெரியும் என்று அவள் அறிவாள். ஆனாலும் ஓசைபடாமல் போய் சுவரில் தொங்கிய விளக்கின் திரியை உயர்த்தி விட்டாள். மனதுள் கிடந்த ஏதோ லேசான பாவ நினைவு அவளை வெட்கமுறச் செய்தது. விவரிக்க முடியாத ஒரு மனநிலையில் ஜன்னலருகே போய் நின்று கொண்டு, நின்று கொண்டு, தூரத்தில் தன் கண்களை நிலைக்க வைத்துக் கொண் டாள். எதிர் அறையில், திடீரென்று புத்தகங்களை நிராகரித்து

விட்டு தன் விளக்கின் திரியை இறக்கினான் காலேஜ் மாணவன். ஜன்னலருகே பேசாமல் நின்று கொண்டு அவளுடைய நிழல் உருவத்தைக் கண் கொட்டாமல் பார்த்தவாறிருந்தான். அவனுக்கு வெளிச்சம் அவசியப்படவில்லை. அந்த இருட்டின் நிழலில்தான் இருந்தது அவனுடைய பிரகாசம்.

ஏங்கட் ராவ், பலிதத்தின் சம ஊழியனும், நண்பனும் ஆவான். மாநிறம், நல்ல உயரமும் திடமும் கொண்ட மல்லனைப் போன்று தோன்றுவான். சிரித்த முகம். வெளியில் புறப்படும் பொழுது கணக்காய் உடை அணிந்து, பளபளக்கும் மிதியடிகளுடன், பட்டையாய் வாரிவிட்ட முடியுடன், தயாராயிருப்பான். முகமும் பளிச்சென்று இருக்கும். அவனுடைய பேச்சிலும் நடத்தையிலும் மரியாதையும் நயமும் எப்பொழுதும் காணலாம். குறைவாகவே பேசுவான். அனாவசியப் பேச்சே கிடையாது. யாரும் மனம் நோகும்படி பேசவே மாட்டான். காலோசை கேட்காதபடி மெல்ல மெல்லத் தன் வழியே செல்லுவது அவனுக்குப் பிறவியிலேயே வந்த குணம் போலும்.

தன் குடும்பத்தைப் பற்றியோ தன்னைப் பற்றிய கஷ்டம் குறைகளைப் பற்றியே அவன் வெளியில் பேசுவதே கிடையாது. அவன் சாப்பிடவில்லையா? களைப்பா? வீட்டில் ஏதோ அசௌகரியம் போலும். அவனாக யாரைப் பற்றியும் ஒன்றும் சொல்ல மாட்டான். மேலதிகாரிகள் முன்பு எப்போதும் தாழ்மையான மரியாதை, எவ்வளவுதான் அவனைப் போருக்கு இழுத்தாலும் அவன் கோதாவில் இறங்க மாட்டான். எவரெடி பாட்டரியின் விளம்பரத்தைப் போல் எப்பொழுதும் அவன் தயார். வாயிலிருந்து 'யெஸ் ஸார்' என்று மட்டுமே வரும்.

இப்படிக் கபடமற்ற, குற்றமற்ற 'யெஸ் ஸார்', என்று பதங்களை உபயோகித்தே முன்னேறி வரும் ஏங்கட்ராவிடம் பலிதத்திற்கு ரொம்ப மரியாதை உண்டு. தான் எவ்வளவு முயன்றும் கிட்டாத பரம்பரைப் பண்பை அவன் ஏங்கட்ராவிடம் கண்டான். சிக்கனத்திற்கு ஒரு சிறந்த உதாரணம் ஆகவும் தோன்றினான் ஏங்கட்ராவ்.

தாய் தந்தை, மனைவி, தங்கை, அவள் கணவன் எல்லோரும் சேர்ந்து வாழும் வீட்டில் நுழைந்தவுடன் அவன் தன் சிறு அறையுள் புகுந்து கதவை மூடிக் கொண்டு விடுவான். தனிமையில் குடும்பத்தின் வறுமை நிலையை மனதார ஏற்றுக் கொண்டு தன் உடையையும் அதற்கேற்ப மாற்றிக் கொள்ளுவான். வீட்டுள் வளைய வர நான்கு முழத் துண்டு, வெளியே வர லுங்கி, எளிமையான உணவு-அதுவும் சொந்த கை பாகம். ஒரு வேளை மண்

டுவா பால் கஞ்சி, இரண்டாம் வேளை சாதம், மோர், வேகவிட்ட காய்கறி ஏதாவது. மோரும் நீர்க்கக் கரைத்துத் தான் உபயோகிப் பான் – சுலபமாக ஜீரணமாக வேண்டுமென்று. ஒரு மணி நேரத்தில் அலுமினியப் பாத்திரங்களில் ஆகாரம் தயாராகி விடும். விறகுச் செலவும் குறைவுதான். அனாவசியச் செலவு எதுவும் கிடையாது. இருட்டும் முன்பே சாப்பாட்டுக் காரிய மெல்லாம் முடிந்து விடும். ஆதலால் விளக்கு கூட அதிக நேரம் எரிய வேண்டாம் – மண்ணெண்ணெய்ச் செலவு குறைவு. விளக் கும் குப்பி விளக்குதான். மாலையில் எல்லா கிளப்புகளிலும் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் பத்திரிகைகளைப் படித்து விடலாம். இவ்வளவு பெரிய குடும்பம் ஒரு வீட்டில் வாழ்வதில் கஷ்டம் ஒன்றும் தெரியவில்லை. இரவில் அவனுடைய அறையில் சிவந்த காகிதத்தால் மறைக்கப்பட்ட விளக்கொளி தெரிந்தால் அங்கு அப்புறம் யாரும் போக மாட்டார்கள்.

வீட்டில் சிக்கனம், வெளியில் யெஸ் ஸார் ; சிரித்துச் சிரித்தே ஏங்கட்ராவ் தன் பிரதிகூல நிலையையும் ஏழ்மையையும் வென்று வாழ்ந்து வருகிறான். பலிதத் அவனைப் பின்பற்ற விரும்பினான் "பார்த்தாயா சரோஜ்! தெரியவில்லையா?" என்று வீட்டில் பேசுவான்.

சரோஜினி சிரிக்கத்தான் செய்வாள்.

"ஏங்கட்ராவின் மனைவியைப் பார்த்தாயா? எப்போதும் வேலைதான். ஆனால் பார்க்க எவ்வளவு சுத்தமாகவும் அலங் காரமாகவும் இருக்கிறாள். தலையை வாரிக் கொள்ளவும் பூச்சூட்டிக் கொள்ளவும் அவள் தவறுவதேயில்லை."

"இந்த ஏங்கட்ராவின் மனைவியை மெச்சத்தான் வேண்டும் ஒவ்வொரு புடவையையும் ஆறு வருடமாவது ஜாக்கிரதையாக உபயோகித்து உடுக்கிறாள். தலை மயிரும் சவுரியை வைத்துத் தான் கட்டிக் கொள்ளுகிறாள். எப்பவும் பூ வைத்துக் கொள் கிறாளா? இரவில் நசுங்கிப் போய்விடும் என்று அதை எடுத்துத் தண்ணீரில் போட்டு விடுகிறாள். காலையில் திரும்ப வைத்துக் கொள்கிறாள்." என்றாள் சரோஜினி.

"அப்புறம் உனக்குத் தான் தெரியுமே எவ்வளவு நன்றாய் பாட முடியும் அவளால் என்று ..."

"அப்படி எல்லாம் காட்டிக் கொள்ள எனக்கு வராது. ஏங்கட் ராவிடம் சொன்னால் உங்களுக்காகவும் அப்படி ஒரு பெண்ணை ஏற்பாடு செய்வாரே . . ."

"தத். இதென்ன அசட்டுப் பேச்சு. காலையிலிருந்து இரவு வரையில் வாயில் வெற்றிலையுடன் சமையலுள்ளில் புரண்டு

கொண்டிருப்பதை நீ குடித்தனமென்று எண்ணுகிறாய். அப்படி என்ன பிரமாதமான சமையல் நீ செய்வது. வெளியூருக்கு நீ புறப்படும் அழகோ கேட்கவே வேண்டாம். வாய் கொள்ளாமல் வெற்றிலையும், மூட்டையும் முடிச்சுமாய் ஊர்வலம் வரும் பொழுது, ஏதோ சர்க்கஸ் ஜந்துவோ என்று தோன்றும். வீட்டையும் குடும்பத்தையும் நடத்தும் திறமையை ஏங்கட்ராவின் மனைவிடம் கற்றுக் கொள்—தெரிகிறதா சரோஜ்?"

அன்னியப் பெண்ணைப் பற்றிக் கணவன் பெருமையாய்ப் பேசுவதை எந்த மனைவிதான் சகிப்பாள் ? கஷ்டப்பட்டு அழுகையை அடக்கிக் கொள்ளுவாள். பலிதத் பெருமூச்சு விடுவான்.

அந்த ஏங்கட்ராவ் அவனுடைய நண்பன். காப்பியும் இட்லியும் உண்ண வைப்பான். அணாவிற்கு ஒரு கட்டு என்று விற்கும் சுராடி அல்லது கடியார சின்ன பீடி வாங்கினான் என்றால் அதில் பலிதத்திற்கும் கட்டாயம் ஒரு பங்குண்டு. இந்தச் சரள நட்பில் இருவரும் மனம் விட்டுப் பேசுவார்கள், வாக்குவாதம் செய்வார்கள். உயரமும் குட்டையுமாய் அவர்கள் சேர்ந்து நடப்பதே ஒரு அழகு. ஆபீஸ் வேலையைப் பற்றித்தான் அவர்கள் அநேகமாயப் பேசுவார்கள். யார் என்ன எழுதினான், எதை எப்படி எழுத வேண்டும், எவ்வளவு தூரம் எழுத வேண்டும் என்றெல்லாம்தான் பேச்சு. அல்லது ஏங்கட்ராவுக்குத் தெரிந்த ரேகை சாஸ் திரத்தைப் பற்றி அளப்பார்கள்.

கம்பெனி வேலை என்னும் வேலிக்குள் தன் நிகழ்காலமும் எதிர்காலமும் அடைப்பட்டுக் கிடப்பதை ஏங்கட்ராவ் அறிவான். அதில் அவனுக்கு மனக்கிலேசமும் இல்லை, விரோதமும் இல்லை. நேர்மாறாக, தன் தெள்ளிய யதார்த்த நோக்கிற்காகப் பெருமைப்பட்டுக்கொண்டு, தன் சம்பளத்திற்கும் குடும்பச் செல விற்குமுள்ள சம்பந்தத்தை நன்றாக ஆராய்ந்து கணித்துக் கொள்ளுவான். ஐந்து வருடங்களுக்குப் பிறகு மூன்று ரூபாய் அதிகமாகச் சம்பளம் கிடைக்கும் என்றால் வீட்டில் ஏதாவது சிறு மாறுதல் செய்யலாம் என்று கணித்து, மாறுபட்ட வீடு எப்படியிருக்கும் என்று மனக் கண்ணில் காணவும் செய்வான்.

அப்புறம் பத்து வருடம் ...........

சம்பளத்தின் அளவுக்கேற்ற மாறுபாடுகளையும் ஏங்கட்ராவ் திட்டம் போட்டு விடுவான். தன்னுடன் உழைக்கும் யாருக்காவது நல்ல காலம் வந்து அவன் உயர்ந்தால், அதனால் அவன் விசனம் அடைவதில்லை. அவன் திருஷ்டி, பாதையிலிருந்து விலகி பாதை ஓரத்தில் உழைக்கும் கூலி ஆட்களையும் பிச்சைக்

காரர்களையும், நொண்டி முடங்களையும் பார்க்கும். அவர்களுடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்து தன் பாக்கியத்திற்காகச் சந்தோஷப்படுவான். சீட்டி அடித்துக் கொண்டு மேலே நடப்பான்.

ஆனால் அவன் அந்தரங்கத்திற்குள், லௌகீகம் என்ற பனிச்சுமையின் அடியில் அமுங்கிக் கிடக்கும் லட்சியங்களும் உயர் நோக்கும், சூடேறி, ஒவ்வொரு சமயம் புத்தக உலகத்தையும் தாண்டி வெளி வர நச்சரிக்கும் – படுக்கையில் வளரும் ஒரே ஒரு மூட்டைப் பூச்சியைப் போல்.

அதன் உந்துதலால் ஏங்கட்ராவ் ரேகை சாஸ்திரம் பயின்றான். எல்லா மொழிகளிலிருந்தும் மொழி பெயர்க்கப்பட்டுள்ள ரேகை சாஸ்திர நூல்களில் தன்னை மறந்தான். 'சீரோ'வை தன் ஆதரமாகக் கெண்டு வெகு நுட்பமாய்த் தன் முன் காலத்தின் போக்கையும் அறிய முயன்றான்.

ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான் ஏங்கட்ராவ். கையில் ரேகைகள் மாறிக் கொண்டே இருக்கும் என்றும் கூடவே பாக்கியமும் மாறும் என்று ரேகை சாஸ்திரம் சொல்லுகிறது. மனோ பலத்தாலும் காரிய சித்தியாலும் மனிதன் தன் கை ரேகைகளை மாற்ற முடியும்.

பூதக் கண்ணாடி வழியாகத் தன் கை ரேகைகளைக் கவனித்து, வரப்போகும் மாறுதல்களைத் தேடினான். முக்கிய ரேகை யையும், கிருக நட்சத்திரங்களையும் கணித்து, தன் மனோ பலத்தை உபயோகித்தவாறு பெரு மூச்சு விட்டான். பாக்கிய ரேகையின் இந்த நுனி, நடுவிரலினடியிலிருந்த சனி மேட்டை விட்டு, இரண்டாம் விரலின் கீழிருந்த பிருஹஸ்திமேட்டை நோக்கிக் கொஞ்சம் வளைந்து கொடுத்தால்! உள்ளங்கை நடுவில் செவ்வாய் குளம் போல் கிடந்தது. ஏங்கட்ராவ் ஆபீசில் உட்காரும் அறையிலேலேயே உயரமான ஆசனம் அவ்வளவு தூரத்தில் இல்லை போலும்! மனோபலத்தின் வெற்றி! நடக்கட்டும்.

யாராவது புதியவரைக் கண்டால் அவருடைய உள்ளங்கையைத் தான் கவனிப்பான் ஏங்கட்ராவ். அன்னியமானவர்களின் ரேகைகளை அவர்களறியாதபடி நோக்கி அவர்களுடைய குணம், வாழ்க்கை, எதிர்காலம் எல்லாவற்றையும் எழுதி வைப்பான். அதற்கேற்றாற்போல் அவர்களுடன் பழகுவான்.

கூட்டாளிகள் கையைக் காட்ட வருவார்கள். ஏங்கட்ராவ் தேர்ச்சி பெற்றான், திறமையும் வளர்ந்தது. கை பார்க்கும் கலையைத் தன் எதிர்காலத்தை காட்டும் கண்ணாடி என்று ஏங்கட்

ராவ் மதித்தான். தன் மேதைமை ஒரு நாள் வளர்ந்து பூரணமாகும். அப்பொழுது கை ரேகைகள் எல்லாம் நன்றாய்த் தெரியும். அதிர்ஷ்ட தேவியின் ஒளிமயமான கண்களுக்கு. தன் எதிர் காலமும் தெளிவாகத் தெரியும். இவ்விஷயத்தில் தான் பலிதத் வேறு விதமாய் எண்ணினான். குறுகிய மனப்பான்மையையுடைய பலிதத், ஏங்கட்ராவின் உத்தேசத்தைக் கேலி செய்தான். தன்னுடன் ஒத்துப் போகாதவர்கள் எல்லாரையுமே மனதிற்குள் இகழ்ந்தான் பலிதத். முதலாளி வேலையாளின் திறமையை கவனிக்கும் தன்மையுடன் பலிதத், ஏங்கட்ராவின் கை பார்க்கும் பழக்கத்தை நோக்கினான். வேலையாளின் திறமையை எப்படித் தன் முன்னேற்றத்திற்காக பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற யோசனையுடன் முதலாளி நோக்குவான். பெரிய அதிகாரிகளுடையவும், அவர்கள் குடும்பத்தினருடையவும் கையைப் பார்க்க ஆரம்பிக்க ஏங்கட்ராவ் எவ்வளவு சீக்கரம் முன்னேற முடியும்! இதை நினைக்கும் பொழுதே வயிற்றைக் கலக்கியது பலிதத்திற்கு. ஆனால் என்ன செய்வது ? அவனுக்கு அந்தக் கலை வராதே. புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே, ரேகைகளை வரைந்து கணக்குப் போடுவது தன்னாலாகாத காரியம். தன் வேலையைப் பிறர் மூலம் காரியத்தில் கொண்டு வர நினைத்து ஏங்கட்ராவ் ஊக்கினான். 'எவ்வளவு சொன்னாலும் புரிந்து கொள்ள மறுக்கிறாயே! இப்படி வீட்டிற்குள் அடைந்து கிடந்தால் உன்னை யார் கவனிப்பார்கள் ? வெளியே வந்து, உன்னை விளம்பரப்படுத்திக் கொள் ; இது விளம்பர யுகம் தெரியுமோ இல்லையோ ? மேலதிகாரிகளின் கைகளைப் பார்த்து எதிர்காலத்தைச் சொல். செய்வாய் இல்லையா?" என்று புத்திமதி கூறினான்.

ஏங்கட்ராவ் சிரிக்கத்தான் செய்தான். பலிதத்தின் அற்ப புத்தியைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. அதிர்ஷ்டத்தின் உண்மையை அறியாதவன், நம்பாதவன் மனிதனே அல்ல. சாயங் காலமாய்த் திரும்ப பலிதத், ஏங்கட்ராவிடம் வந்தான். "நாளைக்கு நீ என் எதிர் காலத்தைக் கணித்துப் பார்க்க முடியுமா? சமயம் நெருங்குகிறது" என்றான்.

"கட்டாயம்"

"இம்முறை உன் கணக்கு சரியா, இல்லையா என்று தெளிவாகி விடும்" எவ்வளவோ முறை கேட்டாயிற்று; இந்தப் பேச்சைக் கேட்டு ஏங்கட்ராவ் சிரித்துக் கொண்டான்.

★ ★ ★

ஒரு சிறு அழகான வீடு. உள்ளிருந்து விளக்கு வெளிச்சம் வீசிக் கொண்டிருந்தது. கதவு திறந்து கிடந்தது. உள் வெளிச்சம் வெளி இருளை விரட்டிக் கொண்டிருந்தது. கூடவே பல குரல்களின் 'ஹோஹோ ஹாஹா' என்ற வெடிச் சிரிப்பும் கேலியும் கேட்டுக் கொண்டிருந்தன. பட்டணத்தின் அழுக்கை எல்லாம் திரட்டிக் கொண்டு, முன்னால் ஓடிய சாக்கடையின் துர் நாற்றத்துடன் போட்டியிட்டுக் கொண்டு பக்கத்தில் எங்கோ பூத்திருந்த மதுமாலதியின் மணமும், பிச்சியின் உதிர் இதழ் களும், மருதாணியின் வாசனையும் காற்றில் மிதந்தன. அந்தச் சிறிய வீட்டின் சுவரை ஒட்டி அகன்ற வீதியில் வண்டியில் வரு வோரும், நடந்து வருவோருமாக ஒரு கும்பல் கூடியிருந்தது. எதிர்ச் சாரியில் பெரிய மாடி வீடு ஒன்று அரசாங்க வக்கீலின் இருப்பிடம். மேலே தொங்கின தட்டியின் மறைவில் யாரோ ஒரு பெண், பாட்டு சாதகம் செய்வது கேட்டுக் கொண்டிருந்தது. கீழே சந்தை போல் கூட்டம். சிலர் உலவிக் கொண்டும், சிலர் உட் கார்ந்து கொண்டும், எல்லோரும் யாரையோ எதையோ எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். வீட்டுள் மின்சார ஒளியில் எஜ மானர் கம்பீரமாகச் சிலருடன் பேசிக் கொண்டிருந்தார். தலை கள் ஆடுவதிலிருந்து ஏதோ சர்ச்சை நடப்பது புலனாயிற்று. விளக்கொளியில் பளிச்சென்று தெரிந்த அந்த சிறிய வீடு வெளியில் நடக்கும் ஆடம்பரத்தால் சிறிதும் பாதிக்கப்படாமல், தன்னைத் தன் குரலாலேயே விளம்பரப்படுத்திக் கொண் டிருந்தது.

இவ்வழியே போகும்போது பலிதத் கொஞ்சம் தடுமாறினான். தன்னுடன் வேலை செய்யும் பன்பிஹாரி பட் நாயகின் வீடல்லவா இது. ஆனால் கணக்கற்ற சக ஊழியர்கள் – எல்லோர் வீட்டிலும் நுழைந்தால் இரவு போய்ப் பகல் விடிந்துவிடும். நேரத்தை வீணடிக்க மனம் தேட்கவில்லை, கணக்குப் பார்க்கும் பலிதத் திற்கு.

ஆனால் பனு எல்லோரையும் போலவா ? அவனிடம் பேசி விட்டுப் புறப்படும் பொழுது பட்டணவாசத்தின் முரட்டுப் பண் பெல்லாம் இடிபட்டு கிராமத்தான் ஆகி விடுவான். எங்கேயோ மறைந்து போய்விட்ட வாழ்க்கையின் எளிமையான, இயற்கை யான செல்வங்களை அவன் மாறிய திருஷ்டியுடன், புதிய மதிப்புடன் பார்க்கத் தலைப்படுவான். சிரிப்பின் ஒலி அலை யலையாக மோதியது. அந்த அலையுடனே பலிதத் உள்ளுக்கு இழுக்கப்பட்டான். நேரத்தை மறந்து, காரண ஆகாரண பேதங்களை மறந்து, தன் முகத்தில் இயற்கையற்ற புன்ன

கையை வரவழைத்துக் கொண்டு உள் நுழைந்தான். சூழ்நிலையும் இயற்கையும் அவனுடைய யந்திர வாழ்க்கையைக் கண்டு மனமிரங்கிப் பரிவுடன் அவனை எளிய நிலைக்கு இழுத்து விட்டாற் போல் உள் நுழைந்தான். பாவம் அந்த யந்திர ஜீவி! வாசலில் உட்கார்ந்திருந்த கறுப்பு நாயும் அந்தப் பரிவைப் பகிர்ந்து கொண்டாற்போல், அவனைப் பார்த்துக் குலைக்காமல் வாலை ஆட்டியது. உள்ளிருந்து பனு அவனை அன்புடன் வரவேற்றான். "ஹலோ, மிஸ்டர் தாஸ் – ரொம்ப நாளாகி விட்டதே! ஏடுனு, இன்னும ஒரு கப் டீ கொண்டு வா. இந்தா பீடி எடுத்துக் கொள்" என்று உபசரித்தான்.

மேஜையின் பக்கத்திலமர்ந்திருந்த ஸண்டு பாபு கம்பீரமாக, "என்னடா, என்ன யோசிக்கிறாய்?" என்று கேட்டான். பனு நாடக பாணியில் நின்று கொண்டு "ஆஹா, முகம் இப்படிக் கறுத்துச் சூம்பிவிட்டதே! ஆபீஸில் துரை அடித்தாரா என்ன? ஏய் மக்கு, இங்கு வந்தால் சிரிக்க வேண்டும், தெரியாதா உனக்கு ? நன் றாய் மனம் விட்டுச் சிரி பார்க்கலாம். இல்லாமல் போனால் .." என்று கூறிக் கொண்டே சட்டையுடன் கழுத்தைப் பிடித்தான். "விட்டுவிடு, விட்டுவிடு, கிழிந்து போய்விடும். என்ன வலி அப்பப்பா!" என்ற பலிதத் கூவினான்.

"பூப்போல மெள்ளத் தடவிக் கொடுப்பேன் என்று எதிர் பார்த்தாயா ? நீ சிரிக்கும் வரை உன்னை விடப் போவதில்லை, பார்!" வலி பொறுக்காமல் பலிதத் சிரிக்க முயன்றான். சிரித்துப் பழக்கமே இல்லாதவன்–பற்களைக் காட்டி இளித்தான்! அதைப் பார்த்து அறையில் பிறரும் சிரிக்க ஆரம்பித்தனர். ஆனால் பனு அப்பொழுதும் பிடியைத் தளர்த்தவில்லை. "இதுவா சிரிப்பு? ஏண்டா, உன் மனைவி அரண்டு போவதில்லையா உன் பிரேதச் சிரிப்பைக் கண்டு?"

"விட்டுவிடடா, சோதாப்பயலே.."

"சரி உட்கார். இந்தா சூடான டீயைக் குடி, இந்தபொரியை எடுத்துக் கொள். நடுநடுவே மறக்காமல் சிரி–தெரிகிறதா?" மென்மையான ஒரு குத்து விட்டு பலிதத்தை உட்காரச் செய்தான். சூடான தேநீரும், வாயில் பொரியும், பலிதத்திற்கு இதமாயிருந் தன. பேசத் தோன்றிது. 'தெரிந்ததா பனு! உன் வீட்டை நாடி வந்தால் உன்னுடைய நாய் கால்களைத் தூக்கி நின்று கொண்டு, நாக்கால் நக்கி நட்புரிமை கொண்டாடுவதைப் போலவே நீயும் உன் அன்பைக் காட்டுகிறாய். பனு–வனு–வானர்!" "போட்டானே ஒரு போடு – ஆனால் வானரத்துக்கும் நாய்க்கும் வித்தியாச மில்லையா ?"

அப்புறம் லண்டு பாபு பலிதத்தைப் பார்த்து, "எப்படி நடக்கிறது ?" என்று கேட்டான்.

"என்னத்தை நடக்கிறதாம்? சம்சார வாழ்க்கையின் தொல்லை எங்கே விடுகிறது?" பலிதத் அலுத்துக் கொண்டான். "சம்சார வாழ்க்கை உனக்கா? ஏன் பனு உனக்குப் புரிகிறதா? ஜய ஜகந்நாத்". இப்படி ஒரு சரளமான கேள்வியைக் கேட்டு விட்டு பிறர் பதில்களைக் கேட்கும் உற்சாகத்துடன், கண்களிலும் உதட்டிலும் சிரிப்புடன் உட்கார்ந்து விட்டார் லண்டு பாபு.

வருடங்கள் உருண்டோடுகின்றன, உலகம் மாறுதலடைகிறது. மனிதனின் பளபளக்கும் கறுப்புக் கேசம் ஜடை விழுந்து தொங்க ஆரம்பிக்கிறது. ஆனால் ஒரு நாள் கூடத் தவறாமல் லண்டு பாபு, பனுவின் வீட்டிற்கு வந்து மேஜையின் பக்கத்தில் உட்காருவார். பண்பும் அமைதியும் புத்திக் கூர்மையும் உடையவர்; அகன்ற நெற்றி, அசாதாரண அனுபங்களைக் கண்டவர், வசீகரமான தோற்றம். அவரைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும், லௌகீகக் கணக்கு வழக்குகள் மறந்து போய்விடும். எல்லோரும் தெரிந்தவர்கள்தான் அங்கு. ஆனால் லண்டு பாபுவைப் பற்றி பனுவின் வீட்டில் மேஜை பக்கத்தில் அமர்ந்திருப்பவர் என்று மட்டுமே தெரியும்.

பனு சொல்லியும், அவருடைய பேச்சு, மனோபாவம் இவைகள் மூலமும் லண்டுதாலைப் பற்றி சுமாராகத் தெரியும். அவர் சாதாரண நிலையிலிருப்பவர் என்று பனு சொல்லியதுண்டு. டார்ஜிலிங்கிலும் அவருக்கு வீடும் வியாபாரமும் உண்டு. ஆச்சரியமான மனிதன் என்று பனு சொல்வதுண்டு. தடபுடலில்லாமல் அவர் வடக்கு ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் பல இடங்களுக்குப் போய் வந்துள்ளாராம். இமயத்தின் ஆபத்தான எல்லையில் அவர் ரகசிய வேவு வேலை செய்ததுண்டாம். துப்பாக்கியைப் பிரயோகிக்க பயிற்சி பெற்றவர். அநேக ஒற்றர்களை அவரே சுட்டுக் கொன்றுள்ளார். தவிர, தாந்திரீகத்திலும், மாந்திரீகத்திலும் சக்தி பெற்றவர்—இன்னும் என்னென்னவோ.

பனு நிறைய துப்பறியும் நாவல்கள் படிப்பவன். பல விஷயங்களை அறிந்தவன். ஆஸ்திரேலியாவில் ஒரு விதமான பூ வளர்கிறதாம். அது மண்ணடியில் செடியில் இருக்குமாம். மழைக்கால ஆரம்பத்தில் முதல் இடி இடித்ததும் பூமி பிளந்து அங்கிருந்து அந்தப்பூ —ஒற்றைப்பூ— மலர்ந்து வெளிவருமாம். இது பனுவின் உபகாரம். அதற்காக அவனுக்கு "தர்த்தி ஃபோட்" (பூமியைப் பிளப்பவன்) என்று நாமகரணம் செய்தனர், அவனுடைய கூட்டாளிகள். அந்த விவரத்தின் 78.5% மிகைப் பேச்சு என்றும்

சொல்லுவார்கள். ஆனால் ஸண்டு பாபுவின் பேச்சில் அவருடைய விசாலமான அறிவும், இனிமையான மனோ பாவமும் அகன்ற அன்பும் நன்றாய்ப் புலப்படும். அவர் கண்கள் ஊசி முனையைப் போல் பிறருடைய கண்களையும் வாயையும் ஊடுருவிப் பார்க்கும் சக்தியுள்ளவை. தர்க்கத்தில் அவருடைய வார்த்தைக்கு மறுவார்த்தையே கிடையாது. பலனைக் குறைவாக எடை போடுபவர். எல்லாம் விதியின் செயல் என்று சலனமற்றிருப்பவர். நீண்ட ஒரு மூச்சுடன் "எல்லாம் அந்தக் கோவிந்தனின் இச்சை" என்று அவர் சொல்லும் பொழுது, எல்லோருமே அதில் லயித்துத் தங்களை மறந்து விடுவார்கள். அவர் ஒரியா மொழியும் பேசுவார், வங்க மொழியும் பேசுவார். அரிய மனிதர், ஜாதியும் மொழியுமற்றவர், மனிதத்தன்மை மட்டுமே உடையவர்.

ஆபீஸ் விஷயங்களைப் பற்றிப் பேச்செடுத்தான். பலிதத் வேலை முடித்துக் கொண்டு வரும்பொழுது மனமும் இந்த வித ஊக்கமான பேச்சைத் தானே விரும்பும்? வேலை உயர்வு அதற்கான வழிகள், படிகள் எல்லாம் உகந்த விஷயங்களல்லவா.

"அரே பனு, இன்று துரை ..."

ஸண்டு பாபுவின் கண்கள் அவனைத் துளைத்தன. பீடியின் இருபுறங்களிலும் பனுவின் உதடுகள் கோணிக் கொண்டன. அங்கிருந்து ஜகுவும், ரகுவும் உற்றுக் கவனித்தனர். இதுவரை ஏதோ வாரப் பத்திரிகையில் வெளிவந்திருந்த பெண் சித்திரங்களில் தன்னை இழந்திருந்த நந்து தலையைத் தூக்கிப் பார்த்தான். சீ என்றாகி விட்டது பலிதத்திற்கு. உற்காசமெல்லாம் மறைந்து விட்டது. தீர்க்கமாய் மூச்சு விட்டபடி தன் தேநீரைக் குடிக்க ஆரம்பித்தான்.

"நிஜமாகவே இவர்களுக்கு அக்கறையில்லையா? வாழ்க்கைப் பிரச்னையை பீடியின் புகையில் பறக்க விட நினைக்கிறார்களே! முன்னேற்றத்தைப் பற்றி யோசனையே இல்லையே" என்று மனதுள் குமுறினான்.

இந்த பனு – நினைத்தாலே பரிதாபமாயிருந்தது.

பலிதத்திற்கு அந்தப் பையனின் கையெழுத்தும், ஆங்கில மொழியில் தேர்ச்சியும், புத்தி கூர்மையும், வேலையும் கெட்டிக்காரத்தனமும் அவனை எங்கோ உயர்த்தி வைக்க முடியும் என்று தோன்றியது. ஆனால் மேலதிகாரிகளுடன் பழகத் தெரியவில்லையே! ஒரு வார்த்தை கூடக் கேட்டுக் கொள்ளமாட்டான், ஒன்றுக்குப் பதிலாய் பத்து கொட்டிவிடுவான். தன் தன்மானத்திற்கு இழுக்கு வந்து விட்டது

என்பான். இதையெல்லாம் அவன் சகஜமாய் ஏன் எடுத்துக் கொள்ளுவதில்லையோ! கம்பெனி வேலைதானே. சொல்லி என்ன பிரயோசனம்? கேட்கவா போகிறான்? எப்பொழுதும் பளிச்சென்று தோன்றும் முகம் தோளை உயர்த்தி நெஞ்சை நிமிர்த்தி நடப்பான் – வேலைக்குப் போகிறவனாகத் தோன்றாது. போர்முனைக்குப் புறப்படும் வீரனைப் போல் காணப்படுவான்.

பனுவின் குண விசேஷங்கள் தனக்கில்லையே என்ற அங்கலாய்த்தான் பலிதத். 'மாலை வேளையில் மேலதிகாரி வீடுகளைத் தேடிப்போய் ஏதாவது காரியம் செய்யும் சாக்கில் அவர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதை விட்டு விட்டு, நேர் மாறாக தன் வீட்டிற்குப் பலரை அழைத்து உபசரித்து அனாவசியப் பேச்சில் அல்லவா நேரத்தை வீணாக்குகிறான் பனு! அது இல்லாவிட்டால் புத்தகக் குவியலுடன் உட்கார்ந்து விடுகிறான். வியர்வை வழிய வேலை செய்து சம்பாதிக்கும் காசைப் புத்தகமும், பத்திரிகைகளும் வாங்கியா விரயம் செய்வது? அதிசயம்தான்! வேலைக்கு வந்த பிறகு புத்தகப்படிப்பு எதற்கு? காரிய சாஸ்திரம் மட்டும் போதுமே. ஆனால் இவர்கள் இதை எல்லாம் எங்கே புரிந்து கொள்ளுவார்கள்!' பலிதத்தின் மனம் புழுங்கியது.

இது போதாது என்று மேலதிகாரிகளுடன் அபிப்பிராய பேதம் கொண்டு அவர்களுடைய தவறுகளை எடுத்துக்காட்டுவது பெரிய பைத்தியக்காரத்தனம் அல்லவா? மழை எங்கேயோ அங்கே குடை – இப்படித்தான் இருக்க வேண்டும். அவன் இதை ஏனோ புரிந்து கொள்ள மறுத்தான், ஆச்சரியம்தான்.

புரிந்து கொண்டானானால் அவன் சுலபமாய் ஒரு அதிகாரியாகி விடலாம். யார் யாரோ உயர்ந்து விட்டார்கள், உயர்ந்து கொண்டே இருக்கிறார்கள். ஆனால் இந்தச் சண்டாளனோ இருந்த இடத்திலேயே இருக்கிறானே!

தன் முன்னோர்கள் ஜமீந்தார் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று பனு சொல்லுவதுண்டு. இப்போதும் அவர்களுக்கு நில புலன்கள் இருந்தனவாம். ஆனால் இது செருக்கான மனநிலை அல்லவா! ஒருவேளை அவனுடைய வீழ்ச்சிக்குக் காரணம் இதுவாக இருக்கலாமோ? எத்தனையோ பெரிய குடும்பங்களுடன், மந்திரி, விவசாயி, அதிகாரிகளுடனும் அவன் உறவு முறை சொல்லுவதுண்டோ. யாராவது தர்க்கித்தால் தன் பரம்பரை விவரங்களை விளம்பரப்படுத்த ஆரம்பிப்பான்.

இதுவும் செருக்குத்தான் – பறக்கும் பட்சியுடன் உறவு கொண்டாட விரும்பி உடலில் சிறகுகளைக் கட்டிக்கொண்டு குதிப்பதில் என்ன லாபம் – அவனால் பறக்க முடியவா போகிறது ?

பனு புத்திசாலியாயிருந்தால் அந்தப் பெரிய மனிதர்களின் உதவியால் முன்னுக்கு வர முடியாதா? முகத்தில் குழைவுடன் கொஞ்சம் வளைந்து கொடுத்து, கொஞ்சம் அடங்கித் தாழ்மையுடன் நடந்து கொண்டால் ! – விடு – நடக்காத விஷயம் அது. அகங்காரம் பிடித்தவன் – மூர்க்கன்.

ஆனால் பனுவிடம் கோபப்பட முடியவில்லை. ஏனோ? அவனிடம் ஏதோ வசீகர சக்தி இருந்தது நிச்சயமாய். இப்படி அவனிடம் எளிதாய் அனுதாபம் கொள்ளச் செய்யும்படி அந்த மெலிந்த சிவந்த உயர்ந்த உடல் முன்னோரிடமிருந்து என்ன வசீகர சக்தியைப் பெற்றிருந்ததோ தெரியவில்லை. இந்தச் சிறிய அறையிலும் சிறந்து விளங்குகிறானே!

இதைத்தவிர பனுவின் காருண்யச் செயல்கள் வேறே. நோயாளியுடன் யார் வீட்டிலாவது கண் விழிக்க வேண்டுமா? டாக்டரைக் கூப்பிட்டு வரவேண்டுமா ? கடையிலிருந்து யாருக்காவது ஏதாவது வேண்டுமா? யாருக்காவது ஏதாவது வேலை ஆக வேண்டுமா? துணை வேண்டுமா? மனதின் சோகக் கதையைக் கேட்க யாராவது வேண்டுமா? பனு எல்லாவற்றிற்கும் தயார்.

வழியில் யாரையாது சந்திக்க நேர்ந்தால் அவனுடைய வலது கை வலது பக்கத்து ஜேபிலிருந்து பீடித்துண்டுகளை உடனே எடுக்கும். முன்பு சிகரெட், இப்பொழுது பீடி. இடது கை, இடது பக்கத்து ஜேபிலிருந்து இந்த மனிதனின் உயர்குலத்தின் சின்னமாய்த் தோன்றிய ஒரு லைட்டரை எடுக்கும். கச் என்று விரலால் அழுத்தி பனு நண்பரின் வாயில் திணிக்கப்பட்டிருக்கும் பீடியை ஏற்றிவிடுவான். "எங்கே இப்படி?" என்று கழுத்தில் கையை வைத்தவாறு வினவுவான்.

பலிதத் பேசாமல் டீயைக் குடித்து முடித்தான். எல்லோருமே டீ குடித்து விட்டு வாயில் பீடியுடன் அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர்.

பத்திரிகை சமாசாரம், அரசியல், இலக்கியம், ஸண்டு பாபுவின் லட்சிய நோக்கு, இத்தியாதி. . . . . .

இதெல்லாம் பலிதத்திற்குப் புரிவதில்லை. கொட்டாவி விட ஆரம்பித்துவிட்டான். குவிந்து கிடந்த புத்தகங்களை அதிருப்தியுடன் பார்த்தான். பனு படிப்பதெல்லாம் வீண்தானா? திடீரென்று ஒரு புத்தகம் அவன் கருத்தைக் கவர்ந்தது – 'பிசினஸ்

கடிதம் எழுதும் முறை' ஏதோ பொக்கிஷம் கிட்டி விட்டது போல் அவன் கண்கள் பளபளத்தன. ஆவலுடன் அதை எடுத்து பத்திரப் படுத்திக் கொண்டான். பனு அதைத் கவனித்துவிட்டு ஏதோ திடீரென்று நினைவு வந்தது போல் முகம் மாறினான். பாதி எரிந்திருந்த பீடியை வீசி எறிந்தான்.

'இன்று என்ன நடந்தது தெரியுமா ஸண்டு ஜி ? என் வேலையை முடித்துவிட்டு ஒரு புத்தகத்துடன் உட்கார்ந்திருந்த பொழுது அந்தக் கடையன் உறவு என்னிடம் வந்து, 'அவசியமான வேலை வந்து விட்டது. இதை நீ முடித்தே ஆக வேண்டும்' என்றான். அவன் கொண்டு வந்திருந்த வேலை வண்டி கொள்ளும். முடிப்பதற்குள் இரவு விடிந்து விடும். 'இங்கே ஏன் ஹுஜூர் ? இது உங்கள் புது மாப்பிள்ளையைச் சேர்ந்த வேலை அல்லவா? என் வேலையை முடித்து விட்டேனே. அவனிடமே போங்கள். அவர் செய்ய மறுத்தால் என் தலையிலா கட்டுவது இப்படி?" என்றேன். அப்புறம் அவர் "துரை கேட்டிருக்கிறார். செய்தே ஆக வேண்டும்" என்றார்,

நான் என்ன சொன்னேன் தெரியுமா? "ஐயா உங்கள் மாப்பிள்ளையின் இந்தக் கடமையை மட்டும்தான் என் தலையில் கட்டுவீர்களா, இல்லை இன்னும் ஏதாவது கூடவா ? அப்படி யானால் என்னையே மாப்பிள்ளை ஆக்கிக் கொண்டு விடுங் களேன், என்ன?" என்றேன்.

எல்லோரும் நினைப்பதை ஒருவன் சொல்லுகிறான். எல்லோ ருக்கும் திருப்தி. அவர்களுடைய சிரிப்பின் ஆர்ப்பாட்டத்தில் வீடே அதிர்ந்தது. தன்னையுமறியாமல் பலிதத்தின் கண்களும் பளபளத்தன. தான் உயர்விற்காகத் தவமிருப்பவன் என்பதை ஒரு வினாடிக்கு மறந்து அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டான். எல்லோரும் ஆவலுடன் பனுவின் பேச்சையே கவனித்தார்.

"அப்புறம் ? அப்புறம் என்ன நடந்தது"

"அப்புறமா ? இலங்கையை அழிக்க புறப்பட்ட அவன், மிளகா யைப் போல் ரத்தமேறித் தோன்றினான். 'வேலை சமயத்தில் புத்தகமா படிக்கிறாய்? வேலை தந்தால் வாயாடுகிறாய். கம்பெனி சம்பளம் கொடுப்பது வெறுமனேயோ?" என்று மிரட்டினான்.

"என் கை விறுவிறுத்தது. தைரியமும் குறைந்துவிட்டது. அப்புறம் அவன் 'கெட் அவுட்' என்றான்."

'கெட் அவுட்' என்று சொல்லிக் கொண்டே பனு தாவினான். சின்ன மேஜை ஆட்டம் கண்டு காலிக் கோப்பையும் தட்டும கீழே விழுந்து நொறுங்கின. அந்தத் துண்டுகளைப் பொறுக்கிக்

கொண்டே மனதுள், 'இருக்காதே, என்ன அசட்டுப் பேச்சு இது. இவன் இவ்வளவு மூடமா என்ன? இவனுக்கென்ன வந்தது?' என்று சொல்லிக் கொண்டான் பலிதத்.

ஸண்டு கம்பீரமாக இருந்தார். சொல்ல விரும்பினால் "உத்வேகம் மனிதனுக்குக் கெடுதல் செய்யும், வயதைக் குறைக்கும் என்று சாஸ்திரம் சொல்கிறது" என்று எச்சரித்திருப்பார். ஆனால் பிறர் பனுவின் கதையை மேலும் கேட்க ஆவலாயிருந்தனர். இந்தத் தடபுடலில் பலிதத் மெல்ல தன் உறையுள் புகுந்து கொண்டான். ஆனால் அவன் ஆவலும் முடியவில்லை. நந்த் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். தலைமயிர் நெற்றியில் புரண்டது. முகமும் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. அவனுடைய அனுபவம் ஏதோ நினைவிற்கு வந்துவிட்டது போலும். "அப்புறம், பனு?" என்ற வினவினான். "சொல்லுகிறேன் கேள். குஞ்ச அர்தலி வந்து 'சின்னதுரை இங்கே என்ன தடபுடல், ஏன் இவ்வளவு சப்தம் என்று கேட்கிறார்' என்றான். 'இங்கு ஹோமம் நடக்கிறதென்று போய்ச் சொல். சின்ன துரையின் அப்பன் யாகம் நடத்தும் புரோகிதர் அல்லவா?" என்றேன். நாலா பக்கங்களிலிருந்தும் 'சபாஷ், சபாஷ்' என்ற கோஷம் எழுந்தது. "இப்பொழுது சபாஷ் ஏன் போட மாட்டா்கள்" என்று ஸண்டுதா ஆரம்பித்தார். "என்ன கெட்டுப் போகிறது அவர்களுக்கு? ஆனால் இந்த சபாஷைக் கேட்பதற்காக இந்தப் பைத்தியம் எல்லாவற்றையும் கெடுத்துக் கொண்டு நிற்கிறான். அவனுக்குக் கிடைப்பது – மண்ணாங்கட்டி. சபாஷ் போட்டு உள்ளே உன்னை முகஸ்துதி செய்கிறார்கள். அடே பைத்தியம். இதெல்லாம் பைத்தியக்காரத்தனத்தை அன்றி வேறு என்ன? வேலை செய்ய வேண்டாம் என்றிருந்தால் அதை விட்டு விடு. வேலை செய்கிறதாயிருந்தால் செய்...".

"நீங்களா இப்படி பேசுவது, ஸண்டுதா. இது உங்கள் பரம்பரை பேசுகிறது" கசப்புடன் முகத்தைக் கோணிக் கொண்டு நந்த் பேசினான். "வங்காளிகளுக்கு நன்றாய் வேலை பார்க்கத் தெரியும் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். வெள்ளையர்கள் அங்கு தான் முதலில் வந்தார்கள். வங்காளிகள்தான் முதன் முதலில் ஆங்கிலம் பயின்றார்கள். எங்களுக்கு இதெல்லாம் செய்ய வரவும் வராது, முடியவும் முடியாது ...".

"செய்ய முடியாவிட்டால் செத்துப் போ. இவ்வளவு பேச்செதற்கு?"

"இப்படிச் சொல்லுகிறவர்கள்தானே இங்கே?"

"கேள் நந்த்" – ஸண்டுதாவின் குரலில் கம்பீரம் த்வனித்து. அந்தக் குரலில் இழைந்த அதிகாரத்திற்கும் மந்திர சக்திக்கும் கட்டுப்பட்டு எல்லோரும் கப்சிப் என்று கேட்கலுற்றனர். ஏதோ மந்திரவாதம் செய்பவரைப் போல் தோன்றினார் ஸண்டு பாபு. "கேட்டுக்கொள் – வெறும் பேச்சால் வீரனாகி விட முடியாது – புரிந்ததா? அரே, எல்லோரும் பேசாமலிருக்கிறீர்களே" கூடவே அட்டகாசமாகச் சிரித்தார். பனுவுக்கு ஏதோ நினைவு வர, 'அவர் தாந்திரீக் சாஸ்திரம் தெரிந்தவர்' என்று சொன்னான். அப்புறம் அவர் சூழ்நிலையில் இருந்த இறுக்கங்களைத் தளர்த்து சாதாரண நிலையில் பேச ஆரம்பித்தார். 'ஒருவருக்குப் பிடிக்காத விஷயத்தைச் சொல்வதில் கஷ்டமொன்றுமில்லை ; அவமானப்படுத்துவது அதைவிட எளிது. ஒரிஸ்ஸாவைச் சேர்ந் தவன் என்று நீ எப்படிப் பெருமை கொள்ளுகிறாயோ, அதே போல் நானும் வங்காளி என்று கர்வபபடலாம். உண்மையில் நாம் ஒரே மண்ணில் பிறந்தவர்கள், ஒரே சாம்பல் ஆகப் போகிறவர் கள். பெருமைப்பட்டுக் கொள்ள ஏதாவது ஒரு குணம் மட்டுமே போதும். கண்ணிருந்தும் குருடன் என்று நீ கர்வப்பட முடியும், கண்ணுள்ளவர்கள் என்று நாம் கர்வப்படலாம். ஆனால் நம் கர்வத்தால் எதைத் தான் சாதிக்க முடியும்? வங்காளிகள் உத்தி யோகம் செய்யக் கற்றுக் கொண்டனர் – ரொம்ப சரி. நீயும் அந்த நிலையில் இருந்தால், நூற்றைம்பது வருடங்கள் முன்னாலேயே வெள்ளையர்கள் கீழ் பயின்றிருந்தால் நீயும் தேர்ச்சி பெற்றிருப் பாய்; திராட்சை புளிக்கிறது என்று சொல்ல உனக்குச் சந்தர்ப் பமே ஏற்பட்டிராது. இது வெறும் வயிற்றுப் பாட்டை ஒட்டிய பிரச்னை. இதில் பிரிவுகளை ஏற்படுத்தி மாகாணச் சண்டையை எழுப்பிவிடுவதில் நீயும் கோபந்து தாஸ் ஆக முடியாது, நானும் சித்தரஞ்சன் தாஸ் ஆக முடியாது. இதெல்லாம் ஏன்? வீண் பேச்சு. கேட்டுக் கொள் பனு – உன்னால் ஒன்றும் செய்ய முடியாது. 'குட் நைட்'.

துப்பறியும் நாவல்களில் தேர்ந்த பனு நெற்றி மேல் மூன்று விரல்களை வைத்துக் கொண்டு ஸெக்ஸடன் பிளேக் பாணியில் 'நீட்' என்றான்.

அறையில் ஒரே கலவரம்.

பலிதத் பேசாமல் உட்கார்ந்திருந்தான் – விதண்டா வாதம் அவனுக்குப் பிடிக்காத விஷயம்.

"ஸண்டுதா இவ்வளவு கிளர்ச்சியுடன் பேசி நான் கேட்ட தேயில்லை" என்றான் ராகு. "தத், மனதில் வந்தததை சொல்லித் தீர்த்து விட்டான் நந்த்".

"ஓஹோ சரியாகத்தானே சொன்னேன். ஸண்டுதாவுடன் எனக்குச் சண்டை ஒன்றும் இல்லையே. அவரைப் பற்றித் தெரியாதா என்ன? நான் சொன்னது அவரை ஒத்த பிற வங்காளிகளைக் குறித்து. நம்மை அவர்கள் கேலி செய்ய வில்லையா ? வெள்ளையர்களுடன் சேர்ந்து கொண்டு நம் நாட்டை முழுங்கி ஏப்பம் விட்டு விட்டார்கள். எல்லா ஜமீன்தாரிகளையும், எல்லா வித உத்தியோகங்களையும் தாங்களே வைத்துக் கொண் டிருக்கிறார்கள். இப்பொழுது நம் ஆபீஸிற்கு வந்திருக்கிறாரே புதிய துரை, (நடுவிலுள்ளவர்) அவரைப் பற்றித் தெரியுமா..".

ஆஹா, வெறும் வயிற்றுப் பாட்டிற்கான போட்டி இது பானையில் வேகும் ஒரு கையளவு சோற்றுக்கான இந்தப் பாடு.. இளகிய குரலில் பேசினான் பனு. மேஜை மேல் தாவி கெட் அவுட் சொன்ன பனு அல்ல இது. அவனுள்ளேயிருந்து ஜகந்நாதன் தான் பேசினான். தேச பக்தனும் தூர திருஷ்டியுள்ள லட்சிய புருஷனுமான பனு நீண்ட பெருமூச்சுடன் 'எவ்வளவு அழகான நாடு, மண்ணில் புரட்டிவிட்டோமே – ஆ ! – ' என்று மனமுரு கினான்.

திடீரென்று அவனுடைய இயற்கையான பாணியில், "இந்தா பீடி. கொதிப்பைக் குளிர வை. இன்றையத் தினசரியைப் பாாத்தாயா? அதோ கட்டிலில் கிடக்கிறதே, பார்!" என்கிறான்.

"நீங்கள் மூளையற்றுப் போய் அவரவர்களின் சாணக்கு வியல்களைக் கட்டிக் கொண்டு 'எங்கள் பிரதேசம், எங்கள் நாடு' என்று வாய்கிழியக் கத்துகிறீர்களே, அப்படியானால் பாரத நாடு யாருடையது? பதில் சொல், பாரதம் யாரைச் சேர்ந்தது?"

சபை கலைந்து விட்டது. திடீரென்று எல்லோருக்கும நாழி யாகி விட்டதென்று நினைவிற்கு வந்தது. அரசியல், தேசத்தைப் பற்றிய யோசனை இவை எல்லாம் இந்த சமூகத்தின் ஆவலைத் தூண்டிவிடக்கூடிய விஷயங்கள். தெளிவாய்க் காதில் விழும் எண்ணங்கள் மனதிலும் அறிவை எழுப்பிவிடும். அலுவலகத் தின் கடியாரம் 10.30 மணி என்று காட்டுகிறது. அது தான் அவர்களுடைய அடிப்படைத் தேவைகளான சோறும் நீரும் தரும் அதிகார சின்னத்தின் கரங்கள். அந்தக் கடியாரம் அவர்கள் மனதில் நம்பிக்கையும் உற்சாகத்தையும் எழுப்புகிறது. அடைப் பட்டிருந்த கோயிலின் முன் பல ஹரிஜனங்கள் நின்றார்கள் ஓடிக் கொண்டேயிருக்கிறார்கள். பொழுது புலர்ந்ததும் எல் லோரும் அவரவர்கள் வேலைக்கு போய்விடுவார்கள்.

பனு கதவை மூடினான். ஒரு முழு நாள் முடிந்துவிட்டது. உள்ளே நாற்காலிகள் தாறுமாறாய்க் கிடந்தன. கட்டிலின் மேல் எச்சில் தேநீர்க் கோப்பைகள், பத்திரிக்கைகள் – மேஜை மேல் புத்தகங்கள் திறந்தபடி கிடந்தன. தரையில் பீடித்துண்டுகளும் குவியல் குவியலாய் பீடிச்சாம்பலும் – திரும்ப இதை எல்லாம் பெருக்கியாக வேண்டும்.

தலையை வாரிக் கொள்ளக் கண்ணாடி பக்கமாய்ப்போனான். தனிமையில் தன் முகத்தை பார்த்துக் கொண்டே தலையை வாரிக் கொண்டான். மனித உயரத்தில் ஒரு செஸ்ட் ஆஃப் டிரா யர்ஸ் அதுவும் பணயத்திலிருந்தது. உயரத்தில் இரு தட்டுக் களைக் கொண்ட ஒரு ஷெல்ஃப்; மேல் தட்டில் என்ஸைக் ளோபீடியாவின் ஏகப்பட்ட புத்தகங்களும் கீழ்த்தட்டில் புக் ஆஃப் நாலெட்ஜும்.

கண்ணாடியின் பக்கத்தில் ஒரு ஃபோட்டோ – அவனும் அவன் மனைவியுமாக – 'பீர்க்ம்பூ' என்று பனு செல்லமாய்க் கூப்பிடும் தேவகன்னிகையை ஒத்த மனைவி ஷஃபாலி (பவழமல்லி).

மனு ஆழமான மூச்சு விட்டான். ஒவ்வொன்றாய் கடன் சுமை கள் நினைவிற்கு வந்தன. நான்கு மாதப் பணம் பத்திரிகைக் காரனுக்குப் பாக்கி, டீக் கடையில் கடன். கடனுக்கும் மேல் கடன் – மூக்குவரை கடனில் மூழ்கிக் கிடந்தான். ஷஃபாலியின் தலை யில்தான் எல்லா வீட்டு வேலையும் – சமையல், வீட்டைப் பெருக் கித் துடைத்தல், பாத்திரம் துலக்குதல் எல்லாம். அதற்கு மேல் குழந்தைகளின் காரியம் வேறே.

இந்தப் பத்து வருஷ வாழ்க்கையில் அவனால் ஷஃபாலிக்கு என்ன செய்ய முடிந்தது? ஒரு நகையா, நல்ல புடவையா –ஒன் றுமில்லை. மேக்–அப்பின் உதவியால் குரங்கை ஒத்த பெண் கூட ஊர்வசியாய் மாறித் திரிகிறாள். அலங்காரம் இல்லாததினால் மேனகையும் வேலைக்காரியைப் போல் நூறு இடத்தில் ஒட்டுப் போட்ட புடவையுடன் வீட்டைக் கூட்டுகிறாள் ; பற்றுப் பாத்திரங் களின் கரியைத் தேய்த்துத் தேய்த்துத் துலக்குகிறாள். பரிதாபம்! பீர்க்கம் பூவைப் போன்ற அவளுடைய மென்மையான முகம் வாடிப் போக ஆரம்பித்துவிட்டது.

சூடேறிய கண்களுடன் எதிரே இருந்த கண்ணாடியில் தன் னையே கவனித்தான் பனு. அகன்ற நெற்றியின் புருவங்களின் மேல் மேகத்தின் கருமை – எண்ணற்ற மெல்லிய ரேகைகள்! மேலே பார்த்தான். ஷெல்ஃபில் அடுக்கியிருந்த புக் ஆஃப் நாலெட்ஜ் வால்யூம்கள் வரிசையாய்த் தென்பட்டன. டாம் ! என்று

சபித்துக்கொண்டே முற்றத்துப் பக்கமாய் குதித்தான். "சாப்பாடு பரிமாறு!" என்று உத்தரவிட்டான்.

★ ★ ★

இருட்டில் பலிதத் தனியே போய்க் கொண்டிருந்தான். இவ்வளவு நேரத்தை வீணடித்ததற்காகத் தன் மேலேயே அவனுக்குக் கோபம் வந்தது. பனுவிடமும் கோபம் ஏறியது. நினைக்க நினைக்க துன்பம் தான் பெருகியது. தன் நிலையும், லட்சியமும் நினைவிற்கு வந்தன. ஒருபுறம் ஏங்கட்ராவ் மற்றொரு புறம் இந்த பனு. எதிர்காலத்தைப் பற்றித் தீவிரமாக யோசித்தான். யார் எப்படிச் செய்கிறானோ அதற்குத் தகுந்தாற் போல் தான் பயனும் கிட்டும். நடுவில் தர்க்கமும் எதிர்ப்பேச்சும் கணக்கைக் கவிழ்த்து விடலாம். எப்பொழுதாவது விதிவசமாய் நலன் பயக்கலாம் – ஆனால் அது அபூர்வம் தான். முன்னேற விரும்புகிறவன் விதியின் செயல்களை அற்பமாக மதித்து, வேலையில் கணக்குப் போட்டு வைத்துக் கொள்ளவான். பிறகு வட்டியும் முதலுமாய் தன் முயற்சிகளின் விலையை மதிப்பிடுவான். பனு தன் காலிலேயே கோடாலியை வீசுகிறவன். இங்கு விதி என்ன செய்ய முடியும் ? அவன் மனம் பந்தலிட ஆரம்பித்தது. சிறு அடிகளாய் வைத்து ஆனால் வேகமாய் முன்னேறுகிறான் பலிதத். திடீரென்று மனம் நிரம்பி வழிந்தது. ஏறி ஏறி ஆகாசம் வரை எட்டாவிட்டாலும் ஆகாயம் கீழே இறங்கி அவன் தலையைத் தொட்டது. நாலா புறமும் நட்சத்திரங்கள் மினு மினுத்தன. இருளில் காலினடியில் பூமி திரும்பி வந்தது. இவ்விதம் அவன் உலகத்தை வென்று கொண்டு தான் சேர வேண்டிய இடத்தை அடைந்து விடுவான். அதோ அந்த முட்புதரின் கீழ் முடங்கிக் கிடந்து கொண்டு மேலே ஏறியிருக்கும் தன்னைப் பார்த்து பல்லிளிக்கும் இவன் யார்? பனுவா? 'நான் அவனுடைய மேலதிகாரிக்கும் மேலதிகாரி. உயர்ந்த பதவி எனது. தயை கூடாது. கடமையைச் செய்ய வேண்டும். 'தடையும் கிடையாது, சிநேகமும் கிடையாது' அவன் அந்தரத்திலிருந்து அதிகாரத்தின் குரல் கர்ஜித்தது. பலிதத் பூரித்துப் போனான்.

ஒரு நிமிடத்திற்கு அவன் ஸிகந்தர், நெப்போலியன், ஹிட்லர் எல்லாம் ஆகிவிட்டான் – அமெரிக்காவின் ராஷ்டிரபதி கூட. ஒரு முறை 'ஃப்ரம் லாக் காபின் டு வைட் ஹௌஸ்' (From Log Cabin to White House) என்ற பருமனான நூல் அவனுக்குப் பரிசாக் கிடைத்தது..... அதே தான் தன் விஷயத்திலும் நடக்கப் போகிறது என்று அவன் நம்பினான் ஃப்ரம் லாக் காபின் டு வைட் ஹௌஸ்

ஆனால் அவனுடைய வைட் ஹௌஸ் வேறு மாதிரிட னது. அது ஒரு பெரிய காரியாலயம், தான் அங்கு யஜமானன். டக் டக் என்ற ஓசை வரிசை வரிசையாய் டைப் ரைட்டர்கள் பரவச் செய்யும் — அதிகார நிலைக்கு இன்றியமையாத — யந்திர சங் கீதம். வேலை செய்பவர்களின் அடங்கிய பேச்சு அதற்கு ஆலா பனை. தூரத்தில் தன்னைக் கண்டு எல்லோரும் நெற்கதிர்கள் போல் தலை சாய்ப்பார்கள். இவர்களை வளர்த்து விடுவதில் அவனுக்குக் அமோக திருப்தியும், அளவற்ற பெருமையும் கிட்டும். அப்புறம் பறந்து, பதவி உயர்ந்து கொண்டே போகிறது. வீடும் வாசலும், நிலமும் பூமியுமாய் வாங்கித் தள்ளுகிறான். பட்டணத்தில் கூலிக்கு விட நாலைந்து ரிக்ஷா வேறே.

தனக்காக ஒரு கார் அவசியம். வேகமாய்ப் போகும் ஒரு ஜீப் வண்டியும் கூட. என்னென்னவோ கற்பனைகள்! ஆனாலும் அவன் கற்பனை கோர்வையாகவோ ஒன்றுக்கொன்று சம்பந்தப் பட்டதாகவேயில்லை. வழக்கம் இல்லை அல்லவா? மெல்ல மெல்ல சரியாகி விடும்.

மூங்கில் வளர்ந்தால் கூடவே அதன் உள்ளே வெற்றிடமும் வளரத்தானே வேண்டும்!

திடீரென்று போலீஸ்காரன் ஒருவன் எதிரில் தென்பட்டால், பலிதத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான். ஆஜானுபாகுவான தேகக்கட்டு. முகத்தில் திடம். பலிதத்திற்கு வயிற்றைக் கலக் கியது. அரசியல் பக்கமே போகாதவன், களவு திருட்டு என்றும் இல்லை—பாவம் பலித்தை எதற்காகப் பிடிக்க வேண்டும்? இரண்டு பலமான கைகள் அவன் தலையை நெருங்கின. நடுக்க மெடுத்துவிட்டது பலிதத்திற்கு. வியர்வை ஒழுகும் முகம், ஆவி பறக்கும் வாய் — பேச்செழுவில்லை. கிடுக்கியைப் போல் இரு கரங்கள் அவன் கழுத்தை இறுகப் பிடித்தன. முகம் பலித்தின் முகத்தை அணுகியது. அடிப்பானோ? முதுகில் கும் என்று ஒரு குத்து விட்டு, வெடிக் சத்தம் போன்ற குரலில்..

"என்னடா இப்படி நடுங்குகிறாய். எங்கேயாவது கன்னம் வைத்துவிட்டு வருகிறாயாடா? என் ரோந்து இது. உனக்கு வழி தரமுடியாது போ" என்றான்.

"யார் ராஜாவா? ஓஹோ! இவ்வளவு போக்கிரி ஆகி விட்டாயா, என்ன நீ?"

"எப்பொழுது தான் நான் நல்லவனாகியிருந்தேன் — சொல் வேண்டா. இன்னமும் என்ன நடுக்கம்? பயமாயிருந்தால் குனிந்து கொள். நான் எப்பவும் போல்தானே இருக்கிறேன்! நீதான்

ஆகாயத்தில் போய் உட்கார்ந்து விட்டாய். முன் மாதிரி உன் மனதில் அன்பிருக்கிறதா, சொல்."

பலிதத்திற்கு என்னவோ போலாகி விட்டது. ஆனாலும் மனதை சுதாரித்துக் கொண்டு முகத்தில் சிரிப்பை வர வழைத்துக் கொண்டான். இந்த ராஜ் தன் பால்ய பருவ நண் பனல்லவா? அந்த நினைவு இப்பொழுது அவனுக்கு வெட்கத்தை தந்தது. ராஜின் எதிரே எதையும சொல்லவே பயப்பட வேண்டும். நாக்கில் நரம்பில்லாமல் எதையும் பேசக் கூடியவனுக்கே இந்தப் போக்கிரி. பெரிய ஜமீந்தாரின் பிள்ளையான ராஜ் இதோ போலீஸ் கான்ஸ்டபிள் ஆகியிருக்கிறான். தன்னை சமாளித்துக் கொண்டு "ஜமீந்தாரின் பிள்ளையாய் இருந்து கொண்டு இந்த வேலை எப்படியிருக்கிறது ராஜ்! எல்லாம் நலம் தானே ?" என் றான்.

"அந்த ஜமீந்தார் வீட்டை உடைப்பிலே போடு. உத்தியோகத் தில் எல்லோரும் ஜமீந்தார்தான்" "ஜமாதார் ஆகிவிட்டாயா? நீ கிராமத்திலல்லவா இருந்தாய்? மாற்றலாகி இங்கு வந்தாயா?" பலிதத் மேலும் விசாரித்தான். 'ஆம் மாற்றல்தான். ஜமாதர் ஆனால் என்ன, ஆகா விட்டால்தான் என்ன, எப்படியோ வயிறு நிரம்புகிறதோ இல்லையோ! அப்பா, தாத்தாவுடன் ஜமீனும் போயிற்று. படிக்கும் சமயமும் தாண்டிவிட்டது. ஆனால் முன் னோர் பிரசாதமான இந்த என் தோற்றத்தை விலை பேசி எப்படியோ காலம் கழிந்து வருகிறது. உன்னைப் பற்றி என்ன? எது வரை ஏறியிருக்கிறாய்? பெருத்துச் செழித்துத்தான் தோன் றுகிறாய். கொஞ்ச நாளில் ஃபுட் பால் மாதிரி ஆகிவிடுவாய் சந்தேகமேயில்லை. கருப்புப் பணச் செழிப்பா?" "தத்—உன் விஷமப் பேச்சு இன்னமும் போகவில்லையே!" "போனால் தான் என்ன? நீ பெரிய ஆளாகி விட்டாய். நமக்குப் பரிச்சயமானவர் கள், எவ்வளவோ பேர் திருடர்கள். என் விஷயமிருக்கட்டும். ரொம்ப நாட்களுக்குப் பிறகு சந்திக்கிறோம், அல்லவா? நீ இருளில் ஓடி மறைவதைப் பார்த்து எனக்கு சந்தேகமாகப் போய் விட்டது. உலகம் எவ்வளவு மாறிவிட்டது — விடு பேச்சை" "நீ ரொம்ப சந்தோஷமாய்த்தான் தோன்றுகிறாய். எல்லோரும் எப்ப வும் இல்லை பாட்டைத் தானே அழுது கொட்டுகிறார்கள். நீ சாதாரண கான்ஸ்டபிள்" பலிதத் ராஜை மெச்சினான். "கான்ஸ் டபிளின் வேலை சாதாரணமானதா என்ன? பிற உத்தியோ கங்களைப் போல் அதுவும் ஒன்று. நீ யாருடையாவது காலை பிடிக்கிறாய் என்றால் நான் ஸல்யூட் அடிக்கிறேன். உத்தி யோகம் எல்லாம் ஒரே மாதிரிதான்" "உன் ஸ்பிரிட்டை

வியக்காமல் இருக்க முடிய வில்லை ராஜ். எவ்வளவு பெரிய நஷ்டம் வந்து போயிற்று உனக்கு. ஆனால் நீ மாறவேயில்லையே. உன்னிடம் எனக்கு ரொம்ப மரியாதை தோன்றுகிறது" "பக்தி கூடத் தோன்றும். நமஸ்காரம் பண்ணு பார்க்கலாம். கிராமத்தில் உன் பதினான்கு தலை முறைகள் என் பதினான்கு தலை முறைகளுக்கு முன்னால் நிமிர்ந்து கூட நின்றதில்லை. இப்பொழுது நீ என்னை வணங்கி னால் அது புதிய விஷயமா என்ன? போகட்டும் போ, எனக்காக ரொம்ப துக்கப்படாதே. உன் துக்கமே தலைக்கு மேல்".

"என் துக்கமா?"

"யார் எவ்வளவு உயர்ந்தாலும் துக்கம் எங்கே போகும்? அது வரத் தான் செய்யும். ஒரு புறமாய் வந்து மறு புறமாய்ப் போகும். சம்பளம் உயர்ந்தால் கிராக்கிப்படியில் வெட்டு விழும். வருவதும் போவதும் வெகு சாதாரண விஷயம் தெரியுமா?" —"நீ என்கையை இப்படிக் குலுக்காதே தம்பி. யாராவது பார்த்தால் ஏதாவது தவறாக நினைத்துக் கொள்ளுவார்கள். வலியும் சகிக்க வில்லை" என்றான் பலிதத். "ரைட், உனக்கு உத்தியோகம் பார்க்கிற அழகு, சரியாய் மூச்சு கூட விடுவதில்லை. ஆனந்தத் தின் விதை கூட இல்லை, அதை விதைக்கும் சக்தியும் இல்லை. துக்கத்தால் நெஞ்சு வெடித்துக் கொண்டிருந்தாலும், கையும் காலும் பரபரக்க பிஸினஸ் பிஸினஸ் என்று"

"உணர்ச்சி வசப்படும், கவிஞனான கான்ஸ்டபிள்!" என்று வியந்தான் பலிதத.

"கட்டாயம். இல்லாவிட்டால் கவிதை எங்கிருந்து வரும்? நீ கூடப் பக்கத்தில் இல்லை"

"நிஜமாகச் சொல்லுகிறேண்டா. உன் பேச்சு கவிதை போல் ஒலிக்கிறதே"

"என் தாதா ஸாரத் லீலாவின் பதங்களைப் பாடுவாராம் – விடு அந்தப் பேச்சை. சுகமாய் இரு. எங்கேயாவது சந்தித்தால் இந்த சினேக பாவம் எப்பவும் இருக்கட்டும். போகிறேன் நான் – ட்யூட்டி இருக்கிறது"

"நமஸ்காரம்"

"தத்! நீயும் நமஸ்காரமும்" – போய்க் கொண்டே இருந்தான். லெஃப்ட் ரைட், லெஃப்ட் ரைட் . . . . . திடமான மனிதன்.

பழமையாக ஜமீந்தார் பரம்பரையின் வாரிசு, உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவன், கான்ஸ்டபிள் வேலையில் புகுந்து விட்டானே. இளமைப்பருவம் சிரிப்பும், கொம்மாளமுமாய்ப் போயிற்று. தகப்பன் ஏற்றி வைத்த கடனில் எல்லாம் போய்

விட்டது. மிஞ்சி நின்றது முன்னோர்கள் தந்த முகவிலாசமும், அதிகாரம் செய்யும் குணமும். பரம்பரைக்குண்டான அடக்கு முறை திரும்ப அதிகாரம் செய்ய விழைந்தது. அதற்கேற்ற உத்தியோகமும் கிட்டிவிட்டது. ராஜைப் பற்றி பழைய கதை எல்லாம் நினைவிற்கு வந்தது. இரண்டு சேவகர்கள் எப்பொழுதும் அவன் பணியை ஏற்க கூடவே நிற்பார்கள்.

பள்ளியிலும் ஆசிரியர்கள் அவனைத் தூக்கி வைப்பார்கள், படிப்பில் சூன்யம் என்றாலும், ஆனால் அப்புறம் ? 'வேண்டாம் அந்த நினைவுகள். நீரோடு போகட்டும்.'

பலிதத் வீட்டை நோக்கி வேகமாய் நடந்தான். ஆனால் அவனால் ராஜை மறக்க முடியவில்லை. அவனுடைய முகத்திலிருந்து சிரிப்பு மறையவில்லையே. என்றாலும் எங்கோ மூலையில் பழைய நினைவுகள் அடங்கிக் கிடந்தன – நடுநடுவே அவன் மனதைக் கனக்கச் செய்ய.

திடீரென்று ஏங்கட்ராவின் ஜோதிடக் கணக்கும் பலிதத்தின் பாக்கியமும் நெருங்கி வருவது போல் தோன்றியது. அன்று காலையில் தான் ஏங்கட்ராவ் அவனிடம் "தாஸ், இம்முறை மிட்டாய் தயாராய் வைத்துக் கொள்," என்று சொன்னான். ஒரே ஒரு உத்தியோக உயர்வை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர் பலர்– ஏங்கட்ராவ், பலிதத் இன்னும் பலர். இன்னும் யார் யாரோ, ஏங்கட்ராவ் சொல்லுவது சரியாயிருக்குமா என்று சந்தேகத்துடன் பார்த்தான் பலிதத்.

பேசிக் கொண்டே பூதக் கண்ணாடியால் தன் உள்ளங்கைக் குழியையும் ஆராய்ந்தான் ஏங்கட்ராவ், நம்பிக்கைச் சின்னங்கள் காணவில்லை போலும். முகம் சோர்ந்து விட்டது. நண்பனின் கேள்விக்குச் சிரித்தவாறு பதில் சொன்னான். "என்ன கேட்டாய்? நான் சொல்வது சரியா என்றா? கட்டாயம் சரியாயிருக்கும். இந்த ஜோதிட சாஸ்திரம் பொய்க்காது."

ஏங்கட்ராவின் சிகரெட் பாக்கெட்டிலிருந்து கடிகார மார்க் சிகரெட்டை வாயில் திணித்துக் கொண்டு அதை ஏற்றிய பலிதத்தின் கைகள் நடுங்கின. வருங்கால அதிர்ஷ்டத்தின் அலைகள் அவன் மேல் மோதுகின்றன போலும் . . . . .

அன்று மத்தியான வேளை.

திடீரென்று துரையின் குரல் கேட்டது. பலிதத் அவருடன் செல்ல வேண்டும் என்று உத்தரவு பிறந்தது. அவருடைய பெரிய காரில் அவருடன் அமர்ந்து எங்கோ போக வேண்டும். தலையைச் சுற்றியது பலிதத்திற்கு !

ஆபீஸ் கண்ணாடியின் முன் நின்று கொண்டு தன் முகத்தைப் பார்த்துக் கொண்டான். வெற்றிலைக் காவி பல் வரிசையில் காணோம். ஆனால் நாக்கில் தெரிந்தது. நெற்றியையும் காதுகளையும் மூக்கையும் நன்றாக அழுத்தித் துடைத்துக் கொண்டான். உடுத்தியிருந்த உடையை கையால் தட்டிவிட்டுக் கொண்டான். அவசர அவசரமாய் எல்லாம் முடித்துக் கொண்டு, கண்ணாடியில் இன்னுமொரு முறை பார்த்துக் கொண்டு வாயில் தேவி ஸ்தோத்திரத்துடன் வெளியே வந்தான்.

துரை கார்ப் பக்கமாய் போய்க் கொண்டிருந்தார். ஸ்டியரிங் கைச் சுற்றிப் பார்த்தார். பின் சீட்டில் துரையின் பெரிய அல்சேஷியன் நாய் நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தது. ஒருவித பிரமிப்புடன் பலிதத் காரின் பக்கத்தில் மார்ச் செய்து கொண்டிருந்தான். என்ன செய்வது என்று அவனுக்குப் புரியவில்லை. துரையின் கவனத்தை எப்படி ஈர்ப்பது ? இருமிப் பார்க்கலாமா, இல்லை கால் ஷுவால் ஓசை செய்யலாமா என்று யோசித்தான். அவருக்குக் கோபம் வந்து விட்டால் ? கார் இஞ்சின் பூனையைப் போல் குர் குர் என்று ஓசை எழுப்பியது. இது என்ன கஷ்டம் ! சுவர்க்கத்தின் வாசலை திறந்து விட்டுப் பிறகு நரகத்தில் தள்ளப் படுவது போலிருந்தது, பலிதத் திற்கு. அந்த இரண்டு நிமிடங்களும் ஒரு யுகமாய்க் கழிந்தன பலிதத்திற்கு.

அப்புறம்தான் விடிவு வந்தது. தலைமை குமாஸ்தா ஓடிவந்து சில ஃபைல்களை துரை பக்கமாய் நீட்டினார். துரை திரும்பிப் பார்த்தார். சமயம் பார்த்து பலிதத் குனிந்து ஸலாம் செய்தான். பின் சீட்டைக் காண்பித்து அங்கே உட்காரும்படி உத்தரவிட்டார் துரை.

அவன் வண்டிக்குள் ஏறினதும் ஏறாததுமாய் அது புறப்பட்டு விட்டது. கதவு சரியாய் மூடவில்லை – பலிதத்தால் முடிய வில்லை. வியர்த்துக்கொட்டியது. ஒருவித அலுப்புடன் துரை திரும்பிப்பார்த்தார். பலிதத் தன் பலத்தை எல்லாம் கூட்டி படாரென்று கதவை அறைந்து மூடினான்.

இப்பொழுது பலிதத் தன் நிலையைக் கவனித்தான். பயங்கரமான நாய் – வளர்ப்புப் புலியைப் போல் தோற்றம் – குரூரமாய் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தது. வாய் திறந்து நாக்கு வெளியில் தொங்கியது. அவனைப் பார்த்து உறுமவும் ஆரம் பித்து விட்டது. அவனுடைய ரத்தம் வற்றிப் போய் 'ஐயோ, செத்தேன்" என்ற அலறல் புறப்பட்டது. ஆனால் அந்த அலறல் மெல்லிய கீச்சுக் குரலாய்த் தான் வெளி வந்தது, பயத்தினால்

செத்துக் கொண்டிருக்கும் சிறிய ஜந்துவின் மரண ஓலத்தைப் போல். நாய் மேலும் மிரண்டது. இம்முறை அதனுடைய கர்ஜனை முன் சீட் வரை எட்டிற்று. துரை 'ஷட் டிக்' என்று ஒரு அதட்டல் போட்டார். இதற்காகவே காத்திருந்தாற் போல் டிக் உடனேயே உறுமலை நிறுத்தி விட்டது. சிநேக பாவத்துடன் தன் முகத்தை நீட்டி பலிதத்தை மேலிருந்து கீழ் வரை முகர்ந்து பார்த்தது. தன் பாதங்களால் அவனுடைய பாண்ட்டை அமுக்காக்கியது. பிறகு அவனுடைய மடியில் ஒரு சாலை வைத்துக் கொண்டு நிம்மதியாய்த் தூங்க ஆரம்பித்தது.

எப்படியானாலும் இதுவும் ஒரு யோகம் தான், அடிக்கடி சந்தேகம் இருந்தும் கூட, மனம் வெளியே பறந்து மேகத்தில் மறைத்து விட விரும்பியது. ஆனால் எதுவோ ஒன்று அவனை நிமிண்டி, எச்சரித்துக் கொண்டிருந்தது – 'ஜாக்கிரதை, நீ இங்கே இருக்கிறாய்' என்று.

இந்த பயம் இல்லாவிட்டால் அவனுடைய அறிவு காற்றாடியைப் போல் மேலே பறக்க முடியும். வண்டி போய்க் கொண்டிருந்தது. பயந்து போய் எல்லோரும் வழியை விட்டு விலகினார்கள். கணக்கற்ற வணக்கங்கள். அவனை அறிந்தவர்கள் வியப்புடன் அவனைப் பார்த்தார்கள். அவனை புழு பூச்சிக்குச் சமானமாய் மதித்தவர்கள் கூடத் தலையைத் தூக்கி கவனித்தனர். வண்டி போய்க் கொண்டே இருந்தது. ஓடும் வண்டியிலிருந்து பார்த்தால் உலகமே வேறு விதமாய்த் தெரியும். ஒரே பாதையும் சந்தும், கடைவீதியும் நடந்து போகும் பொழுது ஒரு விதமாகவும், குதிரை வண்டியில் சவாரி செய்யும் பொழுது வேறு விதமாகவும், காரின் வேகத்தில் இன்னொரு விதமாகவும் தோற்றமளிக்கும். ரயிலிலிருந்து எல்லாமே கூட ஓடி வருவது போலிக்கும்!

★ ★ ★

ஆச்சரியம் தான். கள்ளைக் குடித்தும் மனம் பூரிக்கவில்லை பலிதத்திற்கு. முதல் அரை மணி நேரம் அவன் பெருமையுடன் வெளியில் பார்த்தவாறு இருந்தான், பிறரை அலட்சியமாய்ப் பார்த்துக் கொண்டு அடுத்த அரை மணி நேரம் அவன் மனம் பரந்துபட்ட சிந்தனைகள், விரிவான ஆராய்ச்சிகள் – இவற்றில் மூழ்கியது. புதிய அனுபவங்களின் ருசியையும், கற்பனைகளையும் பற்றி எண்ணினான் – தன் 4 அடி 9 இஞ்ச் உருவத்தை நழுவ விட்டு, பெரியவனாகிக் கொண்டே போனான். தன் துக்கத்தை மறந்து பிறரின் கஷ்டங்களைப் பற்றி அனுதாபம் கொள்ளத் தொடங்கினான்.

எதிரே துரை–ரொம்பப் பெரியவர் தான். ஆனால் அவரது நிலையை ஆராய்ந்தால் பாவம் என்று தோன்றும். குதிரைகளிடமும், இந்த பயங்கரமான நாயிடமும் அன்பைப பொழிகிறாரே! தனிமையான ஆள். வேலை செய்ய ஆரம்பித்தால் யந்திரம்போல் ஆகிவிடுவார். வேலை முடிந்தால் வாழ்க்கையின் யதார்த்தத்தைக் காணச் சகிக்காமல் குழம்பிப் போவார். சில நாட்கள் முன் நடந்த நிகழ்ச்சி ஒன்று நினைவிற்கு வந்தது. மேஜை மேல் அம்பாரமாய்க் குவிந்து கிடந்தன காகிதங்களும் ஃபைல்களும். அறை வாசலில் கையில் துப்பாக்கியுடன் நின்று கொண்டிருந்தார் துரை. அந்தக் காகிதக் குவியலைக் குறி வைத்துச் சுட துப்பாக்கியின் குதிரையை அழுத்த இருந்தார். நல்ல வேளை அவருடைய மனைவி அச்சமயம் துப்பாக்கியைப் பிடுங்கி வைத்து விட்டாள். இல்லாவிட்டால் அனர்த்த மாகியிருக்கும். குடி மயக்கத்தில் மனம் பேதலித்து விட்டது போலும். வாழ்க்கையில் அவருக்கிருந்த விரக்தி அச்சமயம் துப்பாக்கி முனையிலிருந்து எட்டிப் பார்த்தது.

அவருடைய மனைவி? அவருடைய மனதின் புரியாத சிக்கலுக்குக் காரணம் அவளாக இருக்குமோ? கடவுளுக்குத் தான் வெளிச்சம். தன் இனத்தாருடன் கூடி அலுக்காமல் டான்ஸ் செய்தே வேளையைப் போக்குகிறாளே!

குடி இன்னொரு புறம். அன்று குடி மயக்கத்தில் விழுந்தே விட்டார். அவர் உடையும் திறந்து கொண்டது. பழகிய சேவகன் தான் அவரைக் குழந்தை போல் தூக்கிக் கொண்டு போய் கட்டிலில் படுக்க வைத்து விசிறியையும் திருப்பி விட்டான்.

சித்திரம் போல் அழகி அவர் மனைவி. அதே போல் நாசூக்கானவள். வெய்யில் காலத்தில் ஊட்டி அல்லது டார்ஜிலிங் போய் விடுவாள் – குளிர் காலத்தில் பம்பாயும் கல்கத்தாவும். பட்சியைப் போல் பறந்து போய் விடுவாள், தனியே. இவர்களுடைய திக்விஜய வாழ்க்கை விநோதமானது தான்.

அவர்களுடைய இரு குழந்தைகளும் வெளிநாட்டில் படித்துக் கொண்டிருந்தனர். கிழத் தந்தை கிராமத்தில் ஆட்டுப் பண்ணை நடத்தினார். வேலையில்லாத பொழுது தூண்டிலிட்டு மீன் பிடித்தார்.

ஒரு சகோதரன் ஆப்பிரிக்காவிலேயே தங்கி விட்டான், விவசாயம் செய்து கொண்டு.

சகோதரியும் விசேஷமானவள் தான். முதலில் ஜெர்மனியில் பாடிக் கொண்டிருந்தாள். இப்பொழுது ஹாங்காங்கில் ஒரு பாதிரியாரின் மனைவி. உலகம் முழுவதும் இவர்கள் வீடுதான்.

மரணத்தின் நடுவில் வாழ்ந்தனர். விழுந்தால் எழுந்து விடுவார்கள். வெடிகுண்டு வீச்சில் கிராமங்கள் எரிந்து சாம்பலாயின. திரும்பத் திரும்ப சண்டையில் சுடுகாட்டுச் சண்டிக்கு பலி கொடுத்தனர். ஆனாலும் வாழ்க்கையை விரும்பி வாழ்கிறவர்கள் இவர்கள். மண்ணைக் கவ்வினாலும், ரத்தத்தைக் குடித்தாலும் வாழ்க்கை வேண்டும். வம்சவிருத்தி வேண்டும்.

யுத்தத்தில், பழுத்த கிழங்கள் ஊக்கமளிக்கும் வகையில் கத்தினார்கள். முன்னேறுங்கள், துக்கத்தை மறந்து ஆனந்தத்தின் சாரம் கிட்டும். சிரியுங்கள் – இருட்டிலிருந்து ஒளி புறப்படும். போய்க் கொண்டே இருங்கள் –'ஹிப் ஹிப் ஹுரே, லாங்க் லிவ் தி கிங்' என்று.

அந்தப் பண்பில் ஊறிய துரை ஏன் வருத்தமாயிருக்க வேண்டும்? என்ன கிலேசம்? பலிதத்திற்குப் புரியவில்லை –அவருக்குத் தான் தெரியும்.

துரையின் கற்பனைத் துயரை தனது போல் பாவித்து, கிழவியைப் போல் 'ஐயோ, அவருடைய வேதனைப்படும் மனதிற்கு ஆறுதல் கொடுக்க முடியாதா' என்று நினைத்தான்.

காதலியைப் போல் 'ஆ! அவருக்கு சுகம் கொடுக்க முடியுமானால்!' என்று ஏங்கினான். சேவகனைப் போல் 'என்னால் முடிந்தவரை அவருக்காக உழைக்க வேண்டும்' என்று நிச்சயித்தான்.

அவனது உணர்வு திடுக்கிட்டு விழித்துக் கொண்டது. துரை என்னவோ கத்திக் கொண்டிருந்தார் – பலிதத்திற்குப் புரியவில்லை. முன்புறமாய்க் குனிந்து தெளிவாய்க் கேட்க முயற்சித்தான் – ஆனால் அப்புறம் துரை ஒன்றுமே பேசவில்லை. எதையோ நினைத்துக் கொண்டு அப்படிக் கத்தியிருக்கலாம்.

பலிதத்தின் உணர்வு நன்றாகத் தெளிந்து விட்டது. தன்னைப் பற்றிய கர்வத்தில் அவனுக்குத் தலைகால் தெரியவில்லை.

எதிரே வழியை அடைத்துக் கொண்டு ஒரு கார் போய்க் கொண்டிருந்தது. துரைக்கு வழி தரவில்லை. பெரிய குடுமியுடன், கழுத்தில் ருத்திராட்சம், கையில் கண்டியுடன் ஒரு ஆள் டிரைவரின் பக்கத்தில் அமர்ந்திருந்தான் – அடித்து வைத்த கல்லைப் போல். "இன்னும் வேகமாய் ஓட்டு, இன்னும் வேகம் வேகம்" என்று டிரைவரை ஊக்கப்படுத்திக் கொண்டிருந்தான்.

போவனி ஸாஹு! கற்சூளை கன்டிராக்டர். யுத்த கால மார்க்கெட்டில் கூடாரம் அடிக்க உபயோகிக்கப்படும் ஆணிகளை ஒரு ஆணிக்கு ஒரு ரூபாய் என்று விற்றே காசைக்

குவித்தவன். புதுப் பணம் படைத்தவன். விரலில் முத்திரை மோதிரம்!

பணம் திரட்டும் போராட்டத்தில் வெற்றி பெற்றவன் போவனி ஸாஹு. யாரும் லட்சியமில்லை அவனுக்கு.

துரையின் பம்-பம் கேட்காதது போல் மண்ணை வாரி இறைத்துக் கொண்டு, அவனுடைய கார் இப்படியும் அப்படியுமாய் ஆடிக் கொண்டு பறந்தது.

துரையின் முகம் சிவந்து விட்டது. கோபத்தில் இடது பெருவிரலின் நகத்தைக் கடித்துத் துப்பினார்.

"ஏ பாபு! அந்த மோட்டாரின் நம்பரைக் குறித்துக் கொண்டாயா?" கலவரமடைந்தவனாக, பலிதத் போவனி ஸாஹுவின் பெயர், ஊர், கார் நம்பர் எல்லாவற்றையும் ஒப்பித்தான். உற்சாக வேகத்தில் பெயர், ஊரெல்லாம் கார் மேல் எழுதியிருக்க முடியாது என்பதை அவன் மறந்து விட்டான். நம்பர் தெரிந்து கொண்டு துரையால் என்ன செய்ய முடியும்? சர்க்கார் அல்லவே, கம்பெனியின் துரைதானே? அதனால் என்ன? கேட்டவுடன் எல்லா விவரத்தையும் சொல்ல முடிந்தது. ஜய மகா காளி! "ஹும்!" துரை யோசித்தார். "சரி, எழுதி வை". சரிதான், போவனி ஸாஹு வாங்கிக் கட்டிக் கொள்ளவும் போகிறான்! ஆனால் துரைக்கு ஏன் இவ்வளவு யோசனை? ஏதோ ஒரு சந்தேகம், அவநம்பிக்கை. பலிதத்தின் தன்னம்பிக்கை திடீரென்று கீழிறங்கி எங்கேயோ பாதாளத்திலே மறைந்து விட்டது. அவன் ஜய வீரன் அல்ல, அவன் ஒன்றுமேயில்லை – வெறும் பலிதத் மட்டுமே. உணவிற்காக அரிசியைப் பொறுக்கும் ஒரு எறும்பு மாத்திரம்! பிறர் எவ்வளவு உயர்ந்துவிட்டனர் –ஆற்றோரமாய் கவலையற்று உலவிக் கொண்டிருந்தவர்கள் எவ்வளவு உயர்ந்த கிளையைப் பற்றிக் கொண்டு விட்டார்கள்! ஆகா! பாதி உடம்பை அவன் மேல் சாய்த்துக் கொண்டு தூங்கியது நாய்.

அவனுடைய கிழத் தந்தையின் நினைவு வந்தது.

நாயைப் பார்த்தால் கத்தி தடபுடல் செய்து விடுவார். "அடித்து விரட்டு அதை உடனே. அது தொட்டு விட்டால் எல்லாமே அசுத்தமாய் விடும்"

தீர்க்கமாய் மூச்சு விட்டபடி பின் சீட்டில் உட்கார்ந்தபடி இருந்தான் பலிதத்.

★ ★ ★

மாலை. நாள் முழுதும் வேலை செய்த அயர்வுடன் முகம் சூம்பி, வீட்டின் கதவுச் சங்கிலியைக் குலுக்கினான் பலிதத். உடனேயே பூ வேலை செய்திருந்த வள்ளை ரவிக்கை அணிந்து வாரி முடிந்த தலையுடன் சரோஜினி கதவைத் திறந்தாள். சிரித்துக் கொண்டே, "மஹாபாத்ரஜி வந்திருந்தார்" என்றாள். "அது யார் மஹாபாத்ர? தெரியவில்லையே" பலிதத் சிரித்தான். "இது என்ன பாசாங்கு? தெரியாதா என்ன? அவரைப் பற்றி நீங்கள் பேசாத நாள் கிடையாதே. அவர்தான், உங்கள் அதிகாரிகளில் ஒருவர், உங்களை வரும்படிச் சொன்னார்?"

"வந்திருந்தாரா –நிஜமாகவா? அவர்தானென்று உனக்கு எப்படித் தெரிந்தது? என்ன சொன்னார்?"

"அம்மாடி! கிழிந்த புடவையுடன் வீட்டைக் கூட்டிக் கொண்டிருந்தேனா? வெளியில் வராந்தாவில் யாரோ நிற்பது தெரிந்தது. 'பலிதத் பாபு திரும்பி விட்டாரா?' என்று கேட்டார். நான் கல்லாய்ச் சமைந்து விட்டேன். 'நான் மஹாபாத்ர ஸாஹப்' என்றார். 'வீட்டில் யாரும் இல்லையா? ரொம்பத் தாகமாயிருக்கிறது' என்றார். இந்த மனிதன் குருடா என்ன? உள்ளே போய்ப் புடவையை மாற்றிக் கொண்டேன்"

"வந்து பார்த்தால் இவர் காவலாளியைப்போல் மேலுக்கும் கீழுக்குமாய் நடந்து கொண்டிருந்தார். உண்மையாகவே தாகம்தான் போலும். எலுமிச்சை ஷர்பத் செய்து ஒரு கண்ணாடி டம்ளரில் விட்டேன். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு வராந்தாவில் கொண்டு போய் வைத்தேன். கடகடவென்று குடித்து விட்டு, 'ஓ! நீங்கள் எங்கள் வீட்டுப் பக்கம் வருவதில்லையே? பலிதத் பாபுவை வரச் சொல்லுங்கள். அவசியமான விஷயம் – அவருடைய வேலையைப் பற்றி' என்றார். உங்கள் சாஹபிற்கு பூனைக் கண்ணா என்ன? இருட்டிலும் பள பள வென்று மின்னுகின்றனவே!–" எல்லாவற்றையும் சொல்லியாகி விட்டது. ஒரே ஒரு விஷயம்தான் பாக்கி.

"ஹா. விட்டு போச்சு ஒரு அனாவசியமான சிறு விஷயம். தாகம் தணிந்த பிறகு 'ஜலத்திற்குத் தான் எவ்வளவு வாசனை' என்றார். அம்மாடி! என்ன அசட்டுப் பேச்சு! தண்ணீருக்கு வாசனையாமே! காலி டம்ளரைத் தரையில் வைக்காமல் கையை நீட்டிக் கொடுத்தார்–"கீழே வைத்தால் உடைந்து போகலாம்" என்றார். டம்ளரைக் கொடுக்கும் பொழுது தன் கட்டை விரலால் என்னை நிமிண்டினார். ஒரு வேளை டம்ளர் கீழே விழுந்து விடுமோ என்ற பயத்தில் என் கையை இறுகப் பிடித்திருக்கலாம்".

பலிதத்திற்கு இந்த விஷயம் அசம்பாவிதமாய்த் தோன்றியது. மனதில் எங்கேயோ கருமையான மேகம் மூட ஆரம்பித்தது. "அசடே, ஜாக்கிரதை. பூனைக் கண் எரிந்து போகட்டும்" என்று கத்தத் தோன்றியது. ஆனால் இன்று சரோஜினி எவ்வளவு மகிழ்ச்சியுடன் இருக்கிறாள்! கணவனின் வெற்றியில் கால் தரையில் படாமல் மிதந்தாள். பூரித்துப் போய் விட்டாள். ஒருயிர், இரு உடல் அல்லவா! வேலை விஷயமாய்க் கூப்பிட்டிருக்கிறார், மஹாபாத்ர.. ஏதோ உயர்வு கட்டாயம் இருக்கும். ஏங்கட்ராவ் கூடச் சொன்னானே! உத்தியோகம், உத்தியோகம். இன்று எல்லாமே அழகாய்த் தெரிந்தன. சரோஜினி தான் என்ன அழகு! வீடு திரும்புகிறவனுக்கு இது தானே வேண்டும். சீவி முடித்து, சுத்தமான புடவை உடுத்திச் சிரித்த முகத்துடன் வரவேற்கும் மனைவி. சாணிக் கையும், அடுப்புக் கரி பூசின முகமும், பறக்கும் தலையும், சாம்பல் படிந்த மயிருமாய் ஒரு மனைவி வரவேற்றால் எப்படி இருக்கும்? சரோஜினி மணந்தாள். முகத்தில் வாசனை ஸ்நோ வேறு.

இன்று கட்டாயம் விசேஷ நாள்தான். பிருஹஸ்பதி உலவுகிறான் போலும்.

அந்தக் கருமையான மனமூட்டம் எங்கே போயிற்று? எங்கேயோ ஒளிந்து கொண்டு விட்டது. அவனை உணர்ச்சி வேகம் தடுமாறச் செய்தது.

சரோஜினிக்கு அவன் வேண்டும். அந்த நிமிடம். சரோஜினியிடம் தன் ஆதிக்கத்தை நிலை நாட்ட விரும்பினான். அவள் தனக்கே உரிமை, வேறு எவருக்கும் அல்ல. அப்புறம் மஹாபாத்ரவின் வீட்டிற்குப் போயாக வேண்டும் மனைவியுடன். மாலை வேளையின் சுறுசுறுப்பு – எல்லோரும் விழித்திருக்கும் வேளை. அதனால் என்ன? கதவடைபட்ட அந்த வீட்டுள் தான் யஜமானன் என்பதை அனுபவிக்க விரும்பினான் பலிதத். சரோஜினி கத்தினாள் –"ஐயே ஐயே" என்று. அது மகிழ்ச்சியா, அலுப்பா அல்லது சலிப்பா என்று தெரியவில்லை. பலிதத் ஹோ என்று நகைத்தான். அது வெற்றியின் முழக்கமா அல்லது காயத்தின் வேதனையா என்று தெரியவில்லை.

எதிர்ச்சாரி வீட்டிலிருந்த காலேஜ் மாணவன் ஷேக்ஸ்பியரின் ஸ்பீச் ஒன்றை உரக்கப் படித்துக் கொண்டிருந்தான்.

'ஹௌல் ஹௌல், ஓ, விண்ட்ஸ்.'

"நாழியாகி விடும். புறப்படு, போகலாம்" பலிதத் அவசரப் படுத்தினான். அவன் வெளுத்த வேஷ்டியும் குர்தாவும் அணிந்து தயாராகி விட்டான். ஈரத் துணியால் முகத்தை அழுத்தித்

துடைத்துக் கொண்டான். தலை மயிரையும் ஒதுக்கி விட்டுக் கொண்டான். சோம்பலுடன் சரோஜினி வெற்றிலை மடித்துக் கொண்டிருந்தாள். அவனுக்கு அவசரமொன்றுமில்லை. "இன்று நாழியாகி விட்டதே. போகவேண்டுமா? திரும்பும் பொழுது ரொம்ப இருட்டி விடுமே" என்றாள்.

"எப்படியானாலும் போய்த்தானாகவேண்டும். அவர் கூப்பிட்டிருக்கிறாரே, எழுந்திரு" –

"நீங்கள் மட்டும் போங்கள், போதும். கூப்பிடுகிறவர்கள் வண்டி அனுப்பக் கூடாதோ? அவர்களிடம் இல்லையா என்ன?"

"கடவுளைக் கேட்டுக் கொள் – வண்டியிலும் உட்கார வைப்பார். எழுந்திரு–தலையை வாரிக் கொள்"

"தலையை வாரியாச்சே ஒரு முறை"

"புறப்படு அப்பொழுது. வீண் பேச்சுப் பேசாதே"

ஐந்து நிமிடங்களில் சரோஜினி தயாராகி விட்டாள். கொட்டாவி விட்டுக் கொண்டே.

"சரி போகலாம்" என்றாள்.

"இது என்ன கோலம். உன் நல்ல புடவை எங்கே போயிற்று?"

"வண்ணானிடம் போயிருக்கிறது."

"செருப்பு? அதையாவது போட்டுக் கொ ள்"

"என்ன இவ்வளவு தடபுடல்? போகிறதானால் புறப்படுங்கள். இல்லாவிட்டால் நான் உள்ளே போகிறேன் வேலையிருக்கிறது".

"இதோ பார் சரோஜ். வீட்டு வேலை எப்போதும் இருக்கிறது. அரிதாய் வரும் வேலையைத் தான் உடனே செய்ய வேண்டி வரும். சரி புறப்படு."

ஏதோ பாண்டித்தியம் நிரம்பிய விஷயத்தைச் சொல்லி விட்டாற்போல் சந்தோஷப்பட்டுக் கொண்டான், பலிதத். வீட்டைப் பூட்டிக் கொண்டு இருவரும் புறப்பட்டனர்.

பாதை எப்போதும் போல இருண்டு கிடந்தது. ஆனால் பலிதத்திற்கு அதில் அலைவீசும் ஜீவகளை புலப்பட்டது. எல்லாமே புதுமையாய்த் தோன்றியது. ஏமாற்றம் என்ற நெருப்பில் வெந்து போகாத அன்றைய அனுபவம் அவனுக்குப் புத்துயிர் அளித்தது. 'நான்' என்ற உணர்வு அவனை ஆட்கொண்டிருந்தது. எல்லாவற்றையும் அனுபவித்துக் கொண்டு சரோஜினியுடன் பேசிக் கொண்டே நடந்தான், பலிதத். மனம் நிரம்பி இருந்தது அவனுக்கு.

எதிரே மஹாபாத்ரவின் பெரிய வீடு தெரிந்தது. சரோஜினி மெல்ல நடந்தாள். பலிதத் வேகமாய் நடக்க ஆரம்பித்தான். சரோஜினிக்குக் கொஞ்சம் தயக்கமாயிருந்தது. அந்த வீட்டாரை

அவள் அறியவே மாட்டாள். பலிதத்திற்கு அதைப் பற்றி உணர்வேயில்லை. வாசலண்டை வந்து விட்டார்கள். அந்த வாசல் பரிச்சயமான ஒரு வாழ்வின் சின்னம். இங்கு சிறிதும் பெரிதுமான பொறுப்புக்கள், எல்லாம் வெட்ட வெளிச்சம். கொடிகள் சுற்றிய இரண்டு பலமான தூண்கள், நடுவில் கீழே தார்ப்பாதை—இது தான் அந்த வாசல், அந்த வாழ்க்கையின் பல்லிளிப்பு. அதைப் பார்க்கும்பொழுதெல்லாம் பலிதத்திற்கு அவனுடைய பரிச்சயமான உருவம் நினைவிற்கு வரும் — மஹாபாத்ர அல்லது பிற அதிகாரிகளுடன் ஒப்பிடும்பொழுது அவனுடைய உருவம் கோணலாய்த் தெரிந்தது, மெலிந்ததாய்த் தெரிந்தது, கீழ்த்தரமானதாய்த் தெரிந்தது. உடலை வளைத்துக் குனிந்து தலைமயிரைக் கோதியபடி, கண் ஓரத்தில் நன்றி தெரியப் பார்த்தபடி பயமும் பீதியும் மிளிரும் குரலில் எதையோ சொல்லிக் கொண்டு, ஒருவித அசட்டுச் சிரிப்புடன் நிற்கும் தன் உருவமும் தெரிந்தது. இங்கே அவன் வீரனல்ல, சாண் அகல வயிற்றுப் பாட்டிற்காக பிச்சை கேட்கும் யாசகன். பலிதத் நின்று கொண்டேயிருந்தான். அந்த இடத்திற்கேற்றபடி தன்னை மாற்றிக் கொண்டு தன் உண்மையான உருவத்தைக் காப்பாற்றிக் கொண்டான். "இது தானே மஹாபாத்ரவின் வீடு? உள்ளே போங்களேன், வெளியிலே ஏன் நிற்க வேண்டும்?"

"கொஞ்சம் இரு—சிறு நீர் கழித்து வருகிறேன்" அவனுடைய குரல் அடைத்துப் போயிருந்தது. சரோஜினிக்கு ஒன்றும் புரியவில்லை. தன் கணவன் இப்படி திடீரென்று மாறிப் போனதேன் என்று யோசித்தாள். மஹாபாத்ரவின் நினைவு வந்தது. 'சு, என்ன மனிதர், டம்ளரைக் கொடுக்கும்பொழுது...'

இதோ இங்கே நிற்பவர் அவள் கணவன், அவளுடைய கௌரவத்தின் சின்னம். ஆனால் உடல் கல் அல்லவே, உணர்ச்சி உள்ளதல்லவா? ரகசியமான ஒரு கற்பனைச் சித்திரம், அவள் மனதில் எழுந்தது—பெண் மனதின் சூட்சுமமான அனுபவமே போதும் அந்தக் கற்பனையை எழுப்ப.

அமைதியற்ற ஒரு புருஷனின் படம் அது—துக்கமும், தரித்திரமும் தாகமும் அவனை வாட்டின. ஆமாம், அவனுக்கு ஒரே தாகம். அவனிடம் கருணை பிறந்தது.

இந்த வீட்டின் முன் நிற்கும்பொழுது அவனைப் பற்றி அறியும் ஆவல் அவளைச் சூழ்ந்துகொண்டது.

இந்த வீட்டில்தான் இருக்கிறார், அந்த மனிதர், தன் மனைவி மக்களுடன். எப்படியிருப்பாளோ அவன் மனைவி ? எதையோ நினைத்துக் கொண்டு மெல்ல சிரித்துக் கொண்டாள்.

பலிதத் தடுமாறியவாறு நடந்து கொண்டிருந்தான். சரோஜினி அவனைத் தொடர்ந்தாள். யௌவனத்தின் இனிமையைப் பரப்பிக் கொண்டு வெற்றுடம்பில் லுங்கி மட்டும் உடுத்து வேலங்குச்சியால் பல்லைத் தேய்த்தபடி யாரோ உலவிக் கொண்டிருந்தது தெரிந்தது. அப்பொழுது இரவு எட்டரை மணி. யார் என்று சரியாகத் தெரியவில்லை.

அறையுள் யாரோ பேசுவதின் எதிரொலி வெளியில் கேட்டது.

"சீக்கிரமாய் எழுது. மாங்காய் என்றால் நாகப்பழம் என்று புரிந்து கொள்கிறாய், கத்திரிக்காய் என்று எழுதுகிறாய். சட்டென்றாகட்டும். உனக்கு வேலை உயர்வு கிடைக்கிற நம்பிக்கையே இல்லை. வீட்டிற்குப் போவதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறாயே. கம்பெனி சம்பளம் வெறுமனேயா கொடுக்கிறது? ம்–ஆகட்டும். காதில் விழுந்ததா?" மனைவி சகிதம் பலிதத் அங்கு நின்றான்.

"யார் அது – அடே கோபாலியா – யாரையும் இங்கே வரவிடாதே. வேலை நடக்கிறது என்று சொன்னேனே. இதோ உன்னை என்ன பண்ணுகிறேன் பார். யார் அது? ஆபீஸில் வந்து பார். ஏன் பேசாமல் நிற்கிறீர்கள்?"

"ஸார்.."

"ஓ! மிஸ்டர் தாஸ், கூட யாரு?"

"ஸார், சம்சாரமும் கூட . . "

"ஓ ஐ ஸீ, வாருங்கள், வாருங்கள். நான் வழி காண்பிக்கிறேன் – இப்படி வாருங்கள் – இன்று என்ன பாக்கியம்! என்ன செய்வது, வேலையில் முழ்கிப் போய் மனிதன் குருடனே ஆகி விடுகிறான். அடே, விளக்கு காண்பியுங்கள் யாராவது?"

மஹபாத்ர உள்ளே போனார், வழி காட்டிக்கொண்டு. பலிதத் அறைக்குள் நுழைந்தான். "அடே, வினுபாபுவா? இவ்வளவு நேரம் வரை ..!"

வெளி அறையில் குசுகுசுவென்று வினுபாபு விளக்கினான். "பார்க்கிறீரே!. பத்து மணிக்கு இரண்டு கவளம் சாப்பிட்டுவிட்டு வந்ததுதான். இதுவரை வீட்டிற்குப் போக முடியவில்லை. வெளியில் அவசரத்திற்கும் கூடப்போக விடவில்லை, அந்த மனிதன். வேலை இன்னமும் நடந்தாகிறது. பல்லைத் தேய்த்துக் கொண்டே அவர் சொல்வது பாதிக்கு மேல் புரியவும் இல்லை. துரைகளும் வாயில் பைப்புடன் டிக்டேஷன் தருவதுண்டு. ஆனால் அவர்களுடைய உச்சரிப்பு சரியாயிருக்கும். அதனால் புரிந்து கொள்ள முடியும். இவர் பல்லைத் தேய்த்துக் கொண்டே சொல்லும் வார்த்தைகளின் உச்சரிப்பு சகிக்கவில்லை. அதுவும்

ஆங்கில பாஷை! அதை பிட்மன் சுருக்கெழுத்தில் வேறே எழுத வேண்டும்.... விட்டுத்தொலை – ஒரு பீடா இருந்தால் தாருங்கள். இன்று துரையுடன் போயிருந்தீர்களே, என்ன ஆயிற்று! உங்களுக்கு அதிருஷ்டகாலம் தான் இனிமேல் – சந்தேகமேயில்லை." தொண்டையைக் கனைத்துக் கொண்டே மஹாபாத்ர திரும்பி வரும் ஓசை. பலிதத் அறையை விட்டு வெளியே வந்து ஒன்றுமே தெரியாதது போல் உலவ ஆரம்பித்தான். வினு பாபு வேலையில் ஆழ்ந்து போனான். மஹாபாத்ர பேச ஆரம்பித்தார். "வேலை பாதி தான் ஆகியிருக்கிறது. சரி வினு பாபு. நீ வீட்டிற்கு போகலாம். உன்னால் ஒன்றும் முடியாது. பலிதத் பாபு, நீ வேகமாய் எழுத முடியும். டிக்டேஷன் எடுத்துக்கொள். சட்டென்று முடித்து விடலாம். ஹா, இன்று நான் உன் வீட்டிற்குப் போயிருந்தேன் தெரியுமா? இதெல்லாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம் – எழுதிக் கொள்."

பல் தேய்த்தாய் விட்டது, அதனால் சுலபமாயிருக்கும் பேச்சு. பலிதத் எழுத ஆரம்பித்தான்.

டண், டண் – மணி ஒன்பது.

பிறகு ஒன்பதரை – எழுத்து நிற்கவில்லை. பலிதத் அன்று உலவப் புறப்பட்டவன். இப்பொழுது அவனுக்குத் தன் மனிதத் தன்மையின் உணர்வேயில்லை. வெறும் யந்திர மனிதன்.

ஏறத்தாழ வேலை முடிந்து விட்டது. இனிமேல் விடுதலை கிட்டலாம்.

தன்னை ஏன் மஹாபாத்ர கூப்பிட்டார் என்று கேட்கவே மறந்து விட்டது அவனுக்கு. எழுதினதை எல்லாம் நாளைக்கு டைப் செய்தாக வேண்டும். அந்தக் கவலை வேறு.

கை ஒடிக் கொண்டிருந்தது. மனம் உயிரற்றுப் போய்விட்டது. பலிதத் வேலை செய்கிறான்.

வீட்டுள் சரோஜினி.!

★ ★ ★

முதலில் மஹாபாத்ரவின் பேச்சும் நடத்தையும் பெரிய ஏமாற்றமாய்த் தெரிந்தன. பிறகு அவருடைய செயற்கையான மரியாதை மொழிகள். நெருப்பில் நீரைத் தெளித்து ஆவியை எழுப்புவது போல் இருந்தன. குளுமை இல்லை.

என்ன செய்வது ? இங்கிருந்து எப்படியாவது தப்பிக் போக முடிந்தால் . .

ஆனால் மஹாபாத்ர வழி காட்டிக் கொண்டே போய்க் கொண்டிருந்தார் – வேகமான நடை, அவரசப் பேச்சு. எல்லா ஆண்

களுமே பயந்தாங் கொள்ளிகள்தாம். அவர்களுள் பத்தொன் பதிற்கும் இருபதிற்கும் உள்ள அளவு வித்தியாசம் தான், என்று சரோஜினி யோசித்தாள்.

உள்ளே கதவைத் தள்ளியபடி மஹாபாத்ரஜி குரல் கொடுத்தார். "இங்கு பார். பலிதத் பாபுவின் சம்சாரம் வந்திருக்கிறாள்". சொல்லி விட்டு அங்கிருந்து போய்விட்டார். சரோஜினி அர்த்தமற்றுப் பார்த்துக் கொண்டு நின்றாள். யார் அங்கே இருந்தார்களோ? பக்கத்தில் சமையலறையில் சமையலைப் பற்றிப் பேசுவது கேட்டது. ஒரு புறம் படிக்கும் குழந்தைகள் படித்துக் கொண்டிருந்தனர். மறுபுறம் குழந்தைகள் விளையாடும் சப்தம் கேட்டது. உக்கிராண அறையின் திறந்த ஜன்னல் வழியாய் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. வீட்டு சாமானெல்லாம் தெரிந்தன. கட்டில், படுக்கை, அலமாரி எல்லாம் தான். செழிப்பான வீடுதான். எல்லோரும் வேலையாயிருந்தனர். அவள் அங்கு யார்?

விளையாடிக் கொண்டே வெளியே வந்த குழந்தைகள் அவளைப் பார்த்து திடுக்கிட்டனர். உள்ளே தாயிடம் ஓடிப்போயினர். ஒரு வேலைக்காரி வெளியே வந்து அவளைப் பாாத்து விட்டு "யாரோ வந்திருக்கிறார்கள்" என்று அறிவித்தாள். எல்லோரும் கூடி விட்டனர் – வீட்டு யஜமானி, குழந்தைகள், சமையலாள், வேலையாட்கள் எல்லோரும், ஒன்று கூடி தரிசித்து விட்டாள் சரோஜினி அந்த வீட்டு மனிதர்களை.

வீட்டு யஜமானி "யார் ?" என்று வினவினாள்.

"நான் உங்களைப் பார்க்க வந்திருக்கிறேன்". என்றாள் சரோஜினி. இந்த இரவு வேளையில் இப்படி வந்திருக்கிறாளே இப்பெண், அசௌகரியமான வேளையில், என்று அலுத்தது யஜமானிக்கு. "கூட யார்?" என்று விசாரித்தாள். "அவரும் வந்திருக்கிறார். வெளியில் இருக்கிறார்"

"ஓ! சாஹப்பிடம் இருக்கிறரா ?"

"ஆமாம்"

"வா, மேலே போகலாம்!" பாயைப் போட்டு உட்கார வைத்தாள். "இந்தா, வெற்றிலை போட்டுக் கொள். புகையிலை வழக்கமுண்டா? எங்கே உன் வீடு? எங்கும் போகவும் முடிகிறதில்லை, யாருடனும் பரிச்சயம் செய்து கொள்ளவும் முடிகிறதில்லை, எப்பொழுதும் வீட்டு வேலையைத் தவிர வேறு என்ன? உனக்கு எத்தனை குழந்தைகள்? ஓ! உனக்கு இன்னும் வயசாகவில்லையே. பிறந்த வீடு எங்கே? புக்ககம்? என்னென்ன சமையல் செய்வது வழக்கம்?"

ஆச்சு. இதற்கு மேல்?

சாஹறபானி (சாஹறபின் மனைவி) காலை மடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளிடம் எவ்வித விசேஷ குணமும் சரோஜினிக்குத் தெரியவில்லை. உடல் நலிந்த சாதாரணப் பெண் ஒருத்தி – யாரும் அவளைக் கவனிக்கக்கூட மாட்டார்கள். உடம்பெல்லாம் பொன் கவசம், அவ்வளவு தான் வித்தியாசம்.

சைகையைப் புரிந்து கொண்டு போயிருந்த ஆள்காரன் சரோஜினி யார் என்று அறிந்து கொண்டு வந்தான். சமையலறைப் பக்கமாயப் போய்க் கேட்டுக் கொண்டாள் எஜமானி. சாப்பிடப் பிடிவாதம் பிடித்தன குழந்தைகள். "இதோ வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்துவிட்டாள்.

அதற்கப்புறம் சரோஜினிக்குத் துணையாய் ஒரு வேலைக்காரி வந்தாள். "உன் கணவர் என்ன வேலை செய்கிறார் ? அவர் எங்கள் எஜமானரிடம் குமாஸ்தாவா ? என்ன சம்பளம் ?" ஆனால் அவளுடைய இந்த பேச்சுக்கும் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. தூரத்திலிருந்து ஒரு குரல் "அடீ மல்லீ, பாத்திரம் தேய்க்க வேண்டாமா? உட்கார்ந்திருக்கிறாயே" என்று அதட்டியது.

பிறகு சரோஜினி தனியாகவே அமர்ந்திருந்தாள். எஜமானி வீட்டு வேலையில் ஈடுபட்டிருந்தாள். எப்பொழுது போக முடியப் போகிறதோ, என்று குமுறினாள் சரோஜினி. வீட்டில் தினம் போல் வேலை நடக்கிறது. இவர்கள் நடுவில் அவள் யார்?

யோசித்துப் பார்த்தாள். அவளுடைய தன்மை புரிய ஆரம்பித்தது. கலவரம் நிறைந்த இந்த உலகில் அவளும் ஒரு பெண், அவளுக்கும் ஒரு உருவம் இருந்தது. அளவு இருந்தது. வேலை, வீடு லட்சியம் கூட அழிந்து விடும் – 'அவள்' என்னும் தன்மை குறுகிப் போய் கண்ணுக்குத் தெரியாதபடி ஏதோ மூலையில் மறைந்து விடும். இங்கு யார் அவள்? பார்க்க வந்தவள் மட்டும் தானா? அவ்வளவேதான் ! அவள் உடலும் மனமும் குன்றின.

அங்கிருந்து போய்விட விரும்பினாள் அவள். ஆனால் முடியவில்லை. சூழ்நிலை அவள் வழியைத் தடுத்து நின்றது. பண்பும் அவளை அடக்கி நிறுத்தியது.

பெருமூச்சு விட்டுக் கொண்டு கவலையுடன் பார்த்து கொண்டிருப்பதைத்தவிர செய்வதற்கு ஒன்றுமில்லை. விடுதலைக் காகக் கடவுளை விளித்தாள். பிறரை நிந்தனை செய்தாள். வேறென்ன செய்ய முடியும் ?

கண்கள் திறந்திருந்தன – ஆனால் பார்வையில்லை. எங்கோ தொலைவில் மூச்சு வாங்க எதையோ எதிர்த்து நீச்சலடிப்பது

போன்ற உணர்ச்சி. தன்னை அலட்சியம் செய்து விட்டார்கள் என்று அவளுக்குத் திரும்பத் திரும்பத் தோன்றிற்று. மஹாபாத்ர வையும், தன் கணவனையும், தன் முட்டாள்தனத்தையும் மனதினுள் நொந்து கொண்டாள்.

இப்படியே பதினொன்றரை மணி அடித்துவிட்டது. உள்ளிருந்து "அரே ! இன்னும் போகவில்லையா அவள்?" என்று கேட்டது. எஜமானி கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். "இவ்வளவு நேரம் உன்னை இங்கே உட்கார வைத்துவிட்டு வேலை நடக்கிறது போலிருக்கிறது. யாரால் காத்துக் கிடக்க முடியும். நீயே சொல். அடே கோபாலியா, போய் உன் எஜமானரிடம் சொல். சரி, நீ இப்பொழுது போய் வா. வழியைக் காட்டு - கோபாலியா, இருட்டி விட்டது. சரி, வா. அடிக்கடி வந்து போய்க் கொண்டிரு. என்ன?" என்று சரோஜினிக்கு விடை கொடுத்தனுப்பினாள்.

கோபாலியா வழியைக் காட்டியவாறு முன் நடந்தான். சரோஜினி வெளியில் வந்து நின்றாள். ஆஃபீஸ் அறையில் கோபாலியா என்னமோ சொன்னான். மஹாபாத்ர திடுக்கிட்டு எழுந்து நின்றார். "ஓ ! போதும் நிறுத்திவிடு. இன்னும் ஒரு கடிதம் எழுதி இருக்கலாம். சரி, பலிதத் பாபு, போய் வாரும். நாழியாய் விட்டது போலிருக்கிறது. இதையெல்லாம் கொண்டு போய் நாளைக்கு டைப் செய்து கொண்டு வாரும்."

பலிதத் நமஸ்கரித்தான். பதில் சொல்லாமலேயே கதவை அடைத்தான் மஹாபாத்ரஜீ! ஒரே இருட்டு ; பலிதத்தும் சரோஜினியும் மட்டுமே போய்க் கொண்டிருந்தனர். "இவ்வளவு நேரம் ஆக்கிவிட்டீர்களே ?" வேறு ஒன்றும் சொல்லத் தோன்ற வில்லை சரோஜினிக்கு.

மிகவும் கஷ்டப்பட்டுக் குரலை உயர்த்தி, "பார்த்துக் கொண்டு தானே இருக்கிறாய்!" என்றான். பலிதத். இருவரும் பேசாமல் வீட்டை நோக்கி நடந்தனர். ஒரு புதிய உணர்வு - ஏங்கிக்கொண் டிருந்த எதிர்ப்பு ஒன்று சூழலின் அடியில் அழுந்திக் கிடந்தது. மற்றொரு எதிர்ப்பு மனநிலை, பண்பு, சீலம் என்பதின் அடியில்.



காலையில் எழுந்தவுடன் முகம் கூடக் கழுவாமல் முந்தின இரவு எழுதிக் கொண்டு வந்திருந்த காகிதங்களைப் பார்க்க உட்கார்ந்தான் பலிதத். பலிதத். இது தான் உன் வாழ்க்கையின் இன்பம், ஆனந்தம்.

இதே உலகத்தில் தினம் பொழுது விடிகிறது – வாழும் ஒவ்வொரு உயிரும் கண்கள் மூலமாகவோ, அனுபவமூலமாகவோ தத்தம் மகிழ்ச்சிக்காக ஆனந்தத்தைத் திரட்டிக் கொள்கிறது.

ஒவ்வொருவருக்கும் அவரவர் ரசனைப்படி எங்கேயாவது விசேஷம் இருக்கும். சிலருக்கு கோபத்திலும் அழுகையிலும் கூட ஆனந்தம் கிட்டலாம் – மானுக்கு உப்பு மண் பிடிப்பது போல். சிலர் தங்களையே இம்சை செய்து கொள்வதில் மகிழ்ச்சி அடைவதுண்டு. இன்னும் சிலருக்கு சிரிப்பும் கேலியும் ஆனந்தத்தைத் தரும், அல்லது கூடை நிறைந்த பூவின் வாசனை.

உரக் குவியலில்தான் காகம் தனக்கேற்ற உணவைத் தேடுகிறது. பாதை ஓரத்தில் நாய் பழைய செருப்பை மென்று கொண்டே இன்புறுகிறது.

எதிர்ச்சாரியில் வசித்த காலேஜ் மாணவன் உடற் பயிற்சிக்குப் பிறகு வியர்வையைத் துடைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய நீள முடி நெற்றி மேல் புரண்டது. வியர்வையைத் துடைப்பது அவனுக்குப் பிடித்த காரியம் : அதனால் உடற் பயிற்சி செய்தான். வியர்வை அவனுக்கு ஆனந்தம் ஊட்டும் பொருள்.

அனுபவங்கள் திரும்பத் திரும்ப வருவதால் அவை உசிதமாகின்றன, மனதிற்கு உகந்ததாகின்றன. பொருள் உயிரற்றது –ஜடம். உணர்வு சின்மயமானது. நிகழ்ச்சிகள் பழகிப் போய்விடும் ; அனுபவத்தின் விசேஷத்தினால் புதிய ஆனந்தம் கிட்டும்.

ஃபைல்களுடன் பலிதத் வாழ்ந்தான். பிறகு டைப் செய்ய வேண்டும். எல்லாம் முடிய பத்தரை மணி ஆகிவிட்டது. காய்கறி இல்லை என்று சரோஜினி சொன்னாள். இல்லாவிட்டால் இல்லை. அவ்வளவுதான்.

ஆவி பறக்கும் சாதமும், பருப்பும், சூடாய் வெந்த உருளைக் கிழங்கும் உப்பு மிளகாயுடன் உண்டாம். இரு கவளம் உண்ண வேண்டும் – உணவு முக்கியமா இல்லை முன்னேற்றத்திற்காக உழைப்பதில் கிடைக்கும் ஆனந்தம் முக்கியமா ?

காய்கறி இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஒன்றுமே இல்லாவிட்டாலும் கூட, பரவாயில்லை. ஈர விறகு, எரியாத அடுப்பு ஒன்றுமே அக்கறை இல்லை. டைப் வேலை முடிந்தது, ஆபீஸ் உடையை அணிந்து, கீழே அமர்ந்து ஆச்சோ போச்சோ என்று சோற்றை வாயில் திணித்துக் கொண்டு வேலைக்கு ஓடினான்.

அங்கு போய்ச் சேர்ந்து கடியாரத்தைக் கவனித்தான். நிம்மதியாய் மூச்சு விட்டான்.

நாள் ஆரம்பித்தது. முதலில் மஹாபாத்ரஜியிடம் போக வேண்டும்.

ப்ரௌன் கலர் நாடாவ்ால் கட்டப்பட்டு கொஞ்சம் திறந்திருந்த கருப்பு ஷூ அணிந்து, சிகப்பு ஸாக்ஸ், மஞ்சள் நிற பாண்ட், இளம் நீல ஷர்ட், டோரியா கோட், நீளமான மூவர்ண டை, என்ற அலங்காரத்துடன் அமர்ந்திருந்தார் மஹாபாத்ர. முகத்தில் தடவியிருந்த ஸ்னோ பளபளத்தது. பெரிய ஃப்ரேம் கண்ணாடி, வாரி விடப்படாத சுருட்டை முடி, அதிலிருந்து வீசும் வாசனை – கவர்ச்சியுள்ளவர் தான். மேஜை மேல் காலைப் போட்டுக் கொண்டு ஏதோ எழுதிக் கொண்டிருந்தார் -- கொட்டை கொட்டையான எழுத்துக்கள். மேஜைமேல் காலின் பக்கத்தில் ஒரு பிரம்புக் கைத்தடி இருந்தது. ஒரு புறம் பெரிய வெற்றிலைச் செல்லம், காகிதப்பை நிறையப் புகையிலை, மூன்று சிறு புட்டிகள் – ஒன்றில் பெப்பர்மின்ட், இரண்டாவதில் ஓமம், மூன்றாவதில் ஏதோ சிகப்பு உருண்டைகள் – பீடாவில் வைக்கும் இனிப்பு மசாலா போலும்.

ஒவ்வொரு பெரிய மனிதனும் தனித்தனி அவதாரம் தான் –சமயம் பார்த்து மகிழ்வித்தால் பலன் கிட்டுவது நிச்சயம், என்று பலிதத் யோசித்தான். இந்த மஹாபாத்ர ஒரு அவதாரம் – ஷூவின் முனை உலகத்தை நோக்கி இருக்கும். அறிவாளிதான், படிப்பில் மட்டுமல்ல – சீட்டு, வைத்தியம், ஹோமியோபதி, ஜோதிடம், வேதாந்தம், வேலை, பேச்சு வார்த்தை, சாதுரியம் எல்லாவற்றிலும் தான். ஆனால் அந்த அறிவு சிறிது கோணலாகத் தெரியும் பிறருக்கு. பாதி பீடியைப் பிடித்தவாறு பனுவால் இந்த விஷயத்தைப் பற்றி ஒரு லெக்சரே அடிக்க முடியும். "ஆஹா! பாவம் பலிதத். கடவுளை வணங்கினால் வரம் கிட்டும். ஹரிநாமம் ஜபித்தால் நேரே சுவர்க்கத்திற்கே போய்விடலாம். ஆனால் மஹாபாத்ர – மஹாபாத்ர என்று ஜபிப்பதால் என்ன கிடைக்கும்?"

பலிதத் நாக்கை நீட்டிக் காண்பித்துக்கொண்டு," நீ பேசுவதை யாராவது கேட்டால் போச்சு என் காரியம். அவர் எவ்வளவு அறிவாளி என்று தெரியுமா ?" என்றான். "சரிதான். பெரிய பிரும்ம ஞானிதான்" "அரே, அறிவை அப்படி எளிதாய்த் தள்ளி விட முடியாது. நீ வம்பு அளந்து கொண்டிருந்த பொழுதும் அவர் படித்துக் கொண்டிருந்தார். "அப்பொழுதும் அதனால் நமக்கு லாபம் ஒன்றும கிட்டவில்லை, இப்பொழுதும் அவருடைய பிரும்ம

ஞானத்தால் நமக்கு லாபமோ நஷ்டமோ இல்லை. மனிதத்தன்மை தான் முக்கியம். நாம் வேண்டுவது பரிவு, அனுதாபம். அதெல்லாம் இல்லை என்றால் பெருந்தன்மையாவது இருக்க வேண்டும் – பிறருடன் பழகுவதில் மனிதத்தன்மை வேண்டும். அது இல்லை என்றால் – சுட்டுப் போடு – டாம்! அரே, பலிதத் தாஸ், ஒரு விஷயத்தைப் பற்றி பத்து விவரங்களை உருப் போடுவதால் மனிதன் ஞானி ஆவதில்லை. உன் மஹாபாத்ர வைப் போல் அகங்காரத்தால் ஊதிப் போய் பெரிய மனிதன் என்று விளிக்கப்படுவதாலும் பெரியவன் ஆகிவிடுவதில்லை. இந்த மாதிரி அறிவாளிகள் தாம் உலக அனர்த் தனங்களுக்கெல்லாம் காரணம். நீ அறிவு என்று சொல்வது அவ்வளவு ஆழமானதன்று. வெறும் ஓசையும் ஆடம்பரமும் மட்டுமே. ஃப்ராய்டின் பாஷையில், இந்த மனிதன் ஒரு எக்ஸிபிஷனிஸ்ட என்று கூறலாம். குனிந்து பார்த்தால் வேடிக்கை தெரியும்."

சரி, தாழ்வு மனப்பான்மை போலும், என்று பலிதத் நினைத்தான். ஆனால் பனு தன் பேதைமையிலும் ஒரு தவறு செய்கிறான். இந்நாட்டு 56 கோடி மக்களுடன் சேர்ந்து வாழ வேண்டும். ஒவ்வொரு மனிதனுடையவும் குண நிர்குணங்களைப் பற்றி ஆராய்ந்து தலையை ஆட்டிக் கொண்டிருந்தால் ஒரு அடி கூட முன்னால் நகர முடியாது.

மஹாபாத்ர எக்ஸிபிஷனிஸ்ட்! ஸேடிஸ்டாகவே இருந்து விட்டுப் போகட்டுமே. அதனால் பலிதத்திற்கு என்ன? மஹாபாத்ர உட்கார்ந்திருந்தார். இரண்டு மூன்று நிமிடங்களாய் பலிதத் உள்ளே வந்து நின்று கொண்டிருந்தான். . . . . . .

மஹாபாத்ர அவனைப் பார்க்கவில்லையா என்ன? கட்டாயம் கவனித்திருக்க வேண்டும். ஆனால் அப்படிக் கவனித்ததாகக் காண்பித்துக் கொள்வது அவருக்கு கௌரவக் குறைவு அல்லவா?

கால் கடுக்க பலிதத் நின்று கொண்டிருந்தால் தான் என்ன, யார் காத்துக் கிடந்தால் என்ன, மஹாபாத்ர வேலை செய்து கொண்டே இருந்தார். காரியம்தான் முக்கியமே ஒழிய மனிதன் அல்ல. அவனைக் கேட்பார் யார்?

ஃபைல்களுடன் பலிதத் நின்றான். மஹாபாத்ர இன்று அவனுடைய மேலதிகாரியாக இல்லாவிட்டால் தான் என்ன – நாளை ஆகலாமே! அந்த நம்பிக்கையில் வாயை மூடிக் கைகளைக் கட்டிக் கொண்டு, தலைகுனிந்து நின்றான். தன் வானர முன்னோர்கள் இயற்கை அவனை அழுத்துவதைப்

போல், தன்னைப் பிறருள் மறந்து இருப்பது ஒரு விதத் தியாகம் என்றே சொல்ல வேண்டும். அந்தத் தியாகம் ஒரு வித நம்பிக்கையுடன் செய்யப்படுகிறது. ஏனென்றால் அதனுடன் தொடர்பு கொண்டுள்ளதுதான் வாழ்க்கையின் கனவு.

டெலிபோன் அடிக்கவே மஹாபாத்ர அதை எடுத்துப் பேசினார். "நான் மஹாபாத்ர பேசுகிறேன். சரி. சரி. சரிதான் – இடியட்" இப்பொழுது பலிதத் பக்கமாய்த் திரும்பினார்.

"ஹலோ மிஸ்டர் தாஸ் ! " – பலிதத் அப்படியே புளகாங்கித மடைந்து விட்டான். மகிழ்ச்சி பொங்கியது. முகத்தில் சிரிப்பு, உடலில் வளைவு.

"ஸர் –ஸர், இவைகளைக் கொண்டு வந்திருக்கிறேன்". "ஓ அப்படியா! இவ்வளவு சீக்கீரம் எல்லாவற்றையும் முடித்து விட்டீர்களே! வாஹ் வாஹ்!"

"உங்கள் வேலை ஆயிற்றே ஸர் – செய்யாமல் இருப்பேனா?" "ரொம்ப சரி. அவரசமான விஷயம் தான், அர்ஜன்ட். காரியம். ரொம்ப ரொம்ப நன்றி "

மஹாபாத்ர காகிதங்களை எடுத்துக்கொண்டார். பலிதத் நின்று கொண்டே இருந்தான். மஹாபாத்ர வேலையில் மூழ்கி விட்டார். பலிதத் நின்று கொண்டே இருந்தான். உதட்டில் சிரிப்புடன், "சரி, மிஸ்டர் தாஸ், முடியுமானால் இன்று மாலை கொஞ்சம் வாருங்கள்" என்றார் மஹாபாத்ர. அவருடைய சொல்லாத புகழ்ச்சியைக் கற்பனை செய்து கொண்டு பலிதத் புல்லரித்துப் போனான். சுபமாகவே நாள் ஆரம்பித்திருக்கிறது, இது தான் முதல் 'போணி', என்று நினைத்துக்கொண்டான்.

அப்புறம் ஆபீஸின் தலைமை குமாஸ்தாவிடம் போக வேண் டும். பருமனான ஆள். வயதானவர். சதை தொளதொளத்துப் போயிருந்தது. பெரிய முகம். அதன் கீழ்ப் பக்கம் ஆடிக் கொண் டேயிருக்கும். பெரிய பெரிய பற்கள். அகன்று தடித்த காதுகளுள் கரிய ரோமம். சிகப்பும் மஞ்சளுமான கயிற்றால் கட்டப்பட்ட சட்டம் இல்லாத கண்ணாடி. கொஞ்சமாய் வாயைத் திறந்தபடி காதைத் தீட்டியபடி, குனிந்து அக்கம்பக்கத்து மேஜைகைள அவர் கவனிக்கும் பொழுது அங்கு ஒரே நடுக்கம் தான். கை வேகமாய் வேலை செய்யும், காகிதங்கள் படபடக்கும் ; வாடின நீலோத்பலப் பூவைப் போன்ற முகம் மேஜை மேல் கவிந்தே இருக்கும்.

இந்த குணங்கள்தாம் அவரை அங்கு தலைமை குமாஸ்தாவாக வைத்திருந்தன. இல்லை என்றால் அவரை அங்கு யார் மதிப்பார்கள்? ஆனால் அதனால் அவருக்கு நஷ்டமொன்

றுமில்லை. சமயத்திற்கு ஏற்றாற்போல் முகத்தில் பேதைமை. பேச்சில் வினயம். தலையை ஆட்டுவதால் ஒருவித அறிவாளித் தோற்றம். வேலை தனக்கு வராவிட்டாலும் பிறரை மிரட்டி அதட்டி அதைச் செய்ய வைக்கக் கூடியவர். இதெல்லாம் போதாதா என்ன?

நான்கு பேர் சூழ அமர்ந்திருந்தார். ஹரி பாபு, கிருஷ்ண பாபு, ராம் பாபு, கோபால் பாபு. பாவம், ஹரிபாபு அன்று குற்றவாளி.

"திரும்ப எண்ணிக் காட்டுகிறேன் – கேட்டுக் கொள்" பெரியவர் நடுவிரலை மேஜை மேல் தட்டி எண்ணியவாறு அர்ச்சனை செய்தார் – "ஒன்று – நீ தினம் நேரம் கழித்து வருகிறாய். பத்து மணிக்கு வருவதற்குப் பதிலாக பத்தேகால் மணிக்கு வருகிறாய். பெரிய கவர்னரோ இல்லையோ..'

கவர்னர் பத்தேகால் மணிக்கு வருவதை யாரும் பார்த்ததில்லை. ஆனால் கவர்னர் என்ற பேச்சு விஷயத்திற்கு மகத்துவத்தைக் கொடுக்கிறது.

"நீ கவர்னர் என்று மனதில் எண்ணமா? இந்தப் பேனா தெரிகிறதா உனக்கு? இதன் ஒரே கீறலால் உன் ஜீவனோபாயம் போய் விடும் . . "

எல்லோரும் கம்பீர மௌனம் சாதித்தனர் – ஹூம் கொட்டக் கூடத் தைரியமில்லாமல். எல்லோரும் ஹரி பாபுவையே கவனித்துக்கொண்டிருந்தனர். அப்புறம் தங்கள் அனுதாபத்தைக் கொட்டுவார்கள். இப்பொழுது அங்கே என்ன செய்ய முடியும்?

ஹரிபாபு கவலையுடன், "ஸார், மனைவிக்கு உடல் நலமில்லை. நானேதான் சமைக்க வேண்டியிருக்கிறது. ஒரே ஈர விறகு, ஊதி ஊதி மூச்சடைத்து விட்டது. இரு குழந்தைகளுக்கும் சாப்பாடு போட்டு விட்டு வராவிட்டால் நாளெல்லாம் அழுவார்கள். இரண்டு மைல் தூரத்திலிருக்கிறேன், இப்படியும் அப்படியுமாய் பத்துப் பதினைந்து நிமிடங்கள் நேரமாய் விடுகிறது" என்றான்.

"விடு இந்தப் பேச்சை, எவ்வளவோ இந்த மாதிரி கதை கேட்டாச்சு, தலை கூட நரைத்துப்போச்சு. எனக்கு வீடு வாசல் இல்லையா என்ன? குழந்தைகளுக்குப் பால் கொடுப்பதற்காக வேலைக்கு நேரம் கழித்து வருவதாயிருந்தால் வேலையை விட்டு விடேன். வீட்டிலேயே இருந்து கொண்டு அடுப்பை ஊது, மனைவிக்குப் பத்தியம் செய்து போடு. யார் வேண்டாம் என்கிறார்கள் ? நன்றாக கதைக்கத் தெரிகிறது ; கதை எழுதேன். நன்றாய் இருக்கும்."

"பொய்யில்லை சர், மனைவிக்கு உடம்பு சரியாயில்லை—"

"அதனால் கம்பெனிக்கு என்ன? இங்கே ஏதோ ஆஸ்பத்திரியோ அனாதாசிரமமோவா நடத்துகிறோம் ? சொல்? – தினம் லேட், தினம் லேட். எவ்வளவு தான் பொறுக்க முடியும் ? கம்பெனியின் பணம் என்ன சும்மா வருகிறதா? சரி, இது முதல் சார்ஜ் – அப்புறம் கேட்டுக் கொள். எத்தனை நாள் ரிடர்ன் பாக்கி வைத்திருக்கும் உன்னை இன்று ஒரு கை பார்த்து விடுகிறேன்"

"ஸர்--ஸர்–இரண்டே நாள் தான் ஆயிற்று – நீங்களே பார்த்து பிறகு அதை எழுதினால் போதும் என்று சொன்னீர்கள்–"

"அப்பொழுது காலையிலும் மாலையிலும் எங்கே போய் விட்டீர் ? ஹை? – "

யாவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கலானார்கள். கோபத்திற்கு உண்மையான காரணம் எல்லோருக்கும் புரிந்து விட்டது. ஹரிபாபுவின் முட்டாள்தனத்தைப் பற்றி அலுத்துக் கொண்டனர்.

அழும் குரலில் ஹரிபாபு "ஸர், என் மனைவிக்கு உடம்பு சரியில்லை. காலையில் டாக்டரைக் கூப்பிடப் போனேன். மாலையில் மருந்து வாங்கி வர. இதன்றி வீட்டு வேலை வேறு. இல்லாவிட்டால் வந்திருக்க மாட்டேனா? வேறு எங்கு நான் போக முடியும்? உங்களிடம் வரவில்லை என்றால் வேறு எங்கே போவது? இன்று கட்டாயம் வருகிறேன். சர், வண்ணானிடமிருந்து துணியையும் வாங்கிக் கொண்டு உங்களுக்குத் தெரியாததா ஸர் – உங்களிடமே வராவிட்டால் எனக்கும் போக வேறு எங்குதான் இடம் ? மனைவி படுத்துவிட்டாள். அதனால் மட்டுமே–"

ஸர், என்றால் 'ஐயா' என்று பொருள். ஆனால் ஹரி பாபு அதை உபயோகிக்கும் முறையில் அது ஹூஜூர், அரசன் என்றெல்லாம் பொருள் பட்டது. எப்படி ஆனாலும் இந்த வினயம், மரியாதை, அனுசரணை, கடைசியில் வண்ணான் விஷயம், எல்லாமாக நிலைமையை மாற்றி விட்டது. தலைமை குமாஸ்தா பேச்சை மாற்றி, "போ வேலை செய் இன்னொரு முறை இப்படி ஆகக் கூடாது, தெரிந்ததா? மனைவிக்கு உடம்பு என்று உபயோகமற்ற சாக்கைச் சொல்ல எப்படித் தைரியம் வந்தது உனக்கு? மனைவியின் தலைப்பில் மறைந்துகொண்டு உன்னைக் காப்பாற்றிக்கொள்ள வெட்கமாயில்லை?"

ஹரிபாபு தலையைத் தொங்க விட்டுப் கொண்டு மெல்லப் போனான். சமயத்தை உபயோகித்துக் கொண்டு பலிதத் "குழந்தைப் பருவ வழக்கம் போலும். வாத்தியார் குரலைக் கேட்டு பாட்டியின் பின்னால் ஒளிந்து கொண்டு 'வயிற்றை

ரொம்ப வலிக்கிறது பாட்டி. இன்னிக்கு வேண்டாம்' என்று அழுதிருப்பான்." என்றான்.

திரும்பிப் பார்க்காமலே, ஒன்றுமே நடக்காதது போல் போனான் ஹரிபாபு. அப்படி ஒன்றும் விசேஷமாய் நடக்கவும் இல்லையே. இதெல்லாம் தினசரி நடப்பது தான். வழக்கமாகி விட்டது. முகத்தை துடைத்துக் கொண்டுவிட்டால் அத்துடன் விஷயம் முடிந்தது.

பலிதத்தின் விகடத்தைக் கேட்டு சிரித்தார், தலைமை குமாஸ்தா. அவருடைய சிரிப்பைக் கேட்டு நாலைந்து பிற ஊழியர்களும் சிரித்தனர், அவரவர் பாணியில். முட்டை இடும் முன்பு கோழி இடும் கூவலைப் போல் ஸிமைனரில் விட்டு விட்டு பலிதத்தும் மனமாறச் சிரித்தான். தலைமை குமாஸ்தா சிரிக்கிறார், என்று கிருஷ்ண பாபுவின் நீண்ட கழுத்திலிருந்து ஹே ஹே ஹே என்று சிரிப்பு வெளிப்பட்டது. ஹரி பாபுவின் சிரிப்பு இருமலின் நடுவே கேட்டது. ராம் பாபு அலை அலையாய் இடைவெளி விட்டு விட்டுச் சிரித்தான். கோபால் பாபுவின் ஒவ்வொரு அவயமும் குலுங்கியது சிரிப்பில். மேஜையினடியில் அவனுடைய தொந்தி ஆடியது. தலைமை குமாஸ்தா சிரித்துக் கொண்டே இருந்தான். ஹே ஹே.

இந்தச் சிரிப்பு பரவி எங்கும் ஒரே சிரிப்பொலி. தலைமை குமாஸ்தாவின் சிரிப்பு நிற்கும் வரை தாங்களும் சிரித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்று அந்த ஆபீஸில் வேலை செய்பவர்கள் எல்லோருமே போட்டியிட்டனர். நல்ல டிஸிப்ளின் அல்லவா இது!

ஏங்கட்ராவ் வாயில் கைகுட்டையைத் திணித்துக் கொண்டு வேலை செய்தவாறு இருந்தான். தைமூர்லங்கைப் போல கடுமையுடன், "போதும் சிரித்தது. வேலை செய்யுங்கள்!" என்று உத்தரவு பிறந்தது. கப்சிப். காகித்தைப் புரட்டும் பட் பட் ஓசையும், பேனா கிறுக்கும் ஓசையும் மட்டுமே கேட்டன.

பெரிய பாபுவின் மேஜை மேலிருந்து ஒரு காகிதம் நழுவி விழுந்தது. உடனே குனிந்தனர். ஐவரும். குனிவது கஷ்டம்தான் கோபால் பாபுவிற்கு. ஆனால் முயற்சி செய்து தானே ஆக வேண்டும்! மெலிந்த ராம் பாபு சுலபமாய்க் குனிந்து மேஜையின் அடியில் தேடினான். ஆனால் அவனுக்குக் கண் சுமாராய்த் தான் தெரியும். அதனால் அவனுக்கும் கிடைக்கவில்லை அந்தக் காகிதம். பலிதத் தாவி அதை எடுத்து விட்டான். பிறகு அதை மேஜையில் மேல் வைத்து அதன் மேல் ஒரு கல்லையும்

வைத்தான். பெரிய பாபு அந்தப் பக்கம் பார்க்கக் கூட இல்லை. வேலையிலாழ்ந்திருந்தார்.

பலிதத்தைத் தவிர பிறர் எல்லாரும் போய் விட்டனர். அவன் தன் பாண்ட் பாக்கெட்டியிலிருந்து எதையோ எடுத்து மேஜையின் கீழேயே வைத்துப் பார்த்தான். பிறகு அதை மெல்ல மெல்ல மேலே கொண்டு வந்தான்.

ஒரு பீடா, பொன் பூச்சுடன். அத்தர் வாசனை தூக்கி அடித்தது. பிரபலமான குஷியா வெற்றிலைக் கடையில் வாங்கியது. பலிதத்திற்கு வெற்றிலை போடும் வழக்கமில்லை. ஆனால் எப்பொழுதாவது இப்படி பிறருக்காக வாங்கி வருவதுண்டு.

"ஓ ! என் எனர்ஜி மாத்திரை!" மாவரைக்கும் யந்திரத்தைப் போல் அவருடைய தாடைகள் அசைந்தன. "அப்புறம் என்ன விசேஷம்?" "அதை உங்களிடமிருந்து தெரிந்து கொள்ளத் தான் வந்தேன், சர். எல்லாம் உங்கள் கையிலிருக்கிறது. உங்கள் தயவு வேண்டும்". "இன்னமும் எதுவும் நிச்சயமாகவில்லை" என்றார் பெரிய பாபு கம்பீரமாய்.

"ஆகாவிட்டால், இன்னும் ஒன்றிரண்டு நாட்களுள் ஆகிவிடும்" "உண்மைதான்" என்று சொல்லியவாறு தலைமை குமாஸ்தா எழுத ஆரம்பித்தார்.

சின்னக் குழந்தையைப் போல் கொஞ்சலான குரலில் "ஸர், ஸர், என் விஷயம் என்னவாயிற்று ? நீங்கள் சொல்லாவிட்டால் நான் உண்ணாவிரதம் செய்துவிடுவேன். சொல்வீர்களா ஸர்?" பலிதத் மன்றாடினான்.

பெரிய பாபுவிற்கு சிரிப்பு வந்து விட்டது. தனக்கு சம்பந்த மில்லாததுபோல், "துரை சாதகமாய்த் தான் எழுதியிருக்கிறார். ஆனால் வேறு சிலரும் லாயக்குள்ளவர்கள் இருப்பார்களே."

மனது மகிழ்ச்சியில் திளைத்தது என்றாலும் பலிதத் பெரிய மூச்சுடன் "நீங்கள் தான் எனக்கு பக்கபலம். இல்லாவிட்டால் என்னை விழுங்கி ஏப்பம் விட்டுவிடுவார்கள்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து விட்டான். வணக்கம் செலுத்தி விட்டுப் புறப்பட்டான். கொஞ்ச தூரம் போய்விட்டுத் திரும்பி வந்து குனிந்து பாபுவின் காதருகில் "ஒரு விஷயம் சார். நீங்கள் என்ன சொல்லுவீர்களோ என்று தயங்குகின்றேன்" என்றான்.

"என்ன?"

"சர், ஏங்கட்ராவிடம் நீங்கள் ஏதாவது சொன்னீர்களா?"

"எதைப் பற்றி"?

"இல்லை, அவனைக் கண்டித்து, அதட்டினீர்களா?"

"தத் – என்ன விஷயம் இது ? கொஞ்சம் தெளிவாய்ச் சொல்."

பலிதத் மென்று விழுங்கினான். ஏதோ கெட்ட செய்தியைச் சொல்லுவதற்குத் தயங்குவது போல் நடித்தான். தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பவன் போல் நடந்தான். தலைமை குமாஸ்தா தன் வேலையை நிறுத்திவிட்டு வியப்புடனும், நெற்றியில் கேள்விக் குறியுடனும் அவனைப் பார்த்துக் கொண்டு இருந்தான்.

"சார், எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. நல்ல மனிதர்கள் எப்படி மாறிப் போய்விடுகிறார்கள்! காரணம் இல்லாமல் பிறரைப் பற்றி வேண்டாத கதை எல்லாம் வம்பளப்பது சரியா? அவன் மட்டும் அல்ல, அவன் வீட்டார் கூட, 'சந்தர்ப்பம் பார்த்து துரை எதிரிலேயே எக்ஸ்போஸ் செய்து விடுவேன், தப்ப முடியுமா என்ன?' என்று மார்தட்டுகிறார்கள். எதைத்தான் நீ எக்ஸ்போஸ் செய்யப் போகிறாயாம் ? அதைப் பற்றி இவ்வளவு பிரச்சாரம் எதற்கு – செய்வதைச் செய். என்ன நினைப்பார்கள் பிறர்? இப்படி உங்கள் முதுகிற்குப் பின்னால் பேச்சு. ஆனால் இப்பொழுது நேரே கேட்டால் – சீ என்ன மனிதன்!" தலை அவர் காலில் படும்படி குனிந்து நின்றான் பலிதத் – வினயமே உருவாக.

"யார், ஏங்கட்ராவா ? நீ என்ன சொல்லுகிறாய் பலிதத். நீ சொல்லுவது உண்மையா ? " அவர் குரல் கரகரத்தது.

"மெள்ள, சார், மெள்ள, அவன் காதில் விழுந்தால் என்னைத் தீர்த்துக் கட்டி விடுவான். எல்லோரும் நம் பக்கமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் சந்தேகத்துடன். சர், சாயங்காலம் உங்கள் வீட்டிற்கு வந்து எல்லாம் சொல்லுகிறேன். எக்ஸ்போஸ் பண்ணப் போகிறானாமே எக்ஸ்போஸ் ஹூ!"

"ஓ! உலகம் எவ்வளவு கெட்டுப்போயிற்று ! பிள்ளையே கடிக்கும் பாம்பு." பலிதத் மெள்ள நழுவினான். அதைப் பெரியவர் கவனிக்கக் கூட இல்லை. தன் எதிரேயிருந்து மேஜைகளின் வரிசையைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அங்கேதானே மௌனமாய் எதிர்ப்புத் தயாராய் கொண்டிருந்தது.

அவருடைய வயிற்றிலடிக்க முற்பட்டுவிட்டான் ஏங்கட்ராவ். ஏன்? கீழுதட்டைக் கடித்துக் கொண்டு, ஒருவித மிருக சப்தம் செய்தவாறு எழுந்து நின்றார் பெரியவர். டிராயரைத் திறந்து சாவிக் கொத்தை எடுத்து பக்கத்திலிருந்த இரும்பு அலமாரியிலிருந்து ஒரு ஃபைலை எடுத்தார். பல்லைக் கடித்தவாறு அதில் என்னவோ எழுத ஆரம்பித்தார்.

பலிதத் ஏங்கட்ராவின் அருகில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். பேச்சில் தேன் சொட்டியது. "ஓ ! இப்படி எதற்கு வேலை வேலை என்று காய்கிறார் ? இங்கு யார் அதைப் பார்த்துப் புகழ் போகிறார்கள்? உலக இயல்பு தெரியாதா உனக்கு ? ஏமாற்றுதல், துரோகம் செய்தல், இதெல்லாம்தானே வெற்றிகளை அளிக்கின்றன ! நீ வேலை, வீடு என்றே வாழ்கிறாய், தலையைக் கூடத் தூக்கிப் பார்ப்பதில்லை. யாருக்குத் தெரியும் உன் முயற்சியின் மகிமை ? உன்னைப் போன்ற ரத்தினத்தின் மதிப்பை அறியக் கூடியவர் இங்கு யார் இருக்கிறார்கள் ? வேறு எங்கேயாவது இருந்தால் நீ எங்கோ உயரத்திலிருந்திருப்பாய். ஆனால் இங்கே விட்டுத் தொலை.."

ஏங்கட்ராவிற்குச் சிரிக்க தான் தெரிந்தது. தன் ஃப்ளாஸ்கிலிருந்து காப்பியை கோப்பையில் கொட்டி பலிதத் பக்கமாய் நீட்டினான்– "எடுத்துக் கொள் கொஞ்சம்".

"அங்கே பார் ஏங்கட்ராவ். கிழம் கான்ஃபிடன்ஷியல் அலமாரியைத் திறந்து ஃபைலை எடுக்கிறான். என்ன விஷயம்?"

"நீ இங்கே பார். காஃபி ஆறிப் போய்விடும். பிறர் விஷயத்தில் நமக்கு ஏன் அக்கறை ?"

மாலை நான்கு மணிக்கு சமாசாரம் வெளிப்பட்டது – பலிதத்திற்கு வேலை உயர்வு ஆகி விட்டது. எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு வாழ்த்தினர். சுண்டிய முகத்துடனும் உலர்ந்த வாயுடனும். ஒருவனுக்குக் கிட்டிய உயர்வால் பிறர் அநேகர் வஞ்சிக்கப்பட்டு விட்டனர். ஆனால் இந்தப் போராட்டத்தில் வாழ்த்துவதும், கொம்மாளம் அடிப்பதும், விருந்து வைக்கும்படி வெற்றி வீரனை வற்புறுத்துவதும் சாதாரண விஷயம். ரஹீமிலிருந்து ரிச்சர்டு வரை பியூன்கள் இனாம் கேட்டனர்.

பளபளக்கும் கண்களில் சிரிப்புடன் வந்து நின்றான் ஏங்கட்ராவ். 'கணக்கு தப்பவில்லையே ? இனிமேல் குற்றம் சொல்ல மாட்டாயே ? " என்றான். "குற்றமா? என்ன குற்றம் தம்பி?"

பலிதத்திற்கு தூக்கி வாரிப்போட்டது. குற்றமுள்ள நெஞ்சமுல்லவா! "என் கணக்கு பிசகியிருந்தால் கொஞ்சமாகவா தூற்றி இருப்பாய் என்னை ? இந்தா, சிகரெட் பிடி. வேலை ஆயிற்று, போகலாம் வா ".

கம்பெனி ஆபீசில் அகன்ற வாசலைக் கடந்து வெளியே வந்தபிறகு, தன்னுள் மாறுதல் ஏற்பட்டிருப்பதை உணர்ந்தான் பலிதத். நடப்பது போலவே இல்லை, காற்றில் பறப்பது

போலிருந்தது. நெஞ்சு பொங்கியது, ஓடி ஆடி விளையாடத் தோன்றியது. அவன் உள்ளத்து எண்ணங்கள் காற்றில் பறந்தன. ரொம்ப தூரம் வரை. அவன் கற்பனையில் எல்லாம் சாத்தியந்தான், எல்லாம் அவனுக்கு எட்டக்கூடியவை தான்.

அவனுக்கு வேலை உயர்வு கிட்டி விட்டது. ஒரே வெட்டில் தன் பலூனின் நூலை அறுத்துவிட்டு தலை முறைகளாய் அவன் குடும்பம் இருந்த நிலையிலிருந்து விடுபட்டு பறக்கலுற்றான். வேலை உயர்வு நடக்காத விஷயமல்ல. முன்னேயும் ஆகியிருக்கிறது. இனிமேலும் ஆகும். இந்த உயர்வு எதைக் குறிக்கிறது ? இப்படி எல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்கும் நிலையில்லை பலிதத். அவன் வெற்றி பெற்ற மனிதன் மட்டுமே. அந்த மாயையில் மகிழ்ச்சி அடைபவன்.

அவனுடைய மதிப்பீட்டின்படி வெற்றி, வேலையில் உயர்வைக் குறித்தது. கொஞ்சம் அதிகம் பணம் கிட்டும் என்ற சந்தோஷம் மட்டுமா? இல்லை. இந்த உயர்வு அவனுடைய சொந்த ஆளுமையின் வெற்றி. ஏங்கட்ராவ், கேசவ பாபு, மதுபாயு இவர்களை எல்லாரையும் விடப் பெரியவனாகி விட்டான். சாதாரண வாழ்விலும் நின்று விடாமல் மேலேறிக் கொண்டே போவான் – போய்க் கொண்டேயிருப்பான். வழி சரியாய்த் தெரியவில்லை. கண் முன் நம்பிக்கை ஊசலாடியது, முகத்தில் அவனை அறியாமலேயே மகிழ்ச்சி சிரித்தது. துள்ளல் இருந்தது நடையில்.

அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அவனுடைய உடல் பலத்தால் எவரையும் வெல்ல முடிந்ததில்லை. குனிந்து பார்த்தார்கள் அவனுடைய குட்டையான சரீரத்தை. நெஞ்சை நிமிர்த்தி நடந்தனர், பிறர், அவனை அதட்டியபடி. எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டான் அவன். சண்டை பூசல்களில் அகப்பட்டுக் கொள்ளவில்லை, எந்த விளையாட்டு, உடற்பயிற்சியிலும் பங்கெடுத்துக் கொள்ளவுமில்லை. எவர் வார்த்தையையும் தட்டவுமில்லை அவன். வாக்குவாதம் செய்யவில்லை. தன் உடல் பலத்தால் யாரையும் எதிர்க்க முடியாது என்று புரிந்து கொண்டு விட்டான். அதனால் அவன் அவ்வித எந்தப் போட்டியிலும் அகப்பட்டுக் கொள்ளாமல், பணிந்து போயே தன் வேலையைச் செய்தான். பிறரைக் கையால் துகைப்பதை விட தன் சேவையாலும் வினையத்தாலும் வெல்வதை உத்தமமாக நினைத்தான். ஸ்கூலில் அவன் 'குட் பாய்' என்று பெயரெடுத்தான். டீச்சர்கள் அவனைக் கண்டு பயப்படவில்லை. எப்பவும் எந்தப் பையன் என்ன விஷமம்

செய்தான் என்று வாத்தியாருக்கு வந்து சொல்லுவான் – குற்றவாளிக்கு என்ன தண்டனை அளிப்பது என்றும் யோசனை கூறுவான். வேலையிலும் அதே யுக்தியை உபயோகித்து மேலதிகாரிகளின் அன்பிற்குப் பாத்திரமானான். கடவுள் அவனுக்கு உடல் பலம் அளிக்க வில்லை என்றால் வேண்டாம். ஆனால் அவன் தன்னையே மெச்சிக் கொண்டான் – ஏனென்றால் வெற்றி பெறும் வழி அவனுக்குத் தெரியும். "புத்திர்யஸ்ய பல : தஸ்ய". முயலாக இருந்து கொண்டே தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முடியும்.

தந்திரத்தால் கைக்கு மேல் கிட்டிய பலனுடன் பலிதத் வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தான். தன் பழைய தோலை ஆபீஸிலேயே விட்டுவிட்டான். இப்பொழுது அவன் ஒளி மிக்கவனாகவும் சுந்தரனாகவும் இருந்தான். ஆனால் அந்தத் தோற்றம் அவனை வசீகரிக்கவில்லை. ஏனென்றால் அது வெதும்பி, வாடிப் போயிருந்தது.

வெய்யில் தாழ்ந்தது, குளுமை சூழ்ந்து கொண்டது. வீடு பக்கத்தில்தான். சரோஜினி உட்கார்ந்திருப்பாள். அவளிடம் முதலில் சொல்ல வேண்டும். அப்புறம் ? இன்பக் கனவில் ஆழ்ந்தவனாய் வீட்டை நோக்கி வேகமாய் நடந்தான்.

தூரத்தில் புல்லாங்குழலின் நாதம் கேட்டது – மிகவும் இனிமையாக, சூழ்நிலை சாந்தமாகவும், மனோரம்மியமாகவும் இருந்தது. நேரே தன் வீட்டிற்குத்தான் போய்க் கொண் டிருந்தான். இங்கு சிறிய முற்றத்தில் உயரமாய் வளர்ந்திருந்த கீரைச்செடிகளில் ஏறிப் படர்ந்த பீர்க்கங் கொடிகளில் பூக்கள் மலர்ந்திருக்கும். தொழுவத்திலிருந்து பசுவும் குரல் கொடுக்கும். அவன் காலடி ஓசை கேட்டு, துளசி மாடத்தில் விளக்கை ஏற்றிவிட்டு நமஸ்காரம் செய்து கெண்டிருப்பாள் அவன் மனைவி, தன் மங்கல வாழ்வுக்காக வேண்டிக்கொண்டபடி, பக்கத்து வீட்டுப் பூஜை அறையிலிருந்து மணி ஓசை– தீபாராதனை போலும். 'தீப ஜோதி பரம் பிரும்ம'.

புல்லாங்குழலிசை கேட்டுக் கொண்டேயிருந்தது. ஆனால் கற்பனை கிராம வாழ்க்கையை ஒட்டி அன்றோ இருந்தது! இங்கு அது எப்படி நடக்க முடியும்? ஒரு வேளை அவன் எங்கேயாவது வாசித்த வர்ணனையோ இது? அல்லது சினிமாவில் கண்டதோ? ஆனால் அவன் சினிமா பார்ப்பதில்லையே. மனதின் ஆழத்தில் ஊறியிருந்த அற்புதமான சித்திரம்! ஒரு வேளை அது அவன் வேட்கையைத் தணிக்கும் தண்ணீரோ, யந்திர வாழ்வின் அழுக்கைக் கழுவிவிடும் நீரோ?

என்ன அசட்டுத்தனம் ! காலேஜ் மாணவன் ஜன்னலருகில் நின்று கொண்டு குழல் வாசிப்பதைக் கண்டான் பலிதத். இந்தப் பக்கம் ஜன்னலின் மேல் சாய்ந்து கொண்டு அமர்ந்திருந்தாள் அவன் மனைவி. 'ஹு! – சோக்ரா – 'மனதுள் கர்ஜித்தான் பலிதத். முட்டாள் பயல், முட்டாள் பயல், ஆனால் அவன் குழல் ஊதுவதற்கும், சரோஜினி தன் வீட்டில் அமர்ந்திருப்பதற்கும் என்ன சம்பந்தம்? அவள் அங்கு அமர்ந்து தன் வரவை அல்லவா எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்? பாவம், எவ்வளவு தனியாக இருக்கும் அவளுக்கு. ஆனால் அவன் மனம் சம்மதப் படவில்லை. அந்த ஜன்னலண்டை குழலூதும் பயலும் இந்த ஜன்னலண்டை அமர்ந்திருக்கும் சரோஜினியும் ஒரே சித்திரத்தின் இரண்டு தோற்றங்கள் போலத் தோன்றினர் அவனுக்கு.

கோபத்தால் அவன் உடல் நடுங்கியது. மூச்சும் வேகமாய் வந்தது. தன் வீட்டின் தாழ்ப்பாளைக் குலுக்கினான். உடனே சரோஜினி கதவைத் திறந்து விட்டாள். கோபத்தால் உந்தப்பட்டு வீட்டின் நடுபாகத்திற்கே நேரே வந்துவிட்டான். அப்புறம் தான் சரோஜினியைத் திரும்பிப் பார்த்தான். தன் வேலை உயர்வைப் பற்றி அவனுக்கு மறந்தே போய்விட்டது. கதவை மூடிக் கொண்டிருந்தாள் சரோஜினி முதுகைக் காட்டியபடி. நல்ல அகலமான முதுகு, சுவரின் ஒரு பாகத்தைப் போல். அவனுடைய மன விகாரம் அதற்குள் நுழைய முடியாமல் திரும்பி விடுகிறது. குழலோசையின் அலை உயரை உயர ஏறி மழையைப் போல் கொட்டிற்று ;

அப்புறம் ஒரே பிரளயம் தான் – மிருக உறுமல்.

சரோஜினி திரும்பிப் பார்த்தாள் – பலிதத் உதட்டைக் கடித்துக் கொண்டு கம்பீரமாய் நின்றான். ஒரு வேளை அவன் குழலிசையில் தன்னை இழந்து நிற்கிறானோ என்று நினைத்தாள். "என்ன இனிமையாய் இருக்கிறது, இல்லையா ? எவ்வளவு சோகம் அதில் ? இடையனால் இப்படி வாசிக்க முடியுமா குழலை? ஆஹா ! என்ன இனிமை . . "

"ஏ, என்ன சொன்னாய்?" தன் கோபத்தைக் காண்பிக்க வழி பிறந்தது பலிதத்திற்கு. "ரொம்ப இனிமையாய்க் குழலூதுகிறான் இல்லையா ? போக்கிரிப்பயல். யாரும் ஒன்றும் சொல்லவில்லை என்றால் போக்கிரித்தனம் அதிகமாகிக் கொண்டே போகிறது. பண்புள்ளவர்கள் இங்கு வசிக்க முடியாது. இதோ என்ன செய்கிறேன் பார் " – கத்தினான் பலிதத். கதவு வரை தாவியும் விட்டான்.

ஆதங்கத்துடன் அவன் தோளைப் பிடித்து நிறுத்தினாள் சரோஜினி. "சீ இதென்ன இப்படி ? யாரோ என்னவோ செய்து கொண்டு போகட்டுமே. அதனால் நமக்கென்ன?"

தோளில் சரோஜினியின் பலமான பிடி. அவள் மார்பில் சாய்ந்த அவன் முகம் – தன்னை விடுவித்துக் கொண்டவாறு அவன் முணுமுணுத்தான். "விடு, வழி விடு".

எங்கேயோ அபிநயத்தில் கண்ட உக்ர மூர்த்தியின் ஒரு சிறு அம்சம் பலிதத். அவனை அறியாமலேயே நாடகக் கலை அவனை ஆட்கொண்டது. 'ஐயோ, எங்கே போவீர்கள், ? இந்த மாதிரி ஏன் செய்கிறீர்கள்?"

"பார்த்துக்கொண்டே இரு. புல்லாங்குழலதும் அந்தப் போக்கிரிப் பயலை ஒரு கை பார்க்கிறேன்", உரக்கக் கத்தினான். அந்தப் பக்கம் குழல் நாதம் டப் என்று நின்று விட்டது. பலிதத்தின் உடல் நடுக்கம் சரோஜினியையும் தொத்திக் கொண்டது. கதவின் மேல் சாய்ந்தவாறு பலிதத்தைப் பிடித்துக் கொண்டு 'எங்கே போக வேண்டும் ? என்னாயிற்று? உங்களுக்கு என்ன வந்து விட்டது? கலிங்க பட்சியின் கண்களைப் போல் உங்கள் கண்களும் சிவந்து விட்டனவே. முகமெல்லாம் வியர்வை, ஏன் இப்படி? எங்கே போக வேண்டும் ? சண்டைக்கா? உங்களால் அது முடியுமா? ஏன் இப்படி கலவரப்படுகிறீர்கள், சொல்லுங்கள் எப்பவும் சாந்தமாயிருப்பவராயிற்றே. கை கலந்து மல்லுக்கு நிற்க முடியுமா? முடியுமானால் போங்கள் ..."

என்ன சொன்னாள் ? முடியுமானால் என்றா ? அந்தக் கடுமையான சொல் ! அவனுக்கு யாரோ சுத்தியால் தலையில் ஆணி அறைந்ததைப் போலிருந்தது. எல்லாம் அணைந்து சில்லிட்டுப் போயின. அந்தப் பையனின் பலமான, திடமான உடல் நினைவிற்கு வந்தது. உடற்பயிற்சி செய்பவன் அவன். உத்கலின் பீம பத்மாசரணின் தம்பியைப் போல் தோற்றமளித்தான். ஃபுட்பால் விளையாடுபவன். எந்தப் பலவீனமும் இல்லாதவன். நடக்கும் அந்தக் கல்மலை முன்னால் இந்த பலிதத் ... !

உடல் வியர்வையால் நனைந்து விட்டது. கோட்டின் பட்டன்களை அவிழ்த்தவாறு, "ஓ சரோஜ்! எக்ஸ்க்யூஸ் மீ. என் நரம்புகள் ஒரு நிலையில் இல்லை. ஒரு வேளை உடம்பு சரியாயில்லையோ என்னவோ. ஆபீஸ் வேலைத் தொல்லை. தலை சுற்ற ஆரம்பித்து விடுகிறது. வீட்டிற்கு வந்து கொஞ்சம அமைதியாய் இருக்கலாம் என்றால் இந்த பேப்பே என்ற குழலோசை விட மாட்டேன் என்கிறது. நன்றாய் குழலூதத் தெரியுமானால் வாசிக்கட்டும் – நாமும் கேட்டு ரசிப்போம்.

ஆனால் இது என்ன கீச்சு மூச்சென்று காக்காய் குருவி கத்துவதைப் போல் ஓசை – இடியட்".

"அவன் எப்படியோ ஊதட்டும் – அதற்காக நாம் சண்டை போடுவானேன்? இதோ நான் நிரோத் பாபுவின் வீட்டிற்கு சொல்லி அனுப்புகிறேன். அப்புறம் அவன் குழலூதுகிறானா பாருங்கள்."

"ஹூம், என்னவோ உன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்கிறாப்போல்".

"நான் உங்கள் சார்பாகத் தான் சொல்லி அனுப்புவேன். அப்படியுமா கேட்க மாட்டான்? தலை வலி எடுக்கிறது. இந்த ஓசை எல்லாம் கேட்டு என்று சொல்லச் சொல்லுகிறேன். அப்படி ஊதவேண்டும் என்றால் மைதானத்தில் போய் ஊதட்டும்".

"ஆஹா, ரொம்பச் சரி"

"வாருங்கள், சாப்பிடுவீர்களாம்."

இரண்டே நிமிடத்தில் சிற்றுண்டி வந்துவிட்டது. அதை உண்ண உட்கார்ந்தவாறே பலிதத் "ஓ! வேலைத் தொல்லையில் மூளை கூட சரியா வேலை செய்வதில்லை." சாப்பிட்டுக் கொண்டே அவன் ஒரு சிறு லெக்சர் அடித்தான். "எல்லா தொழிலாளிகள் நிலையும் இது தான் தெரியுமா, சரோஜ்? களைத்துப்போய் வீட்டிற்கு வருவார்கள், கோபத்தை எல்லாம் அங்கு காட்டுவார்கள். மாலை வேளையில் அனாவசிய சண்டை, அமைதியின்மை. என்ன செய்வது? வேலை என்றால் அப்படித்தான் இருக்கும். குணமே கசந்து போகிறது. ."

தலையைத் தொங்க விட்டபடி அமர்ந்திருந்தாள் சரோஜினி. எழும்பிய புயலைத் தணிக்கும் முயற்சியில் அவள் முகம் மேகத்தைப் போல் இருண்டு கனத்து விட்டது.

பேசிக் கொண்டே முக்கால் வாசி சிற்றுண்டியை முடித்துவிட்டான். பலிதத். பசி தணிந்து விட்டது. உடல் அமைதி அடைந்தது. திடீரென்று அவனுக்கு நினைவு வந்தது. எவ்வளவு முக்கியமான விஷயத்தை மறந்து விட்டான். அவன்! முகமலர்ச்சியுடன் அவன் 'தெரியுமா சரோஜ் – இன்று ஆபீசில் என்ன நடந்ததென்று ? எனக்கு மட்டும் ப்ரமோஷன் கிடைத்தது" என்றான்.

சரோஜினியின் முகத்திலிருந்த மேகம் ஒரே நொடியில் மறைந்து இளம் வெய்யில் தோன்றியது. மகிழ்ச்சியில் தள்ளாடியவாறு, "நிஜமாகவா? இது வரை ஏன் சொல்ல வில்லை? இவ்வளவு மறதியா?" என்று கேட்டாள்.

பழைய கதை மறந்து போயிற்று. உலகத்தின் மாயை அவர்களை ஆட்கொண்டது. இரண்டு உள்ளங்கள் பரஸ்பரம் அணுகின. இரண்டும் ஒரே தாளத்தில் அடித்துக் கொள்ள ஆரம்பித்தன.

அந்தத் தாளத்தின் பெயர் உத்தியோகம் பார்ப்பவர்களின் பிரமோஷன். இரண்டு பட்சிகள் ஆணும் பெண்ணும் கூடியிருந்தன. பெண் பார்க்கக் கொஞ்சம் பெரிதாயிருந்தாலும் அது ஆணா முடியாது. வேலையில் பிரமோஷன்! சத்தையும் சருகுமாய்க் கொண்டு வந்து கூடு கட்டி விட்டது. ஆண் பறவை. பெண் பறவை இனிமேல் முட்டையிடும். அப்புறம் புதிய வீடு. ஆண் பெண் பறவைகளும் முட்டையுமாய். வேலை உயர்வு. சரோஜினி வெற்றிலை மடித்துக் கொடுத்தாள். பலிதத் அதை வாயில் பிடித்துக் கொண்டு வாயை சரோஜினியின் பக்கமாயக் காட்டினான். பீடாவின் பாதியை சிரிப்புடன் பல்லால் கடித்து எடுத்துக்கொண்டாள் சரோஜினி. "அப்புறம்?" என்று கேட்டாள்.

அவளுடைய முக பாவத்திலிருந்து அவள் பிரமோஷனைப் பற்றிக் கேட்கிறாள் என்று புரிந்து கொண்டு அப்புறம் என்ன? வயிறு நிறையும்படி சாப்பிட முடியும் ஏனென்றால் 75 ரூபாயிலிருந்து 150 ரூபாய் ஆகிவிட்டது சம்பளம். நாளையிலிருந்து ஒரு பியூன் எனக்குண்டு. வீடு கட்டாயம் மாற வேண்டும் – ஸி டைப் வீட்டில் இனிமேல் நாம் இருக்க முடியாது. அது எப்படியானாலும். இந்தப் பிரமோஷனால் என்ன லாபம் தெரியுமா? என் இயலாத்தன்மை அழிந்துவிட்டது. நான் பாபு இல்லை. பெரியவனோ சிறியவனோ நானும் ஒரு ஆபீசர்; தெரிகிறதா? நானும் ஒரு ஆபீசர். வேலையைச் சரியாய்ச் செய்தால் நானும் மஹாபாத்ர ஆகலாம். சாஹப் கூட ஆகலாம். கொஞ்ச நாள் கஷ்டப்பட்டு வேலை செய்தால் மட்டும் போதும் – நிலைமைக்குத் தகுந்தபடி நடந்துகொள்ள 'டாக்ட்' வேண்டும். 'டாக்ட்' என்றால் என்ன தெரியுமா சரோஜ்? உனக்கு எப்படித் தெரிய வைப்பது நமது மொழியில் அதற்கு சரியான வார்த்தையில்லையே. நமக்கு 'டாக்ட்' வரவும் வராது. அதனால் தான் அயல்நாடுகளில் 'டாக்ட்' டை உபயோகித்து மேலோரை 'ப்ளீஸ்' செய்து பரிசைத் தட்டிக் கொண்டு போய்விடுகிறார்கள். நம் மனிதர்கள் வாயைப் பார்த்துக் கொண்டு இருந்து விடுகிறார்கள். அப்படியே இருங்கள் ஐயா. யாருக்கென்ன? எங்கே என்ன பேச வேண்டும் – ஒன்றும் தெரியாது. தண்ணீரிலும் ஆடையபடியச் செய்வது. உயிருள்ள மனிதனுடைய தோலை அவன் அறியாமலேயே உரித்தெடுப்பது – இதெல்லாம்

தான் டாக்ட். பார்த்தாயா, எவ்வளவு வேகமாய் வந்துவிட்டது பிரமோஷன். ராஜபுத்திரர் 'டாக்டை' ப்பற்றி அறிந்திருந்தனர். அதனால்தான் முகலாய சாம்ராஜ்யத்தில் கூட அவர்கள் அதிகாரம் செலுத்தினார்கள். –இது சரித்திர உண்மை. மற்றும் பலரைப்பார்.."

தன் பேச்சிலேயே தன்னை இழந்து, கள் குடித்தவனின் மயக்கத்துடன், போதையுடன் மேலும் பேசிக் கொண்டே போனான். சரோஜினி வாய் திறவாமல் கேட்டுக் கொண்டிருந்தாள். பலிதத்தின் புதிய அவதாரத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். உண்மையாகவே அவன் மாறி விட்டிருந்தான். அவனுடைய கண்கள் அவளுடைய கண்களைக் கட்டிப் போட்டிருந்தன. "நான் சொன்னால் உனக்கு நம்பிக்கை வரவில்லை. இப்பொழுது தெரிகிறதா என் சாமர்த்தியம்.? இது ஆரம்பம் தான், இன்னும் எவ்வளவோ பார்க்கப் போகிறாய். ஆனால் அதற்கு உன் ஒத்துழைப்பு மிக்க அவசியம். பெண்கள் கொஞ்சங்கூட எங்கள் வேலையில் உதவி செய்வதில்லை. உனக்கு வீட்டு வேலை எல்லாம் நன்றாய் வரும் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால் அந்த வேலையை ஐந்து ரூபாய்க்கு ஒரு வேலையாள் கூடச் செய்ய முடியும். நீ தப்பாக நினைக்காதே, ஆனால் உன்னால் எனக்கு என்ன உபகாரம் சொல்?"

"மனைவி சஹதர்மினி என்று சாஸ்திரம் சொல்லுகிறது. தர்மம் என்றால் தொழில். ஆனால் உன் தொழில் வேறு, என் தொழில் வேறாயிருக்கிறது. பிறரைப் பார். கம்பெனி ஆபீஸர்களின் மனைவியர் பலர் முற்போக்குள்ளவர். கிளப்பில் சந்தர்ப்பத்தை ஒத்து மேலதிகாரிகளிடம் ஒன்றிரண்டு வார்த்தை சொல்லுவார்கள், அவ்வளவுதான்; கணவனுக்குப் பிரமோஷனுக்கு மேல் பிரமோஷன். ஒருத்திக்கு பாட்டு வரும் என்றால், மற்றொருத்தியால் நாட்டியம் ஆட முடியும். அல்லது விளையாட்டுகளில் உற்சாகம் உள்ளவளாயிருப்பாள். நன்றாய் சாதுர்யமாய்ப் பேசத் தெரிந்திருக்கலாம். எவ்வளவோ! யாருக்கும் தெரியாமல் காரியம் ஆகிவிடுகிறது. வருடத்தில் கணவனுக்கு நான்கு பிரமோஷன் என்றால் கசக்குமா என்ன? எங்கிருந்தோ எங்கேயோ ஏறிவிடுகிறார்கள் பலர். நேற்று வரை இரும்பை வார்த்துக் கொண்டோ அல்லது தறியில் நெய்து கொண்டோ இருந்தவன் இன்று பெரிய ஆபீஸர் ஆகி என்னை அதிகாரம் செய்து கொண்டு திரிகிறான்."

பலிதத்தின் தன்மை விரிவடைந்தது – சரோஜினியின் தன்மை குறுகலுற்றது. தன்னை மெச்சிக் கொள்ளும் ஆவேசத்தில்

மனைவியைக் கல்லாகச் சமைய வைத்து விட்டான். அவள் கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு "பிறர் சொல்வதும், பிறர் செய்வதும் கேட்டாயிற்று. கணவனும் மனைவியும் இருவருமே உத்தியோகம் செய்தால் அப்புறம் வீடு எங்கே, குடும்பம் எங்கே? யாருக்காக வேண்டும் இவைகள்? அவசியம் என்ன? நீங்கள் சொல்வது சரி. ஆனால் எல்லாராலும் எல்லா வேலையும் செய்ய முடியாதல்லவா? என் சுபாவம் அப்படி, எனக்கு அதெல்லாம் வராது. ஏசுவதனால் என்னால் செய்ய முடியப் போகிறதா?"

"சட் போதும் நீ புரிந்து கொண்ட அழகு. இதைத் தான் வான் டிங் இன் டாக்ட் என்பார்கள். உன்னால் முடியாது என்று யார் சொன்னார்கள்? எல்லோராலும் எல்லா வேலையும் செய்ய முடியும், மனம் இருந்தால்".

"எனக்கு ஒன்றும் வேண்டாம், என்னால் ஒன்றும் ஆகாது".

"ஆரம்பித்துத்தான் பாரேன். ஸி.ஏ.டி. காட், பி.ஏ.டி. பாட். இரண்டு நாள் உருப்போட்டுப் பாரேன். சரி நான் கொஞ்சம் உலவி விட்டு வருகிறேன். நாலைந்து பீடா மடித்துக் கொடு" சரோஜினி வெற்றிலை மடித்துக் கொடுத்தாள். பலிதத் புறப்பட்டான். வெற்றிலையை மென்றபடி நடந்தான். அவன் மனம் யந்திரத்தைப் போல் பேசாமல் வேலை செய்து கொண்டிருந்தது.

★ ★ ★

இருட்டில் அவனுக்காக ஒளியின் சுரங்கம் திறந்து கொடுத்தது. நேரான வழி, தூரத்தில் மினுமினுக்கும் வெளிச்சம், இந்தப் பாதைக்கு முடிவே கிடையாது. ஒரு பக்கம் இருட்டு, ஆனால் பலிதத் நேர்ப் பாதையில் அலுக்காமல் போய்க் கொண்டே இருந்தான். அதிருஷ்டமாவது மண்ணாவது! எல்லாம் நம் கையில் தானிருக்கிறது. முட்டாள் தான் அதிருஷ்டத்தை எதிர் பார்த்துக் கொண்டிருப்பான். ஆபீஸர்! இது முதல் படி மட்டுமே!

இதற்குப் பிறகு? எதிர்காலம் தெளிவாய்த் தெரிந்தது பலிதத்திற்கு. யாரைப் போல இருப்பானோ? மஹாபாத்ர, மஹாந்தி, சிங்க், த்ரிபாடி, தாஸ், தண்டஸேனா, மிச்ர, பங்கராஜ், ஜான்ஸன், மில். எவ்வளவோ பெயர்கள், கணக்கற்றவர்கள். ஆனாலும் அவர்கள் எண்ணிக்கை குறைவுதான். பத்தாயிரத்தில் ஒருவர். அவர்களுடைய வாழ்க்கை சுதந்திரமானது, வகுப்பும் சுதந்திரமானது.

விடாமல் வணங்கப்படும் கல்லும் தெய்வமாகி, பக்திக்குப் பாத்திரமாக முடியும் என்றால் ஓயாமல் ஸலாம் பெறும் மனிதனுள்ளும் திடமும் நம்பிக்கையும் வளர முடியும். முகத்தில் சாமர்த்தியக் களை, குரலில் திடம், நடையில் ஒரு மிடுக்கு. அவர்களை, அவர்களுடைய பெருமையை, பிறர் தூரேயிருந்து நகர்ந்து வழி விட்டு விடுவார்கள். அவர்களுடைய வாழ்க்கை அவர்களுடைய கையில். உலக நியதிப்படி அவர்கள் நடப்ப தில்லை. அதன் அளவுகோலிற்கு அப்பாற்பட்டவர்கள், அவர் கள்.

அந்த வர்க்கத்துள் புகுந்து விட்டான் பலிதத் தாஸ். இனிமேல் என்ன கவலை?

இன்று உச்சாணிக்கிளையில் தொத்திக் கொண்டு கீழே அவனுடைய நிகழ்ந்துபோன குமாஸ்தா வாழ்வைப் பார்த்துச் சிரிக்க முடியும். அந்த வாழ்க்கையிடம் அவனுக்கு அளவற்ற வெறுப்பு எழுந்தது. ஏனென்றால் அதுஅவனுடைய கடந்த கால வாழ்வு. அந்த வகுப்பினரிடம் அவனுக்கு இப்பொழுது கொஞ்சம் கூட அனுதாபம் இல்லை. அவர்களைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குவான், நன்றாக ஆட்டி வைப்பான். அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி எல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரியும்; ஆனால் அவனும் அந்த வகுப்பிலிருந்து எழுந்தவன் என்று ஒரு நாளும் எவரும் அறிய விட மாட்டான். கிழிந்த உறையைப் போல் அவனுடைய கடந்த காலத்தையும் தூக்கி எறியத்தான் வேண்டும்.

இப்பொழுது அவன் ஆபீஸர்: பலிதத்தின் அவதாரம், வேலையில் திறமையின் அவதாரம். முயற்சியில் குதிரை, டாக்டில் ஒப்பற்றவன், புத்தியில் யானை, வகுப்பில் மேன் மையானவன், வெட்கம், தாட்சண்யம், அன்பு ஒன்றும் இல்லாதவன், கடினமான பொறுப்பை நிறைவேற்ற நிஷ்டூரமான சக்தியை உடையவன், நேராகத் தன் வழியை வகுத்தவாறு முன் னேறுவான். நிந்தது நீதி நிபுணா.

பிறர் அவன் பின்னே நடப்பார்கள், அவன் முன் தலை வணங்குவார்கள், அவனை எதிர்பார்த்துக் காத்துக் கிடப்பார் கள். அவனைப் பார்க்க வேண்டி தங்கள் பெயர் எழுதிய சீட்டு அனுப்புவார்கள். வெளியில் புழுதியில் காத்துக் கிடப்பார்கள். அவன் ஒவ்வொரு நிமிட நேரம் தான் அனுமதிப்பான் தன்னுடன் பேச வந்தவர்களுக்கு. கடியாரத்தை அடிக்கடி பார்த்துக் கொண்டே 'மேலே என்ன?' என்று கேட்பான்.

அவன் மனம் பூரித்தது—அவன் தனி மனிதன், நண்பனோ துணையோ இல்லாதவன்.

சிகரெட் பிடிக்கத் தோன்றியது. வெற்றிலை பாக்குக் கடையில் நின்று "ஏ, ஒரு காப்ஸ்டன்" என்றான். கடைக்காரன் ஒரு பீடா மடித்தவாறு பேசிக்கொண்டிருந்தான். ஃபரித் மியா என்ற ஒரு புதிய விளையாட்டு வீரனைப் பற்றி ரசமாய்ப் பேச்சு நடந்து கொண்டிருந்தது.கொஞ்சம் நாழியாகிவிட்டது. "ஏ, ஒரு காப்ஸ்டன்–". நான்கு முறை கூவின பிறகுதான் கடைக்காரன் அவனைக் கவனித்தான். "தருகிறேன்" என்று சொல்லிவிட்டு பிறரிடம் "உங்களுக்கு இனிப்பு பீடாவா, புகையிலை கூடியதா? என்ன புகையிலை வேண்டும்?" என்றெல்லாம் கேட்டுக் கொண்டு ஃபரித் மியாவைப் பற்றிய பேச்சைத் தொடர்ந்தான். க்ஷவரம் செய்யாத முகமும், அழுக்கு உடையும், எளிய தோற்றமும் கொண்ட ஒருவன் கயிறில் தொங்கிய நெருப்பில் பீடியைப் பற்ற வைத்தவாறு பேச்சில் கலந்து கொண்டான். "ஃபரித் மியாவை விட அவன் சித்தப்பன் மைத் மியா இன்னமும் நன்றாய் விளையாடுவான். முழங்காலில் காயம்பட்டு அவனுடைய திறமை வீணாய்ப்போயிற்று. இல்லை என்றால்–". பலிதத்தின் வேண்டுகோள் யார் காதிலும் விழவில்லை. ஃபரித் மியாவின் திறமையை கடைக்காரன் உற்சாகத்துடன் ஆதரித்துப் பேசினான். விளையாட்டு மைதானத்தில் நடக்கும் வாக்குவாதத்தைப் போல் ஒன்று அங்கு மூண்டுவிட்டது.

"என்ன, சிகரெட் கிடையாதா?" என்று பலிதத் அலுத்துப் போய்க் கேட்டான். இங்கு அவனுடைய பெருமையைக் கவனிப்பார் யாருமில்லை–இங்கு ஃபரித் மியாதான் முக்கியம். கடைசியில் கடைக்காரன் பலிதத் ரொம்ப நேரமாய் நின்று கொண்டிருப்பதை உணர்ந்து சிகரெட் ஒன்று கொடுத்தவாறு "நீங்களே சொல்லுங் கள் ஐயா. யாருடைய விளையாட்டு உங்களுக்கு விசேஷமாகப் பட்டது?" என்றான்.

"நான் போகவில்லை"

"ஓ!" ரசிகத் தன்மை அற்ற மனிதன் போலும். சாதாரண ஆள்தான்.' கடைக்காரன் பிறரைக் கவனிக்கத் திரும்பினான். பலிதத் அவனை தடுத்து, "தீப்பெட்டி கொடு, சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொள்ளுகிறேன்" என்றான்.

"அங்கே பார் கயிற்றில் நெருப்பு இருக்கிறது".

"நெருப்புப்பெட்டி இல்லை?"

"வேண்டியதிருக்கிறது, ஆனால் விலைக்கு. இந்தா"

"இருக்கட்டும் போ"

சிகரெட் வாங்குவதில் அவனுடைய தன்மானத்தின் ஒரு பகுதியை விற்று விட்டான். இன்னும் கொஞ்சம் பாக்கி இருந்தது.

சரி போகட்டும். கயிற்றின் நுனியில் நெருப்பு இருந்தது; ஆனால் அவனால் சிகரெட்டை இலேசில் பற்ற வைக்க முடியவில்லை. அந்தக் கயிறு ஊசலாடிக் கொண்டு இருந்தது. அதற்கேற்ப சிகரெட் எட்டவில்லை. கடைசியில் அதை இழுத்துப் பற்ற வைத் தான்—"பற்றிக் கொண்டு விட்டது" என்று எல்லோருமாகக் கத்தினார்கள். சமத்துவத்தின் கோயில் என்று சொல்லக் கூடிய அந்தப் பெட்டிக் கடையில் பலிதத்தின் பெருமை எடுபடவில்லை.

மனம் திரும்பவும் கலவரப்பட்டது. தன்னை யாரும் புரிந்து கொள்வதில்லை, தன் மனைவியும் சரியாய் மதிக்கவில்லை, பிறரும் மதிக்கவில்லை என்ற வேதனை அவனை வாட்டியது. இத்தேசத்தில் வீரர்களை மதிப்பதில்லை. யோகி ஸந்நியாசி களுக்குத்தான் பெருமை இங்கு. துரதிர்ஷ்டம் பிடித்த நாடு! பிறர் புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் யார் காத்துக் கிடக்கிறார்கள் இங்கு! முன்னேறியே ஆக வேண்டும். அவன் ஸ்டீம் ரோலர். ஆபீஸர். ஜனங்களுக்கு நாளா வட்டத்தில் அவன் அருமை பெருமைகள் தெரிய வரும். ஓடி வருவார்கள் காக்காய் பிடிக்க. "ஹும். அப்பொழுது ஒரு கை பார்க்கிறேன்."

உற்சாகம் மேலிட, புதிதாய் உருவாயிருந்த அந்த ஆபீஸர் நடக் கலானான். உற்சாகத்தின் உயிர் வடிவமோ என்று ஐயுறும்படி அவன் நெஞ்சு நிமிர்ந்து நடந்தான். கடந்த காலத்தில் எத்தனை ராஜாக்களும், அதிகாரிகளும், சக்கரவர்த்திகளும், மந்திரிகளும் வாழ்ந்து மடிந்திருப்பார்கள்!அவர்களும் ஒரு காலத்தில் உற்சாக மூர்த்திகளாய் நடந்து போயிருப்பார்கள். மண்ணில் தங்கள் முத்திரையை அழுத்தியவாறு, முறுக்கிய முஷ்டிகளுடனும், வலிய கால்களுடனும், நடந்து போயிருப்பார்கள். சமயத்தின் போக்கில் அவன் ஒரு யந்திரம்; அதில் துருப்பிடித்தால் மண்ணோடு மண்ணாகி விடுவான். ஆனால் பலிதத் உயர்வுக் காகத் தேடி அலைந்தான். அவன் மேலே ஆகாயத்தையும் பார்க்கவில்லை, கீழேயும் பார்க்கவில்லை. தான் ஒரு ஸ்டீம் ரோலர் என்ற நினைப்புடன் வேகமாய்ப் போய்க் கொண்டிருந் தான்.

யாரோ ஊதி விட்ட சோப் குமிழைப் போல் அவனுடைய குறுகிய "நான்" தன்னை நிலைநாட்டிக் கொள்ளும் ஆவலில் மேலேறிக் கொண்டே போயிற்று. உப்பியிருந்தது, அந்த அகம்பாவம். ஆனால் வெடித்துப் போகவில்லை.

போய்க்கொண்டிருந்தான்.

தன் பலம் கூடிவிட்டது என்று நம்பிக்கை வரும்பொழுது மனிதன் அதைப் பலவிதமாய் பரீட்சை செய்ய முற்படுகிறான்.

பலமற்றவர்கள் மேலும், தன்னை எதிர்க்கத் திறனற்றவர்கள் பாலும் அதைச் செலுத்திப் பார்ப்பான். சிறுபிள்ளை சிறிய பூச்சிகளை நசுக்கி மகிழ்வான். பென்ஸிலையும் துணியையும் கடித்து தன் பற்களின் பலத்தைச் சோதிப்பான். பெரிய காளை பெரிய மரத்தின் மேல் தன் கொம்புகளை மோதிக் கொளளும். பாதி இடிந்த சுவரில் தன் முதுகை தேய்த்துக் கொள்ளும். ஃபாஸிஸ்ட் நாடு தன் அயலில் வாழும் சிறு நாடுகளைத் தாக்கும்.

இந்தப் பரீட்சிக்கும் ஆவல் பலிதத்தை இழுத்துக் கொண்டு போய் அவனுடைய நண்பன் பனுவின் வீட்டெதிரில் நிறுத்தியது. ஏனென்றால் பனு வாழ்க்கைப் போரில் பின தங்கி விட்டான் என்று அவனுக்குத் தெரியும். பனு தோற்றுப் போனான். பலிதத் வெற்றி பெற்றுவிட்டான். இன்று தான் ஆபீசர் ஆகிவிட்ட பெருமையை அவன் முன் அளக்க வேண்டும். உள் நுழைந்து ஈஸிசேரை இழுத்து அதில் உட்கார்ந்து கொள்ளவேண்டும். பிறகு சிறு முறுவலுடன் "என்ன பனு, நன்றாயிருக்கிறாயா? எல்லாம் சரியாய் நடக்கிறதா?" என்று விசாரிப்பான். முடியுமானால் பனுவிற்கு உபதேசம் செய்வான். பலிதத்திற்கு உபதேசம் செய்ய ரொம்பப் பிடிக்கும்–யாராவது கேட்டுக் கொள்ளச் சம்மதித் தால். எவ்விதமாகவும் தன்னை வருத்திக் கொள்ளாமல் பலிதத் செய்யும் சமூக சேவை அதுதான். அவன் தாராளமாய் புத்திமதி அளிக்கத் தயார்.

பனுவிடம் என்ன சொல்வது? "இந்த விதமான போக்கை மாற்றிக் கொள் பனு. மழை எங்கேயோ அங்கே தானே குடை பிடிக்க வேண்டும். இல்லாவிடில் காரியம் நடக்குமா?" என்பான். அனுதாபத்துடன் பேசும் பொழுது 'தம்பி' என்ற சொல்லைக் கூட்டிக் கொள்வது அவசியம். அந்த ஒரு சொல் போதும், கசப்பையும் கடுமையையும் மாற்ற. கிளிஸரின் எனிமாவைப் போல் அந்தச் சொல்லிற்கு எல்லாவற்றையும் எளிதாகவும், மென்மை உடையதாகவும் மாற்றும் சக்தி உண்டு. "தம்பி, நீ கோபத்தை விட்டு விடு. உன்னிடம் புத்தியும் படிப்பும் உள்ளன. ஆனால் அவைகளைச் சரியாக உபயோகப்படுத்தத்தான் தெரிய வில்லை. கொஞ்சம் பொறுமையுடன் முயற்சி செய்து பார் ஒன்றிரண்டு மாதங்கள். அப்புறம் என்னைக் கேள்", என்பான்.

புத்தகங்கள் மூலம் உலகத்தை அளப்பவன் பனு. ஆனால் என்ன பிரயோசனம் அவ்வித படிப்பால்? வெற்றி பெறும் வழி களைப் பற்றி கணக்கற்ற புத்தகங்கள் இருந்தன. அவைகளைப் படித்தாலாவது பலன் பெறலாம்.

"புத்தகம் வாசிக்க உனக்கு அவா இருந்தால், தம்பி, சரியான புத்தகங்கள் படி. 'ஹௌடு வின் ஃப்ரண்ட்ஸ்' என்னும் நூல் மேலதிகாரிகளை வசீகரிக்கும் வழியைக் காண்பிக்கிறது. இல்லை என்றால் பேடன் ஒகிமுராவின் 'ஸக்ஸெஸ்' வாசி. உலகத்தில் ஒவ்வொருவனும் 'நான்' என்னும் அகம்பாவத்தில் தான் நினைப்பதே சரி என்று நம்புகிறான். அதை மறுத்து தர்க்கித்தால் ஏதோ அவமானம் நேர்ந்து விட்டாற் போல் நடந்து கொள்ளுகிறான். தன் கூற்றை இன்னும் பிடிவாதமாய்ப் பிடித் துக் கொள்ளுகிறான். அச்சமயம் என்ன செய்வது? ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. முதலிலேயே அவர்கள் சொல்லுவதை ஒப்புக் கொண்டு விட வேண்டியது தான். "ஆமாம் ஐயா நீங்கள் சொல்லுவது தான் சரி. இதை விட உசிதமாய் வேறு யாரால் சொல்ல முடியும். ஆனால் அதை இப்படிச் சொன்னால் எப்படி யிருக்கும்? அப்புறம் உங்கள் இஷ்டம்". என்று பணிந்து விட வேண்டும்.

"எச்சந்தர்ப்பத்திலும் 'நீங்கள்.. நீங்கள் செய்கிறீர்கள்.. நீங்கள் நினைக்கிறீர்கள்' என்றே சொல்ல வேண்டும்– 'நான்' தலை காட்டக் கூடாது. அப்பொழுது 'அவர்' என் யோசனையை அவருடைய யோசனையாக எண்ணி அதை நிறைவேற்றி வைப்பார். 'என்' அபிப்ராயத்தை 'அவர்' ஏற்று நடத்தி வைப்பார். 'அவருடையதன் யோசனை பிழைப்பதற்கு என் விரோதியே பொறுப்பாளி என்றும் அவரை நம்ப வைக்க முடியும். என் யோசனை நிலைக்கும். என் விரோதியின் பலமும் குன்றும்! எப்படி இந்த சாகஸம் பார்த்தாயா? அரே பனு! மேலே ஏறுகிறவர்கள் எல்லோரும் இந்த நீதியைத்தான் பின் பற்றுகிறார்கள். நீ ஏன் ஒப்புக்கொள்ள மறுக்கிறாய்?"

பனுவின் கம்பீரமான முகமும், பாதி எரிந்த பீடியும் பலிதத்தின் மனக் கண்ணின் முன் தோன்றின. ஐயோ பாவம் பனு.

இன்று பலிதத் அனுதாபத்தை வாரிச் சொரிவான். ஏனென்றால் அவனுக்குப் பிரமோஷன் ஆகியிருந்தது. தன் நண் பனின் பணமுடைக்காகவும் கஷ்டகாலத்திற்காகவும் இரண்டு துளி கண்ணீர் கூடச் சிந்த முடியும் அவனால். பிறகு இரட்டிப்பு உற்சாகத்துடன் ஜப்பானிய பிரபு ஒகிமுராவும் அமெரிக்காவைச் சேர்ந்த கார்னகியும் பேச்சில் புகுந்து விடுவார்கள். பலிதத் பேசிக் கொண்டே இருப்பான். பனுவின் தேநீரின் சூடும் பீடியின் உஷ்ணமும் அவனை ஊக்கிவிடும். பேத்திக் கொண்டே இருப்பான்.

மாலை இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிறது.

இதோ நெருங்கிவிட்டது பனுவின் வீடு. பழக்கமான இடம், பழக்கமான வாசனைகள் – பழைய நினைவுகளுக்குப் புத்துயிரைத் தரும் வாசனைகள்; வாசலில் நன்றாய் வளர்ந்த பிச்சிக் கொடி, சிறிய அறையிலிருந்து வீசும் வெளிச்சம் வழியிலிருந்த இருட்டை விரட்டியது. எதிர்ப்பக்கத்தில் பிரும்மாண்டமான கட்டிடம், பாதையில் கார்களில் நெருக்கம்.

பனுவின் வீட்டில் நுழைந்தவுடனேயே கருப்பு நாய் குரைத்துக் கொண்டு அவனைத் தூக்கத் தயாராயிற்று. 'அடடே–டாமி டாமி சு–சு" பதிலுக்கு நாய் இன்னமும் பயங்கரமாய்க் குரைத்தது. சாதாரணமாய் அந்த நாய் அவனைக் கண்டால் வாலை ஆட்டிக் கொண்டு அவனைப் பின் தொடரும். இன்று என்ன அதிசயமோ! வாசனையால் மனிதனைத் தெரிந்து கொள்வது நாய்கள் குணம். இன்று பலிதத்தின் மணம் அதற்கு வித்தியாசமாகப் பட்டது போலும். விசித்திரம் தான்.

பலிதத் நாயை அடிக்க ஒரு கல்லை எடுத்தான். நாய் கொஞ்சம் பின் வாங்கியவாறு அலற ஆரம்பித்து விட்டது. அந்த அலறலைக் கேட்டு அதனுடைய பல தோழர்களும் எங்கிருந்தோ ஓடி வந்து அதற்கு உதவத் தயாராயின. அவன் கம்பெனியின் ஆபீசர் ஆகிவிட்டான். ஆனால் இந்த இருட்டில் இப்படி நாய்கள் தாக்கத் தயாராயிருக்கும் பொழுது பயம்தான் மேலோங்கியது. கருப்பு நாய் பிற நாய்களை ஊக்கிக் கொண்டிருந்தது. எல்லாம் சண்டைக்குத் தயார். அந்த ஒற்றுமையைக் கண்டு பலிதத் நடுங்கிப்போனான்.

அங்கிருந்தே கத்தினான் பலிதத்: "பனு, பனு"– "அரே அரே–ஷட் அப் டாமி! உள்ளே வா தம்பி, அது ஒன்றும் செய்யாது" பனு அழைத்தான். டாமி தலையைத் தொங்கவிட்டபடி உள்ளே போய்விட்டது. பிற நாய்களும் விஷயத்தைப் புரிந்து கொண்டு கலைந்தன. அப்பாடா என்று மூச்சு விட்டான் பலிதத். ஆனால் ஆயாசத்துடன் பனுவின் கை மேல் சாய்ந்தான். அவனைப் பலமாய்ப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து உள்ளே விட்டான் பனு, அசட்டு பனு. "இப்படி ஏன் நடுங்குகிறாய்? பயந்து விட்டாயா? பார் நீ என்றும் காணும் ஸண்டுதாவும் அசோக்கும், நந்தும் தான் இங்கிருக்கிறார்கள்"–அவனை நாற்காலியில் அமர்த்தி விட்டு– "உட்கார். கொஞ்சம் டீ குடி, சிரம பரிகாரம் செய்து கொள். நாய்கள் இவனைப் பாவம் கஷ்டப்படுத்திவிட்டன" என்றான், மற்றவர்களிடம் "நமஸ்கார்" என்று பலிதத் வணக்கம் செலுத்தினான். "நமஸ்கார்! உனக்கென்ன வந்துவிட்டது,

பலிதத்? முகம் ஏன் இப்படிச் சிறுத்துப் போய் விட்டது? பனு, என்ன விஷயம்?" என்று ஸண்டுதா விசாரித்தார். "அவனுக்குப் பிரமோஷன் ஆயிருக்கிறது இல்லையா"? என்று நந்த் கேட்டான். எல்லோரும் சிரித்து விட்டனர்.

"நல்ல லாஜிக் தான் போ. பிரமோஷன் ஆனால் முகம் வாடுவானேன்" என அனந்த் வினவினான்.

"ஏனென்றால் நாய்கள் அவனை தொந்திரவு செய்கின்றன".

ஒரே சிரிப்பு, ஒரே கும்மாளம். பலிதத் கூட முறுவலித்தான். நந்த் எழுந்து நின்றபடி "மூன்று நான்கு முறை பிரமோஷனுக்குப் பிறகு எனக்கு நல்ல அனுபவமுண்டு, பலிதத் தாஸ். நாய்கள் என்னையும் விரட்டி அடித்தன. அதனால் உலகத்தைத் துறந்து விடப் போகிறேன். போய் வருகிறேன். பனு" என்றான்.

"இவ்வளவு சீக்கிரமா"?

"என்றைக்காவது ஒரு நாள் போய்த்தானே ஆக வேண்டும்? அதற்கு முன்னால் தானாகவே வழியை வகுத்துக் கொண்டு போவது உத்தமம். சரி, வருகிறேன்". நந்த் புறப்பட்டு விட்டான். "இவ்வளவு சீக்கிரம் எங்கே போகிறீர்கள், நந்த் பாபு"? பலிதத் அறிய விரும்பினான்.

"நானும் ஒரு பிரமோஷனுக்காக அலைகிறேன், பலிதத் பாபு. சாயங்காலம் போகாமல் முடியாது. என்ன நினைப்பார் அவர்?" நந்த் நகைத்தவாறு பதிலிறுத்தான்.

"அது நிஜம் தான், சந்தேகமேயில்லை" – தலையை ஆட்டிக் கொண்டே ஆமோதித்தான் பலிதத்.

"நில்", என்றான் பனு. ஸண்டுதா தியானத்திலிருந்தார், அனந்த்தும் அசோக்கும் பேப்பர் படித்துக் கொண்டிருந்தனர்.

"நீ என்னை நில் என்பாய், உனக்கு என்ன தெரியும்? பலிதத் பாபுவைப் பார். எவ்வளவு சீக்கிரம் புரிந்து கொண்டு விட்டான். அனுபவசாலி அவன். அடே முட்டாள். சாயங்காலம் போயாக வேண்டும், தெரிந்ததா? உன்னைப் போல் வீட்டிலேயே அடங்கிக் கிடந்தால் காரியம் நடக்காது".

"அப்படியானால் சரி. பனு, அவரைப் போகவிடு, உங் களுக்கு எங்கே பிரமோஷன் ஆகப் போகிறது, நந்த் பாபு?" "எங்கேயா? சொல்லட்டுமா? ஆனால் பிரமோஷன் ஆவதற்கு முன்னாலேயே ரகசியத்தைச் சொல்வது சரியா? 'மனஸா சிந்திதம் கர்ம வசஸா பிரகாசயேத். அன்யலக்ஷித கார்யஸ்ய யத்; ஸித்திர்நாயாயதே' அப்படித்தானே பலிதத் பாபு? பிரமோ ஷன் ஆகப்போகிறது. அது நிச்சயம் தான். இன்னும் ஒரு மணி நேரத்திற்குள் அந்த சமாசாரம் எல்லா பேப்பரிலும் வந்துவிடும்.

நான் சொல்லவா? ரகசியத்தைக் காப்பாற்றுவீர்களா நீங்கள்? என்ன பனு, சொல்லவா?" நந்த் சிரித்தவாறு கேட்டான்.

"சொல்லிவிடு" பனு உத்தரவு கொடுத்தான்.

"சொல்லுங்கள், சொல்லுங்கள்" என்று பலிதத் பிடிவாதம் பிடித்தான்.

"சொல்ல வேண்டாம்" என்றான் அனந்த்.

"பித்தன் அவன். என்ன சொல்லப் போகிறாய் நீ, பைத்தியமே?" என்றார் ஸண்டுதா.

நந்த் உட்கார்ந்து விட்டான். "சொல்லிவிட்டே போகிறேன். ஏனென்றால் அனந்த் வேண்டாம் என்கிறான். கேட்டுக் கொள் பலிதத் பாபு; நான் முயற்சி செய்யும் பிரமோஷனில் உனக்கு காம்படிஷன் கிடையாது. ஸண்டுதா எவ்வளவோ முந்திக் கொண்டுவிட்டார். தாயின் செல்லக் குழந்தை அவர். அனந்த் என்னுடன் வருபவன். ஆனால் அவன் முதலில் சேர்ந்துவிடுவான். அவன் அதற்காகச் செய்யும் முயற்சியால் உயர்ந்து மரமாய்க் கொண்டு வருகிறான். என் பிரமோஷன் எங்கே என்று சொல்லட்டுமா?" பிறகு ஆனந்தப் பூரிப்புடன் பாட ஆரம்பித்தான்.

சூனிய மந்திரே விஹார் ரூபரேக நாஹி ஜார்
த்ரூட பாத நமிஷயி ஏக பாத தர்தர்.
அலேக பாரணபூர் ஸேடாடரே தாங்ககர்
நாஹி ஷாத் ஷும் சாதுஜனே ஹேதுகர்
நிரமிஷ் நி அயிண்டா பியுதிலேலாகே மிடா
அதேகா அநாமே ஸ்வாத ஏமந்த ஸாதுர்.
தேகிதா சடக சாலி ஞானி மரூசந்தி பாவி
சக்ஷு சடகரும் வேகே பிஜுலிரு அதிகர்
ஜேஉ டாரே பிரும்ம அசி உதே அஸ்த நாஹிம் கிசி
கஹே பீமம் அரக்ஷித நிமேஹி அந்தகார

(அந்த ஒப்பற்ற சுவாமி, ரூபரேகா அற்றவர், சூனிய கோவிலில் வசிக்கிறார். ஒப்பற்ற பாடனாபுத்திரத்தில் அவருடைய வீடு, அங்கு குளிர், வெப்பம் எதுவும் நுழைவது கிடையாது. அங்கு இரண்டு பாதங்களில் கூட்டுறவு கிடையாது. ஆனால் ஒரு பாதமே எல்லோரையும் ஏற்றுக்கொள்ளும் சக்தி உடையது. அவருக்கு பெயரும் கிடையாது. யாரும் அவரைப் பார்த்ததும் இல்லை. உடலற்றவர். ஆனால் அவர் பெயரைச் சொல்லும் க்ஷணமும் இனிமையாயிருக்கும். இந்த இனிமைக்கு முடிவே கிடையாது. அவருடைய நடையின் அழகைக் கண்டு ஞானிகள் சதா பூரித்துப் போகிறார்கள். கண் சிமிட்டலை விட விரைவானவர். காற்றை விட வேகமுடையவர் அவர். அந்த

பிரும்மபுருஷர் வசிக்கும் இடத்தில் உதயமும் இல்லை அஸ்தமும் இல்லை. பீமா போயி சொல்கிறார். அங்கு இருட்டே இல்லையாம். என்றும் புதுமையான நிர்மலம் வியாபித்திருக்கிறதாம்).

"அங்கே தான் எனக்குப் பிரமோஷன் பலிதத் பாபு. அந்த ஒப்பற்ற பாடனாபுரத்தில்." கண்கள் நீர் நிறைந்து பளபளக்க, தொண்டை அடைக்க கண்ணீரினூடே சிரித்தவாறு, 'எங்கே ஆகிறது உடனே! எவ்வளவோ பாக்கியிருக்கிறதே"? என்று நந்த் சொன்னான். சோகமான குரலில் பாட ஆரம்பித்தான்.

"சந்தா சரண் ஹை. மதே தாரிப் கி,

மதே கந்தாயி கந்தாயி மாரிப கி?"

பாடிக் கொண்டே போய்விட்டான். வெளியிலிருந்து "என்னை யாரும் கடனாளி ஆக்க வேண்டாம். நான் இப்பவே சொல்லி விட்டேன். நமஸ்கார், நமஸ்கார்". என்று கூவினான். வருத்தத்துடன் பனு, "சுடுகாட்டை அடுத்திருக்கும் மடத்திற்கு நேரே போகிறான்" என்றான். ஸண்டுதா பெருமூச்சுடன் "எல்லாம் கோவிந்தனின் லீலை' என்றார்.

பலிதத் வியப்புடன் பார்த்தவாறு இருந்தான். இதெல்லாம் என்ன? நாடகம் போலல்லவோ இருக்கிறது? சாதாரண வாழ்வில் கூட இப்படி எல்லாம் நடக்குமா? நிஜமாகவே இப்படி நாடக ரீதியில் ஒரு மனிதன் நடந்து கொள்ளுவானா? தான் அறிந் திருந்த நந்திற்கும் இந்த நந்திற்கும் எவ்வளவு வித்தியாசம். டீக்காக உடை அணிந்து ஸ்மார்ட்டாய் இருப்பவன் அந்த நந்த். தடியன் துக்குவிற்கும் அவனுக்கும் தான் போட்டி இவ்விஷயத் தில். துக்கு இன்று இல்லை. ஆனாலும் அவன் உருவம் மறக்க வில்லை. உப்பின கன்னங்களுள் புதைந்து போன சிறிய மூக்கு. கண்களுக்குக் கண்ணாடி, கரகரத்த குரல். அவனுடைய சூடிதார் குர்தாவும், பட்டுக் கைக்குட்டையும், மணக்கும் அவன் உடலும் கண் முன் நின்றன. எம்.ஏ.பி.எல்., துக்கு ஏழு சகோதரி கள் நடுவில் ஒரு சகோதரன்–செல்வாக்கும், தாராள மனமும் கொண்ட துக்கு அற்பாயுசில் போய்விட்டான்.

நந்துடன் அவனை ஒப்பிட்டுப் பார்த்ததால் துக்குவின் நினைவு வந்துவிட்டது.

இதே நாற்காலியில் என்றோ ஒரு நாள் துக்குவும் உட்காந்தி ருந்தான். இதே அறையில் கொம்மாளம் அடித்திருக்கிறான். இவ் வுலகில் இப்பொழுது துக்கு இல்லை.

அந்தக் காலத்து நந்த், துக்குவிற்குப் போட்டி – சொல்லப் போனால் நந்துவே ஒரு படிமேல். துக்குவிற்கு அழகின் மேல் மோகம். அழகிய பூ, வாசனை, மயக்கும் இரவு, அழகிய பெண்

கள் எல்லாமே அவனை வசீகரித்தன. ஆனால் அவைகளைக் கண்டு இன்புறுவதை மட்டுமே அவன் விரும்பினான். பூவை மென்மையாய் எடுத்துத் தூர வைத்தே முகர்ந்து பார்ப்பான். அதை நசுக்கிப் பிடித்து வைத்துக் கொள்ள அவனுடைய கட்டை விரல் கூட வளையாது. இவ்வளவு பருமனான உடலில் சந்தோசம் அதிகம். அழகைக் கண்டு மகிழ்வதற்காக மட்டுமே தில்லியிலிருந்து பம்பாய், அங்கிருந்து கல்கத்தா, பிறகு பூரியின் சமுத்திரக் கரை, அங்கிருந்து கராச்சி என்று ஓடிக் கொண்டே இருப்பான். அழகிய பெண்களுடையவும், காட்சிகளுடையவும் ஃபோட்டோ நிறையக் கொண்டு வருவான். எவ்வளவோ கதைகள் வேறே. ரம்மியான இரவுகளில், தூரே இருந்து பார்த்துக் கிட்டிய அனுபவங்கள். இந்த அறையில் அவன் தாராளமாகவும் உற்சாகத்துடனும் நிறையப் பேசுவான். – "புரிந்ததா பனு" துக்கு–படபடக்கும் வெண்மையான வேஷ்டி, சுருட்டை மயிர், சிறிய கூர்மையான மூக்கு, குழந்தையைப் போன்ற சரளமான சிரிப்பு, உலகத்திற்கெல்லாம் நண்பன். தன்னலப்போர் அவனுடைய வாழ்க்கையைத் தீண்ட முடியவில்லை. அவனுக்கு யாருமே–விரோதி இல்லை. முப்பதே வயசு. அவனும் போய்ச் சேர்ந்தான். அதே பாடனாபுரத்திற்கு.

"அலேக் பாடனாபுர, ஸே டாவரே தாங்க கர்,
நாஹி சரத் உ ஷ்ம, ஸாதுஜனே ஹேறது கர்".

(ஒப்பற்ற பாடனாபுரத்தில் அவர் வீடு. ஹே பக்தர்களே அங்கு குளிரும் இல்லை, வெப்பமும் இல்லை).

பீம் போயியின் பக்திப் பாடல் நினைவுகள் எழுந்தன. ஒரு விதத்தில் நந்த் துக்குவிற்குப் போட்டி என்றே சொல்ல வேண்டும். அவனுக்கும் அழகிய பூ, பெண், நிலவு எல்லாம் பிடிக்கும் – ஆனால் காணமட்டும் அல்ல –மென்று தின்று சீரணிக்க. நைவேந்தியத்தை உண்ணவும், அம்பிகையின் சரணாமிருதத்தைக் குடிக்கவும் முடியும் நந்தால். பலா பலன்களைப் பற்றி அவன் யோசித்ததே கிடையாது. அவனுடைய அனுபவங்கள் எண்ணில் அடங்கா. ஓரிடத்தில் அவன் எவருக்கோ சகோதரன் என்று உறவு கொண்டாடுவான்; மற்றொரு இடத்தில் டியூஷன் மாஸ்டர் ஆவான். யாருடையவோ உடல் நோய் விலக அவன் கோயில் பிரகாரத்தை வலம் வந்திருக்கிறான். கிறிஸ்துவ கோயிலில், மண்டியிட்டு பிரார்த்தனை செய்ததுண்டு. மசூதியின் பின் புறத்திலுள்ள சந்திலும் புகுந்திருக்கிறான் அவன், அதற்காக வென்றே கஷ்டப்பட்டு வங்க பாஷையைக் கற்றுக் கொண்டான். பூரியின் சமுத்திரக் கரையிலுள்ள ஹோட்டலில் தங்கிய

துண்டு. தன் பெயரை மாற்றிச் சொல்லவும் செய்திருக்கிறான். அவன் என்னதான் செய்யவில்லை? ஏனென்றால் அவன் பச்சை மாமிசத்தின் ருசியை அறிய விரும்பினான். இந்த முயற்சியில் எவ்வளவோ முறை அவன் அடி வாங்கியிருக்கிறான். – எவ்வளவோ முறை; – பெயர் பொறிக்கப்பட்ட கைக்குட்டைகள் அவனைத் தேடி வந்துள்ளன. நாளைக்கு என்று எதையும் எதிர்பார்க்க மாட்டான். எப்பொழுதும் முயற்சியை விடுவதில்லை அவன். எப்பவும் தயார். எப்பவும் டிப்டாப். சிரித்த முகம், மனதைக் கவரும், கதைகளை ஓயாமல் விளம்பும், வாய். "அன்று என்ன நடந்தது தெரியுமா? ரயிலில் ஒரே கூட்டம். புவனேஸ்வர் ஸ்டேஷனில் ஒரு ரயிலேற விரும்பினாள். கையில் வானிடி பாக், உதட்டில் வர்ணம். திடீரென்று என்னைப் பார்த்து 'ஐயா... கொஞ்சம்' – என்றாள். அப்புறம் என்ன ...."!!

இது தான் நந்த்.

'அவனுடைய மனம் மட்டுமா மாறிவிட்டது, முகம் கூடத் தான்' என்று பலிதத் திடுக்கிட்டு யோசித்தான். தலை வாரப் படவில்லை. தாடி வளர ஆரம்பித்திருந்தது. நெற்றியில் குங்குப் பொட்டு, சிவப்பேறிய கண்கள். அகாரணமாய் ஏதோ நினைத்து முறுவலித்தவாறு இருந்தான். பேச்சில் பக்திப் பித்து.

இக்காலத்து நந்த் படிப்பில் எம்.ஏ., வேலையில் மேலதிகாரி. எப்பொழுதும் தன் சௌக்கியத்திற்காக யோசிப்பவன், லௌகீக புத்தி உடையவன், நாஸ்திகன்.

இந்த நந்த் துறவறத்தை நாடக் கூடும் என்று யாரும் கற்பனை கூடச் செய்திருக்க முடியாது. வாழ்க்கை அவனுக்குத் துச்சமாகி விட்டது. ஜீவனோபாயத்தைப் பற்றி அவன் மறந்துவிட்டான் போலும்.

"என்ன யோசிக்கிறாய், பலிதத்? இந்தா பீடி."–

"ஒன்றுமே யோசிக்கவில்லை".

"தத். பொய் சொல்லுகிறாய். என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாடிருக்கிறாய் என்று சொல்லிவிடு. இல்லாவிட்டால் இதோ உன் காதைத் திருகுகிறேன் பார்"

"அவன் என்னத்தை யோசித்தாலும் உனக்கென்ன?" என்றார் ஸண்டுதா.

"நீங்கள் வங்கமும் ஒரியாவும் கலந்து மொழியில் பேசுகிறீர்கள். உங்கள் பேச்சு ரொம்ப இனிமையாக இருக்கிறது." என்றான் பலிதத். "அவரைக் கேள். இதோ கோபி பாஷையில் கேசவ கோயிலிலிருந்து 42 வது பாடல் வரை பாடியே காண்பித்து விடுவார்."

"அப்படியானால் இந்தக் கலப்பு பாஷை ஏன்?"

"அவை இருக்கட்டும் உருது, தமிழ் இவைகளையும் நான் அறிந்திருந்தால் அவைகளையும் கலந்து பேசவே விரும்புவேன். புரிந்ததா? ஒவ்வொருவருக்கும் விதம் விதமான ருசி. எல்லாம் கோவிந்தனின் இச்சை". 'எல்லாருமே பைத்தியங்கள் தான்' என்று பலிதத் நினைத்தான்.

அனந்த் பேச ஆரம்பித்தான். "ரொம்ப நேரம் வரை பட், என்ட் என்று சொல்லிக் கொண்டிருந்தாயே பனு. எங்களுக்கும் புரிய வை. பட் என்ட் என்றால் என்ன?" பட் என்றால் ஆனால், என்ட் என்றால் முடிவு. ஆனால், முடிவு என்ற விடுகதையில் அகப்பட்டுக் கொண்டுவிட்டான் பலிதத். ஆனால் யோசிக்க விடாமல் பனு எழுந்து, "தவறு என்னுடையது. ராமாயணத்தின் ஏழுகாண்டம் ஆகிவிட்டது. ஆனால் இன்னமும் சீதை யாரென்று சொல்லத் தெரியவில்லை. ஏ பலிதத் ஓ! ஸ்ரீ என்று சொல்ல மறந்து விட்டது. இவர் கம்பெனியின் நம்பிக்கையான உத்தியோகஸ்தர். இன்று பதவி உயர்வு கிட்டியிருக்கிறது."

"அப்புறம் இவர்? இவர் அனந்த் குல்கர்ணி சௌபட் அதாவது ஸ்ரீ அனந்த் குல்கர்ணி சௌபட்ட நாயக், பிரசித்த கவி, சாதுர்யமான அரசியல்வாதி, பம்பாயின் பெயர் போன திரைப்படத் தயாரிப்பாளர். முதல் படம் அனந்த சய்யா, பிறகு பிரசித்தமான 'ஆலோசக்', அப்புறம் – அடடே என்னை விட்டுவிடு. நிறுத்தாதே. பெயர் போன 'ஹட் ஹடா' கிராமத்தின் ஜமீன்தார், கூடவே பாரிஸ்டர் அட் லா, 'லிங்கன்ஸ் இன்', பி. ஏ. ஹானார்ஸ்–".

"ஏ! – "

"... அப்புறம் இவர் அசோக் மேத்தா. எம். காம்., பதினேழு தலை முறைகளாக இங்கு வசிப்பவர், கவி மாதவ மேத்தாவின் பேரன், மேத்தா அண்ட் மேத்தா லிமிடெட், கண்டிராக்டர்களின் உரிமையாளர், பிரசித்தமான 'க்ஷண ஜன்மா' என்ற மாதப் பத்திரிகையின் ஆசிரியர், புகழ் பெற்ற எழுத்தாளர்."

'அப்புறம்...'

அனந்த் சொல்ல ஆரம்பித்தான்..." அப்புறம் இவர் வன பிஹாரி பட்டநாயக் எம். ஆர். ஸி. எஸ்., லீஜியன் டி ஆனர், ஃபெடரல் இன்வெஸ்டிகேஷன் ப்யூரோ, பிரசித்த துப்பறியும் ப்ளேக்கின் கூட்டாளியும் காரியதரிசியும்".

எல்லோரும் ஹோ ஹோ என்று உரக்கச் சிரித்தனர். பலிதத் முட்டாளைப் போல் விழித்தான். இரண்டு புதிய மனிதர்களின் பரிச்சயம் கிட்டி அவன் பிரமித்திருக்கும் பொழுதே, அந்த

அறிமுகத்தைச் சிரிப்பில் பறக்க விட்டு விட்டார்கள். அப்பொழுது அது நிஜமா பொய்யா?

யார் இந்த மனிதர்கள்? இவர்களை எங்கோ முன்பே பார்த்திருந்தாற்போல் தோன்றிற்று பலிதத்திற்கு. அனந்த் குல்கர்ணி சௌபட் என்று பனு சொன்னானே. அவரைப் போலவே ஒருவர் பெரிய சபை ஒன்றில் சொற்பொழிவு செய்வதைத் கண்டிருந்தான். அதே மாதிரி அகல முகம். கூர்மையான முகவாய், ஆழ்ந்த ஒளிமிகுந்த கூர்மையான கண்கள், மயிர் புரளும் அகன்ற நெற்றி. கழுத்தில் பூமாலை, பேச்சில் வரப்போகும் ஏதோ பொற்காலத்தின் சித்திரம். கூட்டம் விடாமல் கைத்தட்டி ஆர்ப்பரித்தது. இவர் தானோ அவர்? தன் பேச்சாலேயே ஜனங்களை உற்சாகப்படுத்தவும், அழச் செய்யவும் சிரிக்க வைக்கவும் அவரால் முடிந்தது. அவருடைய கர்ஜனை கூட்டத்துள் உஷ்ணத்தைப் பரப்பியது.

பிறகு ஒரு நாள் தினசரிப் பத்திரிகையில் அவருடைய படம் வெளிவந்திருந்தது. அதே கம்பீரமான முகம், ஆழ்ந்த கண்கள், ஆனால் நோயாளியைப் போல் இருந்தார். பத்திரிகையில் விவரங்களும் கொடுக்கப்பட்டிருந்தன. ஏதோ நாட்டின் இவர் அறிவு விளக்கை ஏற்றி வைத்ததாகவும், தொடர்ந்து அடிமைத் தனத்தின் தளைகள் இற்று விழுந்து விட்டதாகவும், ஜனங்கள் அறிவுள்ளவர்களாய் விட்டதாகவும் விவரம் இருந்தது. அதற்கப்புறம் அந்த நாட்டில் யதேச்சாதிகாரியாக இருந்த தலைவரின் கோபத்தின் ஜுவாலை அவர் மேல் வீசியதாம். அவருடைய உடல் கொப்பளித்தாலும் அவர் வேகவில்லை. கைகளில் விலங்கிடப்பட்டது. தாகம் என்று கேட்டால் குடிக்க மூத்திரம் கொடுக்கப்படடது. முதுகில் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பி இழுக்கப் பட்டது. மூக்குள் மிளகாய் பொடி தூவினார்கள். உள்ளங்கையில் கள்ளிப் புதரின் முள்ளைக் குத்தினார்கள். இன்னும் எவ்வளவோ சித்திரவதை. நாடு முழுவதும் வெறுப்பால் வெகுண்டெழுந்தது. கோபத்தால் பாய்ந்தெழுந்தது. அற்ப வெற்றியை விரும்பும் பலிதத் கூட தன் அறையுள் அமர்ந்து முஷ்டியை கண்டிராத அந்த விரோதியின் முகத்தின் பக்கமாய்க் குத்தினான். இருளிலிருந்து அவர் அனுப்பிய செய்தி பத்திரிகையில் பிரசுரமாயிருந்தது. அவர்தானா இவர்?

"பந்தீர் முக்தி நிச்சித், தலித விஜய்,
சால் ஜக்ஜார் நாதே மூக்திர் வாணி
ஜடதார் சிரே வஜ்ர ஹபுடி ஹாணி

ஆர்த்த ஜகதே பரஷி ஜஞ்சீவனி
மாடி சால், தலி சால், மாடி சால்".

உடலில் வேதனை, வாயில் மூத்திரம், முதுகில் சூடு, ஆனால் பாடிக் கொண்டிருந்தார் வெற்றி கீதம். சுதந்தர நாதம், அவர் தனா இவர்? தோற்ற ஒற்றுமை இருந்தது; ஆனால் நம்ப முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை.

அப்புறம் இந்த அசோக் மேத்தா என்கிறவர் யார்? அவரைப் போன்ற ஒருவரை எத்தனையோ முறை ரோடில் பார்த்திருக்கிறான், பலிதத். பாடிக் கொண்டே சைக்கிளில் செல்வதை. மாலை வேளையில் பிற எழுத்தாளர்களுடன் அவரை எங்கேயோ பார்த்திருக்கிறான் பலிதத். எப்பொழுதும் இலக்கிய சர்ச்சை, வாக்குவாதம். அவருடைய பேச்சில் தெளிவாய்த் தெரிந்தது அவருடைய தூய மனம். இவரைப் போன்ற ஒருவர் பெரிய சபையில் மேடையிலிருந்து நல்ல பண்டித மொழியில் சொற்பொழிவு நிகழ்த்தியதைக் கேட்டதுண்டு பலிதத். அதில் தத்துவ ஞானத்துடன் கலந்து உயர்ந்த மணம் மிகுந்த பூவின் இதழ்களைப் போன்ற எண்ணங்களையும் ஒளிமிக்க எதிர்காலக் கனவுகளையும் நாலாபக்கமும் பரப்பி விட்டால் இவரைப் போலவேதானிருந்தார் அவர். ஆனால் அவர் கண்டிராக்டர் அல்லவே. பரிச்சயம் – பரிச்சயம் – வானில் பறக்கும் பறவை யின் பரிச்சயம் – ஆனால் இது முதுகுள் மூக்கைப் புதைத்துக் கொண்டு, கண் மூடி ஒதுங்கிக் கிடக்கும் பறவை அல்லவே? ஒரு கையுள் அடங்கும் சிறகுகள் மட்டுமே.

உயிருள்ள மனிதனை, கையில் ஒட்டிக் கொள்ளும் கறுப்புச் சேறு பூசிய சவம் என்று அறிமுகப் படுத்துவதில் அர்த்தம் இல்லை. என்ன அழுக்கு, என்ன சேறு! நினைக்கவே பிடிக்க வில்லை. வெளியில் இருட்டு, மனதினுள் நந்தின் அந்தப் பாட்டு–"சூன்ய மந்திர் பிஹார்" – எல்லோரும் பனுவின் அறையுள் மௌனமாய் அமர்ந்திருந்தனர். அந்தப் பைத்திய காரச் சூழலில் ஒரு சவத்தின் நினைவு தான் வந்தது. உடல் நடுங் கிற்று. அங்கிருந்து போய்விட விரும்பினான் பலிதத்.

கோயிலின் கர்ப்ப கிருஹத்திலிருந்து யாரோ பேசுவதைப் போல் ஸண்டுதா பேச ஆரம்பித்தார். அவர்களையே பற்றி. "கேட்டாயா அறிமுகத்தை? என்ன புரிந்து கொண்டாய் சொல். ஒரு லிங்கன்ஸ் இன்! ஒரு கண்டிராக்டர், ஒரு ஃபெடரல் இன் வெஸ்டி கேடர் என்னை ஒரு வேளை டிப்பட்டன், லாமா என்று பரிச்சயப் படுத்துவார்களாயிருக்கும். வாட் இஸ் இன் ஏ நேம்".

அவரவர்கள் தத்தம் அறிமுகத்தையாவது சரியாகச் செய்ய வேண்டும். ஆனால் அது எளிதா என்ன? ரிஷி முனிவர்கள் கல்ப கல்பாந்திரம் தவமிருந்தும், தாம் யார் என்றறிய முயற்சித்தும், முடிவதில்லை.

"பரிச்சயம் என்றால் என்ன? பிறர் என்ன சொல்லிக் கூப்பிடு கிறார்களோ, அல்லது நினைக்கிறார்களோ அது தானே? அது ஒரு லேபிள் மட்டுமே. லேபிளை மாற்றலாம். ஆனால் சாமானின் குணத்தை மாற்ற முடியாது. மேலிருக்கும் லேபிள் உள்ளிருக்கும் பொருளைச் சரியாய் வர்ணிக்கிறது என்று நினைப்பது சரியல்ல. ஆனாலும் அந்த லேபிள்களைச் சேகரிப்பதில் எல்லோரும் தங்களை இழந்து சண்டையிடக் கூடத் தயாராய் விடுகிறார்கள்.

தம்பி, உன் அவசியங்கள் என்ன, உன் நன்மை எதிலிருக் கிறது என்று உன் மனதையே கேள். வாட் டு யூ ரியல்லி நீட்? வாட் ஆர் த பர்மனென்ட் வால்யூஸ் இன் லைஃப்? அதை விட்டு விட்டு உன் அவசியங்கள், உன் குறைபாடுகள், உன் விருப்பங்கள் என் பவைகளுக்கு மிகப் பொருத்தமான லேபிள்களுக்காக முயற்சி செய்வதில் உன் வாழ்நாளே முடிந்துவிடும். பேடன்ட் மெடிஸின் களின் வர்ணனையைப் போல் பேடன்ட் ஐடியாக்களின் காற்றும் உலகம் முழுவதும் வீசுகிறது. அதனால் எவ்வளவு தான் முயன் றாலும் உலகத்தில் பண்பு நிலைக்கிறதில்லை; யுத்தமும் அசாந்தியும் முடிவதுமில்லை."

"தம்பி, இது உன்னால் முடியாவிட்டால் நேரே ஆட்டோஸஜ் ஜெஷன் என்ற பாதையில் இறங்கு. அதாவது லேபிளை மாற்றி விடு. பணம் திரட்ட அவசியமில்லை; அதோ தெரிகிறதே பெரிய மலை, அது பூராவும் உன்னுடையது தான். அதனடியில் உன் தங்கச் சுரங்கம் இருக்கிறது. தானாகச் சம்பாதிக்காத செல்வ முள்ளவன் அந்தச் செல்வத்தை உபயோகிப்பதில் அர்த்த மில்லை. பார்வைக்கு மட்டுமே அவன் திருப்தியுள்ளவனாய்க் காணப்படுவான். அந்த மலை தான் உன் அறிமுகம். உலகம் உன்னுடையது என்று நம்பு–பிறகு துக்கமே கிடையாது. இதோ இந்த பனுவின் கட்டில் என்னுடையது – இல்லையா பனு? இதோ நான் படுத்துக் கொண்டு விட்டேன், தலைக்கு ஒரு தலையணை கொடு பார்க்கலாம். ஆஹா!" ஸண்டுதா படுத்துக் கொண்டு விட்டார்.

அனந்தும் அசோக்கும் அப்படியே மௌனமாய் அமர்ந்து இருந்தார்கள்.

பலிதத்தின் மனம் நிலையில் இல்லை. நந்தின் பின்னாலேயே போக விரும்பியது. மணி பத்து அடித்தது. இரவு பத்து மணிக்கு

அறிவு திரும்பியது. காலையில் பத்து மணிக்கு அவன் தலைமை குமாஸ்தாவிடம் அன்று இரவு அவரைக் காண்பதாய்ச் சொல்லியிருந்தான். சட்! ஒரு இரவு வீணாய்ப் போய்விட்டது.

பனுவின் வீட்டை விட்டு வெளியே நடந்தான். திருப்பம் வரை அவன் மனம் சரியாயில்லை. அப்புறம் அகன்ற பாதை, பெரிய தெரு, கடைகள், பெரிய பெரிய கட்டிடங்கள் – வண்டிகளும் ஜனக் கூட்டமும். எங்கும் ஒரே விளக்கு ஒளி. நாற்சந்தியில் கொஞ்சம் நின்றான். பின் தங்கிப் போன மாயா வாதத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, தனக்கே மனப் பாலம் ஊட்டிக் கொள்ள, மஹாபாத்ரவைப் போல், 'இடியட்ஸ் – பைத்தியம் ஒரே பைத்தியங்கள் எல்லோரும்" என்று சொல்லிக்கொண்டான். அப்புறம் வேகமாய் நடந்தான்.

★ ★ ★

சரோஜினி கதவை மூடித் தாழ்ப்பாளிட்டாள். தன் விருப்பத்திற்கு அடங்கி நடக்கும் மனதிற்கும், அந்த விருப்பத்திற்கு மாறாக இயங்கிய, தனக்கு அடங்காத, மனோ ராஜ்யத்திற்கும் நடுவில் அந்த அடைத்த கதவு. எதையோ சாதித்து விட்டதைப் போல் தோன்றிற்று அவளுக்கு. இனிமேல் அவளுடைய தனிமையை யாராலும் கலைக்க முடியாது. தன் முக்காடை இறக்கி, வேஷத்தைக் கலைத்து தன்னுடனேயே விளையாடிக் கொள்ளலாம் எவ்விதத் தடையுமில்லாமல், அவளுடைய செயல்கள் எல்லாமே விசித்திரமானவைதாம். கதவை மூடுவது, சுவரில் மோதிக் கொண்டு தள்ளாடுவது, தெரிந்தும் தெரியாமலும் உடலை வருத்துவது, அடுப்பில் மெல்லிய விறகொன்றைப் புகுத்தி விட்டு அது சாம்பல் ஆகும் வரை கன்னத்தில் கையை ஏந்திக் கொண்டு அதைக் கவனிப்பது, எல்லாமே தான். மனதினுள் கட்டிப் போட்டுக் கிடந்த ஏதோ கற்பனையின் பிரதிபிம்பத்தை வெட்கத்தின் மறைவில் கண்டாள். வெளி உலகக் காரியமெல்லாம் வெகு சாதாரணமாகத் தோன்றின அவளுக்கு, அவளுடைய மனம் அமைதியின்றி எதையோ தேடி அலைந்தது. கதவை மூடியாயிற்று. வீட்டில் யாருமில்லை; அவள் மட்டுமே யோசிக்காமலேயே தினசரி வேலை எல்லாம் செய்து கொண்டிருந்தாள். விளக்கேற்றினாள், வீட்டைக் கட்டினாள், சாமான்களைச் சரியாய் எடுத்து வைத்தாள். காய்கறி நறுக்கியபடி அடுப்பை ஊதிக் கொண்டு உட்கார்ந் திருந்தாள். அடுப்பு நன்றாய் எரிந்து கொண்டு

இருந்தது. அரிசி வெந்து கொண்டிருந்தது. பருப்பு வெந்தாயிற்று. எங்கும் ஒரே இருட்டு.

மெள்ள மெள்ள அன்று மாலை நடந்ததெல்லாம் மனதில் தோன்ற ஆரம்பித்தன. பலிதத் வீட்டிற்கு திரும்பியதும் திடீரென்று எதற்காகவோ பைத்தியம் போல் கர்ச்சித்துக் கொண்டு வசைமாரி பொழிய ஆரம்பித்தான். அவனுடைய அந்த அகாரண கோபம் அவனுடைய மனதின் ஆழத்தில் கிடந்த அமைதியின்மை என்னும் பூதத்தின் உறுமல். அவள் மனதை வருத்திய அமைதியின்மையைப் போன்றது பலிதத்தின் மனப்போக்கும், அவனுடைய நடை உடையும், அவனுடைய பிரமோஷனின் பெருமையும் கூட அவள் மன ஏக்கத்தை குறைக்க வில்லை.

வகிட்டில் பளீரென்று சிந்தூரம், கைநிறையக் கண்ணாடி வளையல்கள்–கண்ணாடி, வஜ்ரமாயிருக்கட்டும் என்ற ஆசீர் வாதத்தை ஒலித்தபடி தோளில் 'பதி பரம குரு' என்று உப தேசிக்கும் ப்ருச். ஏதோ புரியாத துக்கம் அவளை வருத்தியது.

அடுப்பை ஊதுவதனால் வழிந்த உப்பு நீர் கண்ணீராய். அந்தக் கணம் அவள் தன்னுடைய வாழ்வை வெறுத்தாள்– வாழ்வு புகையாய் மாறி எரிந்து போய்க் கொண்டிருந்தது. இந்த அடுப்பிற்குள் அவளுடைய வேட்கை ஒரு நீண்ட 'ஐயோ' என்ற சப்தமாய் நின்று விட்டது.

அழ விரும்பினாள். ஆனால் அவளால் முடியவில்லை. தன் பழைய நாளெல்லாம் நினைவிற்கு வந்தன. குழந்தைப் பருவத் தில் அக்காவின் அன்பும் ஆதரவும் நிழலாடின. அந்த அக்கா இப்பொழுது உயிரோடில்லை. சித்தப்பா அவளைத்தான் தன் தொந்தி மேல் உட்காரவைத்து விளையாட்டுக் காட்டுவார். அவரும் இப்பொழுது இல்லை. மரணம் – பிரிவு; பிறகு அவளுடைய காயமும் அதன் வேதனையும் தான், ஏக்கமும் அசாந்தியும் தான். ஓ, அவள் எவ்வளவு துர்ப்பாக்கியவதி, எவ்வளவு துக்கப்பட்டு விட்டாள்.

உலகமே துக்க சாகரம் தான். அதிலிருந்து கையளவு துக்கத்தை முகந்து மனதுள் கொட்டிவிட்டால் போதும். அது கண்கள் வழியாய் டப்–டப் என்று ஒழுகிப் போகும்.

தன் பிறந்தகத்தை நினைத்துக் கொண்டு இந்த தூரதேசத்தில் அழுதாள் சரோஜினி. இங்கே சுகமும் இல்லை, அன்பும் இல்லை–யந்திரத்தைப் போல் வேலை செய்து கொண்டே இருக்க வேண்டும், அவ்வளவு தான். பின் தங்கிவிட்ட தோழிகளின் பக்க பலமும் இங்கே இல்லை. என்ன வாழ்வு இது! மெல்ல மெல்ல

அவளுடைய விசும்பல் குறைந்தது. அந்தத் தனிமையில் அவளுடைய துக்கப்பட்ட மனம் ஊசலாடியது. மெல்ல அவள் கொஞ்சங் கொஞ்சமாய்த் தேறி தன் நிலைக்கு வந்தாள். கூடவே கோபமும் பிறந்தது மனதில், படமெடுத்த பாம்பைப் போன்ற ரத்த மேறிய முகம், புஸ், புஸ் என்ற நீண்ட பெரு மூச்சு, எரியும் கண்கள்; வஞ்சிக்கப்பட்ட அவளுடைய தன்மை முழுமையைத் தேடி, அதைத் தன் உள்ளிருந்து பெயர்த்தெடுத்து ஒரு உருவமும் கொடுத்து, அந்த இருட்டில் நிலைநாட்ட முற்படுகிறது. பகலிலும் அந்த உருவம் அவள் முன் வந்து நிற்கும். அவள் மனம் பரிதவிக்கும். அமைதியற்று, இங்கும் அங்குமாய் அலைந்தாள். வெளியே, கதவினூடே உள்ளறையின் ஜன்னலின் வழியாய், மனம் பேதலித்து எதையோ யாரையோ தேடலுற்றாள்!

அங்கே யார் அது? எதிர்ப்புறத்தில் அந்தக் காலேஜ் மாணவன் தென்பட்டான். பென்ஸிலைக் கடித்துக் கொண்டு, புத்தகம் படித்தவாறு, ஏதோ யோசனையிலாழ்ந்திருந்தான்.

அவள் மனம் அங்கு ஓடிற்று, பட்டென்று என்று ஜன்னலை மூடினாள். களைத்துப் போன மனம் எனும் பறவை தன் நிலையை அடைந்தது.

பானையில் அரிசி கொதிக்க ஆரம்பித்தது. கட் கட் கட் கட் என்று கணக்கற்ற குமிழிகள் கொதிக்கும் நீரில் தோன்றின. என்ன சூடு என்ன ஓசை! பெரிய பெரிய குமிழிகள். உடைந்து அவைகள் நீரில் கலந்து போயின; ஆனாலும் இடம் காலியாய் இருப்பதில்லை. கூட்டங் கூட்டமாய் நடனமாடின. கணக்கற்ற குமிழிகள் எப்பொழுது பார்த்தாலும் முழுமையாய்த் தெரிந்தன. பூர்ணமாகவே மாறிவிடுகின்றன. மிஞ்சி நிற்பதும் பூர்ணம் தான். அந்தப் கொப்புளங்களின் நடனம் தினமும் புதியதாய் தெரிந்தது.

சரோஜினி சாதம் சமைத்துக் கொண்டிருந்தாள். அதிலொரு விசேஷமும் இல்லை.. தினசரி நடக்கும் காரியம் தான். வீட்டுப் பெண் உட்கார்ந்து சாதம் சமைத்துக் கொண்டிருந்தாள்.

இரவு மணி ஒன்பதாயிற்று. அவர் திரும்பி வந்து கொண்டிருப் பார். அவருக்குப் பிரமோஷன் ஆயிருக்கிறது – இது இரண்டாம் படி. சிறு வீட்டிலிருந்து பெரிய வீட்டிற்குப் போவது சமீபத்து விட்டது. அப்புறம் செல்வம் சேரும். சரோஜினிக்கு செல்வம் என் றால் பிடிக்கும். எப்படி இருக்கும் அந்த வாழ்க்கை? பணக்காரி ஆனால் எப்படி இருக்கும்? குழந்தைப் பருவத்திலிருந்து இதுவரை கேட்ட, பார்த்த விஷயங்கள் நினைவிற்கு வந்தன. பக்கத்துக் கிரமாத்தில் ஒரு குடும்பத்தில் அவளைக் கலியாணச் செய்து கொடுக்கும் பேச்சு எழுந்தது. கலியாணத் தரகன்

அக்குடும்பத்தின் செல்வக் கொழிப்பைப் பற்றி வர்ணித்தான். பெரிய வீடு, நிலம் புலன்கள், அநேகம் வேலை ஆட்கள், வருவோரும் போவோருமாய் எப்பவும் கூட்டம். பாட்டு கூத்து கும்மாளம். ஆனால் ஜாதகம் பொருந்தவில்லை. பணக்காரியாகும் கனா அப்பொழுதிலிருந்தது சரோஜினிக்கு இருந்தது. நிறைய நகைகளும் விலை உயர்ந்த புடவையும் அணிந்து வெளியே போவதைப் பற்றி கனா கண்டாள். ஆனால் எல்லா செல்வந்தர் களும் இப்படி வேஷம் போடுவதில்லை. செல்வம் இருக்கிறது என்ற நம்பிக்கை மட்டுமே போதும். குதிரை வண்டியும், நிலபுலன்களும், பணமும் இருப்பது மட்டும் போதாது—அதற்கேற்ற தோற்றமும் வேண்டும், செல்வாக்கின் அதிகாரம் வேண்டும். பிறர் மரியாதை செய்யவேண்டும். பணம் இருந்தால் மட்டும் போதாது. பத்துபேர் அதைப்பற்றி பேச வேண்டும் – அவர்களிடம் இருக்கிறது, நம்மிடம் இல்லை என்று. செல்வமற்றவர்கள் இல்லாவிட்டால், செல்வக் கொழிப்புள்ளவர் களிடம் இருப்பது, இல்லாமையையே ஒத்திருக்கும். மாதம் நூற்றைம்பது ரூபாய்–! அது ஏறிக் கொண்டே போகும். கண வனின் பேராசை அவனுடைய உருவத்திற்கும் அளவிற்கும் தக்க தாய் இல்லை. அவள் கட்டாயம் பணக்காரி ஆவாள். பணம் உடம்பில் ஒட்டிக் கொள்ளுமோ? முகபாவம் மாறுமா? மனதில் சந்தோஷத்தைத் தருமா? அவள் பெருமூச்சு விட்டாள்.

குப்பி விளக்கைத் தூக்கி வாணலியிலிருந்த கறியைப் பார்த்தவளாய் அவள் பெருமூச்சு விட்டாள் – அந்த மூச்சுக் காற்றில் விளக்கு அணைந்து விட்டது. அடுப்பு விறகை எடுத்து அதை ஏற்றினாள் – அவள் மனதுள் திரும்பவும் பழைய ஏக்கம் புகுந்து கொண்டது. அமைதியும் சுகமுமில்லை என்று வெதும்பும் மனம். அமைதி என்பது நிலைமையைப் பொறுத்தது, கர்மத் தைப் பொறுத்தது. அதைத் தர செல்வத்திற்குச் சக்தி கிடை யாது. மனதில் சந்தோஷம் இல்லை என்றால் வீடு நிறைய சாமான்களை நிரப்புவதால் என்ன பயன்? ஆனால் பணத்தின் உதவியால் போலி சந்தோஷத்தைப் பெற முடியும். அசல் இல்லாவிட்டாலும் அதைப் போன்ற ஒன்று. மனம் எப்பொழுதும் தயார், பதிலுக்கு வேறொன்றை ஏற்றுக் கொள்ள. அந்த நகலைப் பெறுவதற்கு வேண்டிய சுதந்திரத்தைக் கொடுக்கிறது செல்வம்.

ஒரு வேளை சந்தோஷம் வரக்கூடும். 'வெளியில் ஏன் போகமாட்டேன் என்கிறாய்? வீட்டை விட்டு வெளி வந்து பாரேன். கல்வி கற்றுக் கொள். நாமும் அந்தப் பெரிய மனிதர்களுடன்

சமமாகப் பழக முடிந்தால் அப்புறம் நீ பார்ப்பாய் நம் அதிர்ஷ்டத்தை. நீ கல்தான், கல்' என்று அவர் சொல்வதுண்டு.

ஒரு வேளை செல்வம் சுதந்திரம் தரலாம் – அவருக்கும் சந்தோஷமாயிருக்கும்.

நெற்றியில் வியர்வை துளிக்க, மூக்கு விரிய, மூச்சில் சுழல் காற்று வீச, ரத்தம் சூடேற, புதிய வாழ்வின் கற்பனையில் மிதந்தாள் சரோஜினி. குனிந்த தலையுடன், ஒட்டாத மனதுடன் அந்த வாழ்வை, வரப்போகும் சுகத்தை, கண்டு கொண்டிருந்தாள். அதைச் சொற்களால் வர்ணிக்க முடியாது. மௌனமாய் வெறும் அனுபவமாயும், கனவாகவும் மட்டுமே–இருந்தது. அதற்கு உருவம் கொடுக்க மனம் கூசியது. ஆனால் அதன் ஒளி உள்ளத்தில் கவலையையும் எழுப்பி விட்டது. இருட்டில் எங்கிருந்தோ பாய்ந்து கொண்டிருந்த ஒளி அவனை மயக்கி அதன் பக்கமாய் இழுத்தது. அந்தத் தெளிவற்ற நிழல் அவளையும் தன்னுள் பதுக்கிக் கொண்டது.

யாருடைய குரலோ கேட்டது.

"பேரர், பேரர்" ...

கதவைத் திறந்து கொண்டு வெளியே பார்த்தாள் சரோஜினி.

"யார் அங்கே?"

குளிர் காற்று அவள்மேல் வீசியது, ஒரே இருட்டு. அந்த இருட்டில் ஒரு பக்கத்தில் சிகரெட் எரிவது தெரிந்தது. "நான் தான் மஹாபாத்ர" இரண்டடி பின் வாங்கி தடார் என்று கதவை அடைக்கலானாள். "ஓ என் கால் – கொஞ்சம் கேளுங்கள்" – என்று கேட்டது. கதவிடுக்கில் தன் காலை எப்பொழுது வைத்தாரோ? குனிந்து காலைப் பிடித்தபடி உட்கார்ந்து விட்டார். இரண்டு மூன்று தரம் அம்மாடி, அப்பாடி, என்ற முனகல். ஏதோ அடிப்பட்ட மிருகம் போல் முனகினார். அவளுக்கு என்ன செய்வது என்ற புரியவில்லை. அணுகவும் முடியவில்லை. உடல் நடுங்கிற்று. நெஞ்சு அடித்துக் கொண்டது. உதட்டைக் கடித்த வாறு அவருடைய காலைப் பார்த்துக் கொண்டே நின்றாள் சரோஜினி.

என்ன ஆபத்து இது!

மஹாபாத்ரவிற்கு அடிபட்டு விட்டது.

தலையைத் தூக்கி, "பலிதத் பாபு இல்லையா"? என்று கேட்டார்.

"இல்லை."

"ஓ! – அப்படியானால் .."

அவருடைய கண்கள் ஏன் இப்படிப் பளபளக்கின்றன? குரல் ஏன் உடைந்து கேட்கிறது? ஒரு வேளை காயம் அதிகமோ?

மெல்ல வீட்டினுள் இரண்டடி எடுத்து வைத்தார், சரோஜினியைப் பார்த்தவாறு.

"நீங்கள் கவலைப்படாதீர்கள். தவறு என்னுடையது. கால் உள்ளே அகப்பட்டுக் கொண்டுவிட்டது. பலிதத் பாபு இல்லையாக்கும். ரொம்ப சுற்றிவிட்டு வந்தேன். இங்கு, அவர் இருந்திருந்தால் இன்று பிரமோஷன் ஆயிருக்கிறதே, எனக்கு ஒரு கப் டீ தா என்று கேட்டிருப்பேன். கட்டாயம் கிடைத்திருக்கும். அவரும் இப்பொழுது எனக்கு சமமாக ஆபீசர் ஆயாயிற்று. இனிமேல் என்ன கவலை?" இருட்டு, கும்மிருட்டு வீட்டினுள் மினுக் மினுக்கென்று எரிந்தது விளக்கொளி. இருள் அதைக் கேலி செய்வது போல் தோன்றியது.

சரோஜினி முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு பேசாமல் நின்றாள். டீயைப் பற்றி அவர் பேசினதும் டீ பாத்திரங்கள் வெளியில் திண்ணைக்கு மேல் வைத்திருப்பது அவளுக்கு நினைவு வந்தது. கொஞ்சம் கொதிக்கும் நீர், டின் பாலில் ஒரு ஸ்பூன், ஒரு சிட்டிகை டீ இலை, தளி சர்க்கரை அவ்வளவு தானே டீ என்று சொல்லப்படும் சுடு நீர்? முடியாது என்று சொல்லி விடவா? அவர் வரும் நேரமாச்சு, என்ன சொல்லுவாரோ? 'அவராகவே கேட்டுங்கூட உன்னால் செய்ய முடியவில்லையா? சீ! என்பாரோ!'

கடமை உணர்வு உந்த, வெளியில் போய்ப் பாத்திரத்தை எடுக்கக் கையைத் தூக்கினாள். அவர் உட்கார்ந்திருந்த இடத்தின் பக்கத்தில்தான் இருந்தது.

பாத்திரத்தை எடுத்துக் கொண்டிருந்த அவளுடைய நீண்ட கைகள் மேல் அவருடைய பாம்புக் கண்கள் பதிந்தன. அவளுடைய உடல் நடுக்கமுற்றது. மயிர்க் கால்கள் எழும்பி நின்றன.

மஹாபாத்ர அவளுடைய கரத்தைப் பார்த்து கொண்டிருந்தார் உப்பியிருந்த நீண்ட ரப்பர் குழாய், அல்லது பாம்பு அல்லது கொடி. அல்லது சிவந்த மின்னிய தோலின் கீழ் பச்சை மாமிசம்! அதன் அழகே ஒரு காவியம், மின்னலும் காற்றும், ஆகாயமும் அதில் தெரிந்தன. அவை நடுவில் அசைந்தது ஒரு அலை – முத்தமிடத் தோன்றும் ஒரு அலை. அதை அணைத்துக் கொண்டார், மஹாபாத்ர தன் கற்பனையில். தூரேயிருந்து நீந்தி வருவதைப் போலத் தெரிந்த கோப்பை ஸாஸரின் கலகல என்ற ஓசையும் அவருடைய உள் வெப்பத்தை அதிகரித்தது. எல்லாமே பழக்கமானவை தான்: டீயின் வாசனை, நிறம், ஆவி, இனிமை

யான கரங்களின் அன்பு ஸ்பரிசம், வீட்டடுப்பு, எல்லாம் சாதார ணமானவைதான்.

தன்னை மறந்து மஹாபாத்ர பார்த்துக் கொண்டிருந்தார். சரோஜினி சோம்பிய கைகளால் டீ பாத்திரங்களை எடுத்துக் கொண்டிருந்தாள். கை நடுங்க ஆரம்பித்தது. கோப்பை நழுவ ஆரம்பித்தது. அவளுக்கு உதவ இன்னொரு கரம் நீண்டது. யாரோ அவள் கையைப் பிடித்து அழுத்தினார். ஹாய் ராம்! உலர்ந்த இலையைப் போல் அவளுடைய உடல் நடுங்கியது. தலை ஆடியது. கண்கள் மயங்கி மூடிக் கொண்டன. கண்ணைத் திறப்பதற்குள் அவளுடைய உடல் வியர்த்து விட்டது. நடுக்கம் மெல்ல நீங்க ஆரம்பித்தது. யாரோ மெல்லிய குரலில், 'திரும்ப தடுமாறாதீர்கள். விழுந்து விடப் போகிறீர்கள்' என்று சொல்லிக் கொண்டிருந்தார். எதுவும் விழவும் இல்லை, உடையவும் இல்லை. கப், ஸாஸர், டீ பாட் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு நேரே சமையலறைக்குள் போய்ப் புகுந்து கொண்டாள். உடலில் உஷ்ணம் பரவியது. சகிக்க முடியாத உஷ்ணம். மூளையுள் புயல்.

அடுப்பண்டை உட்கார்ந்து விட்டாள். அது தான் அவளுடைய கோட்டை, அவளுக்குத் தஞ்சம். அவளுடைய உள் உணர்வின் ரகசிய கூட்டாளி – மனவெழுச்சியின் சின்னம். உயிரின் உருவம், குடும்ப வாழ்வின் அறிக்கை – நெருப்பு.

அடுப்பில் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. உட்கார்ந்து தன்னை சமாளித்துக் கொள்ளுவதற்குள் வெளி அறையில் உல்லாசமும் கேலியும் கலந்த மஹாபாத்ரவின் குரல் கேட்டது. "இன்னும் கொஞ்சம் ஆகியிருந்தால் பலிதத் பாபுவிற்குப் பிரியமான கப் கீழே விழுந்து தூள் தூளாய் விட்டிருக்கும் – பீங்கான் விழுந்து உடைந்தால் அவ்வளவு தான். பிறகு ஒட்ட வைக்க முடியாது. ஹே ஹே ஹே"–

பீங்கான் விழுந்தால் தூள் – ஆனால் எதுவும் விழவில்லையே. ஏன் இந்தப் பேச்சு? காதின் நுனி சூடாயிற்று. அடுப்பில் ஏற்றியிருந்த நீரை மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். நடந்ததைத் தள்ளிவிட்டு சீக்கிரம் சகஜமாக முயற்சித்தாள். தலையுள் ஏதோ வரப் போகும் புயலின் ஓசை.

என்ன அப்புறம்? நினைக்கவே பயமாயிருந்தது. எதிர்பார்ப்பு மட்டுமே. ஒரு யுகமே ஆகி விட்டாற் போலிருந்தது, அவளுக்கு. பிறகு வெளி அறையில் அரவம் கேட்டது. 'அரே பலிதத் பாபு!! எங்கே போயிருந்தீர்? நான் உங்களைத் தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன்."

"ஸர் நமஸ்காார், ஸர் நமஸ்கார், எப்பொழுது வந்தீர்கள் ஸர்? வெற்றிலை – ?"

"என்னைப் பற்றிக் கவலைப் படவேண்டாம். டீ வந்து கொண்டிருக்கிறது. உங்கள் பிரமோஷனைப் பற்றி எனக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம்" "ஸர் அதெல்லாம் உங்கள் தயவு தான்..."

"ஒன்றுமில்லை. இது ஆரம்பம் தான், இன்னும் எவ்வளவோ பாக்கி இருக்கிறது. நீங்களே ஒரு நாள் இந்தக் கம்பெனியின் முக்கிய அதிகாரி ஆவீர்கள். காரியத்தை நடத்துவீர்கள். ஹெய்ல் மாக்பெத். ஹெய்ல் கடர், ஹெய்ல் க்ளேமிஸ், தி கிரேடெஸ்ட் இஸ் யெட் டு கம்–ஹா ஹா..."

"எல்லாம் உங்கள் தயவுதான் ஸர். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்" "துரையிடம் நான் சொன்னது உண்மை தான் – பலிதத் தாஸிற்கு ஒரு வாய்ப்பு கட்டாயம் கொடுக்க வேண்டும். அவரைவிட வேலைத் திறமை உள்ளவர் வேறு யார் இங்கே என்று. விட்டுத் தள்ளு. முதலில் உள்ளே போய் வாருங்கள்".

"ஸர் அம்மாவிற்குப் பல் வலி என்று கேள்விப்பட்டேனே"

'பல் வலியா! எனக்குத் தெரியாதே'.

"ஆமாம். ஒரு பல்லில் வலி என்று பியூன் சொன்னான். டாக்டருக்குத் தகவல் கொடுத்துவிட்டு வருகிறேன்."

"அப்படியானால் டாக்டர் பார்த்து விட்டுப் போயிருப்பார். அவளுக்கு பயரியா உண்டு. நடுநடுவில் இப்படி வலி வந்து விடும். நீங்கள் நன்றாய்க் கவனித்துக் கொள்ளுகிறீர்கள். தெரிகிறது. அது சரி. நீங்கள் இப்படி இரவில் வெகு நேரம் வரையில் வெளியே போய்விட்டால், இங்கு வீட்டில் மனைவி பாவம் தனியே கவலைப்படுவாளாயிருக்கும். துணைக்கு யாரையாவது வேலைக்கு வைத்துக் கொள்ளக் கூடாதா?"

பலிதத்தின் உள்ளம் துள்ளிற்று. சிரித்துக் கொண்டே வேகமாய் உள்ளே போனான். சரோஜினியும் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் முகத்திலும் புன்சிரிப்புத் தவழ்ந்தது. சுறுசுறுப்புடன் அவனுடைய காலணிகளை அவிழ்த்து விட்டாள். கோட்டை அவிழ்த்தாள். ரகசியக் குரலில், "என்ன நடந்தது தெரியுமா? நீங்கள் வீட்டிலில்லை, யாரோ குரல் கொடுத்தது கேட்டது. கதவைத் திறந்து பார்த்தால் ஒரு புருஷன் நின்று கொண்டிருந்தான். என் கை கால் ஓடவில்லை. நீங்கள் வீட்டிலிருக்கிறீர்களா என்று மஹாபாத்ர கேட்டார். சரி நான் கொஞ்சம் உட்காருகிறேன். தயவு செய்து ஒரு கப் டீ அனுப்ப முடியுமா என்றார். தானாகவே டீ வேண்டும் என்கிறார். விதுரன்

வீட்டில் கீரைக் கூட்டு உசிதம் தான் என்று நான் மனதுள் நினைத்தேன். டீ போட்டாய்விட்டது. யார் கொண்டு போய்க் கொடுப்பார்கள், என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். வெளியில் தரையில் வைத்துவிட்டு வரலாம் என்று எண்ணி னேன்" "சீ, என்ன நினைத்திருப்பார் அவர்? ஏன், உள்ளே போய மேஜை மேல் வைத்தால் பாவமா? இது தான் உன் முட்டாள் தனம். அவர் எவ்வளவு பெரிய மனிதர் என்று உனக்குத் தெரியும். அவருடைய பேனா முனையால் தான் என் வேலை உயர்ந்தது. அவராகவே டீ கேட்டார் என்றால் எவ்வளவு சரளமானவர் என்று தெரியவில்லையா? ஒளிவு மறைவு இல்லாதவர், அவருடைய தயை சொல்லி முடியாது. வெறும் டீயா கொடுக்கப் போகிறாய்? கொஞ்சம் கேசரியாவது கிளறி விடு சீக்கிரம்."

"பேசிக் கொண்டிருக்கிறீர்களா பலிதத் பாபு? தத். இப்படி இரவில் நான் வந்தது சரியல்ல, பரவாயில்லை. இருக்கட்டும். நான் வருகிறேன்..."

"ஸர், ஸர், இன்னும் கொஞ்சம் இன்னும் கொஞ்சம்..."

"சரி சரி நான் போகவில்லை."

கொஞ்ச நாழியில் கையில் டீயும், கேசரியும் ஏந்தி சரோஜினி கதவினருகில் வந்து நின்றாள். பாதி உடம்பு தெரிந்தது. அதில் பூஜைக்கு நைவேத்தியம். பலிதத் போய் அவைகளைப் பெற்று வந்தான். மஹாபாத்ர உரக்க "அப்பொழுது இன்று வீட்டில் சாப்பாடில்லை என்று ஆக்கி விட்டீர்கள் நீங்கள். இது என்ன? மந்திரவாதம் தெரியுமா உங்களுக்கு?"

சூடான கேசரிமேல் நான்கு விரல்களின் சுவடு அழகாய்த் தெரிந்தது. அதைப் பார்த்துவிட்டு மஹாபாத்ர "இதைப் பாரும், அமுக்கி, அமுக்கி எவ்வளவு கேசரி! உங்கள் மனைவியின் விரல்கள் ரொம்ப சிறியவை போலும். அவைகளை வைத்துக் கொண்டு எவ்வளவு வேலை!" என்று வியந்தார்.

மஹாபாத்ர சிரித்தார். - பலிதத்தும் முட்டாளைப் போல் சிரித்தான். படுதாவின் பின்னிருந்து அடக்கமான சிரிப்பொலி கேட்டது. தானும் சிரிப்பதை சரோஜினி அறிவித்தாள். 'எவ்வளவு ருசியான கேசரி. உங்கள் மனைவி உண்மையாகவே ஒரு ரத்தினம் தான், ரத்தினம். எனக்குப் பொறாமையாயிருக் கிறது. ஹோ - ஹோ - ஹோ - "

★ ★ ★

காலையில் அடுத்த வீட்டு ராம் பாபுவின் மனைவி பேச வந்து விட்டாள். "உனக்கென்னம்மா இனிமேல் – கொண்டாட்டம் தான்" என்றாள். "என்ன விஷயம்?" என்று சரோஜினி கேட்டாள். "என்னிடமிருந்து ஏன் மறைக்கிறாய்? பெரிய மனுஷி ஆகிவிட்டாய், பெரிய பெரிய மனிதர்கள் வருகிறார்கள் உன் வீட்டிற்கு, என்னைப் போன்ற ஏழைகளிடம் இனிமேல் பேசுவாயா நீ. என் கண்கள் எவ்வளவோ வினோதங்களை பார்த்தாயிற்று. எவ்வளவோ பார்க்கப் போகின்றன. கடவுள் உனக்கு எல்லாவித மங்களமும் தரட்டும். அரே இப்படி ஏன் பப்பாளி மரத்தைக் குலுக்கி காய்களை வீழ்த்துகிறாய்? மரத்திலேயே விட்டு வைத்தாயானால் பழுக்குமே?"

"இந்தா நீயும் எடுத்துக் கொள்".

"எனக்கு எதற்கு? மரத்திலேயே விட்டுவை. பழுக்கட்டும்"

"அக்கா, நாங்கள் தான் வீடுமாறிடப் போகிறோமே. எனக்கு ஏன் அக்கறை?"

"ஓ! அதனால்தானா? எலுமிச்சை மரம் காய்த்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. அதுவும் மொட்டையாய் நிற்கிறதே. எல்லாவற்றையும் பறித்து விட்டாயா? உனக்கு வேண்டாம் என்றால் வேறு யாராவது எடுத்துக் கொண்டு போகிறார்கள். இப்படியா செய்வது? வண்டி நிறைய எலுமிச்சை காய்க்குமே. இப்பொழுது எவ்வளவு கிராக்கி தெரியுமா எலுமிச்சம் பழம்? ஒரு பைசாவிற்கு ஒன்று? வேண்டாம், வேண்டாம். பப்பாளியைப் பழுக்கவிடு"

"நான் செய்வது உனக்குப் பிடிக்கவில்லையா அக்கா?" சரோஜினி மெள்ள வினவினாள்.

"இல்லைவே இல்லை".

"அப்பொழுது நீ உன் வீட்டிற்குப் போய் விடேன்".

"நான் என் வீட்டில் தானே இருக்கிறேன். எதை எல்லாமோ பார்த்தும் கேட்டும் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறேனே! இதற்காக என்ன? எப்படியோ போ, ஆனால் வளர்ந்த மரத்தை வெட்டக்கூடாது அடி".

ராம் பாபுவின் மனைவி போய் விட்டாள்.

அந்த மரத்தை வெட்ட நிஜமாகவே விரும்பினாள் சரோஜினி. பழைய வீட்டை விட்டுப் போக வேண்டும். தன் உடமையில் ஒரு துரும்பைக் கூட அங்கு விட்டுப் போக விரும்பவில்லை சரோஜினி.

வண்டி வந்து நின்றது. தட்டு முட்டு சாமானெல்லாம் ஏற்றி ஆனதும் பழைய வீட்டை விட்டுப் போகத்தானே வேண்டும்.

வீடு மாற்றல் மட்டுமல்ல. கம்பெனியின் உத்தரவுப்படி இடம் மாற்றல்கூட. பலிதத்திற்கு பிரமோஷன் ஆனதும் அவனால் இன்னும் பெரிய பொறுப்புக்களை ஏற்று சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கையில் அவனை வேறு இடத்திற்கே மாற்றி விட்டது கம்பெனி. பலிதத் பூரித்திருந்தான் – சம்பளம் கூடியது மட்டுமல்ல, தன் சாமர்த்தியத்தைக் காண்பிக்க ஒரு சந்தர்ப்பம் கிட்டி விட்டது. அந்தத் தொலைவான இடத்தில் அவனுடைய எதிர்காலம். அதுமேலே உயர ஒரு படி. ஆரவாரத்துடன் பிரயாண ஏற்பாடுகளைச் செய்தான். வண்டியில் சாமான்களை ஏற்றிக் கொண்டே 'புறப்படு, புறப்படு' என்று அவசரப்படுத்தினான். ஆனால் கடைசி நிமிடத்தில் சிறு விஷயங்களுக்காகத் தாமதித்தான், எதற்காக என்று புரியாமலே. இத்தகைய தருணங்களில் தான் மனிதன் தன் பலவீனத்தை உணருகிறான். அவன் எவ்வளவுதான் முற்போக்குடையவனாயிருந்தாலும். கட்டாயம் திரும்பிப் பாராமல் இருக்க மாட்டான். ஏனென்றால் உடன் எடுத்துச் செல்ல முடியாத தன் ஒரு பகுதி பின் தங்கி விடுகிறது.

ஆகாயத்தில் சூரியனும், மேஜை மேல் விளக்கும் பரப்பும் ஒளியைத் தவிர மனிதனும் சமகால வாழ்க்கையில் தன் ஒளியை வீசுகிறான். தன் வெப்பத்தை இடம் மாற்றி வேறிடத்தில் விடுகிறான். அனுபவங்களைப் பெற்று, அனுபவங்களை கொடுத்தும் போகிறான். இப்படிக் கொடுத்துக் கொடுத்துக் கடைசியில் அவன் பனியாய் உறைந்து போகிறான். இருளாய் மாறி விடுகிறான். ஆனால் இந்த மாற்றம் ஒரு கணத்தில் வருவதில்லை. பிறப்பிலிருந்து இறப்பு வரை நடக்கும் ஒரு கிரமம் அது. இந்த வீடு அவனுடையதாயிருந்தது. இங்கே அவன் தன்னில் ஒரு பகுதியை விட்டுப் போகிறான். இதுவரை காலையிலெழுந்ததும் அவன் கண்டது இந்த இடத்தைத்தான்; வீடு என்றால் இந்தப் படம் தான் முன் நின்றது. ஆகாயம் என்றால் இந்த பூமியிலிருந்து தான் காணும் ஆகாயம் தான் உண்மை. தினம் பல் தேய்த்ததும், குளித்ததும் இங்குதான். உடலின் அவசியங்களுக்காகவும் மனதின் கற்பனைகளுக்காகவும் அவனை உறை போல் அளவாய்த் தாங்கி நின்றது இந்த வீடும் இந்தச் சூழ்நிலையும். இன்று அதை விட்டுப் போக வேண்டும்.

★ ★ ★

கம்பெனி வேலையில் எவ்வளவோ வீடு, எத்தனையோ ஊர். கங்கையின் கரையில் தந்தையின் அஸ்தி. கோதாவரியின் கரையில் தாயின் சாம்பல். விந்தியாசலத்தின் அடிவாரத்தில் அவனுக்குக் கலியாணம் என்றால், சமுத்திர ஓரத்தில் அவனுடைய சமாதியும் ஆகலாம். உத்தியோகஸ்தர்கள் பறக்கும் பறவைகள்; ஆனால் கம்பெனியின் உத்தரவின் பேரில் பறப்பவர்கள். வழிப்போக்கன் போய்க் கொண்டே இருக்கிறான். வீடு பின் தங்கி விடுகிறது. அதனால் என்ன நஷ்டம். பழைய நினைவுகள் பின்னிய வலையை இழுத்துக் கலைத்துவிட்டு பலிதத் குரல் கொடுத்தான். "புறப்படு, நாழி ஆகிறது".

சரோஜினி புறப்படும் முன் தரையைத் தொட்டு யாருக்கோ நமஸ்காரம் செய்தாள். அழகிய புடவை உடுத்து, வகிட்டில் பளிச்சென்று ஸிந்தூர் கீறி, முகத்தில் ஸ்நோவுடனும், பாதத்தில் மருதாணியுடனும் புறப்பட அலங்காரம் செய்து கொண்டிருந்தாள்.

இவள் அவனுடைய மனைவி சரோஜினி.

புறப்படும்பொழுது மனம் கசிந்தது. ஆனால் தன் மனைவி கூட இருக்கும் உற்சாகத்தில் "புறப்படு, புறப்படு" என்று அவசரப்படுத்தியவாறு திரும்ப வீட்டுள் நுழைந்தான் – ஏதாவது சாமான் விட்டுப் போய் விட்டதோ என்று பார்க்க. ஒன்றுமில்லை. உடைந்து போன துடைப்பத்தைக் கூட விடாமல் எல்லாவற்றையும் கட்டி வண்டியில் ஏற்றியாய் விட்டது. தோட்டத்திலும் ஒன்றுமில்லை – செடி கொடி மரங்கள் எல்லாம் காலியாய் நின்றன. எங்கும் குப்பையும் கூளமும் தான் காணப்பட்டது.

புறக்கடையில் தோட்டிச்சி ஏதாவது கிடைக்குமோ என்ற ஆசையில் காத்துக் கொண்டிருந்தாள். செல்லரித்துப் போன இரண்டு மரப் பலகைகளும், பிளவுபட்ட ஒரு மண் பானையும் நான்கு மூங்கில் துண்டுகளும் அங்கு கிடந்தன. ரொம்ப தாராளமாய் அவைகளைச் சுட்டிக் காட்டியவாறு "எடுத்துக் கொண்டு போ. குப்பை கூளத்தை எல்லாம் நெருப்பு வைத்து விடு, என்ன?" என்றான்.

முன் வாசலில் அயல் வீட்டுப் பெண்கள் சரோஜினியிடம் விடை பெற்றுக் கொண்டிருந்தனர்.

"போய் வருகிறேன், அக்கா", "வருகிறாயா?", "என்னை மறக்க மாட்டாயே?", "கட்டாயம் கடிதம் எழுது". தோழிகள் எல்லோரும் 'நமஸ்காரம், நமஸ்காரம்' என்று விடை கொடுத்தனர்.

புறப்படும் இந்த சமயத்தில் திடீரென்று நினைவு வந்தது. 'இவர்கள் எவ்வளவு அன்னியோன்னியம் நமக்கு. இவர்களை இனிமேல் எப்பொழுதாவது பார்ப்போமோ மாட்டோமா'. ஐந்து வருடங்களாகப் பழகிய இடம். ஒரு முறை படித்துவிட்ட நாவலைப் போல், இந்தச் சூழ்நிலை இனிமேல் காணக் கிடைக்காது. கதைப் பாத்திரங்களைப் போல் இவர்களும் மனதிலிருந்து மறைந்து விடுவார்கள். அவர்களுடைய ஏதாவது விசேஷ குணங்கள் மட்டுமே நினைவிலிருக்கும்: சிரிப்பு, கோபம், ரகசிய ஆசைகள், வெறுப்பு, அன்பு, அல்லது அனுதாபம். தன் வீடும் சாமான்களும் மறந்துவிடும். இவர்களுடைய பெயரும் ஊரும் மறந்து போகும். சுற்றி அலைந்துவிட்டு பத்து வருடங்களுக்குப் பிறகு எங்கேயாவது வழியில் அவர்களைக் காண நேர்ந்தால் 'இவர்களை எங்கேயோ முன்பு பார்த்திருக்கிறோமோ?' என்று தோன்றும்.

பழக்கமான சூழ்நிலை அன்னியமாகிவிடும். 'அப்பொழுது சரி போய் வருகிறேன், நமஸ்கார்'.

மாட்டு வண்டி சரக் சரக் கென்று நகர ஆரம்பித்தது. பலிதத்திற்கு வீண் செலவெல்லாம் பிடிக்காது– அதனால் மாட்டு வண்டி தான் ஏற்பாடு செய்திருந்தான்.

சரோஜினி பின்னால் திரும்பிப் பார்த்தவாறு இருந்தாள். காலேஜ் மாணவனும் பார்த்துக் கொண்டிருந்தான். மேலே பறந்து கொண்டிருந்த காற்றாடியை வெற்றுக் கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தான். கண்கள் பேசவில்லை. சரோஜினி அவனை தூரத்திலிருந்து கவனித்துச் சிரித்துக் கொண்டாள். அவளுடைய கண்களும் ஊமையாயிருந்தன, உணர்ச்சியற்று.

காற்றாடி பறந்து கொண்டிருந்தது. கீழே இறங்கிற்று. போட்டியில் அதன் கயிறு அறுக்கப்பட்டது. ஆனாலும் அது பறந்து கொண்டே இருந்தது.

இனிமேல் சந்திப்பு இருக்கவே இருக்காது என்று சரோஜினி நினைத்துக் கொண்டாள்.

அவன் ஒரே நிலையில் ஒரே லயத்தில் முட்டாளைப் போல் பார்த்துக் கொண்டு நின்றான். அவன் முகம் சிறிதாகிக் கொண்டே போயிற்று. சரியாய்த் தெரியக்கூடவில்லை. அவன் உடற் பயிற்சி செய்வது, குழல் ஊதுவது, உரத்த குரலில் ஷேக்ஸ்பியரை உருப்போடுவது, எதுவுமே அவளுக்கு நினைவில்லை. அவனுடைய பலவீனம் தான் தென்பட்டது. தன் நிலையையும், பாஷையையும் மறந்து விட்டிருந்தான்.

ஏன் அப்படி?

கசியும் கண்களுடன் தொலையில் நோக்கியபடி சரோஜினி நினைக்கலானாள்: 'அந்தச் சிறிய முகத்தை ஏன் இரு கைகளி னுள்ளும் தாங்கி அளவற்ற வாஞ்சையைப் பொழிந்து அந்தப் பலவீன மனதிற்குப் பலம் கொடுக்க முடியும் என்னால்!'

நெஞ்சடைத்தது உணர்ச்சிவசப்பட்டு. உள்ளம் எங்கேயோ பாதாளத்தை நோக்கி இறங்கிக் கொண்டிருந்தது–பிறகு மேலெழும்பியது. அனாயாசமாக கண்களில் இரு துளி நீர். இதோ வண்டி திருப்பத்திற்கு வந்து விட்டது. "அதோ பார், மஹாபாத்ரவின் வீடு".

சரோஜினி கழுத்தைத் திருப்பிப் பார்த்தாள். அங்கு யாரும் இல்லை என்றாலும் தலையில் முட்டாக்கை இழுத்துவிட்டுக் கொண்டாள். முகம் உண்மையாகவே எரிவது போலிருந்தது அவளுக்கு. இங்கிருந்து காற்றாடியின் நூல் வெட்டுப்பட்டுவிட் டது. பெருமூச்சுத்தான் மிஞ்சியது.

"இங்கே பார், இது எங்கள் காரியாலயம். நான் வழக்கமாய் உட்காரும் இடம். அதோ தெரிகிறதே கறுப்புப்படுதா, அதற்குக் கொஞ்சம் பின்னால்தான்"

புறாக்கூண்டு ; பிஜியன் ஹோல்.

கோயில் புறாக்கள் சிறகுகளை அடித்துக் கொள்ளுகின்றன. "அப்புறம் எப்பொழுதாவது நான் இங்கு திரும்பி வர நேர்ந்தால் அந்தப் பக்கத்து அறையில் உட்காருவேன், பார்".

சரோஜினி கேட்டும் கேட்காதவளாய் அமர்ந்திருந்திருந்தாள். கம்பெனியில் வேலை ஆரம்பித்து விட்டிருந்தது. தானியக் களஞ்சியத்தின் சுவர்களில் கூடியிருக்கும் புறாக்களைப் போல் தோன்றினர் அங்கு வேலை பார்ப்பவர்கள்–குர் குர் குர் குர் என்ற முணுமுணுப்புடன் காளை வண்டி கிறீச் கிறீச் என்ற ஓசையுடன் போய்க் கொண்டிருந்தது. ஒவ்வொரு சமயம் அந்த ஓசை மனிதனின் ஓலத்தைப் போல் ஒலித்தது. அதுவும் மனிதனைப் போல் தடுமாறியவாறு, விழுந்து கொண்டு, எப்படியோ ஊர்ந்து நகர்ந்து மேலே போய்க் கொண்டிருக்கிறது தீராத வழி–தீராத தூரம்.

★ ★ ★

சூரியன் நன்கு மேலெழும்பி விட்டான்

புதிய இடம்.

ரயிலிருந்து இறங்கி ஸ்டேஷனுக்கு வெளியில் வரும் பொழுது நடுவயதினான ஒரு உயரமான ஆள் பாதி வழுக்கையாயிருந்த

தலையில் பாகையைக் கட்டிக் கொண்டிருப்பதைக் கண்டனர், பலிதத்தும் அவன் மனைவியும். இவர்களைக் கண்டதும் அவன் கலங்கிப் போய் தலையைக் குனிந்தவாறு 'தண்டம் அம்மா, தண்டம் ஐயா, நான் உங்கள் சப்ராஸி. வண்டி காத்துக் கொண்டிருக்கிறது' என்றான்.

பலிதத் கொஞ்சம் அழுத்தலாக கம்பீரமாய் அவனை இரு முறை பார்த்தான். சரோஜினி சிரித்தவாறு 'உன் பெயர்?' என்று விசாரித்தாள். "ஹூஜூர், என் பெயர் நிதா" லுங்கி, அழுக்கேறின வெள்ளைக் கோட், அதன் மேல் அகலமான பட்டை, பட்டை மேல் பித்தளைத் தகட்டில் பளபளத்தது கம்பெனியின் பெயர். பலிதத்தையும் சரோஜினியையும் மாறி மாறிப் பார்த்தவாறு அவன் கவலையுடன், "எனக்குத் தாயும் இல்லை, தந்தையும் இல்லை. நீங்கள் தான் எனக்குத் தாய் தந்தை. உங்களை நம்பியே காத்துக் கிடக்கிறேன்" என்றான்.

சரோஜினி திரும்ப நகைத்தாள், அவளிடம் இதுவரை யாரும் இப்படித் தஞ்சம் அடைந்ததில்லை. இது தான் முதல் முறை. அனுபவிக்காத தாய்மை அவளுள் நிரம்பி வழிந்தது. முகத்தில் கௌரவம் பிரகாசித்தது. அவனுடைய மெலிந்த உடலும், கசியும் கண்களும், உலர்ந்த உதடுகளும், நரைத்த தலையும், சரியாய் சவரம் செய்யப் படாத முகமும், சுருக்கங்கள் விழுந்த கன்னங்களும், நடுக்கும் கால்களும் அவளுடைய கவனத்தைக் கவர்ந்தன. அவனுடன் பேச விரும்பினாள். "நிதா, நீ என்ன ஜாதி? வீடு எங்கே? குழந்தை குட்டிகள் எத்தனை?" பலிதத் கொஞ்சம் தூரத்தில் பொறுமையற்றவனாய் நின்று கொண்டிருந்தான். 'நிதாய், வா கொஞ்சம்' என்று கத்தினான். பின்பு இன்னும் உரக்க "நிதாய், இங்கு வா" என்று உத்தரவிட்டான்.

"ஹூஜூர் ..." நிதாய் ஓடினான்.

"நீ சப்ராஸிதானே"?

"ஆமாம் ஐயா."

"எவ்வளவு காலமாய் வேலை பார்க்கிறாய்?".

"இருபது வருடங்களாகி விட்டன, ஹூஜூர்"

"இருபது வருடமா?". அடங்கிக் கிடந்த கோபத்தை எல்லாம் ஒருமிக்க கொட்டினான் பலிதத்! "கிழவா, ரயில் வந்தது, போயிற்று. நீ கவலையற்று வெளியிலேயே நிற்கிறாய். ரயிலிலிருந்து எங்களை இறக்கிவிட வரவில்லை. சாமான்களை இறக்கவும் உதவவில்லை. வெளியில் நின்று கொண்டு வம்பளக்கிறாய். நீ பெரிய வம்பன்." தன் பலத்தைக் காண்பிக்க பலிதத்திற்கு இது முதல் வாய்ப்பு. இப்படித்தான் அந்த இரும்பு

மனிதனும் அதிகாரம் செய்தான் அன்றொரு நாள். அவனைப் போலவே ஆக வேண்டும் என்று பலிதத் கனவு கண்டான்.

யாரையாவது மிரட்டி அதட்டி அதிகாரம் செய்யும் பொழுது அவன் பேசாமல், காயம்பட்டவனைப் போல் தன் காயம் தெரிய நடந்து கொண்டால், அப்பொழுது அவனை மேலும் மிரட்டுவதில் கிடைக்கும் ஆனந்தம் சொல்லி முடியாது. வசவு மாரி பொழியும் வாய். கொதிக்கும் தீக்குழம்பில் வாட்டப்பட்டதைப்போல் சப்திக்கும் வார்த்தைகள். பேச்சாலேயே குத்துவிட விரும்புகிறது மனம். இதைப் பரீட்சித்துப் பார்ப்பதற்காகவே பலிதத்தின் உள் இருந்த பெரிய மனிதன் விழித்தெழுந்தான். கோபம் மேலிட்டு அவன் பெரியவனாகிவிட்டான்.

"வேலை ஒன்றும் தெரியவில்லை, கற்க வேண்டும் எல்லாம். ஏன் இப்படி கோர்வையற்று இருக்கிறது? இப்படி நடக்காது கம்பெனியின் வேலை, சொல்லிவிட்டேன். ஒரு கீறல் கீறி உன் வயிற்றுப்பாட்டை முடித்துவிட முடியும் என்னால், தெரியுமா?"

நிதாய் பயந்து போய்விட்டான். அவனுடைய உடல் யந்திரம் ஆட்டம் காட்டியது. அவனுக்கு வயதாகி விட்டது. அவன் தஞ்சம் தேடி அடைந்த குடிசையின் கூரை ஒழுக ஆரம்பித்துவிட்டது. வயிற்றுப் பாட்டிற்காக முழு மனதுடன் உழைக்க விரும்பினான். ஆனால் அவனால் முடியவில்லை. பரபரத்தான். கால்களிரண் டும் வெவ்வேறு திசையை நோக்கி ஓடின, கைகள் மற்றொரு திசையை நோக்கி எப்படி எல்லாமோ குனிந்தும் குறுகியும் ஓடினான் ஒரு காளை வண்டியை நோக்கி. வண்டிக்காரன் இலையில் புகையிலையைச் சுருட்டி சுருட்டு செய்து கொண்டிருந்தான். நிதாய் முகத்தில் கடுமையை வரவழைத்துக் கொண்டு, யஜமானனிடமிருந்து கிடைத்த வசவுகளை வட்டியும் முதலுமாய் சேர்த்து வண்டிக்காரனைத் திட்ட ஆரம்பித்தான். "உன்..."

வண்டிக்காரன் சோம்பி உட்கார்ந்திருந்தான், சண்டை வருகிறது என்றதும் சுறுசுறுப்பாய் எழுந்தான். "என்ன சொன் னாய்? கிரயம் பேசவும் இல்லை, செல்லாக் காசு கூட உன் கையிலுமில்லை. வீணாக அதட்டுகிறாயா? ஜாக்கிரதையாய்ப் பேசு, இங்கே யாரும் உன் வாடிக்கைக்காரர் இல்லை. உன் மிராசில் வாழ்பவனுமல்ல நான். ஹூம்! திட்டவா செய்கிறாய்? இதோ பார்"

ஆரம்பித்து விட்டது வாய்ச் சண்டை. நிதாயி தன் இரு கைகளையும் ஆட்டி ஆட்டி வசைமாரி பொழிந்தான். வண் டிக்காரனும் விட்டுக் கொடுக்கவில்லை. கூட்டம் கூடி விட்டது.

அந்தப் பக்கம் பலிதத் தானாகவே சாமான்களை இழுத்து ஒரு பக்கமாய் சேர்த்துக் கொண்டிருந்தான். சரோஜினி உலவிக் கொண்டிருந்தாள். கூலி ஆட்கள் பலிதத்தைச் சூழ்ந்து கொண்டு தொந்திரவு செய்தனர். வண்டிக்காரன் சண்டை போட்டுக் கொண்டே தன் வண்டியுடன் கிளம்பி விட்டான். போகும்பொழுது "பாபு! பாபு என்ன வேண்டிக் கிடக்கு? எத்தனையோ பாபுகளை பார்த்தாயிற்று – " என்று கத்திவிட்டுப் போனான்.

திட்டிக் கொண்டே, வியர்வை ஒழுக நிதாய் திரும்பி வந்தான். பலிதத்திற்குக் கோபம் பொங்கிற்று. தானே போய் அங்கு நின்ற மற்றொரு காளை வண்டிக்காரனிடம் பேரம் செய்ய ஆரம்பித்தான். "எவ்வளவு கேட்கிறாய்?"

"மூன்று ரூபாய்"

"இரண்டு ரூபாய் தான்"

"கிடையாது" என்று மறுத்துவிட்டான் வண்டிக்காரன்.

"சரி புறப்படு. ஏ, சப்ராஸி, சாமான்களை வண்டியில் ஏற்று"

"ஜி ஹுஜூர்"

"வீடு சரியாயிருக்கிறதா?"

"ஆம் ஐயா".

புத்தம் புது ஆபீசர் தன் உருவத்தைக் காட்டி விட்டார். சப்ராஸி அதைப் புரிந்துகொண்டு விட்டான்.

சரோஜினி தன் புதிய வீட்டைப் பார்த்தாள். முன் புறத்தில் ஒரு தோட்டம், அதற்குப் பின்னால் வீடு, நிறைய இடம். வீடு நிசமாகவே பெரிது தான். பழையது போய்ப்புதிது வந்தது. வண்டியிலிருந்து இறங்கி ஒரு முறை நன்றாய் சுற்றிப் பார்த்தாள். சாமான்கள் வீட்டு நடுவில் குவிக்கப்பட்டன. அந்த நிமிடம் முதல் அது அவளுடையது ஆகிவிட்டது—கண் மூடித் திறப்பதற்குள்! பார்த்தவாறே மனதில் கற்பனை செய்து கொண்டாள்— முன் அறை எது, படுக்கை அறை எங்கே, உக்கிராணம், சமையலுள் எங்கே என்று சாமான்களைத் தூக்கிக் கொண்டு வைத்த நிதாயிக்கு மூச்சு வாங்கியது, துவண்டு போனான். "வேலைக்கு ஒரு ஆளையும் ஏற்பாடு செய்திருக்கிறேன். அம்மா. நல்ல ஜாதியில் பிறந்தவன். அழைத்து வரவா?" "கேட்பானேன்? சீக்கிரம் அழைத்து வா, மலிவு தானே?" என்றான் பலிதத்.

"நீங்கள் எது கொடுத்தாலும் சரி". பலிதத்தின் மனம் குளிர்ந்திருந்தது. வேடிக்கையாய்ப் பேசத் தோன்றியது. "அட முட்டாள். பசு கறுப்பாயிருக்க வேண்டும், வால் தலையைத் தொட வேண்டும். தீனி குறைவாய் இருக்கவேண்டும், ஆனால் பால் நிறையத் தரவேண்டும், என்று சொல்லிக் கேட்டதில்லையா

நீ?" என்றான். "என்ன அறிவு உங்களுக்கு, ஐயா! ஆஹாஹா. தர்ம அவதாரமே தான் நீங்கள், என்ன பேச்சு! அம்மா, கேட்டீர்களா?" நிதாயி முகஸ்துதியில் இறங்கி விட்டான். பிறகு சரோஜினியின் காதருகில் குசு குசு வென்று, ஆனால் பலிதத்திற்கும் எட்டும்படி "ஒருவர் மட்டுமே என்றால் தான் என்ன? ரொம்பப் பெரிய அதிகாரி இவர். நன்றாக வேலை வாங்குவார். வேலை இவருக்கும் நன்றாய்த் தெரியும். பிற அதிகாரிகளைப் போலல்ல. வேலையில் ராஹு இவர், துரையின் அன்பிற்குப் பாத்திரமாய் விடுவார் கட்டாயம் –"

"என் உடைகளை முதலில் வெளியில் எடு. துரையைப் போய்ப்பார்த்துவிட்டு வருகிறேன்".

"குளிக்க வேண்டாமா?"

"நீ எடுத்துக் கொடேன். ஏன் புரிந்து கொள்ளலாமலிருக் கிறாய்? புது இடமாச்சே இது!"

சரோஜினி உடைகளை எடுத்துக் கொடுத்தாள். அவன் உடை மாற்றிக் கொண்டிருந்தான். இந்தப் பக்கம் நிதாயி, "ஆளை அழைத்து வரவா, அம்மா"? என்றான்.

"வேலையாளா"?

யார் இந்தப் பேச்சை முதலில் எடுத்தார்? நினைவு வந்தது. மனதைப் பிழிந்தது. ஒரு உடைந்து போன நினைவு, தொடும் முன்பு கலைந்துவிட்டது. நீண்ட மூச்செடுத்தாள்.

"இருக்கட்டும். வேலையாள் எதற்கு? நாங்கள் இரண்டே பேர்தானே. நானாகவே செய்து கொள்ளுகிறேன். நீயும் இருக் கிறாய் உதவி செய்ய." "உலகம் என்ன சொல்லும் அம்மா? துச்சப்படுத்துமே! இந்த அதிகாரியின் வீட்டில் வேலைக்கு யாருமேயில்லையா என்று இகழும். ஐயா ஆபீஸர் அல்லவா? விடிந்ததும் விடியாததுமாய் பத்துவித மனிதர்கள் வருவார்கள் அவரைக் காண. நான் இருக்கும் பொழுது அவரை எவரும் நெருங்க விடுவேனா என்ன? வேலை ஒன்றும் அதிகம் இல்லை தான். எனக்கு வயதாகி விட்டது. இரவில் வாத ஜுரம் வந்து விடுகிறது. எத்தனையோ ஆபீஸர்களுடன் நான் வேலை பார்த்தாகிவிட்டது. நானே சமையல் வேலை, வீடு கூட்டுவது, விறகு வெட்டுவது எல்லாம் செய்திருக்கிறேன். இப்பொழுது எனக்குக் கொஞ்சம் உடம்பு சரியாயில்லை. அது நன்றாயிருக்கும் பொழுது என் வேலைத் திறமையைப் பார்ப்பீர்கள். வயிற்று வலியும் இருக்கிறது. ஆனால் இதெல்லாம் சாசுவதமல்லவே. என் உடம்பு தேறும் மட்டும் யாராவது உதவிக்கு இருந்தால் நல்லது".

"இந்த வீட்டில் யார் யார் இருந்திருக்கிறார்கள், நிதாயி"?

"பதினெட்டு உத்தியோகஸ்தர்களிடம் வேலை பார்த்து விட்டேன், அம்மா. இந்த வீட்டில் நான்கு பேர் இறந்தும் போனார்கள்."

"இறந்து விட்டார்களா"?

"ஆமாம், இறந்து விட்டார்கள். இதற்கெல்லாம் யாரும் பொறுப்பாளி அல்லவே. பிறப்பும் இறப்பும் எப்பொழுதும் உண்டு. நானும் ஒரு நாள் கண் மூடத்தான் போகிறேன். உங்களிருவர் பாதங்களை நமஸ்கரித்தபடியே எனக்கு மரணம் வரவேண்டும் என்று மட்டுமே நான் கடவுளை வேண்டிக் கொள்ளுகிறேன். அப்பொழுது நேரே வைகுண்டத்திற்கே போய் விடுவேன். வாழ்நாளெல்லாம் ஆபீசர்களுக்காக உழைத்தேன். இறக்கும் தருணத்தில் ஆபீசரைப் பார்க்காமலேயா கண் மூடுவேன்? ஆமாம், அம்மா, நான்கு பேர் இதே அறையில் பிராணனை விட்டனர். நானே கூடப் போய் அவர்கள் குடும்பங் களை ஊர் சேர்த்து விட்டு வந்தேன். அதைத் தவிர இரண்டு நாட்டுப் பெண்களும் இங்கு இறந்தனர்; ஒருவருடைய மனைவி, நாலைந்து குழந்தைகள் எல்லோரும் இங்கு இறந்தனர். அவர்களுக்காகவும் நான் நெருப்பு வைத்தேன். தலை முழுகினேன். எந்த வேலை என்றாலும் நான் பின் வாங்கின தில்லை. சர்ட்டிபிகேட் இருக்கிறது என்னிடம் – காண்பிக்கவா?"

"வேறு வாடகை வீட்டில் இருப்பது தானே?"

"அதனால் என்ன லாபம்? இங்கு தான் சரியாயிருக்கிறது. எல்லாவித சௌகரியங்களும் உள்ளன, வாடகையுமில்லை. ஆபீஸ் பக்கத்திலேயே இருக்கிறது. கடைகளும் சமீபம் தான்".

"ஆனால் எத்தனையோ பேர் இங்கு இறந்ததாகச் சொல்லு கிறாயே?" "மரணம் எங்கும் நேரிடலாமே, அம்மா. விதியை யாரால் மாற்ற முடியும்? வீட்டை விட்டு யார் போவார்கள்? இதோ நாம் அமர்ந்திருக்கிறோமே இந்த மண், இதன் கீழ் என்ன இருக் கிறது என்று யாருக்குத் தெரியும் ?" "ம்? என்ன சொல்லுகிறாய்?" கண்களை விரித்து நன்றாய்க் கவனித்தாள் சரோஜினி, என்ன சொல்லுகிறான் இந்த மனிதன்? உடல் நடுங்கியது.

"அதில்லை அம்மா. நான் சொல்லுவது என்னவென்றால் இத்தனை பேர் இறக்கிறார்களே, இவர்கள் எல்லாம் எங்கே போகிறார்கள்? மண்ணுள் தானே? இந்த உலகமே ஒரு சவப் பெட்டிதான். இந்த மண்ணில் எல்லோருடைய எலும்பும் சதை யும் கலந்திருக்கின்றன. அவர்கள் எங்கே போனார்கள்? இந்த மண்ணுள் தானே? இந்த பூமி, வசுதா, அசுரனின் எலும்புக்

குவியலின் மேல் நாம் வீடு கட்டுகிறோம். அந்தக் குவியலின் சாற்றை உறிஞ்சி பீர்க்கை, பாவக்காய், கீரை, எல்லாம் வளருகின்றன. நாம் அவைகளை உண்கிறோம். அதே சாற்றால் உருளைக் கிழங்கு காரட்..."

"விட்டு விடு போதும் இந்தப் பேச்சு–கேட்கவே பிடிக்கவில்லை" "ஒன்றுமில்லை அம்மா, எல்லா செடி கொடி மரங்களும் இந்த எலும்பு சதை உரத்தை உண்டு வளர்ந்து பலனளிக்கின்றன. அந்தச் சாறு தான் பூவும் பழமுமாய்....

'விட்டு விடு என்று சொன்னேனே. இதை எல்லாம் கேட்டால் எதையுமே சாப்பிடப் பிடிக்காது..."

"அம்மா, பிடிக்காது தான். அதனாலேயே நான் குறைவாய்ச் சாப்பிடுகிறேன். இது எல்லாம் அசைவம், பிறர் உதிரத்தால் விளைபவை என்று நினைவிற்கு வந்து விடுகிறது. கடவுள் அப்படி ஒரு அவல நிலையை ஏற்படுத்திவிட்டார். இங்கு பிறருடைய ரத்தத்தையும் மாமிசத்தையும் உண்டாலன்றி வாழ முடியாது..."

"அம்மாடியோவ்"...

சரோஜினிக்கு அந்தக் குற்றமற்ற மண்ணில் எங்கும் எலும்பும் ரத்தமும் மாமிசமும் தெரிவது போலிருந்தது. அவளுடைய வெளிறிய முகத்தைப் பார்த்து நிதாயி சந்தோஷப்பட்டான். இனி மேல் அவளால் நிம்மதியுடன் தூங்க முடியாது. எஜமானித்தனம் நழுவி விட்டது. பயந்து நின்ற ஒரு பெண்ணாக மட்டுமே அவள் மிஞ்சினாள். "இது வெறும் அஞ்ஞானம் தான். வந்து–போகும் வாழ்க்கையின் பெயரே உலகம் என்று தெளிந்தால் மாயை விலகி விடுகிறது. இருக்கட்டும், இதெல்லாம் எதற்கு? எல்லாம் விதியின் செயல், வேறு என்ன? சொல்லுங்கள், வேலைக்கு ஆள் கொண்டு வரவா?"

"கட்டாயம் கொண்டு வா. யாருமில்லை இங்கு. ஏதோ வெறிச்சென்றிருக்கிறது."

"ஒரு பணிப் பெண்ணையும் ஏற்பாடு செய்கிறேன். இவ்வளவு பெரிய வீடு; ஆள் நடமாட்டம் இருந்தால்தான் வீட்டிற்கு அழகு. யஜமானரும் நானும் அநேகமாய் வேலையாய் ஊர் சுற்றிக் கொண்டு தான் இருப்போம். வீட்டில் ஒன்றிரண்டு ஆள் இருந்தால் நல்லதுதானே. மலிவாய் ஒருத்தியை ஏற்பாடு செய்கிறேன்–சாப்பாட்டுடன் மூன்று நான்கு ரூபாய் கேட்பாளாயிருக்கும்–"

"சரி, கொண்டு வா. சம்பளம் எவ்வளவு என்று–"

"அதை எல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன், அம்மா. இது பொன் விளையும் உத்தியோகம். யஜமானுக்குத் தெரிந்தும்

கண்டு கொள்ளாமல் இருப்பார். எல்லாம் நான் ஏற்பாடு செய்கி றேன். வந்து போன பிற உத்தியோகஸ்தர்கள் என்ன தான் உண்ணவில்லை, எதைத் தான் குடிக்கவில்லை, எதைத்தான் வாங்கிக் கொள்வில்லை? இங்கு பணத்தை சாக்குகளில் கொட்டித் தான் அளக்க வேண்டும் – எல்லாம் நான் செய்து தரு கிறேன். நீங்கள் எதற்காகவும் கவலைப்பட வேண்டாம். நீங்கள் செய்ய வேண்டியது ஒன்று தான். பிற வீட்டு அம்மாமார்கள் உங்களைக் காண வரும் பொழுது உலர்ந்த வாயுடன் என்னைக் கதவின் பக்கத்தில் அழைத்து – 'நிதா, இன்று வீட்டில் அரிசியே இல்லை. எங்கிருந்தாவது கடனாவது வாங்கி வரக் கூடாதா? என்று கதவின் பக்கத்தில் ரகசியக் குரலில் சொல்ல வேண்டும். ஆனால் அது அவர்கள் வரை எட்டும் படி இருக்க வேண்டும். எஜமானரும் ஆபீஸ் கணக்குப்பிள்ளையிடமிருந்து மாதம் பத்து இருபது ரூபாய் கடன் வாங்கிக் கொள்ளட்டும்–"

"கடன் வாங்கி பணியாட்களை வைத்துக் கொள்வதா என்ன?"

"இல்லை அம்மா. அது வெறும் புரட்டு வித்தை மட்டுமே. புரிய வில்லையா உங்களுக்கு? நீங்கள் கடன் வாங்கி வீடு நடத்துவ தாகப் பிறர் நினைக்க வேண்டும். அவர்களுடைய பொறாமைக் கண்களில் மண்ணைத் தூவினாலொழிய பணம் வளராது. இல்லாவிட்டால் அவர்கள் உங்களை விட்டு விடுவார்களா?"

சரோஜினி ஒன்றும் சொல்லவில்லை. வயிற்றுப் பாட்டின் இந்தப் புதிய இலக்கணம் அவளை யோசனையிலாழ்த்தியது. இவன் பெயர் நித் (நிலையானவன்) இவன் வாயில் இருப்பது பாவம்.

★ ★ ★

மிஸ்டர் "ஷா"

வடக்கத்திய மொழிகளில் இந்த எழுத்து யுகயுகமாய் இனிமையாக சிநேக உறவை அறிவிக்க உபயோகப்பட்டு வருகிறது. ஆனால் மனிதர் 'ஷா' வின் ஆக்கத்தில் சிநேகத்தின் அம்சம் கூடக்கிடையாது. கறுத்த, பருத்த, குட்டையான மனிதர். மண் வெட்டியைப் போன்ற முகம். கடுமையானவர். உணர்ச்சியற்றவர், நிஷ்டூரமானவர். தலையில் கதம்பத்தின் பூவைப் போன்ற குட்டை மயிர், கண்ணாடியைப் போன்ற கண் கள், தடி உதடுகளில் எப்பொழுதும் ஒரு கோணல்–அதனால் இடது பக்கத்துக் கன்னம் தொங்கியே இருந்தது. இயற்கையற்ற தடிமனான கழுத்து, மிருகத்தின் பாதத்தைப் போன்ற பலமான கைகள், பானைவயிறு, எப்பொழுதும் கவனமாயிருக்கும்

தோற்றம்: குஸ்தி வீரன் குஸ்தி மைதானத்தில் நின்றிருப்பதைப் போல.

ஆனால் இந்தக் குஸ்தி வீரனிடம் வாலிபம் இல்லை; வயது தெரிந்தது.

மரியாதை கிடைக்கக் கிடைக்க அகங்காரமும் அதிகமாயிற்று; வீட்டில் அமைதியின்மை ஏற ஏறச் சிடுசிடுப்பும் ஏறிற்று; தன் உத்தியோக உயர்வுகளுக்காக அநேக வித இழப்புக்களைப் பொறுக்க வேண்டிவந்தது. அந்த இழப்புகளின் உணர்வு மெல்ல மனதில் நெருப்பை மூட்டி விட்டது.

அப்படிப்பட்ட மனிதனிடம் அன்பை எதிர்பார்க்க முடியாது. எல்லோருடனும் ஒத்து வாழவும் அவனால் ஆகாது. பூமி அதிரும் படியான நடை, மரத்துப் பறவைகள் கூட பயப்படும்படியான குரல், பிறருள் கிலியைத் தட்டிவிடும் கோபம்–இதெல்லாம் உள்ள மனிதன் தனி மனிதனாய்த்தான் வாழ்வான். அக்கம் பக்கத்திலுள்ளவர்களை அவர் எப்பொழுதாவது கவனித்தால் அவர்களிடமிருந்து எதை வசூலிக்கலாம் என்ற யோசனையுடன் தான் கவனிப்பார்–சிநேகம் செய்து கொள்வதற்கல்ல. அவருக்கு மனிதர்களைக் காணவே பிடிக்காது. அவர் கண்டு களிப்பது உயிரற்ற பொம்மைகளேயே. அவருடைய உலகம் அவர் ஆட்டி வைக்கும் பொம்மைகளை மட்டுமே கொண்டது. இந்த மொம்மலாட்டத்தினூடே குதிரையை ஓட்டி அந்த பொம்மை உலகத்தில் கலவரத்தை எழுப்பி, ஒரு பொம்மை விழுவதையும், மற்றொன்று தலை கீழாய் நிற்பதையும், வேறொன்று துண்டு துண்டாய் உடைந்து போவதையும் கண்டு களிக்க அவருடைய மனவிகாரம் அவரைத் தூண்டியது. பிறர் அவரை ஸாடிஸ்ட் என்று திட்டினால் தான் என்ன?

இந்த வித மனவிகாரத்தை உடைய 'ஷா' வின் பெயர் ஸாஹு–'ஷா' ஆங்கிலத் திரிபு மட்டுமே. வெளியில் புறப்படும் பொழுது துரை வேஷம் தான் – ஸூட் அணிந்து, தலையில் தொப்பி, வாயில் சுருட்டு, கையில் பிரம்பு! பந்தோபாத்யாய 'பானர்ஜி' ஆகியிருப்பது போல் பரம்பரை 'ஸாஹு' வின் ஆங்கிலத் திரிபு அவருக்கு இனிமையாய் ஒலித்தது.

மிஸ்டர் 'ஷா' சாதாரண உத்தியோகஸ்தர் அல்ல–கம்பெனியின் தலைமை அதிகாரி. இந்தப் பிரும்மாண்டமான ஷா உட்கார்ந் திருந்தார். இரு புறமும் மர டிரேக்களில் ஏகப்பட்ட ஃபைல் கள்–முக்கியமானவை. பெரிய அறை, கதவிற்கும் ஜன்னலிற்கும் கனமான திரை. வெளிச்சம் உள்ளே வர முடியாது. மேஜை மேலிருந்த ஒரு மின்சார விளக்கு அறையுள் ஒளியைப் பரப்

பியது. மேஜையின் மறு புறத்தில் காண வருபவர்கள் அமர ஒரு சாதாரண நாற்காலி, ஒரு கை ஒடிந்த கையுள்ள நாற்காலி மற்றொன்று ஒரு ஸ்டூல், காண வருபவரின் பதவியை அனுசரித்து 'ஷா' இம்மூன்று ஆசனங்களில் ஒன்றை அளிப்பார். யோசித்துத் தரம் பிரிக்க அவருக்கு நேரம் இல்லை என்றால் வந்தவர் நிற்கத்தான் வேண்டும்.

அறையின் ஒரு மூலையில் கோணியினால் திரையிடப்பட்ட ஒரு மறைவு—அங்கு ஒரு சேம்பர் பாட்டும், கபோடும் இருந்தன—மேற்கத்திய பண்பு இங்கும்! அவருடைய உச்ச அதிகாரத்தின் சின்னம். காற்றில்லா அறையின் மூத்திர நெடி குப்பென்று வீசியது. அறையின் மற்றொரு மூலையில் திரையின் மறைவில் அவருக்கு வேண்டிய சாப்பாடு, குடி நீர், ஃப்ளாஸ்கில் தேநீர் முதலியவை வைக்கப்பட்டிருந்தன. ஒரு டவல் தொங்கியது கொடியிலிருந்து. அமர்ந்து உண்ண ஒரு மேஜை. அதன் மேல் முகம் பார்க்கும் கண்ணாடி.

மிஸ்டர் 'ஷா' எழுதிக் கொண்டிருந்தார். காகிதத்துடன் ஏதோ விரோதம் உள்ளவர் போல் பேனாவை இறுகப் பிடித்து அழுத்தி எழுதிக் கொண்டிருந்தார். முகம் இறுகி, உள்ளத்தில் எழும் குரூரத்தையும் கோபத்தையும் பிரதிபலித்தது. எப்பொழுதாவது மனதில் எழும் தர்க்கத்தையும் கபடத்தையும் கூட அவர் முகத்தில் காணலாம்.

மேஜை மேல் வைத்திருந்த மணியை அடித்தார் சுவரில் சாய்ந்தவாறு சோம்பி உட்கார்ந்திருந்த சப்ராஸி எழுந்து ஸலாம் செய்தபடி "ஆக்ஞை??" என்றான்.

"வரச் சொல்" என்று உத்தரவு ஆயிற்று.

"ஹுஜூர்"

வெளியில் போய்ப் பார்த்தான் சப்ராஸி. வரிசை வரிசையாக குமாஸ்தாக்கள் வேலை செய்து கொண்டிருந்தனர்—பிறகு தனி சிறு அறைகளில் சிறிய உத்தியோகஸ்தர்களும், தலைமை குமாஸ்தாவும். சாஹப் கூப்பிடு என்று சொல்லிவிட்டார். யாரையாவது கூப்பிடத்தான் வேண்டும்! ஆனால் யாரை? மூளை வேலை செய்தது. நேரே தலைமை குமாஸ்தாவை அணுகினான். அவர் தாம் சுமை மாட்டைப் போல் எல்லா கஷ்டங்களையும் தாங்கிக் கொள்ளும் சக்தி உடையவர்.

"துரை கூப்பிடுகிறார், ஐயா!" என்றான்.

பெரிய பாபு வேகமாய் எழுந்து அறையை நோக்கி ஓடினார். ஓடிக்கொண்டே கோட் பட்டன்களைச் சரியாய்ப் போட்டுக்

கொண்டார். துரை எழுதிக் கொண்டிருந்தார்–நிற்க வேண்டி வந்தது. தலையைத் தூக்காமல் கண்களை மட்டும் உயர்த்தியபடி "வேலை முடிந்ததா" என்றார். "என்ன வேலை"? என்று அவர் அறியாமலே கேட்டுவிட்டார் தலைமை குமாஸ்தா.

"என்ன வேலை என்றா கேட்கிறீர்? எத்தனை முறை தான் சொல்லுவது? இத்துடன் பதினாறு முறை ஆகிறது. செய்தாயா இல்லையா சொல்?" என்று கர்ஜித்தார் மிஸ்டர் 'ஷா'.

அவசரத்தில் "ஆய்க் கொண்டிருக்கிறது, இதோ ஆய்விடும். நேற்றிரவு முழுவதும் அதே வேலையாய்த்தான் இருந்தேன்" என்று சொல்ல வேண்டி வந்தது.

"சரி போ -- இன்னமுமா முடியவில்லை? பிரயோசனமற்றவர் கள்". முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு தலைமை குமாஸ்தா வெளியேறினார். வெளியில் வந்த பிறகுதான் தாராள மாய் மூச்சு விட முடிந்தது அவரால். வேலை என்ன என்று அவருக்குத் தெரியாது–ஆயிரம் வேலை இருக்கலாம். முடிந்து விட்டது என்று சொல்லாமல், பாக்கி இருக்கிறது என்று சொன் னது தவறாகிவிட்டது. தான் எந்த வேலையைப்பற்றி என்ன பதில் சொன்னோம் என்று அவருக்குப் பிரக்ஞை இல்லை. கேள்வி கேட்டால் பதில் சொல்லித்தானே ஆக வேண்டும். கேள்வி பாதி ராத்திரி டெலிஃபோன் மூலமும் கேட்கப்படுவ துண்டு–'வெவ்வேறு டிப்போக்களில் எத்தனை மாடுகள் இருக்கின்றன? தந்தி மூலம் தெரிவி' என்றாவது அல்லது 'இந்த வருஷம் எத்தனை ஏக்கர் பூமியில் எவ்வளவு புகையிலை விளைந்தது? தந்தி அனுப்பு' என்றாவது இருக்கும்.

பதில் தந்தி மூலம் அனுப்பாமல் முடியுமா? விவரங்களைச் சேகரித்து அனுப்பாவிட்டால் அவர் வேலையில் நிலைக்க முடியுமா?

மிஸ்டர் 'ஷா' தனியாயிருந்தார் அறையில். காகிதத்தின் மேல் பலமாய் பேனா ஓடிக் கொண்டிருந்தது.

வெளியில் ஷனாயின் இனிமையான ஒலி. கலியாணம் போலும். அந்த இனிமையின் ஒரு அலை அவரை எங்கோ கடந்த காலத்திற்கு இழுத்துக் கொண்டு போயிற்று.

வெகுண்டெழுந்தார் அவர். ஓ! மனிதன் பிறப்பதும், மணப்பதும், குடும்பம் நடத்துவதும், மரிப்பதும் வெகு சாதாரண விஷயங்கள் தாம். ஆனால் மனதைச் சீண்டிவிடும் விஷயங்கள். வெளியில் கலியாண அமளி. ஊர்வலம் போய்க்கொண் டிருந்தது, ஷனாய் இனிமையைப் பரப்பிக் கொண்டிருந்தது. கள்ளுண்டதைப் போலிருந்தது. அவருடைய மனமயக்கம்.

திரும்பத் திரும்ப அதே விஷயம். அமைதி கிடையாது. வரிசை வரிசையாய் மாட்டு வண்டிகள் கிறீச் கிறீச் என்று சப்தித்துக் கொண்டு செல்வதைப் போன்ற ஒரு உபாதை.

மப்பு மூடியதைப் போன்ற மூட்டமான வாழ்வு. பன்றிகளைப் போல் சேற்றில் புரண்டாலும் வாழ விரும்பினர் உலகத்தோர். இதுதான் வாழ்க்கை போலும். ஷனாயின் இனிமையான நாதம் தூரத்தில் கேட்டுக் கொண்டிருந்தது. மனம் அடித்துக் கொண்டது.

நடக்கட்டும். எப்படி நடக்கிறதோ. பேனா திரும்ப ஓட ஆரம்பித்தது. முகத்தில் குரூரமான ஒரு புன்னகை. மனதின் எங்கோ ஒரு பாகத்தில் மத்தாப்பைப்போல் நினைவுகள் எழுந்தன—சிகப்பு, ஊதா, நீலம், மஞ்சள் பூக்களைச் சொரிந்து கொண்டு. அன்றாட உணர்வு உரக்க எதிர்த்துக் கொண்டிருந்தது இந்நினைவுகளை—இது பலவீனம், இது பொய், துச்சம், என்று.

அவர் சாதாரண மனிதர் அல்லவே. இந்த ஆபீஸின் டிக்டேட்டர் அல்லவா!

டிக்டேட்டர்! பலருடைய பாக்கியத்தை, ஜீவனோபாயத்தை ஒரே தட்டால் வீழ்த்த முடியும் அவரால். வாய்க் கவளத்தைப் பறி கொடுத்தால் குனியாத தலை கூடத் தானாகக் குனியும். மனிதன் பயத்தில் அழக்கூடச் செய்வான். எவ்வளவுதான் சிநேகமிருந்தாலும் ஒரு மனிதனின் உடமை பறி போகும் பொழுது பத்துப் பேர் அதைப் பிடுங்கிக் கொள்ளப் பார்ப்பார்கள். அநேக முயற்சிகள் செய்வார்கள். அப்பொழுது சிநேக பாவம் காற்றில் பறந்து போய்விடும். கொஞ்சம் ஆசை காட்டி சண்டை மூட்டி விடுவது வெகு சுலபம். அப்புறம் பார்க்கவேண்டும் மனித உருவத்தில் மிருகங்கள் சண்டையிடுவதை! அடித்தும், புடைத்தும், தள்ளியும் உருட்டியும், கிள்ளியும் பிறாண்டியும் சண்டைபோடுவார்கள். அவர்களுடைய கர்ஜனை ஆகாயத்தையே கிழிக்கும். தெரு நாய்களின் சண்டையோ என்றும் தோன்றும்.

முகமும் கன்னங்களும் பளபளக்க வாலிபர்கள் வருகிறார்கள் வேலைக்கு. கண்களில் வெற்றி பெறும் நம்பிக்கை, வேலையில் உற்சாகம், நடையில் தாளம், உடலில் உல்லாசம். ஒன்றிரண்டு நாள் செக்கு மாட்டைப்போல் உழைப்பார்கள். பிறகு கொஞ்ச நாள் அதே சூழ்கஞ்சிக்கான போராட்டம் நடக்கும். அப்புறம் மலர் சூம்பிப் போகும். வாலிபம், ஏறும் வயதிற்கு முன் தலை குனியும். சூம்பிப் போன கன்னங்களில் சொரசொரப்பான

தோல், காயம் பட்ட ஒளியற்ற கண்கள். அவை யாரையும் நேருக்கு நேர் பார்க்கப் பயப்படும். அப்புறம் அவனும் ஒரு யந்திரம் தான். சூர்யோதயத்தையோ, சூர்யாஸ்தமனத்தையோ காண அவன் பரபரக்க மாட்டான். விளையாடவோ, விளையாட்டுக்களைக் கவனிக்கவோ அவனுக்கு ஞாபகமே இராது. புத்தகங்களைப் படிப்பதிலிருந்து கிட்டும் ஆனந்தத்திலிருந்து நண்பர்களுடன் அரட்டை அடிப்பதில் கிட்டும் ஆனந்தம் வரை எல்லா ஆனந்த உணர்ச்சியும் உயிரற்றுப் போய் விடும். வெறும் யந்திரமாக மாறி விடுவான். உட்கார் என்றால் உட்காருவான், நில் என்றால் நிற்பான். பூச்செண்டுடன் வந்து ஸலாம் செய்வான். உயிரற்ற குரலில் எல்லோருடனும் சேர்ந்து புகழ் பாடுவான். ஒரே ஒரு உணர்ச்சி மட்டுமே மிஞ்சி நிற்கும்—சந்தர்ப்பம் கிட்டினால் முன்னேறி சிதறிக்கிடக்கும் தானியங்களைப் பொறுக்கி எடுத்துக் கொள்ளுவான்—"இன்னும் ஒரு பிடி, ஸர், இன்னும் ஒரு பிடி கொடு கடவுளே! ஒரே பிடி, போதும்".

மற்றொரு பக்கத்து நிலையை அனுமானிக்க முடியும். அவனுடைய மனைவி, மருதாணி இட்டு, அரக்கு வளை அணிந்து தேவியைப் போல அலங்காரத்துடன் வந்தவள். தரித்திரமும், அதில் பிறந்த உயிரற்ற குழந்தைகளும் எல்லாமாகச் சேர்ந்து விஷங்கலந்த பயங்கரமான கர்ச்சனையுடன் அவளை உருக்குலையச் செய்து விடுகின்றன. மரண தேவதையின் விளம்பரக் கருவியோ என்று ஐயுறும்படி அவள் ஓயாமல் "மரணத்தை நமஸ்காரம் செய். வாழ்க்கை கிடையாது. மரணம் உண்டு. ஹே... மரணமே. சிதையில் மாய வலையை விரித்துக்கொண்டு சீக்கிரம் வா" என்று ஓலமிடுகிறாள். அவளைச் சுற்றி குழந்தைகளின் சடலங்கள் நடமாடுகின்றன. ஹா ஹ ஹ ஹ —டிக்டேட்டர்! வஜ்ரத்தை மேலும் மேலும் ஏவுகிறான். வாழ்க்கை எதற்கு—இறப்புத்தான் வேண்டும்.

ஊர்வலம் தூரத்தில் போய்விட்டது. ஷனாயின் நாதம் விட்டுவிட்டுக் கேட்டது. அங்கிருந்து அலையாய் வீசிப் பின் வாங்கிற்று. எவ்வித ஆடம்பரமும் இல்லை, பாண்ட் வாத்திய கோஷத்துடன் பெரிய கூட்டமும் இல்லை. பூமி அதிர நடந்துகொண்டு, செவிடாகும்படி ஓசையைப் பரப்பவும் இல்லை. பித்தளையைப் போல் போலி மினுக்கும் அங்கில்லை.

வெறும் ஷனாய் நாதம் மட்டுமே. பண்டைய காலத்திலிருந்து நடந்துவரும் எளிய கிராமத்து வழக்கம். தொட நினைத்தால் பக்கத்தில் வருவது போல் வந்துவிட்டுத் திரும்ப தூரத்தில்

போய்விடுகிறது. நின்று நின்று ஒலிக்கிறது நாதம். அது அணைத்துக் கொள்ளவில்லை எவரையும். நின்றொலிக்கச் சிறிதும் முயலவில்லை அந்த நாதம். தொட்டுவிட்டு ஓடிப்போய் விடுகிறது—நாத இனிமையை வீசிக் கொண்டே ஒளிந்து கொள்ளுகிறது தோட்டத்துள். இதோ எங்கேயோ போய்விட்டதே! ஒரு நிமிஷம் பிடியில் அகப்பட்டுக் கொண்டது—பிறகு தப்பி ஓடிவிட்டது.

ஆனாலும் மனம் அதைப் பின் தொடர்கிறது. தூரத்தில் ஒலிக்கும் அதன் கலைந்த அலைகளைப் பொறுக்கிக் கொள்ள, உணர்ச்சி செவி சாய்த்து நிற்கிறது.

எந்தக் காலத்து விஷயம் அது! ஆனால் நேற்று நடந்தது போல் தோன்றுகிறதே! ஷனாயின் எதிரொலி மறைந்ததும் கண் முன் செழித்துக் கொழிக்கும் மாந்தோட்டம் வருகிறது. மாவில் பூ விட்டிருக்கிறது. வெயிலிலுலர்ந்து மஞ்சளாய், கோணல் மாணலாய்த் தெரிந்த வயலின் மண் குவியல்களும், வெட்டி வீழ்த்தப்பட்டிருந்த நெற்பயிரின் வேர்க் கொத்துக்களும், பந்தலிட்ட கொடிகளின் பசுமையினிடையே பளீரென்ற சிறு மஞ்சள் பூக்களும், எல்லாம் தூரத்தில் ஒருமிக்கத் தெரிந்தன. கிராமத்தில் புதிதாய் வேயப்பட்ட கூரையுடன் வீடுகள்—எங்கும் மஞ்சள்; வஸந்தம்.

★ ★ ★

ஊர்ச் சந்தடியிலிருந்து கொஞ்சம் தூரத்தில் அங்கு இருந்த அந்த கிராமம் தான், எவ்வளவு அமைதி! மரமும் கொடிகளும், வேய்ந்த கூரை வீடும்; வயல், தோட்டம், துரவு, எல்லாம் சமயத்தின் விசாலமான கூரையினடியில் அமைதியுடன் கிடந்தன. அங்கு மௌனமான இசைதான்—ஆனால் எப்பொழுதும் கேட்கும் இசை.

அங்கு வாழ்க்கை சஞ்சலங்கள் அற்றது, சரளமானது, சுத்தமானது.

"ஸாஹு ஜீ, வீட்டிலிருக்கிறாயா என்ன?"

மிஸ்டர் 'ஷா' அல்ல, ஸாஹு.

"உட்கார். வெற்றிலை போட்டுக் கொள்."

உட்கார்ந்து அவசரமில்லாமல் பேசுவது, ஒவ்வொரு வெற்றிலையாகச் சுண்ணாம்பு தடவி, பாக்கு வெட்டியால் பாக்கை வெட்டி, புகையிலையை உருட்டி வாயுள் வைத்து அனுபவித்து தாம்பூலம் தரிப்பது—அந்த வாழ்க்கையில் இது சாத்தியம் தான்.

மெல்ல மெல்ல, ஆனால் நிற்காமல் ஓடும் கிராம வாழ்க்கையின் அமைதி இங்குதான். நாட்டின் நாடி, யுகம் யுகமாய் அடித்துக் கொண்டிருக்கிறது. இங்கு அவசரமே இல்லை எதற்கும். எந்த வண்டியும் பூதத்தைப் போல் புழுதியை எழுப்பிக் கொண்டு இங்கு போவதில்லை. ரயிலைப் பிடிப்பதற்காக மூச்சிரைக்க, தடுக்கி விழுந்து அடித்துக் கொண்டு ஓடவும் அவசியமில்லை. பார்த்து, புரிந்துகொண்டு, உள்ளத்துள் அனுபவித்து வாழும் வாழ்க்கை.

கேட்டும், உணர்ச்சி வேகத்தால் ஆடியும் பாடியும், கனவு காணும் கண்களால் வெகுதூரம் பார்த்துக்கொண்டும் இருந்தால் போதும். அந்த வாழ்க்கையின் லயம் பொழுது புலரும் பொழுதே மெல்ல ஆரம்பித்து விடுகிறது. நெல்லைக் குத்தும் வேலை, வடாம் இடுவது, புகையிலை இடிப்பது, கோலமிடுவது, குளத்தடியில் கிராமத்துப் பெண்களின் அரட்டை அன்றாட வேலைகள் எல்லாம் அவசரமின்றி நடக்கும். வீடுகளில் அடுப்பு எரியும். மூங்கில், உயர்ந்த இலைகள் எல்லாமே தகதக என்று எரியும். வீட்டு மூலையில் இருக்கும் காடி நீரும் அந்தச் சரளமான வேகத்தின் இனிய கதைகளைச் சொல்லும். ஒவ்வொரு வீட்டிலும் பத்துப்பதினைந்து வருடம்பழகிய காடி நீர் காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கும். யுகம் யுகமாய் மண் படிந்த பழைய வீடும் குடும்பமும்; பழங் காலத்து ஊறுகாய் ஜாடிகளும் பத்திரமாய் இருந்தன.

"ஸாஹுரே, கொஞ்சம் நடந்து வரலாம், வா".

கண்ணைப் பறிக்கும் வெயிலில் தொழுவத்தில் காளை குதித்துக் கொண்டிருந்தது. அதுவும் பார்க்க லாயக்கானதுதான். மரத்திலிருந்து இலையும் சருகும் எடுத்துப் போகும் காக்கையும் கவனத்தை ஈர்த்தது. பட்டாம்பூச்சி, அதைப் பிடிக்க முயலும் குழந்தைகள், வீட்டிற்குத் திரும்பி வருபவர்கள், எல்லாமேதான் மனத்திற்கு இதமாயிருந்தன. கிராமத்து வீடுகள், ஜனங்களின் எளிய உடை, நடை பாவனை—ஒன்றும் விசேஷமில்லை. ஆனால் பார்த்து அனுபவிக்க வேண்டிய விஷயங்கள். எல்லோரும் சமமானவர்கள்—தர்க்கமும் குதர்க்கமும் கிடையாது. சாதாரண சைவ உணவுதான் எல்லார் வீட்டிலும்.

இதுதான் மிஸ்டர் 'ஷா' வின் கடந்த கால ஜீவன்—அவருடைய மனிதத் தன்மை மெல்லத் திரும்பிக் கொண்டிருந்தது.

மிஸ்டர் 'ஷா' திடுக்கிட்டு விழித்தார். வெகுண்டு, "டாம், ஸென்டிமென்டல் ரப்பிஷ், இடியட்" என்று தன்னையே பழித்துக் கொண்டார். அவருடைய உதடுகள் குரூரமாய் கோணிக் கொண

டன. கண்கள் சிறுத்து யாரோ விரோதியைப் பார்ப்பதுபோல் ஒட்டிக் கொண்டன. உலகமே நம்பிக்கையற்ற ஒரு எதிரிதான் அவருக்கு. உடலில் ஏதோ விஷம் ஏறி விட்டது. வேலை செய்து செய்தே தேய்ந்துபோய் இறக்க விரும்பினார் அவர். கிராமத்தின் அமைதி அவருக்கு வேண்டாம்.

படிப்பு முடிந்தது. தானாகவே புகழும் பாண்டித்யமும் அடைந்தார். பிறகு கலியாணம், வேலை. மனைவி சுலேகா அழகி, குணவதி எல்லாம் தான். ஆனால் அவள் கல்வியின் மேன்மையை அறியாதவள். மிருதுவான அன்பை எதிர்பார்த்தாள், பௌருஷத்தின் பெருமையை அவளால் புரிந்து கொள்ள முடிய வில்லை. மன வாழ்வில் தன்னை அணு அணுவாக அர்ப்பணித்துக் கொள்ள விரும்பினாள். அவளுக்கு சங்கீதம் பிடிக்கும், கவிதை களை விரும்பிப் படித்தாள். அவளுடைய பண்படைந்த மனதில் எழும்பிய அலைகளை வெகுதூரம் வரை செல்ல விட்டாள். அயலாரையும் தன்னுடையவராக்கிக் கொண்டாள். அவள் அழகில் அவளுடைய தனித்தன்மை விசேஷமாய் ஒளிர்ந்தது. தளைகளை அவிழ்த்துவிட்டு சுதந்திரமானாள். காட்டுப்பறவை, அதன் அழகை மறுக்க முடியாது. ஆனால் அதால் தன் இயல்பு களை மறந்து வளர்ப்புப் பறவை ஆக முடியாது. சதைப்பிடிப் புள்ள கரங்களை அமுக்கி அடக்கினால் அவளுடைய உள்ளம் வெறுப்பால் வெகுண்டெழுந்தது. சுவாதீனமாய் இருக்கும் பொழுது அவள் மனம் திறந்து சிரித்தாள்.

இதற்குப் பிறகு சண்டையும் சச்சரவும் கூடின வாழ்க்கை, பொறாமை, சந்தேகம், அடக்குமுறை முயற்சி.

அவநம்பிக்கை என்னும் சுவர் மேலெழ எழ, சுலேகாவின் சிரிப்பு வற்ற ஆரம்பித்தது. மெல்ல, மெல்ல மெல்லிய நெருப்பில் தன்னையே எரித்துக்கொள்ள முற்பட்டாள். ஒரு மிருகத்தனம் மிஸ்டர் 'ஷா' வை ஆட்கொண்டது. அதுவே அவருக்குக் கவசமாகவும் மாறி அவரைக் காப்பாற்றி நின்றது.

அன்றிலிருந்து அவளுக்கு அடியும் உதையும் கிட்டலாயின. அவளை அப்படி இம்சிப்பதில் அவருக்கு ஒரு தீவிரமான உற்சாகம்! ஒரு வித மர்மமான ஆனந்தம் அவருடைய மன ஆழத்தில் பிறந்தது. மிருக இனத்தைச் சேர்ந்த கணவன் தன் திருப்திக்காக சுலேகாவை அடித்தான். யாராவது அவள் அழுவதைக் கண்டு விசாரித்தால் புதிய புதிய காரணங்களைக் காட்டி விளக்குவான்–அத்தை இறந்துவிட்டாள்–சித்தி போய்விட்டாள் என்றெல்லாம்.

அத்தை சித்திகளில் எல்லோரும் மடிந்த பின்பும் சுலேகாவின் அழுகை நிற்கவில்லை. ஆனால் மிருகசீல கணவனுக்கு வெற்றி கிட்டவில்லை. கசப்பைத்தான் அனுபவித்தான். பதவி உயர்வு அந்தக் கசப்பை அதிகரிக்க ஏதுவாய் அமைந்தது. அவள் அடிக்கடி 'ஐயோ, இவர் வேறு விதமாயிருந்தால்...!' என்று அங்கலாய்த்தாள்.

இன்று வாழ்க்கை போதமே இல்லை; ஆனால் சோகத்தை அளிக்கும் நினைவுகள் கணக்கற்றவை. சுலேகா தாயாரானாள். தன் பிள்ளைக் குட்டிகளின் நிழலில் எலும்பும் தோலுமாய் மாறியிருந்த அவள் எப்படியோ நாட்களை ஓட்டி வந்தாள். மிஸ்டர் 'ஷா' ஃபைல்களில் தன்னை மறந்தார். வேலையில் தன்னை முழுக வைக்கும் பணியில் அவர் கீழ் வேலை செய்தவர்களை சுலேகாவின் சின்னமாகக் கருதித் துன்புறுத்தினார். அதில் அவருடைய பலம் குறைந்து வந்த வாலிபப் பசியின் கடைசி உருவ மாற்றத்தை அனுபவித்து ஆனந்தம் அடைந்தார். டிக்டேடர் ஆன பிறகும் கூட தன் நம்பிக்கைக்காகத் தேடி அலைந்தார். உலகத்திற்குக் கோபமயமான உருவத்தைக் காட்டி, பயத்தால் கசந்த தன் வாழ்க்கைக்கு பழிக்குப் பழி வசூலித்தார்.

காயம் பட்டவர், சந்தேகி, அமைதியற்றவர்.

ஒரு வேதனையான அலறலின் உருவம் அவர். வெளியில் பார்க்கப் பயங்கரமாயிருந்தார். கம்பெனி அதிகாரிகள் அவரை விட்டால் வேலையில் நிபுணர் யாரும் இல்லை என்று கருதினார்கள். தூரதிருஷ்டியுள்ளவர், ஸ்டீம் ரோலர் என்று. அவர் எல்லாம் செய்ய வல்லவர்.

★ ★ ★

உணர்ச்சி திடீரென்று தடைப்பட்டது. வேலை விஷயமாய் ஒரு முக்கியமான பொறுப்பு நினைவிற்கு வந்துவிட்டது. அதைப் பற்றி யோசிக்க வேண்டும்—யோசனைக்கு உதவ அவருக்குக் கட்டாயம் பீடிப் புகை வேண்டும். பீடிப் பிரியர் அவர். ஒரு மணி நேரத்தில் ஒரு கட்டு புகைத்து விடுவார். யோசனையும் பீடிப் புகையும் ஆரம்பித்துவிட்டன. திரைச் சீலைகளின் வழியே அதைப் பார்த்துவிட்டு குமாஸ்தாக்கள் திரும்பி விட்டனர். எஜமானர் பீடி பிடித்துக் கொண்டிருக்கும் பொழுது உள் நுழைவது நியமத்திற்கு விரோதம். அவர் பீடிப்புகை மூலம் மூளையின் நுழை துவாரங்களை சுத்தம் செய்யும்போது, அவர் யோசனையிலாழ்ந்திருப்பார் என்றும், மிக முக்கியமான

பிரச்னைகளைத் தீர்த்து வைப்பார் என்றும் எல்லோரும் அறிந்திருந்தனர்.

வெளியில் சப்ராஸியிடம் தன் பெயர் எழுதின சீட்டைக் கொடுத்தான் பலிதத்.

"காத்திருங்கள். அவர் பீடி பிடித்துக் கொண்டிருக்கிறார். இப்பொழுது அங்கு எவரும் போக முடியாது—"

சப்ராஸி தன் தலைப்பாகையை அவிழ்த்துவிட்டு அவனும் பீடி பிடிக்க ஆரம்பித்தான். நடுநடுவில் அனாதரவாய் அங்கு உலவிக் கொண்டிருந்த பலிதத்தை நோட்டம் விட்டான். நடுநடுவே அறையினுள்ளிருந்து ஏதோ மிருக கர்ச்சனை போன்ற ஓசை அடக்கமாய் ஆனால் பயங்கரமாய்க்கேட்டது. அச்சமயங்களில் சப்ராஸி கலவரத்துடன் தலைப்பாகையை கோணலும் மாணலுமாய் அணிந்து மெல்ல திரையின் பக்கம் போய்ப் பார்ப்பான். பலிதத் சப்ராஸியைப் பொறாமையுடன் பார்த்தவாறு தன் நடையைத் தொடர்ந்தான். இருக்கவும் பிடிக்கவில்லை, போகவும் முடியவில்லை.

அரை மணி, ஒரு மணி, ஒன்றரை மணி நேரம் ஆகிவிட்டது. புது ஆபீசர் உலவிக் கொண்டிருந்தான். தன் கைக்கடியாரத்தை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தான். சமயத்தின் தடுக்க முடியாத போக்கைப் பார்த்துப் புரிந்து கொண்டான். 'காலः கச்சதி கச்சத்யாயு:' என்பதைப் பார்த்துவிட்டான். கடந்துபோன கணங்களைத் திருப்பி வரவழைக்க முடியாது.

அவனுக்கு அலுப்புத் தட்டிவிட்டது. ஆனால் நம்பிக்கை தளரவில்லை. காத்துக் கிடக்க அவனுக்குத் தெரியும். இல்லை என்றால் வெற்றி பெற முடியாது. தரிசனத்திற்கு இன்னுமொருவர் வந்து சேர்ந்தார். அவரும் தன் பெயர் எழுதின கடிதத் துண்டை சப்ராஸியிடம் கொடுத்துவிட்டு, தலையைத் தொங்கவிட்டபடி இங்கும் அங்குமாய் நடக்க ஆரம்பித்தார். பலிதத்தும் அவரும் எதிரும் புதிருமாய் நடந்து கொண்டிருந்தனர்.

இப்படி இருவர் வெவ்வேறு திசையை நோக்கி நடக்கும் வேடிக்கையை சப்ராஸி அனுபவித்தான். அவன் சாவகாசமாய் வெற்றிலை போட்டுக் கொள்ள ஆரம்பித்தான். யாராவது ஏதாவது கேட்க வந்தால் அவன் தன் கையை உயர்த்திக் காண்பித்தான். உடனே அங்கு போக்குவரவு நின்றுவிடும். கையால் அறையின் பக்கமாய்ச் சைகை காட்டினான். அது போதும் நிலைமையை விளக்க. பிறகு முன் போலவே வெற்றிலை போட்டபடி, உலவும் உத்தியோகஸ்தர்களைப் பார்த்து மகிழ்ந்தான்!

நடக்கட்டும் அவர்கள்! இப்படித்தான் பழைய காலத்து சப்ராஸியைப் போல் அவனுடைய மதிப்பும் உயர்ந்தது. கிழவன் அவன், நரை விழுந்து விட்டது. கண்ணாடியைப் போன்ற கண்கள், முள்ளைப் போன்று குட்டையாய் வெட்டிவிடப்பட்ட நரைத்த மீசை, தலையில் பெரிய பாகை. உடலில் நாடக பாணியில் அணிந்த நீண்ட சிகப்பு நிறக் கோட், அதன் மேல் அகலமான பட்டை. அதன் மேல் பளபளக்கும் பித்தளையில் பொறித்த கம்பெனியின் பெயர். உள்ளே துரை, வெளியில் அவரைக் காண வந்திருப்பவர்கள். நடுவில் கம்பீரமான நிலைமையை அவன் விரும்பி அனுபவித்தான்.

பலிதத் திரும்ப அவனிடம் வந்து மெல்ல – "கொஞ்சம் போய்ப் பார்" என்று கேட்டுக் கொண்டான்.

"கொஞ்சம் போயேன். அங்கு கம்பெனியின் வேலை நடக்க வேண்டும் அவசியமாய். நான் இங்கு வந்து இப்படி காத்துக் கிடக்கிறேன். எஜமானருக்குத் தெரிந்தால் கோபப்படுவார்" என்றான்.

பலிதத்தின் அறியாமையைக் கண்டு சிரிக்க விரும்பினான் சப்ராஸி. ஆனால் தன் கம்பீரத்தை இழக்கத் தயாராயில்லை அவன். "தெரியாதா உமக்கு? அவர் புலி ஆக்கும், புலி", என்றான்.

பலிதத்தின் நெஞ்சு உலர்ந்து போய் விட்டது. ஒரு வேளை இதெல்லாம் காண வருபவர்களின் நெஞ்சுரத்தையும், முக ஒளியையும் உறிஞ்சி எடுக்க ஏற்பாடாயிருக்குமோ! அறையினுள் மணி ஒலித்தது. அங்கிருந்து "யார் அங்கே, யார் அங்கே"? என்ற கர்ஜனையும் எழுந்தது. அடித்துப்புரட்டிக் கொண்டு சப்ராஸி உள் நுழைந்தான். "ஹுஜுர்" என்று தாழ்மையுடன் பதிலிறுத்தான். பலிதத்தின் இதயத்தில் விழுந்தது அடி. அந்த பயங்கர கர்ஜனையும், அதைத் தொடர்ந்த தாழ்மையான "ஹுஜுரும்", சப்ராஸியின் கலவரமும் அவனை நடுக்கி விட்டன. முகத்தில் வியர்வை ஒழுக அவன் சுவரைப் பிடித்துக் கொண்டு தள்ளாடினான்.

தனக்கு இப்பொழுது அழைப்பு வரப்போகிறது என்று மனதுள் ஏதோ ஒன்று அறிவித்தது. அர்த்தமற்ற பயம் ஒன்று அவனை நடுக்கியது. உள்ளே இருந்தவர் அவனுடைய வாழ்க்கையை நிர்ணயிப்பவர், பேனாவின் ஒரு கீறல் மூலம் அவனுடைய ஜீவனோபாயத்தின் தனித்தன்மையைத் தீர்க்கவோ அல்லது காப்பாற்றவோ கூடியவர். அந்தக் கஞ்சியும் கூழும் நிலைக்குமா? என்ன தரித்திரம்! அவன் ஏழை தான். ஏதோ

மாமிசம் தின்னும் கொடி ஒன்று அவனைச் சுற்றி இறுக்கி அழுத்துவதுபோல் அந்த தரித்திரம் அவனைத் தன் பிடியுள் நசுக்கிக் கொண்டிருந்தது.

நாக்கு உலர ஆரம்பித்தது. கைக்குட்டையால் தன் முகத்தை அழுத்திக் துடைத்துக் கொண்டான். முடிந்த மட்டும் தன் தோற்றத்தைச் சரி செய்து கொள்ள முயற்சித்தான். என்றாலும் அவன் பலிக்குப் போகும் பசுவைப் போலத்தான் தோன்றினான். அப்போது நிசமாகவே சப்ராஸி தாவி வந்து சைகை செய்தபடி "உங்களைக் கூப்பிடுகிறார்". என்று கூப்பிட்டான்!

வெகு வேகமாய் திரையை நீக்கிக் கொண்டு உள் நுழைந்தான் பலிதத். தூரத்திலிருந்தே நன்றாகக் குனிந்து வணங்கினான். "குட் மார்னிங் ஸர், யுவர் ஆனர்" தூரத்திலிருந்தே பதில் வந்தது. "ஸிட் டவுன், ஸிட் டவுன்– உட்கார்." என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தான் பலிதத். உட்காரவேண்டுமானால் பக்கத்தில் போகவேண்டும். போகவா? சாஹறப் குனிந்து ஃபைல்களை கவனித்துக் கொண்டிருந்தார். "ஸிட் டவுன் – யூ ஹியர்"

கழுத்தில் கையை வைத்துக் கீழே அமுக்க விரும்புவது போல் ஒலித்தது உத்தரவின் அதிகாரம். கோட் பாண்ட் அணிந்த பலிதத் அப்படியே அங்கேயே கீழே உட்கார்ந்து விட்டான்.

"இடியட்–" கர்ஜனை செய்தார் சாஹறப்–"கம் ஹியர்"

நடுங்கிக் கொண்டே முன்னேறியது பலிப்பசு. அவனுடைய பெயர் எழுதிய சீட்டையும், ஃபைல்களிலிருந்து ஒரு காகிதத்தை யும் எடுத்துப் பார்த்தவாறு, அவனையும் மேலிருந்து கீழ் வரை நோட்டம் விட்டார் எஜமானர்.

கை கால் ஓடவில்லை பலிதத்திற்கு. கலவரத்தில் இலக் கணத்தை மறந்து தப்பும் தவறுமாய் ஆங்கிலத்தில் சொல்லிக் கொண்டே போனான் தன்னைப் பற்றி–அன்றுதான் வந்தான் வந்ததும் வராததுமாய் வேலையில் சேர்ந்துவிட்டான்–உயிரை விட்டுக் கடுமையாய் உழைப்பான், தவறு ஏதாவது நடந்தால் சாஹறப் தன்னை மன்னித்துவிட வேண்டும்–இத்தியாதி, இத்தியாதி.

ஐந்து நிமிடங்கள். சாஹறப் எல்லாவற்றையும் கேட்டுக் கொண் டார். பிறகு "யெஸ்" என்றார்.

"யெஸ்" என்றால் "ஆமாம்" என்று பலிதத் அறிந்திருந்தான். ஆனால் சாஹறபின் "யெஸ்" ஸிற்கு அர்த்தம் "போகலாம்" என் பதை அவன் அறிய மாட்டான். அவன் நின்று கொண்டே

இருந்தான். கம்பீர பாவத்துடன் "எதற்கு வந்தீர்?" என்று கேட்டார் சாஹப்.

"உங்களைப் பார்க்கத்தான்"

"தரிசித்தாய் விட்டதல்லவா? இன்னும் ஏதாவதுண்டா?"

"ஒன்றுமில்லை, ஸார்"

"போகலாம் நீ. போய் வேலை செய். முட்டாளைப் போல் என்ன முழிக்கிறாய்? போ."

திடீரென்று அவன் சஞ்சலத்துடன் "ஹுஜூர்" என்று ஆரம்பித்தான். "கெட் அவுட், யெஸ்" ஒரு பயங்கர கர்ஜனை வெளிப்பட்டது. அதன் உந்தலில் அவன் தாவி வெளிப்பட்டான். அவனுடைய தன்மையின் குடுமியை உள்ளே அவர் காலடியிலேயே விட்டு விட்டு ஓடி வந்தான். வெளியில் சப்ராஸி அவனைப் பிடித்துக் கொண்டான். "இனாம்?" என்று கையை நீட்டினான்.

★ ★ ★

வெளியில் சுத்தமான காற்றில் அறையுள் நடந்ததை எல்லாம் மறந்துவிட்டான் பலிதத். அடிக்கடி தான் ஒரு ஆபீசர், சாதாரணமானவனல்ல என்று தனக்குத்தானே உணர்த்திக் கொண்டான். அவனிடம் விசேஷத் திறமை இருந்தது. வரிசை வரிசையாக உட்கார்ந்து வேலை செய்து கொண்டிருந்த குமாஸ்தாக்கள் எல்லோரையும் விட தான் உயர்ந்தவன். எப்பொழுது எந்தச் சூழ்நிலையில் யாருடைய தலையெழுத்து தன் பேனா முனையின் கீழ் வருமோ! எப்பொழுது எந்த சுபமுகூர்த்தத்தில் தானும் யாருடையதாவது பாக்கிய விதாதா ஆக முடியுமோ!

எல்லோரும் அவனையே கவனித்துக் கொண்டிருந்தனர், ஆவலுடன், வியப்புடன்.

இன்னும் ஒரு மணி நேரத்தில் அவன் பெயர் எங்கும் பரவி விடும். இந்த ஆபீசில் மட்டுமல்ல, வெளியில் கூட; ஊருக்குள் வரும் கிராமத்தார் வாய் மூலம் ரொம்பத் தூரம் வரையில். இந்தப் பிரதேசத்தில் கம்பெனி பயத்திலும், பணத்திலும் செல்வாக்கிலும், வியாபாரத்திலும், திறமையிலும் பராக்கிரமம் உடையதாய்த் திகழ்ந்தது.

கம்பெனி கட்டிடத்தின் அகன்ற வராந்தாவில் கால் பூட்ஸ் சப்திக்க மேலே நடந்த பொழுது, கொஞ்ச நேரம் முன்பு தனி அறையில் திரைக்குப் பின் நிகழ்ந்த அவமானத்தின் நினைவு மெல்ல மெல்ல மறையலுற்றது. அறிவுப் பிரதேசத்திலிருந்து அது பலாபலன்களை மட்டுமே கணிக்கும், நம்பிக்கையற்ற

சூனியமான பிரதேசத்திற்கு இடம் மாறியது. அந்தக் கணக்குப் படி நடந்தது பெரிதாக ஒன்றுமில்லை. அப்படி என்னதான் ஆயிற்றாம்! குமாஸ்தா வாழ்வில் துரையின் பின்னால் இருந்து கொண்டு இந்த மாதிரி எவ்வளவோ சம்பவங்கள் பார்த்திருக் கிறான் அவன். கனமான திரையின் பின் தனி அறையில் எவ்வளவு பெரியமனிதர்களுக்கு எத்தனை விதம் விதமான உபசாரங்கள் நடந்துள்ளன. துரையின் பேச்சில் கர்ஜனை, அதிகாரத்தின் எல்லையற்ற மொழிக்கடங்காத, மறைவான துர்பாஷையின் தாண்டவ லீலை – இதெல்லாம் எழுதப்படுவ தில்லை. திரையைத் தாண்டிக் கொண்டு வெளியே வருவ தில்லை. அவமானம், உரசல், எல்லாவற்றையும் முழுங்கிவிட்டு அன்னப் பறவையைப் போல் சிறகை உதறிக் கொண்டு வெளியே வந்து பெரிய மனிதர்களால் கூட "துரை நிறையப் பேசினார். சுகதுக்கங்களை விசாரித்தார். எவ்வளவு அன்பு, எவ்வளவு அனுதாபம்" என்று மலர்ந்த முகத்துடன் சொல்ல முடிகிறது.

அதைக் கேட்டு பிறர் புகழ்வார்கள். மௌனமாய் வசவு திட்டுக் களை ஜீரணித்துக் கொண்டு பிறருடைய புகழ்ச்சியை விவரிப்ப தால் கௌரவம் கிட்டுகிறது–வியாபாரியிடம் ஒன்றும் இல்லா விட்டாலும் வாயால் லட்சம், பத்து லட்சம் என்று பேசி பிறருள் நம்பிக்கையை வளர்த்தி அவர்களிடமிருந்து அவன் பணம் பெறுவது போல். அதைத்தான் 'டாக்ட்' என்று சொல்லு வது–வெற்றியின் நீதி சாஸ்திரம். தோல்வி அடைந்த பிறகு தோல்வியை ஒப்புக் கொண்டால் மனிதன் மெல்ல மெல்லக் கீழே அமுங்கிப் போவான்; வெற்றிகிட்டும் நம்பிக்கையை இழந்து விடுவான். ஆனால் தோல்வியையும் வெற்றியாக மதித்து நடந்து கொண்டால், அவமானப் பட்டாலும் கூட பத்து பேரிடம் பெருமை அடித்துக் கொள்ளலாம். அது தான் தூரதிருஷ்டி. அவனும் அப்படிச் செய்ய முடியாதா? மழைக்குக் குடைபிடிப்பதை மட்டுமே செய்யாமல், முதுகைக் கல்லாக்கிக் கொள்ளுவதும் வெற்றிக்கு வழி காட்டும். பின்னென்ன? மேலதிகாரியே திட்டாவிட்டால், பிறகு யாரால் தான் வையவும் திட்டவும் முடியும்?

யோசிக்க யோசிக்க பலிதத்தின் மனம் லேசாயிற்று. சிரிப்பை ஒத்த ஒரு கோணலான பல்லிளிப்பு அவன் முகத்தில் தோன்றியது.

பிறகு நிரந்தர சுமை மாடான தலைமை குமாஸ்தாவை நோக்கி நடந்தான். தன் நீதியைப் பின்பற்றி, சீக்கிரமே அதன் பலத்தில்

சாரங்கியை இசைத்து அந்தப் பெரிய கரடியையும் அவனால் ஆட்டி வைக்க முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு வந்தது.

தலைமை குமாஸ்தா உத்தியோகஸ்தர்களின் பந்தியில் கணக்கில்லை. அவருடைய பதவி உயர்ந்தது என்றாலும் அவர் குமாஸ்தாக்களுடனேயே தான் கணக்கு. தங்கள் இனத்தைச் சேர்ந்தவரல்ல என்று கம்பெனி உத்தியோகஸ்தர்கள் பலர் அவரை அலட்சியமாகப் பார்ப்பதுண்டு. அவருடைய பதவியைக் கேலி செய்வதுண்டு. அவர்களுடைய பார்வையில் அவர் வேறு ஜாதியைச் சேர்ந்தவர், அவருடன் சமமாய்க் கலப்பதால் அவர் களுடைய மானம் மரியாதை எல்லாம் பலவீனப்பட்டுப் போகும். ஆனால் வெற்றியையே குறிக்கோளாகக் கொண்ட பலிதத் தாஸ் தன் கடந்த கால வாழ்க்கையிலிருந்து வித்தியாசமான அறிவு பெற்று, புதிய தத்துவம் ஒன்றைத் தேடிப் பிடித்திருந்தான். குமாஸ்தாவாலும் சிரிக்க முடியும். தலைமை குமாஸ்தாவின் சிரிப்பு கூர்மையான கத்தியைப் போன்றது. அது மழுங்கியதல்ல. குமாஸ்தா தான் கம்பெனி. அவன் தான் எந்த நீதி நியமத்திற்கும் உட்பட்டு உண்மையாக வேலை செய்பவன். பாதி வயிற்றுச் சோற்றுடன் வேலை செய்யும் பலவீனப் பிராணி. அவன்தான் உழைப்பு என்னும் கல் மேல் காலையிலிருந்து இரவு வரை தன் னைத் தேய்த்துக் கொண்டிருப்பவன். அப்புறம் வீட்டிற்கு வரும் பொழுது ஒரு சுமடு ஃபைல்களைத் தூக்கி வந்து, மினுக்மினுக் கென்று எரியும் லாந்தர் வெளிச்சத்தில், பாயின் மேல் குனிந்து உட்கார்ந்து வேலை செய்து கொண்டே இருப்பவன். அவனுடைய சம்பளம் பதினைந்து நாட்கள் வரை கூடத் தள்ளாது. ஃபைல்களைத் தாண்டிக் கொண்டு வெளியே நோக்கக் கூட அவனுக்குத் தோன்றுவதில்லை—சமயம் அகப்படுவதுமில்லை. அதனால் பணமுடையில் வீட்டை நடத்தும் முயற்சியில் மனைவி ரத்தம் வறண்டு போவதையோ, அவளுடைய தள்ளாடும் உடம்பையோ அவன் காண்பதில்லை. குழந்தைகளைப் பற்றியும் அவன் ஒன்றும் அறியான். அந்தப் பரிதாபமான பிராணி கடைசியில் அவனுடைய நுகத் தடியை அவிழ்த்து வைக்கும் பொழுது தன் உயிரையும் அவனுக்குப் பரிச்சயமான மேஜை மேலேயே வைத்துவிட்டு வருவான். அதனால் வயது காலத்தில் கம்பெனியின் பென்ஷனை அனுபவிக்க அதிக நாள் அவன் ஜீவித்திருப்பதில்லை. எல்லா வேலைக்கும் கர்த்தா குமாஸ் தாதான். சிகப்பு நாடாவின் கிருஷ்டி தேவன். உத்தியோகஸ்தன் கையெழுத்துப் போடுவதுடன் சரி.

தலைமை குமாஸ்தா முகமலர்ந்திருந்தால் துரையின் தயவு எளிதாய்க் கிட்ட முடியும். முகமலர்ச்சி இல்லாவிட்டால் அனர்த்தம் தான். ஆபீஸ் டைப்ரைட்டிங் மெஷினில் என்னவெல்லாம் அற்புதங்களோ பிறக்கும். அதில் துரையும் கையெழுத்து இடுவார்.

அதனால், "நமஸ்காரம் ஐயா, எல்லாம் நலம் தானே? நான் இன்று தான் வந்து சேர்ந்தேன். உங்களை முதலில் பார்த்தாக வேண்டும் என்று நினைத்தேன்" என்றான் பலிதத். தலைமை குமாஸ்தா திடுக்கிட்டு எழுந்து நின்றார். "அடேடே நீங்களா? உட்காருங்கள், உட்காருங்கள், இப்படி நிற்கலாமா நீங்கள்". "அதனால் என்ன, உங்கள் வீட்டு மனிதன் தானே நான். ஓ! எத்தனை ஃபைல், எத்தனை ஃபைல், எவ்வளவு வேலை செய்கிறீர்கள் நீங்கள்! இந்தாருங்கள் பீடா". "வேலையைப் பற்றியா பேசுகிறீர்கள் நீங்கள்! அதை யார் கவனிக்கிறார்கள்? ஒன்பது டிபார்ட்மெண்ட்கள் என் பொறுப்பில் இருக்கின்றன. துரையானால் 'அவசரம், அவசரம்' என்று எல்லாவற்றின் மேலும் எழுதி விடுகிறார். நானே எல்லாவற்றையும் கவனித்து நடத்திக் கொண்டு போக வேண்டி இருக்கிறது. எவ்வளவுதான் விளக்கினாலும் இவர்கள் ஏதாவது தவறு செய்து வைக்கிறார்கள். நானே பார்க்காமல் துரையிடம் அனுப்பினால் அனர்த்தம் தான்".

"எனக்கு எல்லாம் தெரியும் ஐயா, உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். இவ்வளவு பெரிய பொறுப்பை நீங்கள் தனியாகவே தாங்கிக் கொண்டிருக்கிறீர், மேலதிகாரி கையெழுத்து மட்டும்தானே போட வேண்டும்?" வஸந்த் பாபு சிரித்தவாறு, வினயத்துடன் "அது என்ன அப்படி சொல்லிவிட்டீர்கள்? எப்படியிருந்தாலும் நாங்கள் குமாஸ்தாக்கள் தாமே. ஆபீசர் சொல்லுவதைத் தான் நாங்கள் நடத்தி வைக்க வேண்டும். நாங்களாகச் செய்வது ஒன்றுமில்லையே. உங்களைப் போன்றவர்களுடைய புத்திதான் முக்கியம்" என்றார்.

"உங்கள் வினயமே நன்றாகத் தெரிவிக்கிறது, நீங்கள் எத்தகைய மனிதரென்று. என்னிடமிருந்து மறைக்க முடியுமா? நானும் குமாஸ்தாவாய் இருந்தவன்தானே. சிப்பாய்தான் சாவான், ஆனால் பெருமை காப்டனுக்கு. இது தானே நடக்கிறது? உங்கள் உழைப்பிற்கு மதிப்பு யார் கொடுப்பார்கள்?"

மேஜை மேல் கிடந்த காகிதங்களைப் புரட்டிப் பார்த்தவாறு ஒன்றைப் பொறுக்கி எடுத்தான் பலிதத். "இந்த நோட் யார் எழுதினது வஸந்த் பாபு? நீங்கள் தாமே? எழுதும் விதத்திலிருந்தே தெளிவாய்த் தெரிகிறதே. ஆஹா, என்ன மேதைமை!

என்ன அழகான பாஷை! மும்மூன்று வித்தியாசமான அர்த்தங்கள் தெரிகின்றன ஒவ்வொரு வரியிலும்! ஆங்கிலத்தின் விசேஷமே அதுதான். அனாவசியமாய் ஒரு வார்த்தை கூட இல்லை. உங்கள் நோட்டில் காம்பாக்டாக இருக்கிறது. தேவையான புள்ளிவிரங்களுடன் கண்ணை மூடிக் கொண்டு கையெழுத்து இடுவாராயிருக்கும் சாஹப். உங்களிடமிருந்து நான் கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. அதனால் உங்களுக்கு கஷ்டமொன்றுமில்லை என்றால் ஒவ்வொரு மணி நேரம் வந்து இங்கு அமர்ந்து உங்கள் அற்புதமான நோட்டிங்ஸைக் கவனிக்கிறேன்..." வஸந்த் பாபு முறுவலித்தார்.

இந்த அன்றாடக் கடிதத்தை எழுதுவதில் அவர் உபயோகித்த சாதுர்யத்தை எத்தனை பேர் புரிந்து கொள்ளுவார்கள்? படிக்கவாவது செய்வார்களா? புத்தியையும் கற்பனையையும் உபயோகித்து உருவாக்கப்பட்டது. இந்த நோட்டிங் எவ்வளவோ கணக்குப் பார்த்து உருவாக்கப்பட்ட சிற்பம். பழக்கமிருந்தால் தான் இது முடியும். பழைய ஃபைல்களைத் தேடி, அதிலிருந்த பழங்காலத்து விதவிதமான கடிதங்களைப் பார்த்து, அவர் கடிதம் எழுதும் கலையைக் கற்றார். வேலை விஷயமாய் எத்தனையோ புஸ்தகங்களைப் படித்து, டிபார்ட்மெண்டின் நியம விதிகளின் பொருளை அகராதியின் உதவியுடன் ஆராய்ந்து திரும்பத் திரும்ப எழுதி உருப்போட்டு, அவசியமான அறிவைத் திரட்டிக் கொண்டார்.

ஆனால் இதெல்லாம் யாருக்குத் தெரியும்? காகிதம், வெறும் காகிதம் – அவ்வளவே.

நெடுங்காலத்திற்குப் பிறகு இதை எல்லாம் புரிந்து கொள்ள ஒருவர் அகப்பட்டார்.

வஸந்த் பாபுவின் மனம் தானாகவே மிருதுவாயிற்று. மரியாதையுடன் நகைத்தவாறு, "நான் எழுதுவதை எல்லாம் துரை பாஸ் செய்து விடுகிறார். எத்தனையோ முறை புகழ்ச்சியாகவும் எழுதியிருக்கிறார். 'ரொம்ப சரியாயிருக்கிறது, நன்றி' என்று. ஒன்றிரண்டு காண்பிக்கவா உங்களுக்கு?"

"நிஜமாய் அப்படியா எழுதினார். நீங்கள் அற்புதமானவர் தாம்..."

"இந்த சாஹப் வேலைத் திறனைப் புரிந்து கொள்ளக் கூடியவர்" என்றார் வஸந்த் பாபு.

சாஹபின் பெருமைகளைப் பற்றிக் கேட்கவே காத்திருந்தான் பலிதத் தாஸ். ஒவ்வொரு மேலதிகாரியுடையவும் ஏதாவது

விசேஷ குணத்தைக் கண்டுபிடித்து அதைப் பற்றிப் பாடித் திரிவது ஒரு சாதுர்யமான உத்தியோகஸ்தனின் உன்னத குணமாகக் கருதினான் பலிதத். அப்பொழுது தான் அவன் மேலதிகாரிக்கு வேண்டியவன் என்று பத்துப்பேர் அறிய வருவார்கள். மெல்ல மெல்ல அது மேலதிகாரியின் காதுவரையும் எட்டும். மனமிருந்தால் எவ்வளவோ விஷயங்கள் கண்டு பிடிக்கலாம். அழகிய முகம், வசீகரமான உடை, படிப்பு, அதில்லாவிட்டால் திறமை—இன்னும் எவ்வளவோ.

ஆனால் உருவத்தில் மரத்தூணை ஒத்திருப்பவரையும் பேச்சில் சிங்கத்தைப் போல் கர்ஜிக்கிறவரையும் பற்றி என்ன புகழ முடியும்?

"இந்த சாஹப் வேலைத் திறமையைப் புரிந்து கொள்ளக் கூடியவர்"

ஸிட் டௌனிலிருந்து கெட் அவுட் வரை அந்த அறையில் நடந்ததெல்லாம் கண் முன் தோன்றியது.

தைரியத்தை இழக்க மாட்டான் அவன் – ஒரு முறை தவறு நேர்ந்தால் கூட மன்னிப்பே கிடையாது. முகத்தில் மகிழ்ச்சி பூரிக்க, நெகிழ்ச்சியுடன் பலிதத் பேச ஆரம்பித்தான். "வேலைத் திறமையைப் புரிந்து கொள்ளக் கூடியவர். மிக்க அரிய குணம். நானும் அப்படித்தான் நினைத்தேன். இன்று தான் முதல் முதலாக என்னைப் பார்த்தார் அவர். எவ்வளவு மதிப்பு அளித்துவிட்டார். சுருக்கமாக நான் பேசினேன். அதற்கு அவர், சபாஷ், புத்திமான்தான் நீ. இப்படிப் பட்ட ஆள்தான் எங்களுக்கு வேண்டும்', என்றார். ஆமாம். அவரால் கட்டாயம் திறமையை புரிந்து கொள்ள முடியும்" என்றான் பலிதத். வஸந்த் பாபு திறந்த வாய் மூடாமல் பார்த்தபடி இருந்தார். திகைத்துப் போய் விட்டார் அவர்.

இந்த மனிதன் பைத்தியமா என்ன? மிஸ்டர் 'ஜா' வாவது கௌரவம் செய்வதாவது!

ஆனால் பலிதத் பேசிக் கொண்டே போனான்.

"நான் இங்கே புதிது. பல விஷயங்களை புரிந்து கொள்ள நேரமாகலாம்' என்றேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'ஏதாவது அசௌகரியம் இருந்தால் நேரே எங்கள் தலைமை குமாஸ்தா வஸந்த் பாபுவிடம் போங்கள். ரொம்பத் திறமை உள்ளவர் என்றார். வேலையை சரியாய் மதிப்பிடக் கூடியவர் மட்டும் அல்ல, தெரிந்ததா? அவர் நற்சிந்தையாளரும் கூட".

வஸந்த் பாபுவின் வாய் மூடிக் கொண்டது. நிலைமையைப் புரிந்து கொண்டார். அவரும் விட்டுக் கொடுக்காமல், "கோடியி

லொருவர் நம் சாஹப். பேச்சில் கொஞ்சம் கடுமை உண்டு, உண்மைதான். பலர் இனிமையாகப் பேசுவார்கள். கையால் அடிக்கமாட்டார்கள், ஆனால் வயிற்றில் அடிப்பார்கள். நம் சாஹப் கருணையின் அவதாரம், வயிற்றில் அடிக்கமாட்டார், பெரிய அறிவாளி, விவேகி. அற்புதமான மனிதர்" என்று ஒத்துப் பாடினார்.

பேச்சு நடந்து கொண்டிருந்தது.

சில சமயம் பலிதத் தாஸும் சில சமயம் வஸந்த் பாபுவும், சில சமயம் இருவரும் ஒன்று சேர்ந்தும் மேலதிகாரியின் புகழைப் பாடுவதில் மூழ்கிப் போயினர். தங்களையே தாழ்த்தி அவரை உயர்த்திப் பேசினார்கள். பத்து நிமிடங்களாகி விட்டன. எல்லா வித மேன்மையையும் அவரிடம் கண்டாயிற்று. அவர் ஞானி, புத்திசாலி, காருண்ய மூர்த்தி, அவருடைய குழந்தைகள் எல்லோருமே மேதாவிகள், அவருடைய மனைவி கிருஹலக்ஷ்மி, அவருடைய நாய் உயர்ந்த ஜாதி, அவருடைய பசு சுரபியின் அவதாரம்...

ஒரே குரலில் புகழ் கீதம் பாடினர் இருவரும், ஏதோ சபையில் பாடும் பாணர்களைப் போல், அல்லது இரண்டு நரிகள் ஒன்றாய் முகத்தைத் தூக்கி ஊளை இடுவது போல்.

இந்த ஸ்துதி கடவுளைப் பற்றி அல்ல, தாய் நாட்டைப் பற்றி யும் அல்ல, எந்தக் கவியின் இனிமையான கவிதைகளைப் பற்றி யும் அல்ல;

மேலதிகாரியின் மேன்மையைப் பற்றி மட்டுமே.

ஒரு போட்டியே நடந்து கொண்டிருந்தது-இருவருள் யாரால் அதிகம் பாயிண்ட் தேடிப் பிடிக்க முடியுமென்றும், யாரால் அதிகம் புகழ் பாட முடியும் என்றும்! இப்படித்தான் யுகயுகமாய், நடந்து வருகிறது. இது ஒன்றும் புதிதல்ல. எங்கும் வயிற்றை நிறைக்கும் கஞ்சிக்கும் கூழுக்கும் போராட்டம். அதன் வேர் தன்னலம்.

தலைமை குமாஸ்தாவுடன் பேச்சை முடித்த பலிதத், இங்கு ஒரு நண்பன் அகப்பட்டு விட்டான். உபயோகமாயிருப்பான் என்று மனதில் திருப்தி கொண்டான்.

அவன் புறப்பட்டுப் போன பிறகு வஸந்த் பாபு முறுவலித்தார். அவருடைய புகழ் பாடும் தீனு பாபு கிளுகிளுத்துக் கொண்டு,

"என்ன விஷயம் ஐயா?" என்ற கேட்டான்.

"மெல்ல மெல்லப் புரிந்து கொள்ளுவாய்" என்ற வஸந்த் பாபு சொன்னார்.

"இவனைத் தெரிந்து கொள். ரொம்ப தூரம் போகக் கூடியவன், ரொம்ப உயரத்தில் பறக்கிறவன்".

★ ★ ★

அப்புறம் பிற பெரிய உத்தியோகஸ்தர்களையும் பார்த்து விட்டான் பலிதத். புதிதாய் வரும் பொழுது மரியாதைக்கு ஒரு முறை எல்லோரையும் காண்பது அவசியம். வீட்டை நோக்கி நடந்தான் பலிதத். மனம் குளிர்ந்தது. அலுப்பும், பயமும் நீங்கி, முன்னமே இங்கே வரவில்லையே என்று பொறாமை கொண்டான்.

பெரிய ஆலமரத்தின் நிழலில் கம்பெனியின் பெரிய காரியாலயம், வேலை மும்முரமாய் நடந்து கொண்டிருந்தது. கணக்கற்ற கட்டிடங்கள், ஒன்றின் மேல் ஒன்றாய் மாடிகள். வேலை செய்பவர்களோ எண்ணிலடங்காதவர். இங்கு பிஸினஸ் தான் முக்கியம். பெரிய புகைக் கூண்டுகள் புகையைக் கக்கின. பிரும்மாண்டமான யந்திரங்களும், இவைகளைச் செலுத்தும் ஆயிரக்கணக்கான ஊழியர்களும் மூலப் பொருள்களைத் தயார் செய்தனர். ஆனால் இவைகள் எல்லாம் பெரிய ஆபீஸிலிருந்து வெகு தூரத்திலிருந்தன. இந்த ஆபீஸில் காகித வேலை மட்டுமே நடக்கும்–மூளை செய்யும் வேலை, தீர்மானங்கள், திட்டங்கள். பல்வேறு இடங்களிலிருந்த இந்த ஆபீஸ்கள்தான் ஆயிரங்கால் கம்பெனியின் உயிர் நாடி.

இங்கு மனிதன் நெல்லும் நீரும் பெறுகிறான். அதைப் பறித்துக் கொள்ளுகிறான். பிறகு வேறு யாருக்காவது அதைக் கொடுக்கிறான். மௌனமாய் மதிப்பு ஏறுகிறது. அல்லது குறைகிறது. ஏறும்பொழுது இன்னொருவனின் உணவு பறிக்கப்படுகிறது. வீட்டில் பரிமாறப்பட்ட அதே தட்டு, டம்ளரில் தண்ணீர், உட்கார மனை. ஆனால் மதிப்புக் குறைந்தால் அந்தத் தட்டு மறைந்து விடுகிறது. வீட்டுக்காரன் புரியாமல் விழிக்கிறான். தன் கலசச் சோறு எங்கே போயிற்று, யார் எடுத்துக் கொண்டார்கள், எப்படி என்று புரிவதில்லை. உழவனும், தொழிலாளியும், குமாஸ்தாவும் மதிப்புக் குறைவதற்கு என்ன காரணம் என்று அறிய மாட்டார்கள். அவர்களுடைய உழைப்பு குறையவில்லை. ஆனால் முன்பு எட்டு மூட்டை அளித்த அதே உழைப்பு இப்பொழுது ஒன்றரை மூட்டை அரிசிதான் அளிக்கிறது. தலை குனிந்து கை குவித்து அவன் கடவுளை வேண்டி விளிக்கிறான், இந்தக் கஷ்டக் காலம் சீக்கிரம் முடிய வேண்டும் என்று.

இந்தப் பொருளாதார சாஸ்திரத்தின் சில அம்சங்கள் இந்த ஆபீஸில் பிறக்கின்றன. சில வேறு எங்கேயாவது. ஆனால் அடிப்படையான காரணம் எங்கும் ஒன்றுதான். போருக்கு விழையும் கலிங்க நாடு - கோர யுத்தம். பிறகு அஹிம்சையை நிலை நாட்டிய அசோகனின் கல்வெட்டுக்கள். சைதன்யரின் பக்திப்பாடல். ஆலமரம் தழைத்து வளருகிறது. இன்று அங்கு கம்பெனியின் ஆபீஸ், வியாபாரத்திற்காக வாழ்வு, வயிற்றுப் பாட்டிற்காக சமூகத்தின் பயபீதி. வாழ்க்கையின் அர்த்தம், மதிப்பு தராசில் சேர் கணக்கில் நிறுக்கப்படுகிறது.

அந்த ஆல் பலிதத்தையும் பார்த்தது. உருவத்தில் குறுகியவன், நான்கடி ஒன்பது இஞ்சு. அவன் அறம், பொருள், இன்பம், வீடு எதையும் கேட்கவில்லை. அவனுக்கு நிர்வாணமும் வேண்டாம். சமாதி யோகத்தையோ, பரலோகத்தையோ அவன் தேட வில்லை. பலிதத் தாஸ் கேட்டதெல்லாம் பிரமோஷன் மட்டுமே. பணம் வேண்டும். இன்று நடந்தது போல் மேலதிகாரியின் கீழே செய்வோருடன் தொடர்பு வேண்டும். இந்த உத்தேசத்துடன் வாழ முடிகிற வரையில்தான் அவனுடைய வாழ்க்கை அர்த்தமுள்ள தாயிருக்கும்.

என்ன ஆசை இது! தன் வகுப்பு உத்தியோகஸ்தர்களைத் தேடி அவன் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது அவனுக்கு சரோஜினியைப் பற்றியோ, வீட்டைப்பற்றியோ நினைவேயில்லை. ஏதோ இருண்ட வனத்தைப் போல் தோன்றிய மனித சாகரத்தில் தான் ஒரு மின்மினிப் பூச்சி, மேலே பறக்கும் சிறிய ஒரு ஒளி, என்று அவன் எண்ணினான்.

கம்பெனி ஆபீஸில் வேலை செய்யும் தன்னை ஒத்த உத்தியோ கஸ்தர்களையும் ஒவ்வொருவராய்க் கண்டு பேசினான் பலிதத். சிலர் வயதானவர், பலர் அவன் வயதினர். எல்லோரும் அவனைப் போல இருந்தனர், அவனுடைய பிரதி பிம்பமோ என்று ஐயுறும்படி. அவர்களிடம் தன் எதிர்காலத்தைக் கண்டான். தன் பல்வேறு நிலைகளைக் கண்டான். சிறு வயதில் அவன் ஒரு முறை மந்திர வித்தை பார்க்கப் போனது நினைவிற்கு வந்தது. தட்டியால் தடுக்கப்பட்ட அந்த அறையுள் நுழைந்ததும் நாலா பக்கமும் அவனுக்குத் தன் உருவமே தென் பட்டது. சில அவனைக் குள்ளனாகவும், சில அவனை ராட்சதனாகவும் காண்பித்தன - கண்ணாடியில் பிரதிபலித்த அவனது உருவம் பலவிதமாக விகாரப் பட்டுத் தெரிந்தது. பயந்து போய் விட்டான் பலிதத். வெளியில் வந்த பொழுது அவனது முகம் வெளிறிப் போயிருந்தது.

இன்று அந்தப் பழைய நினைவு திரும்பியது. சூழ்நிலை வேறு தான். எல்லோரும் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள். சிலர் ஒரு வருடமாய் வேலை பார்க்கிறவர்கள், சிலர் இருபது வருடங்களாய். இவர்களுடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள முடியவில்லை அவனால் - ஏனென்றால் அவன் அன்றுதான் வேலையில் சேர்ந்தான். ஏதோ தாளம் பிசகி இயங்குவதைப் போல் தோன்றிற்று அவனுக்கு - கலவரம் அடைந்தான் அவன்.

பிறகு மெல்ல யோசிக்க யோசிக்க அவனுடைய தன்னம்பிக்கை திரும்ப ஆரம்பித்தது. குறைத்தும், கூட்டியும் எல்லோரைப் பற்றியும் ஒரு மதிப்பெடுத்தான். இவர்களெல்லோரும் தன் எதிர்காலத்திலும் துணை இருப்பார்களாயிருக்கும். ஆனால் இவர்கள் எவரிடமிருந்தும் அவன் ஒன்றும் விரும்பவில்லை. சிலரை அவன் ஆதரிசமாக மதித்து மரியாதை செய்யலாம். சிலருடைய சில குணங்களை மட்டுமே கவனித்தால் போதும். இன்னும் எவ்வளவோ பேர் வெறும் அதிருஷ்டம் காரணமாய் ஆபீஸர் ஆனவர்கள். அவர்களைப் பலிதக் கணக்கில் சேர்க்கவே யில்லை. எவ்வளவோ உயர்ந்த நிலையிருப்பவர்களிடமும் முட்டாள்தனமும் இல்லாமலில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் இன்னும் மேலே உயரச் சந்தர்ப்பம் இருந்தும் கூட, பலர் இருந்த இடத்திலேயே இருந்து விடுகிறார்கள். அல்லது கீழே நழுவக்கூடச் செய்கிறார்கள். இவர்கள்தான் முட்டாள்கள். அவர்கள் அவன் மேலே ஏறுவதற்கு உபயோகமான படிகள் - அவர்களை அடக்கி அழுத்தியவாறு அவன் ஏறிக்கொண்டே போவான். பின்னால் திரும்பிப் பார்க்கமாட்டான்.

ஆனால் தலையில் காலை வைப்பதற்கு முன் தோள் மேல் கை வைப்பது அவசியமல்லவா? அதனால் மனதில் எவ்வளவுதான் பேராசை இருந்தாலும் பேச்சில் வெகு சாதாரணமாய் ஒலித்தான். பேச்சில் மட்டும் இருந்தால் போதாது, நடத்தையிலும் வசீகரம் இருக்க வேண்டும். எங்கும் அவன் சிஷ்யனாகவே நடிப்பான். மார்ஜார் ஜரத்கவ்வின் சிஷ்யனாகத்தானே ஆரம்பித்தான்! பழைய ஆலமரத்தின் அடியினூடே அவன் ஒரு கட்டிடத்திலிருந்து இன்னொரு கட்டிடத்திற்குப் போகும் போது ஹிதோபதேசத்தில் வரும் கிழ இலவம்பஞ்சு மரம் அவனுக்கு நினைவு வந்தது. அந்தக் கதையும் நினைவிற்கு வந்தது. மரியாதையுடனும் சீலத்துடனும் நடந்து கொள்ளுவதால் மேன்மை அடைய முடியும் என்ற நீதி ஆங்கிலக் கதைகளில் மட்டுமே காணலாம் என்று இல்லை. எளிய சாணக்கிய பாடத்திலும், ஹிதோபதேசத்தின் கதையிலும், கிராமியப் பழமொழிகளிலும்,

யுகம் யுகமாய் வாழ்ந்து வரும் மக்களின் அனுபவத்தின் சாரத்திரட்டு கிட்டுகிறது. வெற்றியை விரும்புகிறவர்களுக்கு மிகவும் முக்கியமான நீதி இதுதான். உலகத்தில் மக்கள் கணக்கற்றவர் – ஆயினும் சிலர் கட்டை என்றால் சிலர் நெருப்பு; சிலர் நரி என்றால் சிலர் புலி; சிலர் உயிரை விட்டு சம்பாதிக் கிறார்கள், பிறர் உட்கார்ந்தபடி சாப்பிடுகிறார்கள். இவர்கள் புத்திஜீவிகள் – புஜபலத்தைப் பற்றியோ வேலைத்திறனைப் பற்றியோ அவர்கள் பெருமை அடித்துக் கொள்வதில்லை. காரணம் தெரியாமலேயே எதையாவது செய்து விடுகிறார்கள். பல நீதிகளை அறியாதவர்கள். அவர்களுக்குக் கிட்டும் லாபமெல்லாம் அதற்கென்று முயலாமலே கிட்டுகிறது. அவர்களுடைய முன்னேற்றம் நிச்சயமில்லாத அதிருஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது. ஏனென்றால் அவர்கள் யோசிப்பதில்லை. 'என் முன்னேற்றம் என் கையிலிருக்கிறது. ஏனென்றால் நான் யோசிப்பவன்' என்று பலிதத் முடிவு கட்டினான்.

லட்சக் கணக்கான மக்களைப் போலல்லாமல் அவன் வித்தி யாசமானவன். அவனுடைய திறமை வித்தியாசமானது. ஏனென் றால் அவன் தன்னையே புரிந்து கொள்ளக் கூடியவன்.

அவனுக்குச் சந்தேகமோ தயக்கமோ கிடையாது. தயங்கினால் இரண்டு பக்கத்திலும் இடிக்கப்பட்டு, முயற்சி பலனற்றுப் போய்விடும். உத்தேசத்தை, லட்சியத்தை, நினைவில் வைத்தி ருந்தால் அதை அடையக் கையாளப்படும் உபாயங்களின் நன்மை தீமைகளைப் பற்றி மறந்து விட வேண்டும். வேடிக்கையாயிருந்தது அவனுக்கு. மாமிசம் உண்பவன் ஐந்துவைக் கொல்ல ஏன் தயங்குவான்? நல்ல உணவு, துணிமணி, விலையுயர்ந்த வாகனம், நிலபுலன்கள் முதலியவை எல்லோரும் விரும்பும் பொருள்கள். ஆனால் அவைகளைப் பெறக் கையாள வேண்டிய உபாயங்களைக் கண்டு பின் வாங்கி விடுகிறார்கள். பலர் பிறரைப் பார்த்துப் பொறாமைப் படுகிறார்கள். இப்படிப் பிறருடைய செல்வாக்கைக் கண்டு வயிறெரிபவர்கள் ஒவ்வொரு சமயம் ஒன்று கூடி உலக நியதியை மாற்றி அமைக்க நிச்சயிக் கின்றனர். பலிதத்திற்கு அவர்களிடம் துளியும் அனுதாபம் கிடையாது. வயிற்றில் பசி, ஆனால் பேச்சில் சங்கோசம் அவனுக்குப் பிடிக்காது. எப்பொழுதாவது தன் விருப்பத்தையும், உத்தேசத்தையும் மனிதன் புரிந்து கொள்ள வேண்டி வருகிறது. எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அதை புரிந்து கொண்டு, தன் வழியை வகுத்துக் கொண்டானானால் அவ்வளவுக்கு நல்லது. லட்சியத்தை சீக்கிரமாய் அடைய எந்த உபாயம் கிடைத்தாலும்,

அதுதான் மேன்மையானது. அதன் சுத்த அசுத்தத்தை ஆராய்ந்து "ஐயையோ" என்று ஓலமிட்டுக் கொண்டும் எதையோ தேடிக் கொண்டும், புத்தகம் எழுதிக் கொண்டுமிருப்பதில் என்ன லாபம்? அனுபவிக்கப் பிறந்திருக்கின்றவன் அவன்தான் – பலிதத் தான். வேலை செய்கிறான் சம்பாதிக்கும் உத்தேசத்துடன். யார் என்ன நினைத்தாலும், நினைத்துக் கொள்ளட்டும்.

பெரிய இடத்திலும் இதே நிலை தான். உபாயத்தைப் பற்றி யோசித்திருந்தால் கம்பெனி கம்பெனியாயிருந்திருக்காது. ராஜ நீதியில் அவ்வளவு யோசனைக்கு அவசியமில்லை.

உபாயத்தின் நேர்மையைப் பற்றிய சிந்தனை வெளி வேஷம் மட்டுமே, ஆத்மரட்சையின் பிரசாரம். இன்று இத்தனை விதமான ஆபீசர்களின் நடுவில் பலிதத்தால் தன் உருவத்தைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. நாவில் சீடனுக்குரிய பண்பு, நடத்தையில் அடிமைத்தனம் என்று அவன் நடித்தாலும் அவன் மனதில் செல்வவள அனுபவம் குடி கொண்டிருந்தது. கண் முன்னால் நின்ற தன் கடந்தகால ஏழ்மையை அவன் மாற்றி அமைக்கத் தீர்மானித்தான்.

★ ★ ★

பலிதத் தாஸ் போய்க் கொண்டேயிருந்தான். ஜகத்பாபுவின் அறையை அடைந்ததும் உள் நுழைந்து தன்னை அறிமுகம் செய்து கொண்டான். "நமஸ்காரம் ஐயா. என் பெயர் பலிதத் தாஸ். இன்று தான் இங்கு வேலையில் சேர்ந்தேன். உங்களைக் காண வந்திருக்கிறேன்". வயது முதிர்ந்த ஆபீஸர் ஜகத் பாபு – இரண்டு படிகள்தான் ஏற முடிந்தது அவரால். அப்புறம் இருந்த இடத்திலேயே இருந்து விழிக்கத்தான் முடிந்தது.

"நீங்கள் வந்தீர்கள்; நான் போகத் தயாராய் இருக்கிறேன்" என்றார் ஜகத் பாபு. "அடுத்த மாதத்திலிருந்து பென்ஷன் தான். முப்பது வருடங்கள் வேலை பார்த்துவிட்டேன். வில்ஸன் துரையின் காலத்தில் வேலையில் சேர்ந்தவன் நான். அவர் தான் சாய ஃபாக்டரியை ஆரம்பித்தார். நீங்கள் இன்னும் குழந்தை, என் பேரன் வயதிருக்குமா உங்களுக்கு? நம் கருணை மிகுந்த கம்பெனியிடமிருந்து இனிமேல் நான் பென்ஷனும் போனஸும் தான் எதிர்பார்க்கிறேன். நாட்கள் ஓடும் நீரைப் போல் எவ்வளவு சீக்கிரம் கடந்து போய்விட்டன! ஆனால் நேற்று நடந்தது போலிருக்கிறது. இத்தனை வருடங்களில் என்னால் என்ன செய்ய முடிந்தது? எதைச் சேர்க்க முடிந்தது? வேலையில் சேர்ந்த புதிதில் முன்னோர் வீட்டையும், நில புலன்களையும்

விற்று இங்கு நகரில் கொஞ்சம் நிலம் வாங்கினேன், ஒரு வீடும் கட்டினேன். அப்பொழுது மலிவாயிருந்தது எல்லாம். அவை இப்பொழுது இருபது மடங்கு விலை பெறும். இது தான் என் சொத்து. ஹோ ஹோ ஹோ ஹோ ..."

பொக்கை வாய்ச் சிரிப்பு – குழந்தையின் சிரிப்பைப் போல். அந்தச் சிரிப்பில் தன்னை இழக்காமலிருக்க முடியவில்லை பலிதத்தால். அதனால் பாதகம் ஒன்றுமில்லையே, ஜகத் பாபுவைக் கவனித்துப் பார்த்தான் அகன்ற உடலமைப்புடன் உள்ளவர் அவர். இன்னமும் பலசாலியாய்க் காணப்பட்டார். கண்களில் கண்ணாடி, அகன்ற நெற்றி, சாந்தமான முகம். தலை முழுக்க நரைக்கவில்லை. இடுப்பும் வளையவில்லை. முதுமை புதிய வாலிப உருவத்தைப் பெற்றது போலிருந்தது.

உருண்டை முகமும், நீண்ட மீசையும் கொண்ட வயதான ஒரு குமாஸ்தா அங்கிருந்தார். மூக்கின் நுனியிலிருந்த கண்ணாடி வழியாகப் பார்த்தவாறு, "ஒன்றும் சேர்க்கவில்லை என்று ஏன் சொல்லுகிறீர்கள், நீங்கள்? புண்ணியத்தைச் சேர்த்துக் கட்டிக் கொண்டிருக்கிறீர்களே! குடும்பம் அமைதியுடன் வாழ்கிறது. பெண்களுக்கு நல்ல கணவன்கள் கிடைத்திருக்கின்றனர், பிள்ளைகள் ஒருத்தனை விட ஒருவன் விசேஷமாக இருக்கின்றனர், பத்துப் பேர் புகழ்ந்து பேசுகிறார்கள். இதெல்லாம் நீங்கள் நடத்திய அற வாழ்க்கையின் சின்னங்களல்லவா?" என்றான்.

ஜகத் பாபு சிரித்துவிட்டார். 'என்னை ஒரேயடியாய் சுவர்க்கத்திற்கு அனுப்பி விடாதீர்கள். நான் சாதுவுமில்லை, மகாத்மாவுமில்லை. வேலை செய்து கொண்டேதான் இருந்தேன். வேலையில் சேர்ந்த பொழுது கடவுளின் பெயரைச் சொல்லிக் கொண்டு சேர்ந்தேன். இதை விட்டுப் போகும் போதும் அவரு டைய பெயரைச் சொல்லிக் கொண்டே தான் போகிறேன், அவர் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு" என்றார்.

பலிதத்தும் சேர்ந்து கொண்டான். "உங்களைப் பற்றி யாருக்குத்தான் தெரியாது? வேலையிலிருக்கும் வரையில்தான் ஒரு மனிதனைப் பிறர் மதிப்பார்கள். ஆனால் நீங்கள் வேலையை விட்ட பிறகும் ஜயஜய கோஷமும், தர்மபலமும், புண்யபலமும் எங்கே போகும்"

"நீ இந்த இளம் வயதிலேயே தர்மம், கர்மம் என்றெல்லாம் நினைக்கிறாயா என்ன? 'நீ' என்று சொல்லிவிட்டேன் – தவறாக நினைக்கவேண்டாம்..."

"சந்தோஷப்பட வேண்டிய விஷயமல்லவா அது? – ஹோ ஹோ

பலிதத்தின் முதுகைத் தட்டியபடி, "கடவுள் உனக்கு தீர்க்கா யுசை தரட்டும். யோக்கயமான பையன் நீ, கட்டாயம் உயருவாய். இவ்வளவு இளம் வயதில் நீ கற்றுக் கொண்டிருப்பதை என்னால் கிழ வயதிலும் கற்க முடியவில்லை. தெரிந்ததா பாபு, என்னால் முடியவேயில்லை" என்றார் ஜகத் பாபு.

கிழ குமாஸ்தா முறுவலித்தார். வியப்புடன் பார்த்தான் பலிதத்.

"என்ன?"

"சொல்லிவிட்டால் பொருள் புலப்பட்டுப் போகும் - விட்டுவிடு. ஆனால் இனிமேல் இந்த தர்ம பலத்தின் பேச்சையே எடுக்காதே. பலவீனப்பட்டுப் போவாய். தர்மத்தின் பெயரில் கஞ்சாவைக் குடிப்பதில்லையா எத்தனையோ பேர்? அதன் மயக்கத்தின் கனவுலகில் மூழ்கி விடுகின்றனர்."

"அப்படியா நினைக்கிறீர்கள் நீங்கள்"

"கட்டாயமாக. அவரவர்களின் சாதனைக்கு ஏற்றாற்போல பலன் கிட்டத்தான் கிட்டும். கிட்டாமல் எங்கே போகும்?"

ஜரத்கவ் மார்ஜாரின் விஷயம் நினைவிற்கு வந்து விட்டது. பலிதத்திற்கு. "ஸார் எனக்கு ஏதாவது புத்திமதி சொல்ல மாட்டீர் களா? சில ஹின்ட்ஸ், சில டிப்ஸ், முப்பது வருடங்களின் மதிப்பற்ற அனுபவம்..."

"நான் ஆசீர்வாதம் தான் செய்வேன். என்னால் ஆக முடியாதன உன்னால் ஆக வேண்டும் என்று சொல்லுவேன்."

அந்தக் கிழவர்பால் பலிதத்தின் மனம் மிருதுவாயிற்று. கிழ மனிதர், என்ன யோசிக்கிறாரோ? துக்கப் படுகிறாரோ அல்லது பகல் கனவு காண்கிறாரோ! "கேட்டுக் கொள் பலிதத். வாழ்க்கை அனுபவங்கள் வசீகரமாய்த் தோன்றுகின்றன. சூரியாஸ்தமனம் ஆகிறதல்லவா? ஹெ ஹெ ஹெ. நீ என்னிடமிருந்து என்ன அறிய விரும்புகிறாய். ஒருவருடைய ஹின்ட்ஸ் அவருக்கு மட்டுமே பிரயோஜனப்படும். ஒருவருடைய டிப்ஸ் அவருக்குத் தான் உபயோகம். குரங்காட்டி அவனுடைய குரங்கை மட்டுமே ஆட வைக்க வல்லவன். உனக்கு எதற்கு இதெல்லாம்? வேலை செய் வதற்குத் தான் உத்தியோகத்தில் புகுந்தேன். வேலை ஆயிற்று. நல்லது கெட்டது நான் அறியேன். வேலையின் போதையில் வெளி விஷயங்களைப் பற்றி நான் நினைக்கவே இல்லை. என் னால் டிப்ஸ் என்ன தர முடியும்? ஆம், நினைவு வருகிறது. வேலையில் சேர்ந்த புதிதில் ஒரே அடியாய் தாவி மேலே ஏற வேண்டும் என்று எண்ணினேன். கொஞ்ச நாள் அதற்காக ஓடி ஆடினேன். ஆனால் ஒரு சிறு காரணத்திற்காக என் மனம்

மெல்ல மாறலுற்றது. ஸ்மார்ட் ஆவதற்காக குதிரை ஏற்றம் பயிற்சி செய்து கொண்டிருந்தேன். ஒரு பெண் குதிரை கிட்டியது. ஒரு முறை ஒரு துரையுடன் டூர் செய்வதற்காகப் புறப்பட்டேன். அவர் ஒரு குதிரையின் மீது இருந்தார். வழியில் திடீரென்று துரையின் குதிரை கனைத்துக் கொண்டு, முன் காலை மடக்கி என்னை நோக்கி ஓடி வந்தது. அந்தப் பெண் குதிரையை என்னால் சமாளிக்க முடியவில்லை. அவ்வளவு தான்; நடக்க வேண்டியது நடந்தது. கடவுளே, நீ பரம தயாளு என்று புகழத் தோன்றுகிறது."

ஜகத் பாபு ஹோ ஹோ என்று உரக்கச் சிரித்தார். "இம்மாதிரி சிறு சம்பவங்கள் நம்மை எச்சரிக்க உதவுகின்றன. நம் திறமையை மிஞ்சி முன்னேற முயலும் பொழுது காதைப் பிடித் திழுத்து நம்மை நமக்கு உரிய இடத்தில் நிறுத்துகின்றன. என் ஸ்மார்ட்னஸ்ஸுக்கு பளீரென்று ஒரு அடி விழுந்தது. பிறகு இன் னும் பல விஷயங்கள் கற்றுக் கொண்டேன். நாம் ஓடி அலைந்து தேடித் திரியும் லட்சியத்துக்காக நிறைய தியாகமும் செய்யத் தயாராயிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன். உத்தியோகத்தில் முதலில் தன்மானத்தைத் தியாகம் செய்ய வேண்டி வருகிறது. ஒரு முறை ஹாலண்டிலிருந்து வந்திருந்த துரை ஒருவர் பேச்சு வாக்கில் வெகுண்டு "ஸுஅர் கா பச்சா" (பன்றியின் சந்தானம்) என்றார். நான் பாய்ந்து அவர் கழுத்தைப் பிடித்து அமுக்கினேன். இப்பொழுது சரியாய் நினைவில்லை என்ன நடந்ததென்று. எனக்குத் தெளிவு வந்ததும் அவருடைய அலறல் தான் காதில் விழுந்தது. 'காப்பாற்று, காப்பாற்று.' என்று. எதிர்கால பிரமோஷன் வாயில் மண் விழுந்தது. என்ன அதிருஷ்டமோ வேலை போகவில்லை. போயிருந்தாலே ஒரு வேளை நல்லதாயிருந்தி'ருக்கலாம். ஹோ ஹோ ஹோ ஹோ! என்னிட மிருந்து என்ன உபதேசம் கேட்கிறாய்?

பிறனிடமிருந்து எதையாவது எதிர்பார்த்தாயானால் அவனு டைய மனதைத் தொடும்படி நடந்து கொள்ள வேண்டும். அவனு டைய மனப்பாங்கின் மூலமாகவே இதைச் செய்ய வேண்டும். அந்த மனப்பாங்கு முதலில் உத்தியோகத்தைப் பறிப்பதாயி ருக்கும். பிறகு அவனுடைய கோபம். அதாவது அவனுடைய விரோதிகளைத் தண்டிக்க அவனுடன் ஒத்துழைக்க வேண்டும். கோள் சொல்லுவதிலிருந்து சண்டை இடுவது வரை செய்யத் தயாராயிருக்க வேண்டும். அதற்குப் பிறகு அவனுடைய பேராசை. அவனுக்கு ஏதாவது கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். பிறகு அவனுடைய மோகம். அவன் எந்தப்

பிரமையைத் தன் வாழ்க்கையின் கோள் என்று நம்புகிறானோ, அதுதான் அவன் மோகம். அந்த மதிப்புகளையே உன்னுடையதாகவும் கொண்டு அவனுக்கு உற்சாகம் ஊட்ட வேண்டும். அடுத்தது அவனுடைய கொள்கைகளை ஆமோதிப்பது. அதாவது முழுக்க முழுக்க முகஸ்துதி செய்ய வேண்டும். பிறகு சேவை செய்வது, அவனுடைய கீர்த்தியைப் பாடுவது முதலியவை. கடைசியில் அவனுடைய நலனைப் பற்றி அக்கறை காண்பிப்பது. இங்குதான் உன் கடமை உணர்ச்சி முதலியவையின் மதிப்பு கணிக்கப்படுகிறது.

இது தான் உத்தியோக தர்மத்தின் சுருக்கம். ஆனால் என்னால் இது ஒன்றுமே செய்ய முடியவில்லை. நான் எப்படி உனக்கு உபதேசம் செய்வது? நீயே சொல். ஹோ ஹோ ஹோ ஹோ! உன் மதிப்பற்ற நேரம் வீணாகி விட்டது. போ இனிமேல், சரி, சரி, ஆசீர்வாதம் செய்கிறேன். வாழ்க்கையில் உனக்கு அமைதி கிட்டட்டும்." ஜகத் பாபு வேலையிலாழ்ந்து விட்டார்.

போகட்டும் அவருடைய பழுத்த கிழத்தனம். வெளியேறின பலிதத்திற்கு அப்பாடா என்றிருந்தது. அந்த அறையில் காகிதம் கூடப் பழையதாய், பொடிந்து போய்க் கொண்டிருந்தது. எங்கும் ஒரே தூசி, மூக்கிலும் வாயிலும் வந்து அடைத்துக் கொண்டது. மூச்சு முட்டிற்று. அவனுடைய அந்தராத்மா வெகுண்டெழுந்தது. அந்தக் கிழவருடைய பேச்சைத் தட்ட முடியவில்லை. ஏதோ பூனை பதுங்கி நெஞ்சில் நுழைந்து விட்டதைப் போல் ஒரு பிரமை. அவனுடைய சிறிய, எலியைப் போன்ற, 'தான்' என்னும் தன்மை அந்தப் பூனையின் கையில் சிக்கிப் படாத பாடுபட்டது.

போகட்டும் அந்த அனுபவமும். நம்பிக்கை திரும்ப விழிப்படைந்தது. பிறகு ரணஜீத் பாபு. அழகிய ஸூட், தெளிவான முகம், கலா ரசனையுடன் வாரிய தலை மயிர்; புறப்பட்டுக் கொண்டிருந்தான். கதவண்டை சந்திப்பும் பரிசயமும் நடந்தன.

"புறப்பட்டு விட்டீர்களா?"

"கட்டாயம். நாலரை மணி ஆகி விட்டதே. இன்னும் அரைமணியில் ஆபீஸ் மூடிவிடும். இதையெல்லாம் யார் கவனிக்கிறார்கள்? நிறைய வேலை செய்து விட்டுத்தான் புறப்படுகிறேன். எந்த உத்தியோகஸ்தரை வேண்டுமென்றாலும் கேளுங்கள். வேலையில் எஃபிஷியன்ஸிக்கு ருசு நம் சொந்த எஃபிஷியன்ஸி. அதற்கு கழுதையைப் போல உழைக்க அவசியம் இல்லை. அவசியப்படுவது உன் சொந்த உடல் நலம், பிறரின் சந்தோஷம், வேலை செய்து செய்து மேலதிகாரி பைத்தியமாகிவிடும் பொழுது அவரிடம் சென்று இனிமையாய் இரண்டு வார்த்தை

சொன்னால் அவர் மனம் குளிரும். தலையைத் தூக்காமல் வேலையிலேயே மூழ்கி, அவரைக் கவனிக்காமலே இருந்தால் என்ன லாபம்? நீங்களே யோசித்துப் பாருங்கள். அதாவது வேலையில் நல்ல பெயர் வாங்க வேண்டுமானால் டோன்ட் வர்க், நாட் லைக் எ காளை. எல்லோரையும் போய்ப் பார்ப்பது, வீடு வீடாகப் போய் சிநேகம் செய்து கொள்ளுவது, அவர்களைப் போட்டோ பிடித்துக் கொடுப்பது, அவர்களுடன் டென்னிஸ் விளையாடுவது, பிறகு அவர்களுக்குச் சிற்றுண்டி அளித்து மகிழ்விப்பது, யாருக்கு என்ன வேண்டும் என்று தெரிந்து வைப்பது – அப்பாடா, இதெல்லாம் ஸூபர் வர்க், இதற்கு வேண்டும் புத்தி. இன்வெஸ்ட்மென்டும் குறையக் கூடாது. என் பேச்சைக் கேள், ஷ்யோர் ஸக்ஸெஸ், இதோ டென்னிஸ் வேளை வந்து விட்டது. கம் ஆன், பீ எ ஸ்போர்ட், என்ன?"

"கொஞ்சம் வேலை இருக்கிறது..."

"திரும்ப வேலையா?" ரணஜித் பாபு நகைத்தார்.

"சரி, பை, பை", என்றபடி வேகமாய்ப் போய்விட்டார். யோசிக்காமல் அவர் பக்கமாய் நடந்தான் பலிதத். ஆனால் அவர் சைக்கிளில் ஏறிவிட்டார் – வாயில் கோணலாய் சிகரெட் எரிந்து கொண்டிருந்தது.

பாஸிங் ஷோ.

பறக்கும் காட்சி – எதிரிலேயே பறந்து கொண்டிருந்தது. தன் மேலேயே ஒரு அர்த்தமற்ற கோபம் வந்தது, அவனுக்கு. தான் ஒரு ஆமை, யோசிக்கும் ஆமை என்று தோன்றியது அவனுக்கு. பிறகு அவனுக்கு நினைவு வந்தது. எவ்விஷயத்திற்கும் இரு தரப்புகள் இருக்கலாம் அல்லவா – கிழக்கும் மேற்கும், சூரியோதயமும் சூரியஸ்தமும். வெற்றியின் விளம்பர கோஷம் "வா என்னிடம், வந்து சேர். 'மாமேகம்சரணம் பஜ' லெட் மீ பீ யுவர் ஃபாதர்" என்ற சொல்லுகிறது.

தன்னையே மறந்து நின்று கொண்டிருந்தான் பலிதத். திடீரென்று வேலை முடிந்ததை அறிவிக்கும் மணி ஒலித்தது. கம்பெனி அலுவலகத்திலிருந்து வெட்டுக் கிளி கூட்டம் வெளிப் பட்டது. பின்னால், அவனுடைய சப்ராஸி நிதாயி. குனிந்த தலையுடன் தாழ்மையாக "ஐயா, நடந்து போகிறீர்களா, இல்லை வண்டி வரவழைக்கவா?" என்றான்.

"வண்டி எதற்கு? பக்கத்தில் தானே இருக்கிறது? போகலாம், வா. நிதாயி, சுத்தமான காற்று இதமாயிருக்கும்."

"ஒரே தூசியாயிருக்கிறதே, ஹுஜூர். உங்களிஷ்டம்..."

வீட்டை அணுகிய பொழுது, தோளில் கூடையுடன் உள் நுழையும் ஒரு பையனின் முதுகு தெரிந்தது. மெலிந்த சிறந்த தேகம், நீண்ட முடி; கிழிந்த ஒரு துண்டை தார் வைத்துக் கட்டியிருந்தான். நிதாயி அவனைக் கூப்பிட்டான். "அடே, ஹார்ஷ், சா..."

ஹார்ஷ் திரும்பி நின்று நமஸ்கரித்தான்.

குழந்தை முகம். பிறரைத் தன் வசம் இழுக்கும் ஒருவித எளிமையான கவர்ச்சி அவன் கண்களில் இருந்தது. சிறிய உயிரற்ற கைகள். விரல் நகம் ஒன்று சிவந்திருந்தது. நகச்சுற்று போலும்.

ஒன்றும் தெரியாதவனைப் போல் பலிதத், "யார் இவன், நிதாயி?" என்று கேட்டான்.

"இவன் பெயர் ஹார்ஷ், ஐயா, உங்களுடைய பாய், நீங்கள் சொல்வதைச் செய்வான். கெட்டிக்காரப் பையன். முன்பு ஒரு போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரிடம் இருந்தான். நிறைய டூர் செய்திருக்கிறான். நீங்கள் பார்ப்பீர்கள் அவன் வேலைத் திறனை ..."

"ம், ஹார்ஷ், இங்கு வா பார்க்கலாம் ... ஹார்ஷ் என்றால் குதிரை, தெரியுமா?"

"வாடா இங்கே ஹார்ஷ், இவர் ஏறிக் கொள்ளட்டும். எப்படிப்பட்ட சவாரி செய்பவர் என்று நீ பிறகு அறிவாய். வேலை சரியாயில்லாவிட்டால் உன் சிண்டைப் பிடித்து இழுப்பார்." நிதா பக் பக் என்று சிரித்தான். பலிதத்தும் சிரித்தவாறு, "நகம் ஏன் இப்படி வீங்கிக் கிடக்கிறது. காண்பி பார்க்கலாம்..." என்று தன் உள்ளங்கையில் அந்தப் பையனின் விரலை வைத்து அமுக்கிப் பார்த்தான். ஹார்ஷ் வெட்கப்பட்டுக் கொண்டு கீழேயே பார்த்தவாறு நின்றான். அவனுடைய கழுத்தைத் தட்டிக் கொடுத்தபடி, "ஆஹா! நாகரிகமறிந்த பையன் தான்! நீண்ட நகம், தலை நிறைய மயிர், இன்னும் என்ன?" என்றான் பலிதத். "ஹுஜுர், கொஞ்ச நாள் அவன் 'கோடிபுவ்'* ஆக ஆடிக் கொண்டிருந்தான்" என்றான் நிதாயி.

"ரொம்ப சரி, திரும்பவும் ஆடுவான். வேலை சரியாகச் செய்யாவிட்டால் உன்னை எப்படி ஆட்டி வைப்பேன் தெரியுமா?" கிழிந்த துண்டின் கிழிசல் வழியாய் அவனைக் கிள்ளினான் பலிதத். "நீ வேஷ்டித் துண்டை உடுத்திருக்கிறாயா, இல்லை அது உன்னை அணிந்திருக்கிறதா சொல். இதையா உடுத்திக் கொண்டு நீ வேலை செய்யப் போகிறாய்?" "ஏழைப்பையன் ஐயா"

---

* முழு நீள நாட்டிய நாடகத்துக்கு முன்பாக பெண் வேஷம் தரித்த சிறு பையன்களால் ஆடப்படும் 'அலாரிப்பு' போன்ற ஒரு வகை நடனம்.

நிதா சொன்னான். "உங்களைத் தவிர அவனுக்கு யார் இருக்கிறார்கள்?"

கூடையை எடுத்துக் கொண்டு குதித்தவாறு உள்ளே போய் விட்டான் ஹர்ஷ். பலிதத்தும் அவனைப் பார்த்தபடி நடந்தான். அவனை அறியாமலே அவன் உடலில் ஒரு மலர்ச்சி தோன் றியது. மனமும் லேசாகத் தோன்ற ஆரம்பித்தது. புதிதாய் வந்திருந்த அந்தப் பையனைப் பற்றியும் உற்சாகம் பிறந்தது. இதுவரை அவனுள் முடங்கிக் கிடந்த ஒரு தன்மை இப்பொழுது ஏற்ற சூழ்நிலையில் திடுக்கிட்டு எழுந்தது. காயம் பட்டவன் காயப்படுத்த விரும்புவான். வாழ் நாளெல்லாம் பிறர் அவனை இரக்கமின்றி ஆட்டி வைத்தனர். எல்லாக் கேலியும் அவனைப் பற்றியேதானிருக்கும். ஏனென்றால் அவன் குள்ளன், பலவீன முள்ளவன். அதெல்லாம் நினைவிற்கு வரும்பொழுது மனம் பற்றி எரிந்தது. ஆதங்கப்பட்டது. இன்று பழி வாங்க ஒரு சந்தர்ப்பம் கிட்டிற்று. உற்சாகமும் பைத்தியமும் லேசில் அடங்குவதில்லை. ஒருடலில் ஆயிரமாயிரம் காயங்கள், ஆயிரமாயிரம் செயல்களின் விகாரம். எல்லாம் குத்திக் கொண்டே இருக்கின்றன. விதம் விதமான நோய்க் கிருமிகளில் ஏதாவது ஒன்று திடீரென்று தகுந்த சூழ்நிலை கிட்டியவுடன் புறப்பட்டு வதைப்பதைப் போல், பலிதத்தின் மனதிலும், இந்தப் பையனின் உடலைத் துகைத்து வதைத்து தூள் தூளாக்கி விட ஒரு குரூர ஆசை எழும்பியது. அதை நினைத்தாலே அவன் மனம் கிளர்ச்சியுற்றது, உடல் நடுங்கியது.

சரோஜினி காத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவனால் அவளை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. புதிதாய் எழும்பியி ருந்த இசை அவன் மனதினுள்ளேயே ரீங்காரித்துக் கொண் டிருந்தது. உள்ளே போய்ப் பார்த்தான். வீடு நன்றாய் அலங்கார மாய் இருந்தது. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, உரக்க "ஏ பாய், பூட்ஸை அவிழ்த்து விடு" என்று கூவினான்.

ஹர்ஷ் அவன் காலடியில் உட்கார்ந்தான். அவன் மடியில் தன் கால்களை வைத்தபடி, "பூட்ஸை அவிழ், ஸாக்ஸை அவிழ்" என் றான். பலிதத்திற்கு அவன் உடல் களைத்துப் போயிருப்பது தெரிந்தது. இதமாய் யாராவது பிடித்து விட்டால் நன்றாயிருக்கும் போல் தோன்றியது. பக்கத்தில் நின்று கொண்டிருந்த சரோ ஜினியைப் பார்த்து "ரொம்பக் களைப்பாயிருக்கிறது. உடம்பெல் லாம் வலிக்கிறது. என்ன வேலை, என்ன வேலை!" என்றான்.

சரோஜினி கவலையுடன் அவன் நெற்றியைத் தொட்டுப் பார்த் தாள். சுரமில்லை. டாக்டரைக் கூப்பிடவா என்று வினவினாள்.

"வேண்டாம், வேண்டாம். அதெல்லாம் எதற்கு? இங்கு வேலைப் பொறுப்பு அதிகம். அதனால் களைப்பு, அவ்வளவுதான். நீ போய் கொஞ்சம் டீ போட்டுக் கொண்டு வா. ஏ ஹர்ஷ், கொஞ்சம் உடம்பைப் பிடித்து விடு வா. உன்னால் முடியுமா? அப்படி ஆனால் சரி" என்றவாறு துணியை மாற்றிக் கொண்டு நிம்மதி யாய் படுத்துக் கொண்டான். ஹர்ஷ் தன் பணியை ஆரம்பித்தான். முதலில் பயந்து கொண்டே மெல்ல மெல்ல பிடித்து விட்டான்.

பிறகு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு பலம் போட்டு அமுக்கிவிட்டான். அப்புறம் அவனுடைய மிருதுவான கைகள், சேற்றைக் குழைப்பதைப் போல் பலிதத்தின் உடலைப் பதம் பார்த்தன. பலிதத் நன்றாக காலை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தான். நடுநடுவில் "கொஞ்சம் மேலே, பலமாய்ப்பிடி. ஊஹூம்அப்படி இல்லை. இன்னும் கொஞ்சம் அமுத்தி. இன்னம் மேலே ஆ! அங்கு தான். உடைக்கிறது வலி" என்று எல்லாம் சொல்லிக் கொண்டிருந்தான். குனிந்த தலையுடன் வியர்வையில் தொப்பமாய் நனைந்திருந்த ஹர்ஷின் கைகள், பாவம், விடாமல் வேலை செய்தன. அவனுடைய நெற்றியில் வியர்வை துளிர்த்தது. அவன் உடல் சூடேறிற்று; ஆனால் வாய் திறவாமல் அந்தப் பையன் பிடித்து விட்டுக் கொண்டிருந்தான்.

இந்த உடல் சுகம் பலிதத்திற்குப் புதிய அனுபவம். ‚அந்த சமயத்தில் அதுதான் வாழ்க்கையின் மிக இனிமையான ருசி என்று அவனுக்கு தோன்றிற்று. தன்னைப் பற்றியே அவனுக்கு ரொம்பப் பெருமையாயிருந்தது. வாழ்க்கை அனுபவிப்பதற் காகத் தான், எவ்வளவு முடியுமோ அவ்வளவும். அப்படிச் செய்ய முடியாதவர்களே மறுப்புக்களை நிலை நாட்டுகிறார்கள். தங்கள் வசம் பலம் இல்லாதவர்கள் தாம் இந்த மறுப்புக்களை ஏற்கின்றனர். ஆனால் தன்னைப் போன்ற பலமுள்ளவர்கள், பிறர் இகழ்ச்சிக்கு பயப்படாதவர்கள், இந்த மறுப்புக்களை சட்டை செய்ய வேண்டியதில்லை. அவனுக்கு எல்லா வித சுக போகங்களும் உரிமை. முன் காலத்தில் ராஜா, சக்கரவர்த்தி களுக்கு மட்டுமே கிட்டும் இந்த சுகம். அவர்கள் அனுபவித்த மது சாதாரணமானவர்களுக்கு விஷம். இன்றும் இந்த அனுபோகி களின் வம்சங்கள் எங்கெங்கேயோ, எந்தெந்த வேலையிலேயோ இருந்தனர். இப்போதும் இவர்கள் சாதாரண மக்களின் கைக்கு எட்டமாட்டாதவர் தாம். இவர்கள் போகிகள். உலகம் அவர்களை இகழ்கிறது. தங்கள் விருப்பப்படி பலவித வேட்கைகளைக் கற்பித்துக் கொண்டு அந்த வேட்கைகளை நானாவித வழிகளால் தணித்துக் கொள்ளுகிறார்கள். நாய் குலைத்தால் யானை

பயப்படுமா? அது தன் வழியே தான் போகும். பிறர் அவனைப் பற்றி காமுகன் என்றும் சமூக நியதிகளை அறியாதவன் என்றும் தூற்றுவார்கள். தன் காதலியைத் தங்கை என்றோ மகள் என்றோ சொல்லிக் கொள்வதிலும் அவனுக்குத் தடையில்லை. இன்னொருவனைப் பற்றி, "சீ. அவன் உண்மையாகவே தெருத் தெருவாய் அலையும் நாய் தான். இப்போதுதான் அவன் மனைவி அவனை அவமானப்படுத்தினாள். அவன் முகத்தில் கரியைத் தேய்த்து விட்டாள்.' என்பார்கள் வேறு ஒருவனைப்பற்றி, "அவனைப் பற்றி கடை வீதியில் கூடப் பேசுகிறார்கள். அவனுடைய மனப்போக்கு எவ்வளவு இயற்கைக்கு விரோதமாயிருக்கிறது" என்பார்கள். ஆனால் யார் இவர்கள் பேச்சைக் கவனிப்பார்?

சுகம் கிட்டாதவர்கள்தான் குலைத்துக் கொண்டு அலைவார்கள். ஆனால் வாழ்க்கை அனுபவிக்க வேண்டியது. பால் மேல் படிந்திருக்கும் ஆடையைத் திரட்ட முடிந்தால் அதில் இருக்கும் ருசிக்கு நிகர் கிடையாது. பேஷ்! நன்றாகப் பிடித்து விடுகிறான் இந்தப் பையன், மிருதுவான விரல்களை உடலில் பதித்து. மனதில் ஒரு புதிய ஆனந்தம் எழுந்தது.

உணர்ச்சி மரத்து, கண்கள் பாதி மூடியபடி தெளிந்தும் தெளிவற்றும் இருந்த பல பாவனைகளை இந்தப் புதிய சுகத்தில் அனுபவித்தான் பலிதத். அவனது ஒவ்வொரு அங்கமும் அந்த அனுபவத்தை நுகர்ந்தது. இப்படி எல்லாம் அவன் எண்ணக் கூடும் என்று கொஞ்ச நாள் முன் கூட நினைத்திருக்கவில்லை. தெருவில் திரியும் ஒரு பிச்சைக்காரனின் உள்ளில் கூட பலமான செல்வந்தனின் பேராசை மனோபாவம் வளர வாய்ப்புக் கிடைக்காமல் அடங்கிக் கிடக்கலாம். புலியைப் போன்ற குணமுள்ளவனும் லட்சியவாதியுமான மாகிவிலியின் மனோபாவத்தின் அம்சங்கள் பல வாழ்க்கையில் வெறுப்புற்று உலகத்தில் சமத்துவத்தை நிலை நிறுத்தப் புறப்படும் ஒரு ஏழையின் மனதிலும் அகப்படலாம். ஒரு சாதாரண மனிதனும் பலம் பெற்றவுடன் மனிதத் தன்மையை இழந்து, தடுத்து நிறுத்தும் பயம் படிவதால், தன் உண்மையான தன்னல மனப்பான்மையை வெளிப்படுத்துகிறான். தெருவில் அலையும் மாட்டைப் போல் வெட்கங்கெட்டு பிறர் வீட்டு ஓலைக் கூரையையே இழுத்துத் தன் பசியைத் தணித்துக் கொள்கிறான். யோகி போகியாய் மாறுகிறான். பட்ட அடிகளை நினைவில் கொண்டு அவசரம் அவசரமாய் தன்னைப் போஷித்துக் கொள்ளும் பணியில் முழுமனதுடன் ஈடுபடுகிறான்.

ஆனால் பலிதத்தை துர்பலப்படுத்த எந்த லட்சிய நோக்கமும் இருக்கவில்லை. அவனுடைய கொள்கை வெற்றியை விரும்பும் மனிதனின் கொள்கை. மனதில் அவன் அந்தணன் அல்ல. அதாவது அவன் தன்னை சௌகரியம், சுகம் என்னும் புரளும் அலை மீது மிதக்க விட்டுக் கொண்டான். அந்த அலை மண்ணிற்குத் திரும்பி வந்து அடிபடாமல் முன்னேறிக் கொண்டே இருக்க வேண்டும் என்று விரும்பினான்.

"மாலிஷ் செய்து கொண்டே இரு, ஹர்ஷ். கை வலித்தால் பிடிக்க வேண்டாம். தடவி விடு, போதும்." சரோஜினி, எப்பொழுதோ டீ கொடுத்துவிட்டுப் போய்விட்டாள். சமையலறையில் நிதாயியின் குரல் கேட்டது.

ஹர்ஷ் எழுந்து நின்றான். "உன் கையும் காலும் எவ்வளவு சின்ன சின்னதாயிருக்கின்றன! நன்றாகச் சாப்பிட்டு கொஞ்சம் சதை போடு" அந்த மென்மையான உடலை வருத்தி பலிதத் அன்று தன் பலத்தை நிரூபித்துக் கொண்டான். அதில் தான் எவ்வளவு ஆனந்தம்! அந்த மென்மையை அப்படியே உறிஞ்சி விட விரும்பினான்.

ஹர்ஷ் கலவரத்துடன் "விட்டு விடுங்கள் ஐயா, என் கை உடைந்து விடும்" என்று கெஞ்சினான். பலிதத் மேலும் அவன் கையை முறுக்கியவாறு 'ஹே ஹே, பார்த்தாயா என் பலத்தை" என்றான்.

"ரொம்பப் பலம் தான், ஐயா. போதும், போதும், விட்டு விடுங்கள்."

"இப்படி ஏன் அநாகரிகமாய்க் கூவுகிறாய். அதிருக்கட்டும், நீ தெருக் கூத்தில் ஆடுவாயாமே. என்னென்ன வேஷத்தில் ஆடியிருக்கிறாய்."

"ராணி வேஷம்..."

"பேஷ், பேஷ், உன் குரு கண் வெட்டச் சொல்லிக் கொடுத்திருப்பாரே. கொஞ்சம் செய்து காண்பி, ஹா, ஹா..."

ஹர்ஷ், சிரித்துவிட்டான். "நன்றாக வேலை செய். நீ என் பக்கத்திலேயே இருக்க வேண்டும். வெய்யில்காலம் ஆரம்பித்ததும் பங்கா இழுக்கும் வேலையில் உன்னைப் போட்டு விடுகிறேன். பெரியவனான பிறகு சப்ராஸியாகவோ, கம்பெனி டிபோவின் சேவகனாகவோ உனக்கு வேலை செய்து வைக்கிறேன். சரியா?"

"உங்கள் தயவு ஐயா."

சந்தோஷமாய்ச் சிரித்தான் ஹர்ஷ். இனிமேல் அவன் வேற்று மனிதன் அல்ல அங்கு. குடும்பத்தைச் சேர்ந்தவனாய் விட்டான்.

மாறிய நிலைமையைப் புரிந்து கொண்டவனாய் தன் அவசியங் களையும் பூர்த்தி செய்து கொள்ளும் உற்சாகத்துடன், "இதோ பாருங்கள் ஐயா, எவ்வளவு கிழிந்து விட்டது எனது துண்டு. ஏதாவது பழசு கிழசு இருந்தால் ..." என்றான்.

"கட்டாயம் கிடைக்கும், எல்லாம் கிடைக்கும்."

"அப்புறம் இன்று வீட்டில் ஒன்றுமே இல்லை சமைக்க, ஒன் றிரண்டு அணா..."

"சரி, சரி, இந்தா வைத்துக் கொள்" என்று சட்டைப் பையிலி ருந்து இரண்டு அணா எடுத்து பையனின் உள்ளங்கையில் வைத்து அழுத்தினான். அவனை முதுகில் தட்டிக் கொடுத்தபடி, "எடுத்துக் கொள். நீ கேட்டவுடனேயே கொடுத்து விட்டேன். நாளைக்கு கொஞ்சம் காலைப் பிடித்து விடணும் நீ" என்றான்.

ஹர்ஷ் அகன்றான். கேட்டதும் இரண்டு அணா கொடுத்து விட்ட தன் தாராளத்தை மனதில் மெச்சியபடி பலிதத் உள்ளே சரோஜினியைத் தேடிச் சென்றான். "அந்தப் பையன் நன்றாக மாலிஷ் செய்கிறான். உடம்பு தெம்பாயிருக்கிறது. கொண்டு வா என் உடையை. கொஞ்சம் உலவி வருகிறேன்."

உடம்பு வலித்தது. பலிதத் மனதை மாற்றிக் கொண்டான். "வேண்டாம் போ இன்றைக்கு, உனக்கும் தனியாயிருக்கும். நான் திரும்பப் படுத்துக் கொள்ளுகிறேன்."

சரோஜினி பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவளுக்கு நிசமாகவே தான் அங்கு ஏதோ ஏகாந்தத்தில், வெறுமையில் இருப்பதாகத் தோன்றிற்று. வேலை, ஒரே வேலை.

★ ★ ★

வேலை என்னும் சாக்கில் பலிதத் தன் முன்னேற்றத்திற்கான உபாயங்களைத் தேடிக் கொண்டிருந்தான்.

பல சாதாரண விஷயங்கள் அவனுக்குப் பழகிப் போயின. அவன் ரொம்ப எங்கும் வெளியில் போவதில்லை. அப்படிப் போனாலும் ஏதாவது முக்கிய நோக்கத்துடனும், கம்பெனி ஆபீசர் யாரையாவது பார்க்கவும் மட்டுமே கிளம்புவான். "ஓ, எவ்வளவு வேலை. எவ்வளவு வேலை. வியர்வையைத் துடைத்துக் கொள்ளக் கூட நேரமில்லை" என்று வெகு சாதாரண மாய்ச் சொல்லக் கற்றுக் கொண்டான். தான் செய்த வேலை களின் ஒரு கற்பனைப் பட்டியலையும் உடனே ஒப்புவிப்பான். பிறர் கேட்டனர். கேட்டதில் எவ்வளவு பொய் எவ்வளவு நிசம் என்று சாதாரணமாய் யாரும் ஆராயப் புகுவதில்லை. இந்த மனோவிக்ஞானத்தை நம்பி பலிதத் ஐந்தைப் பதினைந்தாய்ப்

பெருக்கிச் சொல்லுவான். இந்த சாஸ்திரத்திற்குப் பெயர் 'ப்ளஃபாலஜி'. வெகு வேகமாய் நடப்பான். யாராவது காரணம் கேட்டால் "வேலை ரொம்ப அதிகம், நிற்கக் கூட நேரமில்லை" என்பான். எப்பொழுதாவது யாராவது அவனைக் காண வீட்டிற்கு வந்தால், வெளியிலிருந்து குரல் கேட்டதும் வீடு தயாராய்விடும். மேஜை மேல் பரப்பிய காகிதங்கள், குவியலாய் ஃபைல்கள், திறந்த மைக்குப்பி, ஈர நிப்புடன் பேனா. மெள்ளத் திரையை விலக்கிக் 'கொண்டு வந்தவரை வரவேற்றவாறு, வேலை செய்து செய்து இடுப்பு ஒடிகிறது. நான் இங்கு வந்து கொஞ்சம் நாள் தானே ஆகிறது! ஆனால் என்ன காரணமோ அவருக்கு என்னைப் பிடித்துப் போய் விட்டது. பொறுப்புள்ள முக்கிய வேலைகளை எல்லாம் என் தலையில் கட்டி விடுகிறார். என்ன செய்வது? செய்யாமல் முடியுமா? கம்பெனியின் நலத்தைக் கவனிக்கத் தானே வேண்டும். லட்ச லட்ச ரூபாய் விஷயமல்லவா? இதை எல்லாம் சரியாய்க் கவனித்துச் செய்யாவிட்டால் வாங்கும் சம்பளம் செரிக்குமா? கம்பெனி நம் அன்ன தாதா அல்லவா?" ப்ளஃபாலஜி. கம்பீரத்துடனும், பாங்குடனும் சொல்ல முடிந்தால் கேட்பவர்களின் மனதில் அவனைப் பற்றி நல்ல எண்ணம் உதிக்க வைக்கலாம். ஆனால் வேறு பலரும் கூட அவனைப் போலவே நடந்து கொள்வதைக் கண்டான்.

முன்பு குமாஸ்தாவாக வேலை செய்த பொழுது அக்குழுவில் அவனைப் போல் வெற்றியை ஒரு விஞ்ஞானமாக மதித்து நடந்து கொண்டவர்கள் வெகு சிலரே. அந்தச் சிலருடைய வெற்றித் திட்டங்கள் விரிவாய் இல்லை.

ஆனால் இங்கு ஆபீசர் வகுப்பில் சிலரைத் தவிர பிறரெல்லோருமே மேதாவிகளாயிருந்தனர். ரணஜித் பாபு மட்டுமல்ல, அநேகம் பேர் இருந்தனர். அவர்கள் கையாண்ட முறைகளும் பலவிதம், முயற்சிகளும் பலவிதம். பலிதத் பரிதவித்துப் போனான். பெரிய பெரிய துப்பாக்கிகளும் குண்டுகளும் வெடிக்கும் இங்கு அவனுடைய முயற்சிகள் பட்டாசு வெடிக்குச் சமானமல்லவா? நடுநடுவில் எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கையையும் இழந்துவிடுவான் போலிருந்தது. ஆனால் திரும்பவும் முயற்சியில் ஈடுபட்டுவிட்டான். அவனுடைய உடல மைப்பு, உடல் நலம், குலம், குடும்பம் முதலிய முதலை வைத்துக் கொண்டு நடத்தக் கூடிய உபாயங்களையே தேடினான்.

அன்றொரு நாள் நடுதுரைக்கு (பெரியதுரை, நடுதுரை, சின்ன துரை) சுரம் கண்டுவிட்டது. மேலதிகாரி உடம்பாய்ப் படுத்துக்

கொண்டால், அது வெற்றியை நாடும் உத்தியோகஸ்தர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பு. திராட்சை, மாதுளம், ஆப்பிள், ஆரஞ்சு முதலிய பழங்கள் நிரம்பிய கூடை ஒன்றைக் கொடுத்து போனான் ரணஜித் பாபு. ஆனால் இவ்வளவு செலவு செய்ய பலிதத்தால் முடியுமா? பணியாளின் கையிலிருந்த விசிறியை வாங்கி அவனே விசிற ஆரம்பித்தான்! அதுதான் அவனால் முடிந்த சேவை.

டாக்டரைக் கூப்பிட இரண்டு மூன்று முறை ஓடினான். உடற் பலத்தால் செய்யக் கூடிய சிசுருஷையும் அவனால் முடியாது. இங்கு உமேஷ் பாபுவின் திறமை வெளிப்பட்டது. பார்ப்பதற்கு அரக்கனைப் போலவே இருப்பார் உமேஷ் பாபு. பசி, உணவு, நடத்தை எல்லாவற்றிலுமே சங்கோசமற்று அசுரத் தன்மையை வெளியிட்டார் அவர். பலிதத்திற்குப் பொறாமையாயிருந்தது; ஆனால் சகித்துக் கொண்டான். சுரத்துடன் படுத்திருந்தவரின் படுக்கையருகில் உமேஷ் பாபுவின் செல்வாக்கு அதிகமாயிருந்தது. எல்லோர் முன்னிலும் தன் இரு பலமுள்ள கரங்களால் ரோகியின் பாதத்திலிருந்து தொடை வரை பிடித்து விட முடிந்தது அவரால். பயந்து கொண்டே தன் பலமற்ற சிறு கரத்தையும் நீட்டி வைத்தான் பலிதத். ஆனால் உமேஷ் பாபு அவனுடைய கையையும் சேர்த்துப் பிசைந்து எடுத்து விட்டார். பலிதத்தின் கண்களில் நீர் தளும்பியது. அப்புறம் அந்த முயற்சியை விட்டு விட்டான். பிறகு சுரம் ஏறி அவருடைய நெற்றி நெருப்பாய் சுட்டுக் கொண்டிருந்தது. கண்கள் இரத்தக் குளங் களாய்த் தெரிந்தன. நாக்கால் உதட்டை நனைத்த படி பல்லைக் கடித்தார். கையும் காலும் நிலையற்று விளாசின. பிதற்ற ஆரம்பித்து விட்டார். "ஃபைல் - ஃபைலைக் கொண்டு வா" என்று கத்தினார். அவர் தலையைக் கீழாகச் சரித்துப் பிடித்து தண்ணீர் கொட்ட வேண்டும் என்றார் டாக்டர். இந்த வேலையையும் உமேஷ் பாபுவே செய்தார். ஏனென்றால் அவர் தான் எல்லோரையும் விட பலசாலி. அப்பொழுது அவர் சுரத்துடன் குஸ்தி இடுபவரைப் போலத் தோற்றமளித்தார். அவர் எதைச் செய்தாலும் எளிதாக வும் அநாயாசமாகவும் செய்தார். அதனால் அவர் நடு துரையின் மனதிற்குகந்தவர் என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

மேலும் உமேஷ் பாபு பெரிய வீட்டுப் பிள்ளையாயிருந்தும் கூட அனாவசியமாய் மேலதிகாரியிடம் செல்லப் பிடிவாதம் செய் வார். "ஸர், ரொம்பப் பசிக்கிறது. ஏதாவது தாருங்களேன்", என் பார். சிரித்துக் கொண்டே கடலை, பகோடா முதலியவைகளைச் சுவைப்பார். அதே கொஞ்சலுடன் ஒருவரைத் தன் தத்துத்

தந்தையாகவும், மற்றொருவரைத் தத்து அண்ணனாகவும் உறவு கொண்டாடுவார். வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டே மேலதிகாரியின் குறுகிப் போன உடை, பழைய சாமான்கள் முதலியவைகளைப் பார்த்தவாறு "எனக்குக் கொடுத்து விடுங்களேன் அவைகளை. உங்களிடம் தான் நிறைய இருக்கிறதே" என்பார்.

உமேஷ் பாபுவின் கொஞ்சலான பேச்சு இனிமையாய்த் தான் இருந்தது. பலிதத் அதைப் பார்த்து பெருமூச்சு விடுவான். இதுவும் அவனுடைய சக்திக்கு மிஞ்சிய சாதனை தான்.

நிராகார் பாபு இன்னொருவர். பெண்களுக்கு வரன் தேடிக் கொடுப்பதில் நிபுணர். அதனால் பெரிய இடங்களில் அவருக்கு விசேஷ மரியாதை கிட்டுவதுண்டு. வேலை விஷயத்தில் அவர் கொஞ்சம் ஸ்லோ என்று எல்லோரும் அறிவார்கள். ஆனால் வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் வரன்களைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுவார். பாக்கெட்டிலிருந்து பல கடிதங்களை எடுத்துப் பார்த்தவாறு பேசுவார். "இதோ கேள். ராம் எழுதியிருக்கிறான். எம்.எஸ்ஸியில் படிக்கிறான். 'சித்தப்பா, என் தாழ்மையான நமஸ்காரம்' என்று எழுதுகிறான். ஆஹா ஹா ஹா... எவ்வளவு நல்ல பையன்" அவர் வாயிலிருந்து பூச் சொறிவது போல் புகழ் கொட்டும். அது தான் அவருடைய கலை. இங்கும் பலிதத்தால் போட்டியிட முடியாது. விவாக சம்பந்தங்களைப் பொறுத்திருந்த உத்தியோக உயர்வுகளுக்காகப் போட்டியிடுவதும் அர்த்தமற்றது. இங்கும் பலிதத்திற்கு நம்பிக்கை வைக்க முடியாது. குறிப்பிட்ட உறவிற்குக் குறிப்பிட்ட ஆசனம், வேலை என்றிருந்தது. கம்பெனி டிப்போவிலிருந்து தூர தேசங்கள் வரை எல்லா இடத்து அதிகார நிலைகளிலும் மாமனார், மாப்பிள்ளை, மச்சினன், அத்தான், சம்மந்தி உறவுகளும், இவர்களைச் சார்ந்த பிற உறவுகளும் காணப்பட்டன. இதற்குப் பிறகு மொழிகளின் ஒற்றுமை, ஜாதி ஒற்றுமை என்று கூடும் குழுக்கள். இப்படி எங்கும் தங்களைச் சார்ந்தவர்களை நியமித்து விட்டு, ஹாய்யாகத் தங்கள் நலத்தை மட்டுமே கருதி வாழ்பவர்கள்தான் அநேகர். இங்கு பலிதத் நுழைய முடியாது. பலிதத்தால் பார்த்துக் கொண்டுதான் இருக்க முடிந்தது. கம்பெனியின் உத்தியோகஸ்தர்களின் இடம் மாறுதல்களைப் பற்றி நடுநடுவே இடப்படும் அறிக்கைகளை பஞ்சாங்கத்தைப் படிப்பதைப் போல் உன்னிப்பாய்ப் படிப்பான் அவ்வளவுதான்.

அன்றாடப் பிழைப்பில் இதெல்லாம் தினசரி நிகழ்ச்சிகள் தாம். இங்கு போட்டியிட முடியாது; ஏனென்றால் இதெல்லாம்

யுகம் யுகமாய் நடக்கின்ற விஷயங்கள்; இங்கு வேலைத் திறனால் மட்டும் ஒன்றும் சாதித்து விட முடியாது.

ஆனால் வேறு வழிகளும் எத்தனையோ உள்ளன. அவற்றை எல்லாம் ஆராய்ந்து தன் திட்டத்தை வகுத்தான்.

ஹரிஹரபாபுவின் வழி ஒரு விதம். மேலதிகாரிகளின் வலக்கை போன்றவர். அவர்களுடைய சப்ராஸிகளுடன் தொடர்பு கொண்டு அவர்கள் மூலம் யாருக்கு என்ன வேண்டும், அதை எங்கிருந்து வரவழைப்பது என்று அறிந்து வைத்துக் கொள்ளு வார். மெல்ல மெல்லத் தன் எண்ணற்ற காரியங்கள் மூலம் அதிகாரியைத் தன் கையுள் போட்டுக் கொண்டு விடுவார். அப்புறம் அவரை விட்டே தனக்கு சிபாரிசு எழுத வைப்பார். அடியிலிருந்து புறப்பட்ட அவர் இப்பொழுது பாதி தூரம் வரை வந்து விட்டார். சிரித்த முகம்; ஆனால் எப்பொழுதும் வேலையில் மூழ்கினவராய்த் தோன்றுவார். அவர் வீட்டின் எதிரே பாதையி னோரமாய் மூன்று அகலமான மரக் கட்டில்கள் கிடந்தன. அவை மேல் நிறைய ஃபைல்களை வைத்துக் கொண்டு ஹுக்கா பிடித்த வாறு வேலை செய்வது போல் பாசாங்கு செய்வார். அரட்டை யுடன் ஏதாவது ரகசியங்கள் வெளிவந்து விடக்கூடும் என்ற பயத்தில் அவர் பிறருடன் அதிகமாய்ப் பழகுவதில்லை. அப்படி எங்கேயாவது எக்கச் சக்கமாய் மாட்டிக் கொண்டால் மெல்ல நழுவி விடுவார். "நான் வருகிறேன், அவசரமாயிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டு.

இவருக்கு நேரெதிரானவர் தனேஷ் பாபு. நல்ல நிறமான உடல். ஆனால் கொஞ்சம் பலவீனமானவர். குறுகிய எலும்பு எலும்பான நெஞ்சு. பெரிய தலை, சதைப் பற்றுள்ள முகம். முயலின் காதுகளைப் போன்ற காதுகள் அவருக்கு. ஆனால் மந்த மானவை. யாராவது ஏதாவது கேட்டால் முதலில் 'அப்பாடா' என்று தான் ஆரம்பிப்பார். ஆவல் நிறைந்த கண்களைக் கண் ணாடி அலங்கரித்தது. முப்பது முப்பத்திரண்டு வயதிருக்கும் அவருக்கு. ஆனால் காதின் பின்னால் கொஞ்சம் நரையும், நெற்றி நரம்புகளில் முடிச்சுகளும் காணப்பட்டன. ஆரோக்கியம் இல்லாவிட்டாலும் சுறுசுறுப்பிற்குக் குறைவில்லை. நாகரிகமாய் உடுத்தவர்களைக் கண்டால் உடனே சிகரெட் டின்னை நீட்டுவார். பேசியே மயக்கி விடுவார். இனிமையான சிரிப்பு. மாலையில் கட்டாயம் டென்னிஸ் விளையாடுவார் - சுமாராகத்தான். பாட்டு, இலக்கியம், சரித்திரம், பொருளாதாரம், அரசியல் - ஒவ்வொரு விஷயத்திலும் மிகவும் உயர்ந்த ரகப் பேச்சு வார்த்தையைத் துவக்கி வைப்பார். ஆனால் கடைசியில் தர்க்கத்தில் தோல்வியை

ஒப்புக் கொண்டு, வெற்றி பெற்றவரைத் தன் குருவாக ஏற்றுக் கொள்ளுவார். பிறகு வெற்றி பெற்றவரின் குண விசேஷங்களை ஆராயப் புகுந்து விடுவார். டீ, சிகரெட், மரியாதை செய்த பின் தான் அவரைப் போக விடுவார். பிறரைப் போட்டியில் உற்சாகம் கொள்ளச் செய்து பிறகு தன் தோல்வியை ஒப்புக் கொள்ளும் பெருங்குணம் அவரிடம் இருந்தது. அப்படிச் செய்வதால் மேலதிகாரிகளுக்கு வெற்றி அடையும் ஒரு திருப்தி கிட்டியது. தோல்வி பெற்ற தனேச்வர் பாபுவிடம் அவர்களுக்கு காருண்யம் கலந்த அன்பும் பிறந்தது. அவருக்கு டென்னிஸ் பயிற்சி கொடுத்தார் ஒருவர். இன்னொருவர் அவருக்கு ஆபீஸ் வேலை கற்பிக்க முயற்சி செய்தார். இவர்களுடைய முயற்சிகளால் தான் ரொம்பவும் பலன் அடைந்தவர் போல அவர் முன்னேற்றம் காண்பித்தார். எவ்வளவு சட்டென்று விஷயத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது அவரால்! இதைப் பற்றிப் பேசும் பொழுது மேலதிகாரிகள் அவருடைய புத்திக் கூர்மையைப் புகழ்ந்தனர். எல்லோரும் அவரை மேலே உயர்த்தி விடுவதில் கை கொடுத்தனர். அடியிலிருந்து மனிதனுள் நெகடிவ் குணம் வேண்டிய மட்டும் இருந்தாலொழிய இவ்வித உயர்வு கிட்டுவது துர்லபம். தனேசுவர் பாபுவிற்கு அந்த உயர்வு எளிதாய்க் கிட்டியது; எல்லோர் முன்னிலையிலும் மற்றவரைப் போல் வேஷம் போட்டார். அந்த மறைவில் கம்பெனியின்பெயரை உபயோகப்படுத்தி எவ்வளவோ லாபமளிக்கும் பலவித வியாபாரங்களையும் நடத்தி வந்தார். குடும்பம் கிராமத்தி லிருந்தது. அதனால் அதிதி உபசாரத்திற்கு சௌகரியமாய் வீடு காலியாயிருந்தது. குடும்பத்தைப் போய்க் காணும் சாக்கில் திரட்டிய செல்வத்தைக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டிய லீவும் உதவியது கம்பெனி. இதெல்லாம் புத்திசாலித்தனமான வழிகள். இங்கும் பலிதத்தால் முன்னேற முடியவில்லை. இன் னும் பலர் தெய்வீக சக்தியைத் திரட்டுவதில் முனைந்திருந்தனர்.

தேவேந்திர பாபு ஒருவர் - ஓயாமல் அவர் வீட்டில் பிராமண போஜனம், சத்தியநாராயண கதாகாலட்சேபம், த்ரிநாத மேலா, ஹோமம், யக்ஞம், பிரசாதம், பூஜை எல்லாம் நடந்து கொண் டிருக்கும். ஒரு தாடி சந்நியாசியும் அவர் வீட்டிற்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தார். இந்த அமர்க்களம் எல்லாம் வேலை உயர்வுக்காகவே. வேலை உயரவும் செய்தது. சந்திரகாந்த பாபு ஜாதகப் பலனிலும், அதிர்ஷ்டத்திலும் நம்பிக்கை வைத்திருந்தார். அவர் வீட்டில் பலவிதமான ஜோதிடர்களும், எதிர் காலத்தைக் கணிப்பவர்களும் கூடினர்.

ஒருவர் மணியைப் பார்த்து கேள்விக்குப் பதில் சொல்பவர். ஒருவர் முகம் பார்த்து எதிர்காலத்தைக் கணிப்பவர். கை பார்ப்பவர் ஒருவர். இன்னொருவர் ஜாதக பலனை எடுத்துரைப் பவர். இவர்கள் உதவியால் பலவித சாந்திகளும், பிராயச்சித்த பூஜைகளும் நடந்தன. இவை பலனளிக்காமற் போனாலும் தேவேந்திர பாபு அலுக்காமல் அவர்கள் சொல்லுவதை எல்லாம் செய்து கொண்டும், புதிய ஜோதிடர்களைத் தேடிக் கொண்டும் இருந்தார். த்ரிகுண கவசம், தேவி கவசம், அஷ்ட உலோகங் களால் ஆன தெய்வீகமான மோதிரம், பிறரை வசீகரிக்க வல்ல கைக்குட்டை முதலிய பல பொருள்களையும் அவர் திரட்டி இருந் தார். வேலை உயர்விற்காக அவர் கையாண்ட வழி இதுதான்.

பணச்செலவு அதிகம் இங்கு, பலனும் நிச்சயமில்லை. பலிதத் இந்த வழியை விட்டு ஒதுங்கியே நின்றான்.

'பிறகு என்னதான் வழி?' கவலையிலாழ்ந்து விட்டான் பலிதத். ஆனாலும் நம்பிக்கையை விடவில்லை.

திரும்பத் திரும்ப பிறரின் பல உபாயங்களை ஆராய்ந்து மதிப்பிட்டான். மனம் தளர்ந்து விடுகிறது, ஆனால் முயற்சி தளரவில்லை.

வெற்றி சாஸ்திரத்தின் அடிப்படை நீதியை அனுசரித்து, அவன் தினம் உறங்கும் முன்பு அன்று நடந்ததை எல்லாம் யோசித்துப் பார்ப்பான். அன்று அவன் உயர்விற்காக என்ன செய்தான், அவனால் இன்னும் என்ன செய்ய முடியும் என்பதைக் கணித்தான். பிறருடைய முயற்சிகளைக் கவனித்தா னானாலும் அது தூரத்திலிருந்தேதான். அடுத்த நாள் ஆபீசுக்குப் போனபொழுது அங்கு குரு பாபு தாடியை எடுத்து விட்டிருந் ததைக் கவனித்தான். எப்பவும் ஏதோ கடன் பட்டவர்போல அழுது வழியும் முகம் அவருக்கு, சிரிப்பே இல்லாத முகம். அன்று வெற்றி சாஸ்திரத்தைப் பற்றிய ஒரு புத்தகத்தை பலிதத்தின் பக்கமாக நீட்டினார். "ஸர், ரொம்ப நல்ல புத்தகம் இது". சிகப்பு பென்ஸிலால் கோடிடப்பட்டிருந்த முதல் சூத்திரம் — "எப்பொழும் சிரித்த முகத்துடன் இருக்க வேண்டும்". பாவம் குரு பாபு. கம்பெனியில் பன்னிரண்டு வருடங்களாய் வேலை பார்த்தாயிற்று. ஆரம்பித்த இடத்திலேயேதான் இன்னமும் இருக்கிறார். குடும்பம் மட்டும் ஏறியது. பிழைப்பிற் காக பன்னிரண்டு வருடங்களாய் உழைத்தாயிற்று. இனிமேல் பாக்கி இருந்த வாழ்க்கை முழுவதும் அவர் சிரித்த முகமாய் இருந்தாலும் பிரயோசனப்படப் போகிறதில்லை.

முகஸ்துதி செய்பவரின் முயற்சிகளும் ஒருவித விசேஷ பலனையும் தர முடியாது. இங்கு போட்டி அதிகம். பலிதத்திற்கு தலை வலிக்க ஆரம்பித்து விட்டது. யோசித்து யோசித்து. பிறகு தான் படித்ததை நினைத்துக் கொண்டு ஆட்டோ ஸஜெஷனைப் பின்பற்றினான். தனக்கு உயர்வு கிட்டி விட்டதாக நினைத்தான். திறந்த வெளியிலமர்ந்து தன் உடலை ஒரு சமநிலையில் வைத்துக் கொள்ள முயன்றவாறு புகழ்பெற்ற ஒரு உபாயத்தைக் கையாண்டவாறு தன் மனதிற்குள்ளேயே "உலகத்தை வியாபித்திருக்கிறது பிராணன். இந்த சக்தியை நான் மூச்சின் வழியாய் உட்கொள்ளுகிறேன். என் உடலில் பிராணன் சக்தி புகுந்து நிரம்பி வழிகிறது. அந்த சக்தி என்னை ஆட்கொண்டுள்ளது. வேலையில் உயர்வு கிட்டும், கட்டாயமாய், ஏனென்றால் அது என் விருப்பம். என்னிடம் செல்வம் பெருக வேண்டும். வேலை உயர வேண்டும். இது என் உத் ரவு" என்று சொல்லிக் கொண்டான்.

யோசனை கலைந்து, யானமும் கலைகிறது. தினம் இரவில் படுக்கும் முன்பு இதைப் பயின்றான்.

கம்பெனி உத்தியோகஸ்தர்கள் எல்லோருமே வெற்றியைப் பற்றிக் கவலைப்படுகிறவர்களாய் இருக்கவில்லை. பலருடைய காரிய விவகாரங்கள் அவனுடைய வெற்றி சாஸ்திரத்தில் காணப்படவில்லை, ஆனாலும் வெற்றி அவர்களுக்கு கிட்டியது. சீக்கிரமேயோ அல்லது நேரம் தாழ்ந்தோ — அவரவர்கள் அதிருஷ்டம் அது.

திவாகர் பாபு சர்வகலாசாலையில் மிகவும் மேன்மையாகப் படித்துத் தேர்ந்தவர். சுதந்திரப் போரில் பங்கு கொண்டவர். அதனால் அரசாங்க வேலையை ஏற்றுக் கொள்ளாமல் கம்பெனி வேலைக்கு வந்து விட்டார். வீட்டில் கதரே அணிந்தார். ஒவ்வொரு சமயம் உணர்ச்சி வசப்பட்டு மண் தரையிலேயே படுத்து உருளுவார். மரச் செருப்பையே உபயோகித்தார். தனிமையில் யோகாப்பியாசமும் செய்வதாக வதந்தி. ஆனால் ஒரு போதும் தர்மம், மதம் என்று பிரசாரம் செய்ததில்லை. மெல்ல மெல்லப் பேசுவார். மனப்போக்கை அனுசரித்துப் பேசுவதில் நிபுணர். கண்டிப்பான மனிதர். வேலையிலும் கண்டிப்புள்ளவர். தன் வழியை விட்டு விலகி அவர் எவருடைய மனதையும் மகிழ்விக்க முயற்சித்ததில்லை. மாலையில் அரட்டை அடிக்க அவர் எப்பொழுதும் வெளிப்பட்டதில்லை. எந்தக் குழுவுடனும் சேர்வதில்லை. ஆனாலும் பிறர் அவரைப் புகழ்ந்தனர். மெல்ல மெல்ல வேலையிலும், கம்பெனியின் பொறுப்புள்ள ஆபீசர் என்ற பெயர் வாங்கி இருந்தார்.

கதீச்வர் பாபு பலமாய் தர்க்கம் செய்யக் கூடியவர். அவருக்கு எதையும் மனதில் ஒளித்து வைக்கும் வழக்கமேயில்லை. நேர்மாறாக, சிறு சிறு விஷயங்களைப் பிடித்துக் கொண்டும் மல்லுக்கு நிற்பார். யாரையும் பேச விடமாட்டார். வெற்றியை விரும்புகிறவர்கள் நூறுதரம் நமஸ்கரிக்கும் மனிதர்களைப் பற்றி "திருடன், கொள்ளைக்காரன், காக்காய் பிடிப்பவன்" என்று கடுமையாய் கண்டிப்பார். முகலாவண்யம் அவருடைய கண்டனத்திற்கு உரம் ஊட்டியது. வழக்கையாகிக் கொண்டிருந்த தலை விசுவாசத்தை அளித்தது. அவருக்கும் எந்த விதமான இச்சைகளும் கிடையாது. ஒரே ஒரு இன்பம்தான் அவருக்கு — தினம் வயிறு நிறைய தூத் பேடா உண்ண வேண்டும்.

ஆனால் அதனால் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. உயர்ந்த நிலையிலிருந்தார்.

இன்னும் எவ்வளவோ பேர் இருந்தனர் — உற்பத்தித் தொழில் தெரிந்தவர்கள், ஆனால் வியாபாரம் அறியாதவர்கள், சாதுர்யம் அறியாதவர்கள். பேச்சில் நைச்சியம் அற்றவர்கள். உயர்விற்காக இவர்களிடம் எந்தத் திட்டமும் கிடையாது. ஆனாலும் இவர்களுள் பலர் உயரத்தை அடைந்தார்கள். உயர்வதைப் பற்றியும், வழுக்கி விழுவதைப் பற்றியும் அவர்கள் கவலைப் படுவதில்லை போலும். அந்தர்யாமி பாபு ஒருவர் - பதினாறு வருடங்களின் உழைப்பிற்கு பிறகு இப்பொழுதுதான் பதவி உயர்வும், கம்பெனியிடமிருந்து புகழுரையும் கிட்டின. ஆனாலும் அவர் எப்பொழுதும் சந்தோஷமாகக் காணப்பட்டார். பேச்சில் இனிமை கொட்டியது. ஐந்து நிமிடங்களில் பிறரின் சச்சரவுகளை சமாதானம் செய்து வைப்பதில் கெட்டிக்காரர். 'என் நம்பிக்கை தளருவதேயில்லை. நான் ஃபுட்பாலைப் போன்றவன். அடிக்க அடிக்க மேலெழக் கூடியவன்' என்பவர்.

பலிதத் இவரைப்பற்றியும் யோசித்தான். ஆனாலும் வெற்றி சாஸ்திரத்தில் அவனுக்கிருந்த நம்பிக்கை தளரவில்லை. ஒரே யுக்தியால் இவர்கள் எல்லோரையும் வேரோடு பிடுங்கி ஒரு பக்கமாய் ஒதுக்கி விடமுடியும் அவனால். அதிருஷ்டசாலிகள் போலும் இவர்கள்!

ஆனால் அவன் அதிருஷ்டத்தை எதிர் பார்த்துக் கொண்டு கிடக்க விரும்பவில்லை - பொறுமையற்றுத் தவித்தான்.

என்றாவது ஒரு நாள் ஒளி பிறக்கும், வழி பிறக்கும் என்று திடமாய் நம்பினான். ஆனால் எப்பொழுது? இன்னும் எவ்வளவு

நாள் பொறுக்க வேண்டும்? தைரியமிழந்து பலிதத் யோசித்தான். உணர்ச்சிவசப்பட்டு யோசித்தான்.

★ ★ ★

கம்பெனி வாழ்க்கையில் ஆபீசரின் மனைவியாய்த் திகழ்வது சரோஜினிக்கு மெல்ல மெல்ல பிடித்துப் போயிற்று. முதலில் கொஞ்சம் புதிதாய் இருந்தது, நாளாக ஆக பாந்தமாய் விட்டது. எவ்வளவு பெரிய உலகம்! எவ்வளவு ஜாதிகள்! எவ்வளவு மொழிகள்! ஜாதியின் பரம்பரை அர்த்தத்தை தள்ளிவிட்டு அதை மற்றொரு கோணத்திலிருந்து பார்க்கக் கற்றாள். தொழில் வேறு பாடுகளிலிருந்து ஏற்பட்ட ஜாதி வேற்றுமை, தொழிலாளி இனம், யஜமானன் இனம், குமாஸ்தா இனம், ஆபீசர் இனம், வேறு கம்பெனியின் ஊழியர்கள் ஜாதி, அரசாங்க ஊழியர் ஜாதி, வக்கீல் ஜாதி, ப்ரொபசர் ஜாதி, பத்திரிகைத் தொழில் ஜாதி என்றெல்லாம் பாகுபாடு செய்து கொண்டாள்.

வெளி இனத்தவரைப் பற்றி எல்லாம் கவலைப்பட அவளுக்கு சந்தர்ப்பம் இல்லை. எப்போதாவது அவள் தன் இனத்தினருடன் பழகலானாள். பழகினாள், யோசித்தாள்; திரும்ப தன் வீட்டுக் குள் வந்து காரியத்தைக் கவனித்தாள். வீட்டுள், அவள் பெண் இனம் - மற்றெந்த இனமும் அங்கு கிடையாது. வீடு நிரம்ப ஆரம் பித்து விட்டது. நிதாயின் கெட்டிக்காரத்தனம் மெல்ல மெல்ல அவளுக்குப் புரிய ஆரம்பித்தது. மாலை மயங்கும் வேளைக்கு யார் யாரோ தெரியாதவர்கள் நிதாயியுடன் வீட்டின் பின் பக்க மாய் உள் நுழைவதைக் கண்டாள். இரவு நேரத்திலேயே பலிதத் துடன் ஒப்பந்தம் ஆகி விடும். வீடு நடத்தும் இந்த புதிய வழியை பலிதத்தால் மறுக்க முடியவில்லை. நன்மை தீமை யின் பேச்சை யும், விவேகத்தையும் நெட்டித் தள்ளிவிட வேண்டி வந்தது. எப்படியாவது மனிதன் வாழ வேண்டும், அதுதான் முக்கியம்.

அதனால் வீடு நிரம்பலுற்றது - குலை குலையாய் வாழைக் காய், கோணி கோணியாய் அரிசி, நெல், செல்வம். இருவரும் வீட்டை நிரப்பும் வேலையில் முனைந்து விட்டனர். ஒரு முறை பெற்ற பிறகு, மேலும் மேலும் பெறும் ஆசை விடுவதில்லை.

நீசனான பலிதத் தன்னைப் பெரிய அறிவாளியாய் நினைத் துக் கொண்டு மனவைியிடம் தன் அறிவை விளக்கினான். "நான் செய்வது கெட்டிக்காரத்தனம். பிறர் அதைச் செய்தால் அது திருட்டு. மேலிருந்து, கீழ் வரையில் எல்லோரும் அதில் ஈடுபட்டி ருக்கின்றனர். நீயே பார். அப்படிச் செய்யாதவன் முட்டாள், மூளை அற்றவன். யாருடைய அரிசியைப் பொறுக்கிக் கொண்டு

போகிறீர்கள் என்று யாராவது எறும்புகளைக் கேட்பதுண்டா? அதே மாதிரி தான் கம்பெனி சொத்தும், சூறையிட லாயக்கானது. மிஸ்டர் எட்வர்ட் இரண்டு லட்சமும் மிஸ்டர் ராதா ரமணன் ஒரே அடியில் மூன்று லட்சமும், மிஸ்டர் வைத்தியநாத மேனன் தன் பெண் கலியாணத்திற்கு கண்டிராக் டர்களிடமிருந்து அறுபதினாயிரம் பெறும் பரிசுகளும் வாங்கிக் கொண்டார்கள். இம்மாதிரி உதாரணங்கள் கணக்கற்றவை. இவர்கள் எல்லோரும் கெட்டிக்காரர்கள். நாம்தான் பாதி முட்டாள். பாதி கோவணத்துடன் நியாயத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தால் முதலில் சுவர்க்கத்திற்குப் போய்விடலாம். இன்றைய உலகம் அப்படிப்பட்டது. செய், இல்லையென்றால் செத்துப்போ, எல்லோரும் என்ன சொல்லு கிறார்கள் தெரியுமா? பஞ்ச காலம் இப்பொழுது, முடிந்ததைச் சேர்த்து வைத்துக் கொள் என்கிறார்கள். எங்கிருந்து சேரும், எங்கிருந்து வளரும்? இப்படித் தானே முடியும்?"

சொல்லிக் கொண்டே கண்ணைச் சிமிட்டியவாறு அசட்டுச் சிரிப்பொன்றை உதிர்த்தான். பார்க்க என்னவோ போலிருந்தது அவனுடைய பாணி. முகம் உருண்டு திரண்டு, உடலில் சதைப் பற்று போட்டு, ஆரோக்கியத்திற்கும் வெற்றிக்கும் சான்றாகத் தோன்றினான்.

கெட்டிக்காரத்தனத்திற்கு உதாரணம் ஒன்று அவன் சொல்லு வதுண்டு - "கம்பெனியின் கறுப்பு டிரங்கு ஒன்று எங்கேயோ கிடந்தது. புத்திசாலியான தலைமை குமாஸ்தா அதைக் கவனித்து வைத்துக் கொண்டார். கணக்கில் அது முதலில் ஒரு 'பெட்டி' என்று மட்டுமே எழுதப்பட்டது. ஐந்து வருடங்களுக்கு பிறகு "பெட்டியை கறையான் அரித்துவிட்டது." என்று எழுதப் பட்டது. பழைய பெட்டி, கறையான் அரிக்கக் கூடியதுதான் கூர்மையான புத்தி உள்ளவனால் இரும்புப் பெட்டியைக் கூட கறையானால் அரிக்க வைக்க முடியும். சாதாரண மனிதனா அவன்?"

பலிதத்தைத் போல சரோஜினியால் இதை எல்லாம் வேடிக்கையாய் எடுத்துக் கொள்ள முடியவில்லை. அவள் மனம் வெறுப்பால் கொதித்தது. அவனை வெட்டி விடுவது போல் பார்த்தாள். அவள் பெண், உணவும், உடையும் நகையும் கிடைக் கின்றன. இவைதானா முக்கியம்?

நடுநடுவே சோகத்துடன் எங்கேயோ பார்த்துக் கொண்டு இருந்து விடுவாள். பறவை பறந்து போய்விட்டது. இலைகள் உலர்ந்து உதிர ஆரம்பித்துவிட்டன. ஆறு நிரம்பி விட்டது. ஆனால்

அவள் அவளுக்கே ஒரு கேலியாகத் தோற்றமளித்தாள். அந்தக் கேலி உருவம் விலை உயர்ந்த புடவை உடுத்து, கொண்டை போட்டு, நகை அணிந்து, அலங்காரம் செய்துகொண்டு வெறுமனே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தது.

ஒவ்வொரு சமயம் தூக்கத்திலும், அல்லது விழித்தவாறு தூங்கும் பொழுதும் திடீரென்று தூரத்திலிருந்து சலசலக்கும் வாழ்க்கையின் அலைகள் அவளுடைய செவிகளை எட்டும். அதன் கணக்கற்ற தோற்றங்கள் தூரத்திலிருந்து மிதந்துவரும். ஈரமான காற்று பட்டதைப் போல திடுக்கிட்டு எழும் அவளுடைய பொங்கும் மனம். திடுக்கிட்டுப் பார்ப்பாள். உண்மையாகவே அவள் எதையாவது எதிர்பார்த்தாளா? முடிவேயில்லையா?

★ ★ ★

அன்று மாலை அவள் கதவருகில் எதையோ யோசித்தவாறு உட்கார்ந்திருந்தாள். சிகரெட் புகையை விட்டபடி, கையில் டென்னிஸ் மட்டையுடன் ஒரு சுந்தர புருஷன் பதிபரமேசுவர் பலிதத்துடன் வருவதை பார்த்தாள். உடனே எழுந்து உள்ளே போய்விட்டாள்.

கம்பீரமானவள் அவள், அதிகபட்சம் மௌனமாயிருப்பவள். தன் மனதுள் ஒளிந்து கிடந்த தனிமை ஏக்கத்தைப் பெரு மூச்சாக வெளியிட முயன்றவாறு அவள் தூரத்தில் சூரியாஸ் தமனத்தில் பார்வையைச் செலுத்தி அமர்ந்திருந்தாள். வீட்டை நோக்கி வரும் இரு ஆடவர்களைக் கண்டு அவள் மனதின் ஆழத் தில் தொலைந்து போய்விட்ட ஏதோ அலை ஒன்று பொங்கி வழிந்திருக்கலாம். அதே அலை அவளுடைய அவயவங்களை யும் பாதித்திருக்கலாம். அவளுடைய உடையையும் கலைத்திருக்க லாம். ஆனால் அவளுக்கு அதொன்றுமே தெரியாது. தன் மேலேயே கோபித்துக் கொண்டாள். "சீ! என்ன பெண் இவள்! பெரிய மனிதர், பலிதத் தாஸின் மனைவியா இவள்" என்றல்லவா நினைத்திருப்பார்கள் அவர்கள்? நினைக்க நினைக்க அவளுடைய அந்தரங்கத்துள் அலை அலையாய் ஏதேதோ எண்ணங்கள் எழும்பின. அந்த அலைகளை அடுக்கவும் முடிந்தது அவளுடைய பெண் மனத்தால். பெண் சிருஷ்டிக்கு அரசி, இயற்கையின் லட்சுமி தேவி. அவள் நியாயத் தராசில் நன்மை தீமைக்கும் அப்பாற்பட்டவள். யோசிக்க யோசிக்க அவள் முகம் சிவந்து போயிற்று. தலை மயிர் அவிழ்ந்து விரிந்தது. நெற்றியில் வியர்வை துளிர்த்தது. ஜன்ன லடியில் அமர்ந்து தூரத்தைப் பார்த்தவாறு இருந்த அவளுடைய

மூக்கு விரிந்தது. செடி கொடிகளின் மறைவில் ஒளிந்திருந்து, வரும் காலடி ஓசை கேட்டு பதுங்கும் காட்டு மிருகத்தைப் போல் தோன்றினாள் அவள்.

“இது ஏழையின் குடிசை, ரணஜித் பாபு. உங்களைப் போல் பணக்காரனின் பிள்ளையும், பிரசித்த மாமனாரின் மாப்பிள்ளையும் அல்ல நான். நீங்கள் பெரிய மனிதர். என் பெரும் பாக்கியம தான் நீங்கள் இங்கே வந்திருப்பது.”

“சரிதான், பலிதத் பாபு, எவ்வளவு வேண்டுமானாலும் திட்டிக் கொள்ளுங்கள். நீங்கள் இங்கு வந்து இத்தனை நாளாகி விட்டது. என்னால் உங்கள் வீட்டிற்கு இது வரை வர முடியவில்லை. என் தவறுதான். ஆனால் நீங்களும் என்னை ஒரு நாள் கூட அழைக்கவில்லையே. விருந்து வைக்க வேண்டி வருமே என்ற பயமோ?”

“ஆமாம் அதனால்தான். விதுரன் வீட்டில் கீரை தான் உண்டு. உங்களை உட்கார வைக்கவே இங்கு சரியாய் இடமில்லையே ...”.

“ஹோ .. ஹோ .. ஹோ .. ஹோ என்ன பேச்சு! இங்கு நிறையக் காலி நிலமிருக்கிறதே. அந்த ஜன்னலின் முன்னால் கொஞ்சம் தள்ளி. ஒரு சிறு தோட்டம் போடலாம். ரோஜா, டாலியா, க்ரிஸாந்தமம் ஒரு புறம். அந்த ஓரத்தில், கானா, லிலி, மல்லி, மக்னோலியா. ஆஹா! எவ்வளவு அழகாயிருக்கும்.”

அவர் ஜன்னல் பக்கமாக பார்க்கிறார்? இல்லை. கதவுப் பக்கமாய் அல்லவா பார்த்துக் கொண்டிருந்தார்! பலிதத், “இந்த வறட்டு நிலத்தைப் பார்த்து உங்களுக்கு பூக்களின் நினைவு வந்து விட்டதா? நான் வேறு விதமாய் யோசித்துக் கொண்டிருந்தேன். கொஞ்சம் கோதுமை, பலவிதக் கீரைகள், கத்திரி, வெண்டை, வெங்காயம், முதலியவை பயிர் செய்தால் உபகாரமாயிருக்கும் அல்லவா?” என்றான்.

சரோஜினியால் தன் சிரிப்பை அடக்க முடியவில்லை. அவரும் சிரித்துக் கொண்டிருந்தார். அழகிய வெண்மையான பல் வரிசை அவருக்கு. என்னவோ ஆங்கிலத்தில் சொன்னார். சரோஜினிக்குப் புரியவில்லை. ஆனால் ஒரியாவில் சொன்னதைப் புரிந்து கொண்டாள். “உங்கள் ப்ராக்டிகல் இன்ஸைட் ரொம்ப பலமானதுதான் பலி பாபு! ஆர்கனைஸிங் எபிலிடியும் அதிகம்தான் உங்களுக்கு. தானியம் வளர்க்கும் விஷயம் எனக்குத் தோன்றவில்லை. ஆனால் விஷயம் தெரியுமா உங்களுக்கு? ஏதாவது இடத்தில் நின்று கொண்டால் அங்குள்ள மண்ணுடன் ஒற்றுமை உள்ள ஐடியா மண்ணிலிருந்து தானாகவே மனதுள் புகுந்து வட்டமிடும். இங்கு நின்று கொண்டு உங்கள் வீட்டைப்

பார்க்கும் பொழுது, மனதில் பூந்தோட்டத்தின் விஷயமே எழுகிறது. நன்றாய், ஒத்துப் போகிறது."

"என்ன மனிதன் இவன்! வேடுவன் தான்" என்று சரோஜினி எண்ணினாள். "மிட்டாயினுள் பூரணம் வைப்பது போல பேச்சு. உள்ளர்த்தம் வைத்துப் பேசத் தெரிகிறது இவருக்கு".

ஆனால் சரோஜினிக்குத் தெரியாது. மனிதனின் முதல் ஈடுபாடு வேட்டை. முட்டாளைப் போல் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள். பாட்டினூடே ஒலிக்கும் தச்சு வேலையின் ஒலியைப் போல் பலிதத்தின் பேச்சு அபசுரமாகக் கேட்டது. பலிதத் பேசிக் கொண்டிருந்தான். "நீங்கள் புத்திமான், உயர் குலத்தில் உதித்தவர். அப்படிப்பட்டவர்களே கவிகளாயிருக்கிறார்கள். அதனால் உங்களுக்கு பூச்செடி நினைவிற்கு வந்தது. ஆனால் என் நிலைமையில் என் நினைவெல்லாம் வயிற்றுப் பாட்டைப் பற்றித் தான் இருக்கும் என்று உங்களுக்குத் தெரியாதா? கடையில் வசலக் கீரை ஒரு துண்டு இரண்டு பைசா. கத்திரிக்காய் ஒன்று இரண்டு பைசா, கீரை ஆறணா சேர் ..."

"நல்ல கணக்குத்தான்." நடுவில் பேசினார் ரணஜித் பாபு. "காய்கறித் தோட்டம் போடுங்கள். ரொம்ப நல்லது. பாலும் கிராக்கி இங்கு. தோட்டத்திற்கும் உரம் வேண்டும். வீட்டெதிரில் தட்டியால் தடுத்து ஒரு தொழுவம் கட்டிவிடுங்கள். இரண்டு பசு வைத்துக் கொள்ளுங்கள். ஜன்னல் வழியாய் பசுக்களை கவனித்தும் கொள்ளலாம். சாணியும், பசு மூத்திரமும் தோட்டத்திற்கு உகந்தவை. அவைகளைக் கொஞ்சம் அழுக வைக்கலாம். இங்கு ஒரு குழியுள். கத்திரிக்கு மிகவும் உத்தமமான உரம் அது. கொஞ்சம் நாறும் இங்கு, கொசுவும் ஈயும் அதிகமாகும். அதனால் என்ன? குடும்ப வீட்டில் துர்நாற்றம் இருப்பது சாதாரணம் தான். கொசு ஈக்காக முன்ஸிபாலிடியைக் கேட்டு கொஞ்சம் டி.டி.டி. வாங்கி வையுங்கள்..."

சிகரெட் கேஸைத் திறந்து ஒரு சிகரெட்டை தான் எடுத்துக் கொண்டு கேஸை பலிதத் பக்கமாய் நீட்டினார் ரணஜித் பாபு. ரணஜித் பாபுவைப் போல கால்களைப் பரப்பி கைகளைத் தூக்கிப் புகையை மேலே விட்டவாறு பலிதத். "அடடே — எவ்வளவு உயர்ந்த சிகரெட் இது! ஒன்றின் விலை ஆறு பைசாவிற்குக் குறையாது. கடவுளே, நாங்கள் இந்த மாதிரி சிகரெட்டைப் பிடிக்க ஆரம்பித்தால் ஐந்தே நாட்களில் மாதச் சம்பளம் புகையாகவே போய் விடும்" என்றான்.

"நீங்கள் ரொம்ப அறிவாளி; எனக்கு இது பழக்கமாய் விட்டது".

"ஏன் பிடிக்கிறீர்கள்? சிகரெட் புகையால் இருமல் வருமாம் தலைமயிர் கொட்டுமாம், தலை சுற்றுமாம் ... "

"ஹோ, ஹோ, ஹோ, ஹோ.. அதெல்லாம் ஒன்றுமில்லை பலிதத் பாபு; நான் பதினைந்தாவது வயதிலிருந்து சிகரெட் பிடித்து வருகிறேன். இது இல்லாவிட்டால் வேலை ஓடுவதில்லை. இன்ஸ் பிரேஷன் தருகிறது".

"இவர்கள் சொல்வதெல்லாம், பின்பு ..."

"அதெல்லாம் பொறாமைப் பேச்சு. எவ்வளவோ சொல்லு வார்கள். ஆனால் அனுபவமுள்ளவர்தான் எது பொய் எது நிஜம் என்று அறிவார்கள். நீங்கள் சம்பத்திலேயே பெரிய ஆபீசர் ஆகப் போகிறீர்கள். உங்கள் அனுபவம் பெருகப் பெருக, பொறாமைக் கண்கள் பிறர் சுகப்படுவதைக் காணப் பொறுக்காது என்பதை அறிய வருவீர்கள். நியாயம், நீதி, ஒழுக்கம் என்ற பேச்செல்லாம் அநேகமாய் பொறாமைப் பேச்சு. நீங்களே அதை எல்லாம் விட்டு விடுவீர்கள்".

"உங்களுக்கு முன்பே நான் பெரிய ஆபீசர் ஆகிவிடுவேன், இல்லையா?"

"ஆ, என் பேச்சைவிட்டுத் தள்ளுங்கள். எப்படியாவது என் பொழுது போக வேண்டும் அவ்வளவு தான். அழகை பூஜிக்க விரும்புகிறேன். புதுமை எனக்குப் பிரியமான விஷயம். ஆனந்தமே என் தெய்வம். பிரமோஷனில் எனக்குக் கொஞ்சங் கூட இன்ட்ரெஸ்ட் இல்லை..."

"அது எப்படி முடியும்? படகை யார் செலுத்துவார்கள்? நீங்கள் தாம் உயர்வீர்கள் கட்டாயமாய்..."

"ஹோ.. ஹோ.. ஹோ.. ரொம்ப ரொம்ப நன்றி. உங்களுடன் பேசுவது சுவாரசியமாயிருக்கிறது. என்ன மூளை, உங்களுடை யது! இந்த மாதிரி புத்தி வெகு சிலரிடமே காணலாம்..."

"அடடே, உங்களை உட்கார வைக்கக் கூட இல்லையே இன்னும்! நல்ல மூளைதான் போங்கள். விளையாடி விட்டு வந்திருக்கிறீர்கள், வியர்வை ஒழுகுகிறது. அடே ஹர்ஷ், வந்து கொஞ்சம் விசிறி விடு. இதோ நான் தேநீருக்குச் சொல்லிவிட்டு வருகிறேன். அடே, இரண்டு பீடா செய்து கொண்டு வா. உங்களுக்குப் புகையிலை வேண்டுமா வேண்டாமா?"

"அடடே! நீங்கள் என்ன இப்படி பரபரக்கிறீர்கள் பலிதத் பாபு? நான் என்ன பெண் பார்க்கவா வந்திருக்கிறேன்?" ஹோ ஹோ என்று உரக்கச் சிரித்தான் பலிதத் பாபு. "நீங்கள் வீணாக சிரமப்படுகிறீர்கள் — நான் வெற்றிலை போடுவதில்லை. அடே பையா, நீ நிஜமாகவே விசிற ஆரம்பித்துவிட்டாயே, போ, போ..."

"சரி, போடா ஹர்ஷ். நீங்கள் கொஞ்சம் உட்காருங்கள். நான் இதோ வருகிறேன்."

"ஹர்ஷா, ஹர்ஷ்... போ, குதிரை, தண்ணீர் குடிக்க ... ஹோ.. ஹோ..."

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள் சரோஜினி. யோசித்துக் கொண்டுமிருந்தாள். உலகில் இப்படிச் சிரிப்பும் கேலியுமாய் வாழ்கிறவர்களும் இருக்கிறார்கள் போலும். யாரோ மெதுவாய்ப் பாடுவது கேட்டது. திரும்ப மனதுள் அந்தப் பாட்டின் எதிரொலி போல் அலைகள் எழும்பின.

இந்த சோகமான மாலை வேளையில் அவளுக்குப் பழைய விஷயமெல்லாம் நினைவிற்கு வந்தன. குழந்தைப் பருவ சூழ் நிலையில் வேறு விதமான வாழ்க்கை அது - நாலா புறமும் உயர்ந்த சுவர்களால் சூழப்பட்டதைப் போன்றது. ரொம்பத் தைரியமிருந்தால் அந்தச் சுவர் ஏறி வெளியே எட்டிப் பார்க்கலாம் - அவ்வளவு தான். பிறகு முடிச்சு விழுந்தது, வாழ்க்கையும் மாறியது. தவளைக்கும் எலிக்கும் நடந்த கலியாணம். பாதையில் நடக்கும் பொழுது ஒவ்வொரு அடியும் தடைப்பட்டு தடுக்கியது. அது நிலைமையைப் பற்றிய எச்சரிக்கை — எல்லைக்குள் அடங்கிய சூழ்நிலை என்ற அறிவுறுத்தல். அப்புறம் அவள் மனதுள் உலகத்திலுள்ள பலவிதமான மக்களைப் பற்றி யோசனை எழாமலில்லை — மனிதன் உயிருள்ளவன், வசீகரமுள்ளவன் என்று அறிந்திருந்தாள். ஆனால் இன்றுதான் இவ்வளவு பலமாய், கூர்மையாய் யோசிக்கத் தோன்றியது. யோசனை செய்வது அவளுக்குப் பிடித்திருந்தது. யோசிக்க யோசிக்க உடல் கட்டையாய், உணர்ச்சி அற்றதாய்ப் போகிறது; ஆனால் அவளுடைய கனவுகள் கைக்கெட்டும் தூரத்திற்கு வந்து விடுகின்றன.

எப்படியோ வாழ்க்கை நடக்கிறது, கொஞ்சம்கூட பொறுப் பற்ற வாழ்க்கை. கனவுலகில் அவளுடைய 'அவள்' என்னும் தன்மைக்கு ஒரு தெளிவற்ற புனர்ஜென்மம் கிட்டுகிறது. பலிதத் குசுகுசு என்று என்னவோ சொல்லிக் கொண்டிருந்தான் — "ஏ, என்ன நின்று கொண்டிருக்கிறாய் இப்படி? போய்க் கொஞ்சம் டீயும் டிஃபனும் தயார் செய்து கொண்டு வா. வந்திருப்பவர் ரொம்பப் பெரியவர் தெரியுமா? அவரை ஹுக் செய்ய வேண்டும்".

'இதென்ன ஹுக்கும் புக்கும்! என்னால் முடியாது அதெல்லாம். அப்பப்பா!'

"புரியவில்லையா ஹூக் என்றால்? தூண்டிலில் புழுவை வைத்துப் பெரிய மீனைப்பிடிப்பதில்லை? இவர் ஒரு பெரிய மீன்...'

சொல்லிவிட்டான் விஷயத்தை. ஆனால் உடனேயே நாக்கைக் கடித்துக் கொண்டான். அவனுடைய மூளை வேலை செய்தது. "இவர் பெரிய மனிதர், மேலதிகாரிகளிடம் ரொம்ப செல்வாக்கு உள்ளவர். இன்று நல்ல வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. அவராகவே நம் வீடு தேடி வந்திருக்கிறார். அவருடன் நன்றாகப் பழக வேண்டும். அனுகூலமான சமயம் வரும் பொழுது ஒரு தாவு தாவி நேரே மேலே..."

தாவுகிற பேச்சுடன் பலிதத் சரோஜினியின் இரு கரங்களையும் பிடித்து உலுக்கி விட்டான். சரோஜினி போய்க் கொண்டே "உங்கள் நண்பர் பெரிய சாப்பாட்டு ராமன், இல்லையா?" என்றாள்.

கொஞ்ச நேரம் பொறுத்து, சிற்றுண்டி உண்டு கொண்டே ரணஜித் பாபு பேசினார். "தன்னந்தனியே உங்கள் மனைவிக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்குமே, எங்கள் வீட்டிலோ ஏகப்பட்ட பெண்கள் - ஏதோ கிளப் என்று நினைக்கும்படி. அங்கே வந்தால் தெரியும் உங்களுக்கு. மனித சமூகத்தில் இருந்து கொண்டு அதனுடன் அறிமுகப்படாமல் இருந்தால் வாழ்க்கையில் ஆனந்தம் எங்கிருந்து வரும்? வேலையில் எல்லோரும் முன்னேறலாம் - ஆனால் பண்பு அடைபவர்கள் சிலர் மட்டுமே. வாழ்க்கையில் வேடிக்கை உண்டு. வேடிக்கை மூலம் பண்பு வருகிறது. பண்பு மிகவும் அவசியமான குணம். கல்வி, ஞானம், நீதி இவைகளால் பண்பு பிறப்பதில்லை. எல்லோருடனும் பழகி, பலரை அறிவதால் மட்டுமே பண்படைய முடியும்" உரக்கப் பேசினார் அவர்.

யாரோ தன் கழுத்தைப் பிடிப்பதைப் போலிருந்தது பலிதத்திற்கு. "எங்கள் குறை என்ன தெரியுமா உங்களுக்கு? நாங்களும், முக்கியமாய், எங்கள் வீட்டுப் பெண்களும் 'ஃபார்வர்ட்' இல்லை - அதுதான் குறை". இப்படித்தன் தன்னம்பிக்கையையும், தன் மதிப்பையும் காப்பாற்றிக் கொண்டான். 'முக்கியமாய் வீட்டுப் பெண்கள்' என்று சொல்லி. ஆனால் ரணஜித் பாபு நேர்மாறாக, "ஃபார்வர்ட் என்று எந்த அர்த்தத்துடன் சொல்லப்படுகிறதோ அது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. ஏனென்றால் அது தவறான அர்த்தம். எந்த ஆடவனுடனும் எவ்வித வேலையும் இல்லாத ஒரு பெண் ஃபார்வர்ட் என்று மதிக்கப்படுவதற்காக பிற புருஷர்களுடன் சாதாரணமாய்ப் பழகினால் அவளை என்னவென்று சொல்லும் சமூகம்? அது ஐதிகத்தை அவமதிப்பது போலல்லவா?"

"ஹியர் ... ஹியர் ..." என்றான் பலிதத். "நான் மட்டும்தான் கன்ஸர்வேடிவ் என்று எண்ணியிருந்தேன், எல்லைகளை மதிப்ப வன் என்று ... பேஷ் ... பேஷ்..."

"எல்லைகளைப் பிடிவாதமாய் விடாதிருப்பவன் என்று சொல்லுவது சரியாகாது.. ட்ரெடிஷன் ஒரு ஜாதியின் மரியாதை யாகும். அதை விட்டுவிட்டால் அந்த ஜாதியின் முழுமை எப்படி இருக்க முடியும்?"

ஆச்சரியமும் உவப்பும் கலந்த கண்களுடன் பார்த்துக் கொண்டு இருந்தான் பலிதத். அவன் மனதில் சந்தேகமே இல்லை. ரணஜித் பாபு பேசிக் கொண்டே இருந்தார். "ட்ரெடிஷனை லாயிருப்பது உயர் குலத்தின் லட்சணம். இந்த சாதாரண டென்னிஸையே எடுத்துக் கொள்ளுங்கள்"

"சாதாரணம் அல்ல, நீங்கள் சாம்பியன் தான், சாம்பியன்" என்று பலிதத் வெடிச் சிரிப்புடன் கூவினான். ரணஜித் பாபு மலர்ச்சியுடன் "நான் சாம்பியனாக முடிந்தது ஏனென்றால் இங்கு 'அரண்டோபி த்ருமாயதே'. ஆனால் எவ்வளவுதான் ப்ரில்லியன்ட் ஆக ஆடினாலும், மனிதனின் ட்ரெடிஷனல் ஸ்டைலைத்தான் மக்கள் அனுபவித்துப் புகழ்கின்றனர். அவனுக்கு வெற்றி கிட்டுவது துர்லபம்..."

"ஆச்சரியம், ஆச்சரியம்"

"அப்படி ஒன்றுமில்லை, விட்டுத் தள்ளுங்கள். ஆனால் 'ஃபார்வர்ட்' அல்லது 'பாக்வர்ட்' ஆக இருப்பதற்கு நடுவிலும் ஒரு நிலை இருக்கிறது. அதுதான் கல்வி மூலமாய் ஏற்படும் நடை, உடை, ருசி, பேச்சு, கம்பீரம் முதலியவை. பிற நாட்டினர் நம்மைப் பார்த்து எள்ளி நகைக்காமல் இருப்பதற்கு அவசிய மான குணங்கள்"

"ஹா .. ஹா .. ஹா" பலிதத் சிரித்து ஆமோதித்தான்.

"எல்லோருடனும் சேர்ந்து பழகுவதாலும் இதெல்லாம் வளரு கின்றன. சமூகவாழ்வால் கல்ச்சர் வளருகிறது. நம் வீட்டுப் பெண்களுக்கு இது ரொம்ப முக்கியம் - ஏனென்றால் நம் எதிர் காலத்துப் பல உயர்வுகள் அவர்களைப் பொறுத்திருக்கின்றன."

"ரொம்ப சரி" பலிதத் ஒத்துப் பாடினான். "தேர் யு ஆர்."

"எங்கள் வீட்டுப் பக்கமாய் எப்பொழுதாவது வாருங்களேன். மிஸஸ். தாஸையும் கட்டாயம் கூட்டி வாருங்கள்" என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டு விட்டார் ரணஜித் பாபு. பலிதத் அப்படியே செய்வதாக ஒத்துக் கொண்டான்.

★ ★ ★

இன்னொருநாள்

கம்பெனியின் நம்பிக்கையான உத்தியோகஸ்தன் பலிதத் தாஸ். அலுவலகத்திற்கு புறப்படும் முன்பு சாப்பிட்டுக் கொண்டிருந்தான். பக்கத்திலமர்ந்திருந்திருந்த மனைவிக்கு வழக்கம் போல் லெக்சர் செய்தான் - "இதோ பார் சரோஜ். இனிமேல் நீ மாறவேண்டியது வெகு அவசியம். நாம் வாழும் சமூகத்துடன் இசைந்து, கௌரவத்துடன் மேலே உயர விரும்பினால் அது என் முயற்சியால் மட்டும் நடக்க முடியாது. நீயும் முயற்சி செய்ய வேண்டும். ரொம்ப ஒன்றுமில்லை. இரண்டு வார்த்தை ஆங்கிலம் பேசத் தெரிய வேண்டும். நாகரிக வாழ்க்கையின் சில விதிகளை அறிந்திருக்க வேண்டும். பிறகு நாமும் இவர்களுடன் கலந்து வாழ முடியும். அப்படி இல்லையென்றால் பிறர் நம்மைப் பார்த்து எகத்தாளமாய்ச் சிரிப்பார்கள்." இது என்றும் செய்யும் பிரசங்கம். சாதாரணமாய் சரோஜினி ஏதாவது எதிர்த்துப் பேசுவாள், பலிதத் உத்வேகத்துடன் மேலும் பேசுவான். திடீரென்று கடியாரத்தைப் பார்த்துவிட்டு தன் பேச்சை நிறுத்திக் கொண்டு, ஓட்டமும் நடையுமாய் அலுவலகம் நோக்கிச் செல்லுவான். இது தினசரி நிகழ்ச்சி.

ஆனால் இன்று சரோஜினி தர்க்கம் ஏதும் செய்யவில்லை. அவள் மாறவில்லை என்பது உண்மையல்ல. வீட்டிற்கு எதிரில் மிருக வைத்தியர் வசித்து வந்தார். அவருடைய மனைவியுடன் பரிச்சயம் செய்து கொண்டு கம்பளி பின்னக் கற்றுக் கொண்டு விட்டாள். அவர்கள் கிறிஸ்தவர்கள். ஸ்வெட்டரின் கழுத்தும் பின்னியாயிற்று. இனிமேல் அவள் தன் பெயரையும் பெருமையுடன் கழுத்தின் கீழ் பின்னிவிடுவாள் 'சரோஜினி'.

இது அவளுடைய ரகசிய வெற்றி. திடீரென்று ஒரு நாள் தன் திறமையைக் காட்டி பலிதத்தை ஆச்சர்யத்தில் மூழ்கடிக்க விரும்பினாள். தன் மனதுள் அவளுக்கு சமூகம் ஒரு உத்தமமான விஷயம் என்று தோன்ற ஆரம்பித்திருந்தது. அதில் தானும் கலந்து கொள்ள விரும்பினாள்.

"ஆங்கிலப் புத்தகம் ஒன்று கொண்டு வரட்டுமா, என்ன சொல்கிறாய்?"

"அம்மாடி! ஆங்கிலமா? அரைகுறையாய்ப் படித்துவிட்டு அசட்டு பிசட்டென்று பேசினால் எப்படி இருக்கும் உங்களுக்கு? கேலிக் கூத்தாகி விடும்?"

"சொல்லு, கொண்டு வரவா?"

"சரி, கொண்டு வாருங்கள்"

"சீக்கிரமாய் உருப்போட்டு விடுவாயா?"

"உம், பின்னென்ன, நீங்கள் வெகு வேகமாய் உருப்போட்டீர்களா? சரி, உங்களுக்கு அவ்வளவு ஆவலாயிருந்தால் கொண்டு வாருங்கள். பார்க்கிறேன். ஆமாம், யாருடைய வீட்டிற்கோ போக வேண்டும் என்று சொன்னீர்களே?"

"கட்டாயம் போகலாம். முதலில் ரணஜித் பாபுவின் வீட்டிற்குப் போகலாம்?"

"இன்று சனிக்கிழமை, அமாவாசை வேறு."

"சரி, இன்று போகலாம்..."

"நீங்கள் சீக்கிரமாய் வீடு திரும்பினால் தானே?"

"நான் சீக்கிரமாகவே வந்து விடுகிறேன்."

★ ★ ★

எப்படியோ நாள் ஓடிவிட்டது. வெய்யில் தாழ்ந்து நிழலாடிற்று. அப்புறம் அவள் தயாரானாள். கொஞ்சம் அதிகமாகவே வெற்றிலை போட்டுக் கொண்டாள்; நன்றாய் அலங்கரித்துக் கொண்டாள். அப்புறம் பலிதத்தை எதிர்பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். சரோஜினி தன் பழைய தன்மைக்கு உயிர் ஊட்டியிருப்பதை பலிதத்தும் கவனித்தான்.

சரோஜினி மாறிவிட்டாள். அன்றலர்ந்த தாமரைப் பூவில் அலை ஓடும் சிரிப்பின் பூரிப்பு, பொடி வைத்த கேலிப் பேச்சு, தாமரை பூத்தெழுந்து, அசையும் நீருள் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்து மேலும் மலருகிறது. அவன் மேலும் கீழுமாய் அசைந்த படகில் ஏறி தாமரையைப் பறிக்க முயற்சிப்பவன். எவ்வளவு தான் படகை உந்திக் கையை நீட்டினாலும், அந்த மலர் அவன் கைக்கு எட்டாமல் கொஞ்சம் தூரத்தில் இருந்தபடி தலையை ஆட்டியது.

கலியாணமான புதிதில் ஒரு தினத்து நிகழ்ச்சிகள் அவன் நினைவிற்கு வந்தன.

இலேசான இருட்டில் அழகாய்த் தெரிந்த சிறிய ஓலைக் கூரை வீடு. அதன் சிறு முற்றத்தில் பாத்திரங்களிலும், பானைகளிலும், தண்ணீர் பிடித்து வைக்கப்பட்டிருந்தது. கூடவே எச்சில் பாத்திரங்கள். கொசுக்களின் ரீங்காரம் விடாமல் ஒலிக்கும் அந்தச் சூழ்நிலையில் அவனுடைய மண வாழ்க்கை ஆரம்பித்தது. அங்கேயே சில மாதங்கள் வரை வசித்து புதிய வாழ்வின் மாயத்தை அனுபவித்தான். அந்த சரோஜினி வேறு மாதிரியாயிருந்தாள். அவளை மொழிகளால் வர்ணிக்கவோ, உணர்ச்சியால் சித்திரிக்கவோ முடியாது.

வறுமையின் ஆயிரம் கிழிசல்கள் வழியே அவளுடைய ஆனந்தமே உருவான தன்மை புலப்பட்டது. சிரிப்பும் களிப்பும் கலந்த ஒளியைப் பரப்பி அவள் அபூர்வமான மாயவலை ஒன்றைப் பின்னி விட்டாள். கண் முன் தோன்றி, ஆனால் அவன் கைப்பிடிக்கு அகப்படாமல் அவனை பரிதவிக்கவிட்டு கேலி செய்தவாறு அவனுடைய ஆண்மையைத் தட்டி எழுப்பினாள். அவளை வெல்லுவதே அவனுடைய கோள் என்று சவால் விடுத்தாள்.

சுதந்திரத்தின் இனிமையும், தன் நம்பிக்கையின் ஆனந்தமும் நிறைந்த அன்றைய சரோஜினி அவள்.

மண் தரையில் பாயை விரித்து, புதிய வாழ்க்கையின் போத மளிக்கும் படுக்கையை விரித்து, சோம்பலுடன் பார்த்துக் கொண்டே படுத்திருக்கும் பலிதத், தன் நெகிழ்ச்சியுடன் ஆனந்தத்தையும் உணர்ந்தான். அந்த உணர்ச்சியில் லயித்துப் போய் பேசாமல் வாழ்க்கையின் முழுமையை அனுபவித்துக் கொண்டிருந்தான். குறட்டையுடனும், நிம்மதியுடனும் தூங்கிய வாறு. அப்பொழுது அசாந்தியோ ஏக்கமோ இல்லை.

அப்பொழுது அவனுள் பெரிய மனிதன் ஆகும் பரிதவிப்போ, மூளையில் எப்பொழுதும் பணக் கணக்கோ இல்லை.

அவனும் சரோஜினியும் மட்டுமே.

அப்பொழுது வேலை ஒரு தொழில் மாத்திரம். வாழ்க்கை அல்ல.

அந்த ரகசிய மகிழ்ச்சி அவனுடைய ஒவ்வொரு ரோமத்தை யும் நிறைத்து நின்ற அனுபவத்தில் கையையும் காலையும் பரப்பி படுத்திருக்கும் சமயத்தில், அவன் மனதில் தியாக இச்சை பிறந்தது. எப்படியாவது அவனுடைய மனைவிக்காக எல்லாவற் றையும் கொட்டி அவளை இன்னும் மகிழ்விக்க விரும்பினான் அவன்; அந்த நினைவிலேயே அவன் சுகத்தை அனுபவித்தான்.

தன்னையே எழுப்பி விட்டுக் கொண்டான். தன் தரித்திரத்தில் கலியாணமே வேண்டாம் என்று மறுத்து விட்டிருந்தான். ஒரு முறை அவனுடைய கிழத் தந்தை, "உனக்கு எப்படிப் புரிய வைப்பது, மடையனே? வெட்கங்கெட்ட விஷயமாச்சே? கலியாணம் பணத்திற்காகவும் செல்வத்திற்காகவும் அல்ல; இரண்டு வயிறை நிரப்புவதில் ஒன்றும் கஷ்டமிராது. கலியாணம் குடும்பம் வளர்ப்பதற்காக. பெண் ஆணை விரும்புகிறாள். ஆண் பெண்ணை விரும்புகிறான். இதற்கு மேல் என்ன வேண்டும்? மனம் பொருந்திவிட்டால் ஒரே தட்டில் இரண்டு பிடி சோறு, இரண்டு துண்டு துணி அவ்வளவுதான். நீயே செல்வம்

இல்லையா? செல்வம் திரட்டவில்லையா நீ? உன்னைப் போல் எல்லோரும் நினைத்தால் நீயும் பிறந்திருக்க மாட்டாய். யாருமே உலகத்தில் கலியாணம் செய்து கொள்ள மாட்டார்கள். யாரும் குடும்பம் நடத்த மாட்டார்கள். யுக யுகமாய் இந்த 'வேண்டாம்' பேச்சுத் தானே நடந்து வருகிறது. சரி என்று வெகு சிலரே சொல்லுகிறார்கள்", என்று புத்திமதி கூறினார்.

சரோஜினி மோகம் நடுநடுவே கிழத்தந்தையின் உபதேசத்தை நினைவுப்படுத்தியது. ஏழ்மையில் கலியாணம் செய்து கொண்டான். அதற்காகப் பச்சாதாபப்படவில்லை அவன். கடந்த காலம் இருட்டிலிருந்து எழுந்து நின்றது. ரணஜித் பாபுவின் வீட்டிற்குப் போய்க் கொண்டிருக்கும் பொழுது அந்தப் பழைய சரோஜினியின் மேல் தோல் தெரிவது போல் தோன்றியது அவனுக்கு.

திட்டத்தில் நம்பும் இன்றைய பலிதத்திற்கு அன்றைய ஊடலும் கசப்பும் நினைவிற்கு வந்தன. நாலாபுறமும் இருண்டு கிடந்த அந்தப் பாதாள உலகம் திரும்பத் திரும்ப அவனுடைய பெருமூச்சுடன் நினைவிற்கு வந்தது. வறுமையில் அந்தப் பிளவு பிறகு சேரவேயில்லை. கூடவேயில்லை. அவனிடம் செல்வமும் பலமும் இருந்திருந்தால் அவனுடைய வாழ்க்கை வேறு விதமாய் அமைந்திருக்கலாம்.

மனதுள் ஒப்பிட்டுப் பார்த்தான். விசாலமான வீட்டில் இருக்கக்கூடிய அன்பும் காதலும், குடிசையில் அவனுக்குக் கிட்டியனவா? பெரிய வீட்டின் தோட்டத்தில், மலர்கள் நடுவில், கொடிகளின் மறைவில் விளையாடும் காதல் லீலையில் உள்ள மகிழ்ச்சி, பூச்சி அரித்த மூங்கில்களால் நிறுவப்பட்ட வீட்டினுள் பீர்க்கன் கொடியில் கிட்ட முடியுமா? பூச்சி அரித்த வெண்டை, கீரை இவைகள் நடுவில் காண முடியமா? முடியவே முடியாது. பாதி ஜீவன் தரித்திரத்தால் உலர்ந்து வறண்டு முடிந்து போய் விட்டது. இல்லை என்றால் வேறு விதமாய் இருந்திருக்கும் என்று பலிதத் எண்ணினான். நல்ல வீடு, தோட்டம், நிறைய செல்வம். வெளிநாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட கார் ஒன்று, எதை வேண்டும் என்றாலும் வாங்கத் தகுதி - தன் மண வாழ்க்கை அப்படி அமைந்திருக்கக் கூடாதா என்று பச்சாதாபப்பட்டான் பலிதத்.

இன்னும் எதுவும் வீணாகவில்லை. மூச்சிருக்கும் வரையில் நம்பிக்கையும் உண்டு. தன் இஷ்டம் போல் மிஞ்சி இருந்த வாழ்வை அவன் அமைத்துக் கொள்ளலாம். அந்த வாழ்க்கைப் போரில் காளையின் பலத்தையும் நரியின் தந்திரத்தையும் அவன்

உபயோகிப்பான். உயர்வைப் பற்றிக் கவலைப்படாதவர்களுக் கென்று மனித உள்ளத்தையும் விவேகத்தையும் அவன் விட்டு விட்டான். அந்த பலவீனம் அவனிடம் இல்லை. என்ன உத்தேசம் என்று தெளிந்து உபாயம் செய்ய வேண்டியது மட்டுமே அவன் நோக்கம்.

சோறும் நீரும் நிலைக்க நடக்கும் போரில் உத்தியோகம் அவனுடைய குருக்ஷேத்திரம், அவனுடைய தர்ம க்ஷேத்திரம். ரணஜித் பாபுவிடமிருந்து எப்படி என்ன லாபம் பெறலாம்? வேலை, உழைப்பு இதெல்லாம் அன்றாடக் கவலைகள். ஆலோ சித்தால் மனிதன் செல்வாக்குடையவனாகலாம். பலிதத் கணக்குப் போட ஆரம்பித்து விட்டான். சரோஜினியை மறந்தே போய்விட்டான்.

வேலை, வேலை, அவ்வளவுதான்.

சரோஜினி முன்னே போய்க் கொண்டிருந்தாள். கலியாணம் ஆகும் முன்பு சுதந்திரத்தை விரும்பினாளா? மனதுள் எங்கோ மூலையில் ஏதோ தெளிவற்ற அறிகுறி - தெய்வம் வழிகாட்டி யது. காற்றில் மின்னலின் மணம் பரிமளித்தது. அவளுடைய இரத்தத்தில் அது கலந்து பாய்ந்தது.

வாழ்க்கையில் ஆயிரம் வழிகளில் ஆயிரம் அனுபவங்கள் கிட்டி உள்ளன அவனுக்கு. இன்று ஏன் இப்படி ...?

★ ★ ★

அவனுடைய வரலாறு —

மனிதனுடைய வரலாறு. ஒரு சாதாரண மனிதனின் கதை. முன்னோர்களின் பெருமைகளின் பொருள் பொதிந்த உருவம் அவன். அவனுடைய முகம் பிலிம்களுக்கு லாயக்கற்றது. அதைப் பற்றி கவிதையும் எழுத முடியாது. கர்வமடைய அவனிடம் ஒன்றுமில்லை. வெட்கப்படவும் ஒன்றுமில்லை.

அவனுடைய ஆழ்ந்த மனதைப் பற்றியது மட்டுமல்ல கதை. இருட்டில் பேயும் பிசாசும் அநேகம். வெளிச்சமுள்ள பாதையில் தான் தடி ஏந்திய கணக்கற்ற காவல்காரர்கள். ஏகாந்தமா யிருக்க வெகு சில சந்தர்ப்பங்களே கிடைக்கின்றன அவனுக்கு - அப்பொழுதும் யாராவது வேவு பார்க்க வந்துவிடுகிறார்கள். சில சமயம் அவர்கள் அபின் உண்டு மயங்கிக் கிடக்கக் கூடும். ஆனால் அது வெகு சில கணங்களுக்குத்தான். தனிமையைப் பங்கிட்டுக் கொள்ள எத்தனை பேர்! சுதந்திர மனதைப் பலவித பயங்கள் நொண்டியாக்கிவிடுகின்றன. லாப நஷ்ட பயம், சமூக பயம், வறுமை பயம், மரண பயம், நிராசையின் பயம். பயம் தான்

எப்பொழுதும். நடக்கக்கூடிய நன்மைகளின் வரலாறு மட்டுமே அவன் கதை இல்லை. அவன் எறும்பு, சாதாரண எறும்பு. சமூகத்தில் அவனுக்கு என்ன பெருமை கிட்ட முடியும்?

அவனுடைய வெற்றியும் தோல்வியும் நிறைந்த குடும்ப வாழ்க்கை வரலாறும் அல்ல அவனுடைய கதை. விசேஷ நிகழ்ச்சி எதுவுமில்லை. இன்றைய நிகழ்ச்சி நாளைக்கு பாட்டி சொல்லும் பழங்கதை ஆகிவிடுகிறது. கிராஃபில் பார்த்தால் எங்கும் சமமாய் இல்லாவிட்டாலும் ஏற்றமும் இறக்கமும் வெகு சாதாரணமாகவே தெரிகின்றன. கிடுகிடு பாதாளமுமில்லை, மலைச் சிகரமும் இல்ல. இயற்கையுடனுள்ள அவனுடைய சம்பந்தமுமல்ல அவன் கதை. இயற்கை அழிவற்றது. இந்த இயற்கையின் பிரும்மாண்டத்தில், பாவம், பலிதத் எங்கேயோ அமுங்கிப் போகிறான். வெளியுலகை உணரும் விசேஷ குணத்தையும் இழந்து விடுகிறான். நீருள் இருக்கும் மீனால் அந்த நீரை தூரத்திலிருந்து கூட பார்க்க முடிவதில்லை. நீருற்றின் வேகத்தைச் சமாளிக்க நீருக்குப் பலமில்லை. ஆகாயத்தில் சந்திரன் உதிப்பதையும், நட்சத்திரங்கள் மலருவதையும் அவன் அறிய மாட்டான். அடிவானத்தில் எப்பொழுது என்ன அழகு மலரக்கூடும் என்றும் அவனுக்குத் தெரியாது. குழந்தைப் பருவத்தில் அவன் இரவில் ஆகாயத்தைப் பார்த்து அனுபவித்த துண்டு. கதவருகில் படுத்து சந்திரனும், மேகங்களும் ஓடி விளையாடுவதைக் கண்டு களித்ததுண்டு. ஆனால் இப்பொழுது அதெல்லாம் இல்லை. இப்பொழுது ஆகாயத்திற்குப் பதில் மூட்டை நிறைய பிறைச் சந்திரன்கள் மேலே தொங்கினாலும் அவன் தன் வேலையை நிறுத்திவிட்டு அதைப் பார்க்கப் போவதில்லை. இயற்கை அவனை வசீகரிப்பதில்லை இப்பொழுது...

அவனுடைய கதை எல்லாம் யதார்த்தமானது, லோபத்தில் பிறந்து மகா சூனியத்தில் நிலைத்திருப்பது. அதற்கு முன்னும் இல்லை, பின்னும் இல்லை, நடுவுமில்லை. எவ்வித கவித்துவ மும் இல்லை அதில், விஷமும் இல்லை. ருசியான அனுபவங்கள் மட்டுமே. இவைகளின் ஒவ்வொரு அசைவிலும் அவனுடைய கதை நிறைந்திருந்தது. சமயம் என்னும் கயிற்றில் அவை கோர்க்கப்பட்ட மாணிக்கங்கள் போலிருந்தன. மாலையை எப்படி உருட்டினாலும் வாழ்க்கையின் சகஸ்ரநாமங்கள் அல்லது லக்ஷநாமங்கள் - கடவுளின் பவித்திரமான பெயர்கள். ஆனால் இதுவும் பலிதத்தின் வரலாறல்ல. கடவுளின் பவித்திர மான பெயர்கள். கடியாரம் காட்டும் மணியையே அவன்

சமயமாகக் கருதினான். அதிலும் அவனை முக்கியமாய் ஈர்த்தது காலை பத்து மணியிலிருந்து மாலை ஐந்து மணி வரை உள்ள அலுவலக வேலை நேரம் மட்டுமே! சமயம் தாளத்தின் அறிவிப்பு. ஆனால் அதுவுமல்ல அவனுடைய கதை.

எல்லாமாகச் சேர்ந்து மனிதனுக்கு ஆறு திசைகள் - ஆறு டைமென்ஷன்ஸ் - அதில் ஒவ்வொன்றுக்கு விதவிதமான வெளிப் பாடுகள், விதவிதமான ஒளிகள் - பிறகு செயல், எதிர்ச்செயலி லிருந்து பிறக்கும் கணக்கற்ற தோற்றங்கள். கண்ணுக்கெட்டாத தட்டானின் தராசில் நிறுக்கப்பட்ட ஒரு வைரத்தின் கணக்கற்ற முகங்கள். அற்ப மனிதன் பலிதத் தாஸ் கோஹினூரைப் போல் ஒளியை வீசினான். ஒளியைத் தன்னுள் அடக்கிக் கொண்டான். இதுதான் அவன் கதை. குரலற்றது. ஆனால் மிகத் தெளிவாய்ச் சொல்லக்கூடியது.

அவன் போய்க் கொண்டிருந்தான். ஆதிகாலத்திலிருந்து, அவனுடைய முன்னோர்கள் காலத்திலிருந்து, அறிவால் தெரிந்து கொண்ட தேவதையும், லட்சியமும் இன்று அவனுடைய உணர்வி லும் இயைந்து இருக்கலாம். அந்த பேரற்ற, உருவற்ற தெய்வத்தை வழிபட்டுக் கொண்டே போனான் பலிதத்.

வாயிலின் மறுபுறத்தில் மூன்று கார்களும், ஒன்றிரண்டு குதிரை வண்டிகளும் நின்றன.

பாதை உறங்கி விட்டது. எப்போதாவது தூரத்தில் காலடி ஓசை கேட்டது. மீண்டும் நிசப்தம். இருட்டில் அமுங்கிக் கிடந்த தோட்டத்திற்கு அப்பால் இருந்த வீட்டிலிருந்து பளீரென்று விளக்கு வெளிச்சம் தெரிந்தது. நடுநடுவே பலர் சிரிக்கும் கலகலப்புக் கேட்டது. அதில் மிருக ஜாதியின் உல்லாசம் திளைத்தது.

"இது தான் ரணஜித் பாபுவின் வீடு" என்றான் பலிதத்.

"இதுதானா?" உன்னிப்பாய் பார்த்தாள். அகன்ற வாசல, பெரிய தோட்டம், பெரிய வீடு. எல்லாம் பெரிது தான் இங்கு. ஏதோ நெஞ்சை அழுத்தியது. இவ்வளவு பரந்த இடத்திலும் வசிக்கிறார்கள், சிலர். இதுவும் வாழ்க்கை தான்.

பொறாமை பெருமூச்சாய் வெளிப்பட்டது.

"அப்பாடி! எவ்வளவு பெரிய வீடு! வாசலில் வெளிச்சம் கூட இல்லையே. பார்த்து நடவுங்கள், கால் தடுக்கப் போகிறது..." சரோஜினி எச்சரித்தாள்.

இருண்ட நீண்ட பாதை. இரு பக்கமும் இருளின் அலைகள். பூக்களின் பலவிதமான நறுமணம் கலந்து வீசிற்று. அடர்ந்த

செடிகொடிகள் அவளுடைய மனதிற்கு அனுகூலத்தை அறிவிப்பதைப் போலத் தோன்றியது சரோஜினிக்கு.

அந்தக் கார்களிலும் வண்டிகளிலும் யார் யார் வந்திருக்கக் கூடும் என்றும் அவர்கள் மூலம் தன் வேலை உயர்வு விஷயத்தில் எவ்வித லாபம் பெறலாம் என்றும் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தான் பலிதத். சிரிப்பின் ஒலியைக் கவனித்துக் கேட்டுக் கொண்டே, மனதில் முறுவலித்தவாறு நடந்தான் நம்பிக்கைவாதி பலிதத்.

"எவ்வளவு அழகாயிருக்கிறது இந்தத் தோட்டம்", என்றாள். சரோஜினி.

"இரு, நான் குரல் கொடுக்கிறேன்" என்றான் பலிதத். "யார் அங்கே, ரணஜித் பாபு இருக்கிறாரா? யார், பீமாவா?" "ஆம், பீமா சப்ரஸி.

"போய்ச் சொல்லு பலிதத் தாஸ் வந்திருக்கிறார் என்று".

ரொம்ப நேரம் காத்திருக்க அவசியப்படவில்லை. ரணஜித் பாபு டக் என்று ஸ்விச்சை அழுத்தி விளக்கைப் போட்டார். சிரித்துக் கொண்டே கையை நீட்டியவாறு நின்றார்.

தொள தொளப்பான பைஜாமா, குர்த்தாவில் அவர் வசீகரமாய் காட்சி அளித்தார். திடீரென்று கண்சிமிட்டும் நேரத்திற்கு தோட்டத்திலிருந்து பூ, இலைகள் அலை மேல் அலையாய் பளிச்சென்று தெரிந்தன. வெளி அறையின் அலங் காரங்களும் படங்களும் தெளிவாகத் தென்பட்டன. சரோஜினி கண்கள் அகல விரித்து அங்கு நின்ற ரணஜித் பாபுவைப் பார்த்த வாறிருந்தாள். "ஹலோ மிஸ்டர், தாஸ்! நமஸ்காரம், வாருங்கள். பேஷ், பேஷ், என் பாக்கியமே பாக்கியம், வாருங்கள் உள்ளே" என்றவாறு வேகமாய்த் திரும்பி உள்ளே நடந்தார். அந்த நடையில் அவருடைய உடலின் வன்மையும் வசீகரமும் தெரிந்தன. உடற்பயிற்சி செய்பவர்களின் நடையில் காணப்படும் விசேஷங்கள். "வாருங்கள் அம்மா, மிலி, நீலி, பிந்து எல்லோரும் எங்கே போய்விட்டீர்கள்?" என்று குரல் கொடுத்தார். எத்தனையோ பெயர்கள் வரிசையாய்க் காதில் விழுந்தன. மறு புறத்திலிருந்து மனிதர் அடி ஓசை கேட்டது. பாவம் பலிதத், விழித்தான். சரோஜினியின் நடை தடைப்பட்டது. எல்லோரும் வரவேற்புக் குழுவின் அங்கத்தினர். "மிஸ்டர் பலிதத் தாஸ், என் கூட வேலை செய்யும் ஆபீசர். சமீபத்தில்தான் மாற்றலாய் வந்துள்ளார்... மிஸஸ் தாஸ்"

"நமஸ்கார்...நமஸ்கார்...நமஸ்கார்"

"ஓ, நீங்கள் தானா மிஸ்டர் தாஸ்? உங்கள் பெயரைக் கேட்டதும் புரிந்து கொண்டு விட்டேன், நீங்கள் யாரென்று. என் பாக்கியம்..."

"இது ஸிஸ்டர் மிலி, பலிதத் பாபு. ஜாக்கிரதையாயிருங்கள்."

"அரே அண்ணா என்ன சொன்னாலும்..."

"அப்புறம் இது நீலி. இவர்களிருவரும் இரு சகோதரிகள் அல்ல, இரு கர்ஜனைகள். இந்தக் காலத்தில் வரன் கிடைப்பது எவ்வளவு கஷ்டம்."

"அரே ..."

"நீங்கள் பாக்கியசாலிதான் ரணஜித் பாபு..."

"அப்புறம் இவள் பிந்து - அதாவது மிஸஸ்."

ஹோ, ஹோா, ஹோா, ஹோா.

"பிந்துவுக்கு வெட்கமாயிருக்கிறது, அண்ணாவின் அறிமுகம் பற்றி. யூ நாட்டி பாய்..." மிலி அண்ணாவின் விலாவில் விரலால் குத்தினாள். பிந்து சரோஜினியை அணைத்து உள்ளே அழைத்துப் போனாள்; மிலி, நீலி இருவரும் பலிதத் தாஸின் இரு புறத்திலும் பாடிகார்டைப் போல நின்றனர். இருவரும் அவனை விட ஆறு இஞ்சு அதிகம் உயரம். எல்லோருமாய் உள்ளே போனார்கள்.

பலிதத்திற்கு உணர்வில்லை. உணர்வு திரும்பிய பொழுது ஒரு விதேசி நெடி அவனைத் தாக்கி நெகிழ்ச்சி அடையச் செய்தது. அவனை உக்ரமடையவும் செய்தது. அந்த உக்கிரத்தின் வெப்பம் அவனை எங்கேயோ உயரே தூக்கிவிட்டது. பிறகு அவன் உருகி ஆவியாய் மாறி தன்னுணர்வின்றி நின்றான். போதம் திரும்பும் பொழுது மிலி, நீலி, பிந்து இம்மூவரும் கொண்ட ஒரு பரிச்சய மற்றசூழ்நிலையை உணர்ந்தான்.

வாசனை நெடி, இரத்தத்தை ஒத்த உதடுகள். பனிக்கால புலர்வைப் போன்ற குளிர்ச்சியான முகம்; மிலியின் திறந்த கரங் களை, மெலிந்த மிருதுவான கரங்களை அவளுடைய துப்பட்டா மறைத்தும் மறைக்காமலும் அலங்கரித்தது. அவள் நீல மோகினி. நீலியின் உடையும் வேஷமும் மிலியை ஒத்திருந்தது. ஆனால் அவள் ரோஜா நிற மோகினி. இருவரின் பின்னல்களும் கங்கை யமுனையைப் போல் உயர்ந்த மார்பகங்களிலிருந்து இழிந்து கீழே பள்ளங்களை நோக்கிப் பாய்ந்தன. காம்பஸின் இரு முனைகளைப் போலவும், கருநாகத்தின் வாலைப் போலவும் இருவரின் துப்பட்டாக்களும் நடுவில் ஆங்கில எழுத்து 'வி' யைப் போல் மடங்கிக் கடந்தன. அந்த 'வி'யைச் சுற்றிலும் வெளுத்த உருண்ட மார்பத்தின் இரண்டிரண்டு இஞ்சும், நடுவில் ஆழமான

பிளவும் தெரிந்தன. கல்லிழைத்த பதக்கம் ஒன்று அதன் மேல் அழகாய்த் தொங்கியது. அழகான 'வி' உருவம் திக் விஜயத்தின் சின்னமான 'வி' - கடந்த மகாயுத்தத்தில் இந்த 'வி ஃபார் விக்டரி'யை பலிதத்தும் கண்டிருந்தான். அன்று அதைக் கண்டு நடுங்கினர் எதிரிகள். இன்று எழை பலிதத் நடுங்கினான். தன்னை மறந்து உட்கார்ந்திருந்தான். அவன் ஆவியாய் மாறி ஆவியுடன் கலந்து போய்க் கொண்டிருந்தான். உணர்வு திரும்பியது. பெண் உருவம் தான் எவ்வளவு லக்ஷ்மிகரமானது! உடை மரவுரி அல்ல - அது மனிதனைப் படாதபாடு படுத்தும் சக்தி உள்ளது. உடை உடலிற்கு ஆபரணம் - மறைப்பதற்காக அல்ல, எடுத்துக் காட்டுவதற்காக. என்ன அழகு, எவ்வளவு திடம், எவ்வளவு மென்மை! உடலின் ஏற்றங்களும் இறக்கங் களும் அலையைப் போல வழிகாட்டும் ரேகைகள் - நடையில் அலைகள் பரவிவிடுகின்றன.

எதிரே பிந்து. புடவை உடுத்தியிருந்தாள் - அதுவும் ஆபரண மாகத்தான். அங்கும் 'வி' தோற்றம். புடவையின் தலைப்பு கொஞ்சமாய்த் தொங்கியது. கழுத்தில் பூவின் உருவத்தில் அழகான முடிச்சு. எல்லாம் இரத்தச் சிகப்பு - அந்த உடலை ஒரு இளம் ரோஜா வர்ண நீராவி தழுவியிருந்ததைப் போல் தோன் றினாள். அவனுக்குத் திரும்பத் தலை சுற்றியது.

பிந்துவை அணைத்தாற் போல் சரோஜினி அவளுடன் நடத்தாள். மர உருவம், தடிமனான உடை தரித்து, டக் டக் என்று போய்க்கொண்டிருந்தாள்.

புதிய உலகத்தின் முதல் அலையிலேயே அவள் இப்படிக் கீழே விழுந்து விட்டாளே. சீ..சீ! எங்கே அவனுடைய பண்பு? பண்பு அழகிலிருந்து பிறக்கிறது. சகஜமான நடை, அழகிய உருவம், வசீகரமான உடை இவைகளுடன் அவன் கற்பனையில் அழகு உருப்பெற்றது. ஆனால் அவளோ? படிப்பும் இல்லை. பண்பும் இல்லை, மனதில் உயர்ந்த பாவனையும் இல்லை. உணர்ச்சியில் சிக்கி விட்டான் பலிதத். இம்மாதிரி அவன் முன்பு எப்பொழுதும் எண்ணியதில்லை. தன் வேலை, கம்பெனியின் வேலை என்றே வாழ்பவன். அலுவலகத்தில் அவனுடைய அதிகாரமான நடை. இங்கு அவனுடைய கால் நிலத்தில் பாவ வில்லை. இந்த மண்ணைத் தொடக் கூட கூசினான். யோசனை யும் ஓடவில்லை. யந்திரம் போல் நடந்து கொண்டான். திடீரென்று ஹர்ஷாவின் நினைவு வந்தது. வீட்டிற்குப் போனதும் அவனை விட்டு மாலிஷ் செய்யச் சொல்ல வேண்டும். ரொம்பக் களைப்பா

யிருந்தது. சூழ்நிலை அவனைத் தன் வசமாக்கிக் கொண்டது மெல்லமெல்ல.

விழிப்புடன் இருந்த மனதுடன் அங்கமர்ந்திருந்திருந்த மூன்று பேரைக் கவனித்தான். ஒரு மூதாட்டி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

"அம்மா..." ரணஜித் பாபு சொல்லிக் கொண்டிருந்தார். "மிஸ்டர் அண்ட் மிஸஸ் பலிதத் தாஸ்"

"நமஸ்காரம் .. நமஸ்காரம் .. நமஸ்காரம் ..நமஸ்காரம்"

மற்றவர்களையும் பரிச்சயப்படுத்தி வைத்தார்.

"மிஸ்டர் ஸகலத்வாலா. பிரசித்த கண்டிராக்டர். இங்கு கம்பெனியின் காரிய விவகாரங்களில் இவருடைய பெயரை அடிக்கடி கேட்பீர்கள். இவர் மிஸ்டர் த்ரிப்பாட்டி, பெருமை மிக்க தலைவர்; மிஸ்டர் வரதாச்சாரி, நம் கம்பெனியின் பெரிய துரைக்கு சமமானவர். நீங்கள் இவரை பார்த்திருக்க மாட்டீர்கள். ஏனென்றால் நீங்கள் அனேகமாய் தூரவே இருப்பவர். மிஸ்டர் பி.டி.தாஸ், அதாவது பலிதத் தாஸ்." அறிமுகம். அறிமுகம், காரணமின்றி பனுவின் வீடு ஞாபகம் வந்தது. இங்கும் அதே மாதிரியான பரிச்சயம் - பரிச்சயம் - ஆனால் அங்கு ஸண்டுதாவின் பேச்சில் விஷயமும் இருந்தது. இங்கு பரிச்சயத்திற்குப் பிறகு உடனே கலகலப்பு. யாரும் ஒருவரை ஒருவர் அறியாதவர்.

ஸகலத்வாலா சரோஜினியின் பக்கமாய்த் திரும்பி உட்கார்ந்திருந்தான். மிஸ்டர் வரதாச்சாரி கம்பீரமாய் குனிந்த தலையுடன் அமர்ந்திருந்தார். நடுநடுவே கண்களை உயர்த்தி என்ன நடக்கிறதென்று கவனித்துக் கொண்டார். மிஸ்டர் த்ரிபாடி சிரித்துச் சிரித்து பலிதத்துடன் பேச்சைத் துவக்கி விட்டார். அவருடைய கண்கள் அடிக்கடி வேறொரு பக்கமாய்ச் சுழன்றன. நமஸ்காரமும் பரிச்சயமுமாய்க் கலந்த சுடுசரங்களின் உஷ்ணத்தில் வெதும்பிப் போய், தலைப்பை வாயில் திணித்தபடி உட்கார்ந்திருந்தாள் சரோஜினி. பிந்து அவளுடன் பேச முயன்று கொண்டிருந்தாள். வியர்த்து கொட்டிக் கொண்டு சரோஜினியும் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்லி வைத்தாள். பலிதத் பெருமூச்சு விட்டான், என்னென்னவோ பேசினான். தான் பேசுவதெல்லாம் வெறும் அசட்டுத்தனம் என்று தெரியும் அவனுக்கு. எதையோ நினைத்துக் கொண்டு நேரெதிரான எதையோ சொல்லி வைத்தான். வாய் எதையோ பிதற்றியது. எல்லோரும் சிரித்தார்கள். அவனும் சிரித்தான்.

★ ★ ★

அங்கு தான் ஆரம்பித்தது எல்லாவித பைத்தியக்காரத்தன மும் என்று சரோஜினி யோசித்தாள்.

நினைவில் அந்த இரவு மின்னியது. மனதில் அவநம்பிக்கை நிரம்பியது. அவளிடம் எவ்வளவோ இருந்தது. ஆனால் -

பிறர் சொல்லும் வரை ஒரு மனிதன் தன்னையே தெரிந்து கொள்ளுவதில்லை போலும். பிறருடைய புகழ்ச்சியில்தான் எவ்வளவு இனிமை! அதை எவ்வளவு தரம் கேட்டாலும் அலுப்ப தில்லை. அவநம்பிக்கையில் தளர்ந்தவளாய்த்தான் சரோஜினி யோசிக்கக் கற்றுக் கொண்டாள். மெல்ல மெல்ல அவள் தன்னுள் பதுங்கிக் கிடந்த புத்தியையும், கெட்டிக்காரத்தனத்தையும், தைரியத்தையும் கண்டெடுத்தாள். பிறகு தன்னுள்ளிருந்த ருசி, அபிப்பிராயம் நம்பிக்கை, ஞானம், சாதுர்யம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டாள்.

புடவைத் தலைப்பை இடுப்பின் வலப்பக்கத்தில் சொருகி கரங்களைத் திறந்து வைப்பதால் அழகு அதிகரிக்கும் என்ற விஷயம் அவளுக்கு முதலில் தெரியாது. நகங்களுக்கு நிறம் ஊட்டினால் மிருகங்களின் பாதங்களைப் போல் இருக்கும் என்று முன்பு தோன்றியதில்லை. இப்படி எவ்வளவோ விஷயங் கள் வியவஹாரத்திலிருந்து யோசனை வரை, சிறியதிலிருந்து பெரியதுவரை. நாகரிகத்திற்கும் அநாகரிகத்திற்கும் உள்ள வேற்றுமை அவ்வளவுதான். நடை உடையில் உள்ள வேற்றுமை கள் எல்லாம் அவரவர் சௌகரியத்திற்காக ஏற்கப்பட்டவை என்பது ருசுவான விஷயம். செருப்பை எடுத்துக் கொள்ளுங்கள். செருப்பு அணியாவிட்டால் கால்களுக்கு வருத்தம். இதைப் பற்றி யாருக்கு சந்தேகம் இருக்க முடியும். தான் சுகமாயிருந்தால்தான் பிறரை மகிழ்விக்க முடியும். அதனால் தங்களையே வருத்திக் கொள்ளுபவர்கள்தாம் கடைசியில் ஏமாறுகிறார்கள். உலகில் யார் எந்த நிலையிலிருந்தாலும் அதற்குக் காரணம் அவர் களுடைய முயற்சியும் உழைப்புமே ஆகும். மனிதனேதான் தன் விதியை அமைக்கவும் அழிக்கவும் செய்கிறான். பலிதத் இன்று இந்த நிலையிலிருப்பதற்குக் காரணம் அவர்களுடைய முயற்சி யும் உழைப்பும் ஆகும். ஒருவன் கூலி வேலை செய்கிறான் என்றால் அதற்குக் காரணம் அவனது முயற்சியின்மைதான். உலகத்தில் பெரியோர், சிறியோர், உயர்வு, தாழ்வு, தனவான், ஏழை என்ற வேற்றுமைகள் ஒருவித நியமமாய் விட்டிருக்கிறது. இந்த நியமத்தைத் தாண்டிக் கொண்டு போவது எளிதல்ல. உழைப்பிற்கேற்ற பலன் என்பது தத்துவம். இந்த நம்பிக்கையை சரோஜினி கொண்டிருந்தாள். பிறர் துக்கத்தில் பங்கு

கொள்வதும், அனுதாபம் கொள்வதும் அர்த்தமற்றது என்று அவளுக்குத் தோன்றுகிறது. ஒருவரிடம் உள்ளவைகளுக்கு அவருடைய உழைப்பே காரணம். அல்லது உழைப்புக் குறைவு காரணம். அவனிடம் அனுதாபப் படுவது முட்டாள்தனமேயன்றி வேறொன்றுமில்லை. அந்த நேரத்தைத் தன் காரியத்திலேயே செலவிட்டாலும் பயனுண்டு.

இந்த கொள்கைகளெல்லாம் அவளுடைய புதிய அறிவுத் திரட்டு. அவளுடைய ஞானமும் வளர்ந்துவிட்டது. இப்பொழுது அவள் அச்சில் வருபவைகளை எல்லாம் படிக்க ஆரம்பித்து விட்டாள். படிப்புள்ளவர்கள் வாசிப்பதைப் போலவே தானும் வாசிப்பதாக நினைத்தாள். முதலில் தினப்பத்திரிகை; அதில் தேச விதேச சமாசாரமெல்லாம் அச்சாகின்றன. ஏதாவது சர்ச்சையில் ஈடுபட தேசத்தைப் பற்றி அறிந்திருப்பது அவசியம் என்று யாராவது சொன்னால் அவள் மிலியின் பேச்சுப் பாணியில், "நான் உங்களுடன் ஒத்துப் போக முடியாது. வால் ஸ்ட்ரீட் விழுந்து கொண்டிருக்கிறது. ஐயோ! விழுந்து கொண்டி ருக்கிறது." ஒரியா உச்சரிப்பில் "வால் ஸ்ட்ரீட்" ஏதோ விநோத மாய் ஒலிக்கிறது. "வால் ஸ்ட்ரீட்" மடிந்து கொண்டிருக்கிறது என்று சமாசாரப் பத்திரிகை எழுதினால், கட்டாயம் அது மடிந்து போக வேண்டிய பொருளாய்த் தானிருக்கும்., அதனால் கையில் டீ கப்புடன் கால் மேல் கால் போட்டு அதைப் பற்றி ஆராய முடியும். "வால் ஸ்ட்ரீட்" என்னவென்று தெரியுமா உங்களுக்கு? பேப்பரைப் படியுங்கள். அது உடைந்து போய்க் கொண்டிருக்கிறது. ஐயோ! என்ன கெட்ட காலமோ. பலர் அதில் அடிபடுவார்கள் என்று பேப்பர் சொல்லுகிறது. அடிபடாமல் எப்படி? சின்ன விஷயமா என்ன? எவ்வளவு கஷ்டமான சமயம் இது. காலையிலெழுந்து பேப்பரைத் திறந்தால் கட்டாயம் ஏதாவது உடைந்து கொண்டிருக்கும் சமாசாரமோ, உடைந்து விட்ட சமாசாரமோ கண்ணில் படும். எங்கும் துவம்சம்; எத்தனை பேர் செத்துப் போகிறார்கள். இந்த மனித ஜாதிக்கு எவ்வளவு பெரிய ஆபத்து! – என்று சரோஜினி அங்கலாய்த்துக் கொள்கிறாள்.

அச்சில் வரும் சமாசாரம் பேசுவதற்கு வேண்டிய விஷயங் களைத் தருகிறது. யோசித்துப் புரிந்து கொள்ளுவது சுலபமான விஷயமல்ல. ஆனால் கேட்டுவிட்டு அதைத் திருப்பிச் சொல்வ தற்கு எத்தனை நேரம் வேண்டும்? சரோஜினிக்கு தன்னம்பிக்கை இருந்தது. இந்த யுகம் கோஷங்களின் யுகம், என்று அவள் அறிந்திருந்தாள். ஒன்று கூடி ஒவென்று கத்தியவாறு மக்கள்

தெருவில் நடந்தனர். ஒரே முகமாய் ஒரு விஷயத்தைக் கர்ஜிப்பதில் ஒரு திருப்தி இருந்தது. புரிந்து கொண்டு விட்டால் அந்தத் திருப்தியே ஒருவித அதிருப்தியாய் மாறலாம். அதனால் எல்லோரும் கோஷத்தின் உட்பொருளைப் புரிந்து கொள்ள அவசியமில்லை. வாய் கிழியக் கத்தினால் மட்டும் போதும்; பிறர் மேல் சேற்றை வீசி எறிய வேண்டும் - அதைத்தான் சுதந்திரத் தன்மை என்கிறார்கள். பிரயோசனமற்றவர்களும், எவ்வித கோஷமும் இல்லாதவர்களும் கோஷத்தை கேட்க வருவார்கள். அவர்கள் எந்த பார்ட்டியிலும் சேருவதில்லை; அதனால் அவர்கள் மதிப்பில்லாதவர்கள். இஷ்டம்போல் கேள்வி கேட்கிறான் தவறு செய்கிறான் - ஏனென்றால் பிறன் பதில் சொல்ல வேண்டும் என்று. கேள்வி கேட்க உரிமையுண்டு. பதில் சொல்லாமலிருக்கவும் உரிமையுண்டு. அவசியமில்லை. இது சுதந்திரத்தின் இயல்பு, சரோஜினி எவ்விதத் தடையுமில்லாமல் தன் புதிய அறிவைப் பிறரிடம் பிதற்றிக் கும்மாளம் அடிக்கலாம் - புரிய வைக்க வேண்டிய நிர்பந்தம் இல்லை.

தவிர, புரிந்து கொண்டு என்ன ஆக வேண்டும்? அர்த்தம் அனர்த்தத்திற்கு அடிப்படை. ஒரே விஷயத்திற்கு பத்து வித்தியாசமான அர்த்தங்கள் இருப்பதை அறிந்திருந்தாள் புதிதாய் கலாச்சாரத்துடன் பரிச்சயம் செய்து கொண்ட சரோஜினி. புதிது புதிதாய் வியாக்கியானம் செய்ய முடியாத மனிதனை எவ்வித அறிவும் இல்லாதவனாய்க் கருதுகிறார்கள். விஷயம் புரியும்படியாயிருந்து விட்டால் அது வெகு சாதாரண விஷயமாய்க் கருதப்படுகிறது. புரியாத விஷயம்தான் வெகு முக்கியமானது, மேன்மையானது. அதைத்தான் ஞானமென்றும், சாயாவாதம் என்றும், மிஸ்டிஸிஸம் என்றும் சொல்லுகிறார்கள். பெண்ணின் மனம் ஒரு விடுகதை. புரியாத ரகசிய வாதத்தை அவள் விரும்புகிறாள். அதனால் திடுக்கிட வைக்கும் விஷயங்களை சொல்லும் திறமை அவளுடைய பிறவிக் குணம். இங்கும் அங்குமிருந்தும், புத்தகங்களிலிருந்தும் அறிவின் நாரைகளைத் திரட்டி அதைக் கொஞ்சம் மாற்றிச் சொல்லுவதில் விஷயத்தின் மதிப்பும் ஏறுகின்றது. சமாசாரப் பத்திரிகைகளிலிருந்து அவளுக்கு வேண்டிய உதவி கிட்டிற்று - அப்புறம் மனோதத்துவம், பொருளாதாரம், இலக்கிய விமர்சனம் முதலிய விஷயங்களைப் புரிந்து கொள்ள அவசியமில்லை. இங்கிருந்தும் அங்கிருந்தும் சில வாக்கியங்களை நினைவு வைத்துக் கொண்டால் போதும் - சந்தேகமில்லாமல் அறிவாளிகளின் கூட்டத்தில்

ஒரு கப் டீயுடன் மாலைப் பொழுதைக் கழிப்பது சுலபமாகி விடும்.

மேலும் அவளே கேள்வி கேட்கவும் விரும்பினாள். கொஞ்சம் பரீட்சைக்குப் பிறகு, அவளுடைய கேள்விகளுக்கு பதிலளிக்க புருஷர்கள் விரும்பினார்கள், என்று அறிந்து கொண்டாள். சிறு கேள்விகள் -"சரி, இன்றைய உணவு பிரச்னையைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்" என்றோ, "சமகால இலக்கி யத்தைப் பற்றி உங்களுடைய அபிப்ராயம் என்ன?" என்றோ, "ஐம்பது வருடங்களுக்கப்புறம் திரைப்படங்களின் எதிர்காலம் எப்படி இருக்கும்?" என்றோ சுலபமாய்க் கேட்கலாம். பதில் கட்டாயம் கிடைக்கும். தைரியமிருந்தால் பதில்களிலிருந்து எவ்வளவோ கற்றுக் கொள்ள முடியும்.

ஐந்து பேர் இருக்கும் இடத்தில் ஏதாவது கேட்டு வைத்தால், அதைப்பற்றி வாக்குவாதம் நடந்தால், கேட்பதற்கும் மறைவில் முறுவலிப்பதற்கும் எத்தனையோ விஷயம் கிட்டலாம். அதுவும் அவர்கள் மடையர்கள், ஒன்றும் அறியாதவர்கள் என்று ஒரே நோக்கில் தெரிந்து கொண்டு விட்டால், அந்த வேடிக்கையே வேறுதான். எல்லோரும் தங்கள் தங்கள் கோஷங்களைப் பிறர் முன் கத்த விரும்புகிறார்கள்.

அப்புறம் அவளுடைய சொந்தக் கவலைகள். அவள் அதைப் பற்றி அதிகம் யோசிப்பதில்லை. ஆனால் வாழ்க்கைக்காக அவள் மனதில் நன்றி இருந்தது. கிடைப்பதற்கெல்லாம் அவள் இவனை வாழ்த்தினாள். கிடைத்ததை எல்லாம் சேர்த்து வைத்துக் கொண்டாள். பிறகு அதை மறக்க முயன்றாள். முகத் தில் பாபத்தின் முத்திரை உள்ளவன் பாபி என்றும், தான் திருடன் என்று சொல்லிக் கொண்டு திரிபவன்தான் திருடன் என் றும், நஷ்டங்களுக்காக துக்கப்படுகிறவன் உண்மையாகவே நஷ்ட மடைந்தவன் என்றும் சரோஜினி அறிந்திருந்தாள். எல்லாவற் றையும் மறக்க முகத்தை அழுத்தித் துடைத்துக் கொள்ளுகிறவ னும், கஷ்டத்திலும் குழந்தையைப் போல் சிரிக்கக் கூடியவனும், சிந்திக்காதவனும் பின்னே திரும்பிப் பார்க்காதவனும், எப்பொழுதும் பசுமையுடனிருக்கிறான். விரும்பத்தக்கவனாயி ருக்கிறான்,

அதனால் தான் வெள்ளைத் தாடியின் மறைவில் அநேகம் உசிதமற்ற விஷயங்கள் காணப்படுகின்றன. வெள்ளைத் தொப்பியினடியில் மிகவும் சுத்தமான உருவத்தில் கறுப்பு வியாபாரம் செழிப்பாய் வளருகிறது. மிகவும் வசீகரமான உடை

யினடியில் பயங்கரமான காட்டுப் பிராணியின் சுபாவங்கள் மறைந்து கிடக்கின்றன.

சரோஜினி!

அவள் எந்தக் கட்டுப்பாட்டுள்ளும் இல்லை. குழந்தையில்லை, குட்டியில்லை. அவள் பார்க்க முடியும், கற்க முடியும்.

ஆனால் அவள் பண்புள்ளவளான பிறகு இதைப் பற்றித்தான் யோசித்துத் திடுக்கிட்டாள்.

இவ்வளவு குறைவான படிப்பிற்குப் பிறகுமா அவள் மாறி விட்டாள்? இப்பொழுது அவளுக்கு அதிருப்தி அடைவதும், சந்தேகப்படுவதும், பழக்கமாய் விட்டது. சூழ்நிலையிலிருந்து விஷயங்களை கிரகித்து அவைகளைத் திருப்பிச் செய்ய மட்டுமே கற்றுள்ளாள். அவளிடம் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை, என்றும் யாராவது சொன்னால் ஒரு வேளை அவள் ஒப்புக் கொள்ள மாட்டாளாயிருக்கும். முழு உணர்வுடன் தான் பிறரைப் போல் நடிக்கும் ஒரு குரங்கு என்பது அவளால் ஏற்க முடியாத விஷயம்தான். அவள் இப்பவும் பழைய மனுஷிதான் புதிய உலகத்திற்கு வந்திருக்கிறவள் என்று அவள் நினைத்தாள். ஆச்சரியம் தான்.

அவளுடைய கரை உடைந்து விட்டது. வெள்ளப் பெருக்கு தானாகவே தாவிக் கொண்டு வெளிப்பட்டது.

அன்று இரவு ரணஜித் பாபுவின் வீட்டிலும், பிறகு மற்றும் அநேக இடங்களிலும் எல்லோருடனும் அமர்ந்து பேச மனம் கேட்டது, இங்கும் அங்கும் போய்வர விரும்பினாள். தெரியாதவர் களை பரிச்சயம் செய்து கொள்ள அவளுடைய உள்ளம் விரும்பியது. இந்த உலகம் மனதின் விளையாட்டு மட்டுமே, சாதுர்யமுள்ளவன்தான் இன்பம் அனுபவிக்கத் தயங்காதவன். சாதுர்யம் இல்லாதவன் பிறரைப் பழித்துக் கொண்டு திரிவான்.

நாட்டுப்புறத்தனம் அவளிடம் இப்போது இல்லை. அவள் மாற வேண்டும் என்று பலிதத் விரும்பினான். அவள் மாறினாள். ஆனால் அவனால் அவளுக்குச் சரியாய் மாற முடியவில்லை. மனதில் ஒரு வேளை இலேசாக அதிருப்தி இருந்திருக்கலாம். "சரோஜ் இன்று நீ போகாவிட்டால் என்ன?" என்று சொல்லத் தோன்றியிருக்கலாம். ஆனால் "உங்களிஷ்டம்" என்று சொல்லி விட்டு உயிரற்றவளைப் போல் ஒதுங்கும் பொழுது உடனேயே அவன், "இல்லை, நீ போய் வா. அவர்கள் உன்னை எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள்" என்று சொல்லி விடுவான். அதில் கர்வமடையவும் முயலுவான். தன்னையே தைரியப் படுத்திக் கொள்ளும் ரீதியில், "இது நான் செய்த காரியம் தான்.

இதன் வேர் நான் தான்" மனதுள் சொல்லிக் கொள்ளுவான். தன் மனைவி நவநாகரிகத்தில் திளைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். லிப்ஸ்டிக், பாலிஷ், கிரீம், பௌடர், சிந்தூரம், அல்தா, ஹைஹீல் ஷூ என்ற ஆடம்பரம் மட்டும் அல்ல– இந்த நவநாகரீக அலங்காரத்துடன் அதற்கேற்ற அறிவும் அடைந்திருந்தாள். வெகு சீக்கிரத்தில் கொஞ்சம் ஆங்கிலம் பேசக் கூடக் கற்றுக் கொண்டு விட்டாள். அவள் அவனுடைய உடைமை.

மிஸ்டர் அண்ட் மிஸஸ் தாஸிற்காக நிறைய அழைப்புக்கள் வந்தன. அப்பொழுது பிறர் மூலம் சரோஜினியின் புகழ் கேட்டு மகிழ்ந்தான். அவனும் முன்னேறி விட்டான்.

வாழ்க்கைப் போரில் அவன் முதல் வரிசையை எட்டி விட்டான். அவனுடைய கியாதியும், செல்வாக்கும் நிறைய இருந்தன. வேலையில் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாய் உயர்வுகள் கிட்டிக்கொண்டிருந்தன.

அப்பவும், "ஐயோ இந்த உயர்வுகள் சட்டுப்புட்டென்று ஆகக் கூடாதா" என்று அங்கலாய்த்தான். அவனுடைய கரையும் உடை பட்டு விட்டிருந்தது. அவன் மனதில் சகிக்க முடியாத பசி - வெற்றிக்குத் திட்டங்களமைப்பதில் தீவிரமாய் இருந்தான். பிறரைப் பற்றித் தாழ்த்திப் பேச ஆரம்பித்திருந்தான். ஒரு நாள் இரவு சாப்பிடும் பொழுது "தெரியுமா சரோஜ், இப்பொழுது திறமைக்கு மதிப்பே கிடையாது. எங்கள் நடு சாஹப் மிஸ்டர் ஜேனாவைப் பார். சரியான முட்டாள்; உள்ளே ஒன்றுமேயில்லை. ஆனால் எப்படி காலை அகல வைத்து மேல் ஏறிக் கொண்டே போகிறான் பார். இதெல்லாம் எதனால் தெரியுமா? காதில் சொல்லுகிறேன் கேள். அவருக்கு சுப்ராங்கினி என்று ஒரு பெண் இருக்கிறாள். நன்றாக நாட்டியம் ஆடுகிறாள். கம்பெனியின் ஒரு முக்கிய பங்காளி மிஸ்டர் கார்காரே பம்பாயிலிருந்து வந்திருந்தார். வயதில் முதிர்ந்தவர், பொய்ப் பல் வைத்தவர். பாட்டு டான்ஸ் என்றால் அவருக்கு ரொம்பப் பிடிக்கும். அவருக்கு வெகு விசேஷமான வரவேற்பு அளிக்கப்பட்டது. சபையில் சுப்ராங்கினி நாட்டியமாடினாள். தபலா யார் அடித்தார் தெரியுமா? ஜேனாவே தான். ஒருநாள் கூட வேலையிலோ காரியத்திலோ சிரித்தறியாதவர், கிட்கிட் என்று நச்சரித்தவர், வயது காலத்தில் தபலா வாசித்துக் கொண்டிருந்தார். சுப்ராங்கினி நாட்டியமாடிக் கொண்டிருந்தாள். அப்புறம் கார்காரே பூரிக்குப் போனார், கொனாரக் போனார்... எப்படியோ, மிஸ்டர் ஜேனா நடு சாஹப் ஆகி விட்டார். நான் குவியலாக ஃபைல்களைக் கொண்டு வந்து வீட்டிலும் இரவில் கண் விழித்து வேலை செய்கி

றேன். நீ தான் பார்த்துக் கொண்டிருக்கிறாயே விடு. அதை யாரிடம் சொல்லுவதாம்?"

சரோஜினி பேசாமல் சிரித்தாள். அதுவே போதும் - பலிதத் கனவு காண ஆரம்பித்தான்.

★ ★ ★

மாலை வேளை.

நிதாயி இங்கும் அங்கும் பார்த்தான். கைகளால் வாயைக் குவித்து அடங்கிய குரலில் "ஹார்ஷ் ... ஏ ஹார்ஷ்" என்று விளித்தான்.

ஹார்ஷ் பக்கத்தில் வந்து நின்றான். அவன் கழுத்தில் கையைக் கொடுத்து நெட்டித் தள்ளியபடி வெளி அறைக்கு வந்தான் நிதாயி. இருவரும் மௌனமாய் இருட்டில் ஏதோ சதி ஆலோசனை செய்பவர்களைப் போல் நின்றனர். ஹார்ஷ் பேச விரும்பினான். ஆனால் நிதாயி அவன் வாயைப் பொத்தி விட்டான். எதையோ கேட்க விரும்பினவனைப் போல் தோன்றி னான். இருட்டில் ஹார்ஷ் திடுக்கிட்டுப் போனான்.

நிதாயி அங்கிருந்த ஒரு கரி ஏறின லாந்தரை ஏற்றி விட்டு, நாள் முழுவதும் புழுங்கின தன் உடைகளை அவிழ்த்துக் கொண் டான். "உட்காரேன்" என்றான்.

அதற்கு என்ன அர்த்தம் என்று அறிந்திருந்த ஹார்ஷ் சிரித் தான். அறை முழுவதிலும் சாமான் பரவிக் கிடந்தது. நாள் முழுவதும் நிதாயி பறித்துச் சேகரித்திருந்த பொருள்கள் சிறிய பொட்டலங்களாய் அங்கு கிடந்தன. ஒன்றை எடுத்துத் திறக்க முயன்றான் ஹார்ஷ். புலியைப் போல பாய்ந்த நிதாயி தடுக்கும் முன்பு, திறந்தும் விட்டான் கொஞ்சம் அவரை, நான்கு கத்தரிக் காய், மூன்று பாதி அழுகின வாழைப்பழம். ஹார்ஷ் வாழைப்பழங் களைத் தாக்கினான். "தின்னுத்தின்னே உன் வயிறு வெடிக்கும் நிலைக்கு வந்துவிட்டது. ஆனாலும் பிடுங்கித் தின்ன விரும்புகி றாயே. தரித்திரம் பிடித்தவன்" நிதாயி அலுத்துக் கொண்டான்.

ஹார்ஷ் அதைக் கவனியாமல் பழம் சாப்பிடுவதிலேயே ஈடுபட்டிருந்தான். நிதாயி ஹுக்கா பிடிக்க ஆரம்பித்தான். ஹார்ஷ் வாழைப்பழத்தைத் தின்று விட்டு நிதாயின் பழைய துண்டொன் றில் கையைத் துடைத்துக் கொண்டான். பிறகு அவனும் ஹுக்காவிற்காகக் கையை நீட்டினான்.

"உனக்கு இது கிடையாது" நிதாயி மறுத்தான். "நான் முன் னேயே மறுத்திருக்கிறேனே, நினைவில்லை, தவளையால் நெய்யை செரிக்க முடியுமா என்ன? பீடி, குடி, அதோ அந்த டின்னில் இருக்கிறது, பார்". ஹார்ஷ் பீடியைப் பற்ற வைத்துக்

கொண்டான். இரு நண்பர்களும் எதிரும் புதிருமாய் உட்கார்ந்து கொண்டனர். இவ்வித ஏகாந்தத்தில் மனம் திறந்து பேச்சு நடக்க முடியும். "வேறு என்ன சமாசாரம் ?" என்று நிதாயி வினவினான்

"பாபு பம் என்று ஆகிக் கொண்டே போகிறார்."

நிதாயிக்கு சிரிப்பு வந்துவிட்டது. "பாபு இல்லை. சாஹப் என்று சொல், சாஹப். இப்பொழுதே செய்ய வேண்டியதைச் செய்து கொள். அப்புறம் வாய்ப்பு கிடைக்காது."

"என்ன செய்வது? ஒன்றுமே தருவதில்லை. வேலை செய்து செய்து தோல் உரிந்து போகிறது."

"எல்லாம் தெரியும் எனக்கு. உன் திருஷ்டி கூட வளர ஆரம்பித்துவிட்டது."

"இல்லை இல்லை" என்று சிரித்தான் ஹர்ஷ்.

"எல்லாம் எனக்குத் தெரியும். ஒன்றும் பேசாமல் செய்து கொண்டே போ. என்னைப் பின்பற்று. போதும். இந்த வீடு இப்பொழுது எப்படி ஒளி வீசுகிறது. பார்த்தாயா? பாபு துரை ஆகிவிட்டார். அம்மா சீமாட்டி, பஞ்சப்பட்டவன் பெரிய மனிதன், ஈ கூட அவன் உடலிலிருந்து வழுக்கி விடுகிறது – ம்? என்ன வேண்டும் உனக்கு கேள், தருகிறேன்."

"ஒரு டார்ச் லைட் வேண்டும்."

"ஹும்! உள்ளங்கை அரிக்க ஆரம்பித்து விட்டதா? இன்னும் மீசை கூட முளைக்கவில்லை. சரி சரி, தருகிறேன். என் ஹர்ஷ் இப்பொழுது பாபுவாகப் போகிறான்.

"இப்பொழுது என்ன வியாபாரம், நிதாயி அண்ணா?"

"அதைத் தெரிந்து கொண்டு என்ன ஆக வேண்டும் உனக்கு? இஞ்சி விற்பவனுக்கு கப்பலின் விலையைப் பற்றி ஏன் கவலை. வியாபாரம் என் பிடிக்குள் இருக்கிறது. சாஹப்பிற்காக வேலை, அதிலெல்லாம் நான் அவசியப்படுகிறேன். அப்புறம் துரைசாணி அம்மாவின் வேலை, 'கடனாகக் கேட்டுப் பணம் கொண்டு வா. சர்க்கரையை விற்றுவிடு, காய்கறியை விலை பேசு. எதையாவது விற்றுக் கொள். பணம் மட்டும் போதும் எனக்கு" என்கிறாள். நீ இன்னும் குழந்தை, இதெல்லாம் புரியாது. பஞ்சத்தில் அடிப்பட்டவன் வயிறு, நிரம்பவே மாட்டேன் என்கிறது. உன் வயிற்றைப் போலவே எவ்வளவு கிடைத்தாலும் இன்னம் இன்னம்..."

"ஏ ...." அம்மா கூப்பிட்டாள்.

"எல்லோரும் எங்கே போய்விட்டீர்கள்?"

தன் உடையைத் திரும்ப மாட்டிக் கொண்டு, கையில் பாதி கலைந்த தலைப்பாகையுடன் எழுந்தான். இருவரும் வெளியில்

வந்தனர். கதவைத் தாழ்ப்பாள் இட்டபடி ஹர்ஷை எதிர் திசையில் தள்ளி விட்டான்.

"அடே மக்கு. – நீ அந்தப் பக்கத்திலிருந்து வா... நம்மிருவரையும் ஒரே இடத்தில் ஒன்றாய்க் கண்டால் பாபு என்னை அறைந்து விடுவார் தெரியுமா".

★ ★ ★

பலிதத்தின் உள்ளம் தக், தக் என்று அடித்துக் கொண்டது. கம்பெனியின் பெரிய இஞ்சினைப் போல.

ஆபீஸ் மணியில் இரண்டு அடித்தது. ஃபைலிலிருந்து கண்களைத் தூக்கி, சிகரெட்டை ஏற்றியவாறு "நிதாய் .. டீ" என்றான்.

நிதாயி டிபன் காரியரைத் திறக்கிறான், 'டக் டக்' என்று சத்தம் கேட்கிறது. நீண்ட சிவப்பு பிளாஸ்கிலிருந்து டீயைக் கொட்டிக் கொண்டிருந்தான். சிகரெட் எரிந்து கொண்டிருந்தது. பலிதத் சூன்ய திருஷ்டியுடன் எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தான். மனதுள் ஒரு கிராமபோன் ரிகார்டைப் போல திரும்பித் திரும்பி "சரோஜினி வீட்டிலிருப்பாளா?" என்று ஒலித்துக் கொண்டிருந்தது. சிகரெட் எரிந்து போய்க் கொண்டிருந்தது. அவனுக்கு அந்தப் பழக்கமும் கிட்டிவிட்டது. சூடான தண்ணீர், சூடான புகை. இவை இல்லாவிட்டால் வேலை ஓடவில்லை. இப்பொழுது அவன் ஏழை அல்லவே!

ஏழ்மையிடம் அவனுக்கு அனுதாபமே கிடையாது. அவன் வளர்ந்து கொண்டே போனான். வறுமையிடம் பழிக்குப் பழி வாங்குவது போல் அவன் வேண்டுமென்றே தன் செலவுகளை ஏற்றிக் கொண்டே போனான். அவனுக்கு அதில் பல விஷயங்கள் பிடிக்காதவை. விலை உயர்ந்த ஸூட் அது அவனுக்கு ஒத்துக் கொள்ளவில்லை என்றாலும் அணிந்து கொண்டான். வீட்டை அலங்கரிக்க விலை உயர்ந்த பொருள்கள். ஆனால் முன் அறை நாவிதன் கடை போல கலாரசனை அற்று தோற்றமளித்தது. அல்லது நாடக மேடையைப் போல. சரோஜினி கொஞ்சம் அதில் திருத்தங்கள் செய்தாள். ஆனால் பலிதத் அதைப் பற்றி நினைக்கக் கூடவில்லை.

சீருடை அணிந்து தலைப்பாகை கட்டியிருந்த சப்ராஸி நிதாயின் மேல் பலிதத்தின் பார்வை விழுகிறது. அவன் சிற்றுண்டித் தட்டையும் டீ கோப்பையையும் ஒழுங்கு செய்த விதத்தில் அவனுடைய பெரியதனம் தெளிவாய்த் தெரிந்தது. வசீகரமான உடை, பளபளக்கும் பித்தளைத் தகடு, பெரிய

தலைப்பாகை பார்த்து மனம் குளிர்ந்தான் பலிதத்! இதுவும் அவனுடைய உயர்விற்கு ஒரு சின்னம்.

ஆனால் மற்றொன்று? சரோஜினி வீட்டிலிருப்பாளா? ஆழ்ந்த பெருமூச்சு விட்டான். சிகரெட் எரிந்து கொண்டிருந்தது.

அந்த மௌனமான சாரமற்ற நிலையில் சாதாரண மனிதனை பாதிக்கும் பல கேள்விகள் எழுந்தன. மனிதன் விரும்புவது என்ன? சந்தோஷம் என்றால் என்ன? வாழ்க்கைஎன்பது என்ன? இதற்கு எல்லாம் என்ன பதில்? சிலர் கொட்டாவி விட்டுக் கொண்டே புரிந்து கொண்டு விடுகிறார்கள். சிலர் பெருமூச்சுகள் மூலம். பலர் வெறுமனே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர் களுக்கும் பதில் கிட்டுகிறது. தந்திக் கம்பியில் கல் பட்டு ஒலிப்பது போல் அவனது உள்ளம் விண் என்று தெறித்து எழுந்தது.

பலிதத் உண்பதில் கவனம் செலுத்தினான். அனுபவிப்பதற் காக அல்ல, டிஸ்போஸலுக்காக. ஏகப்பட்ட ஃபைல்களை பார்வையிடும் பொழுது டிஸ்போஸல் ஆகும் வரை அமைதி கிட்ட வழியில்லை. மூளை ஃபைல் குவியலைச் சுற்றியே சுழன்று கொண்டிருந்தது. ஆனாலும் சரோஜினியைப் பற்றியும் யோசித்துக் கொண்டிருந்தது. ஒன்றோடொன்று இணைந்த பல சிந்தனைகள் அவன் மனதில் எழுந்தன. சந்தோஷம் என்பது என்ன? உலகத்தில் அதை எப்படி அடைய முடியும்? சுதந்திரம் என்றால் என்ன? அதை எப்படி அடைய முடியும்?

பெரிய வியாபாரி மார்வாடி ஹரிநாராயணனிலிருந்து தேச மஹந்தி மிஸ்ரா வரையில் எல்லோரும் வியாபாரத்தைப் பெருக்கி கறையான் புற்றைப் போல் மளமளவென்று உயரு கிறார்கள். வியாபாரி வியாபாரத்தின் அடிமை. அசலை இழந்து வியா பாரத்தின் ஜயக் கொடியை பறக்க விட்டபடி வளருபவன். ஆபத் துக்களைத் தவிர்க்க எவ்வளவு சிரமப்பட வேண்டியிருக் கிறது! எவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க வேண்டி இருக்கி றது. விலை உயர்ந்த காரினில் சவாரி செய்யும் பொழுது எத்தனை ஸலாம்கள் அவனுக்கு. அவைகளை அங்கீகரித்தபடி இங்கும் அங்கும் தலையைத் திருப்பும் பொழுது யாராவது செல் வாக்குடையவர்களைக் கண்டு விட்டால் குழைந்து போவான். பிறகு அந்த செல்வாக்குடையவனின் விருப்பப்படி குரங்காட்டம் ஆரம்பித்து விடுகிறது. ஊண் உறக்கம் நியமப்படி இருப்ப தில்லை. வீட்டில் குழந்தைகளைப் பற்றி விசாரிக்கவே நேரம் இருப்பதில்லை. பிஸினஸ் மட்டுமே அவன் வாழ்க்கை. நள்ளிர வில் அவன் படுக்கும் பொழுது பயம், தந்திரம், துர்சிந்தனை

முதலியவைகளைப் பற்றி கெட்ட கனவுகள் அவனை அல்லல் படுத்துகின்றன. செல்வம் வருவதைப் பற்றியும் மறைவதைப் பற்றியுமே நினைத்து நினைத்து தன்னை மறக்கிறான். மனிதனைத் தின்று கறையான் புற்று வளருகிறது. பாங்கில் கணக்கு ஏறுகிறது. பாவம் முதலாளி!

கம்பெனியின் உயர்ந்த உத்தியோகஸ்தர்களும், நல்ல சம்பளம் வாங்குகிறவர்களும் தங்கள் நாட்களை ஃபைல் அல்லது யந்திரங்களின் உலகத்தில் கடத்துகின்றனர். ஏழுமணி நேரம் தான் அவர்கள் வேலை செய்வதாகப் பேச்சு; ஆனால் இருபத்து நான்கு மணி நேரமும் அவர்கள் கம்பெனியின் சேவகர்கள்தாம். காலையிலிருந்து நடு இராத்திரி வரை பிறருக்காக வேலை, பிறரைப் பற்றிக் கவலை, பிறருக்காக அடிமை. சமயத்திற்கு எல்லை கிடையாது. பாதி இராத்திரிக்குப் பிறகு உண்டு, படுத்துக் கொண்டு தூங்க ஆரம்பித்தால் கூட அப்போதும் அவனைப் படுக்கையிலிருந்து எழுப்பி விட்டு ஃபைல்களைக் கொடுக்க துரையின் சப்ராஸிக்கு அதிகாரம் இருந்தது. "அந்த டிப்போவில் தொழிலாளிகள் கூடி கலாட்டா பண்ணப் போகி றார்கள். நீ சீக்கிரம் புறப்பட்டுப் போ. இரவோடு இரவாய் அங்கே போய்ச் சேர்." மனைவி, நோயாளி குழந்தைகள் நாடோடிகளாய்த் திரிகின்றனர். கிராமத்தில் விவசாயம் மேற் பார்வை இன்றி குட்டிச் சுவராகிறது என்றெல்லாம் சொன்னால், உடனே ஒரு சிவப்பு நிறக் காகிதம் கிட்டி விடும். 'காலையில் என்னை வந்து பார்' என்று. அப்புறம் ஒரு நிமிட குட்டி லெக்சர். "அசௌகரியங்கள் இருந்தால் ராஜிநாமா அனுப்பி விடு. சாக்கு போக்கு சொல்லுகிறவர்களுக்கு கம்பெனியில் இடமில்லை." வாய்ப்பு கிட்டும் பொழுது மேலதிகாரிகளுடன் உறவு கொள்ள அநேக ஸ்தூல, சூட்சும வழிகளுள்ளன. எதிர் விளைவுகளும் உள்ளன. பிறருடைய சிரிப்புடன் சேர்ந்து சிரிப்பது, தன் மேல் பிறரின் பொறுப்புக்களை ஏற்று நடப்பது, அவருடைய உத்தரவை மீறாமல் நடப்பது. "உட்கார் இங்கே, எழுந்திரு, கொஞ்சம் சிரி, அழு, அடி, உதை..." எதுவானாலும் அனு சரித்துப் போக வேண்டும்.

பிழைக்க வழி என்று நினைத்துக் கொண்ட தொழில் வயிறு நிரப்பும் மார்க்கமாக மட்டும் இல்லாமல், அதுவே வாழ்க்கையாக மாறி விடுகிறது. மனிதன் அதன் கல் சக்கரங்களுக்கடியில் தன் நெஞ்சை விரித்து வைத்து விடுகிறான். தன்னையே தேற்றிக் கொள்ள ஒவ்வொரு சமயம் மனிதன் அந்தச் சக்கரங்களைப் பார்த்து, "இந்தக் கல் சக்கரங்களில் அழகும் உயிரும் இருக்கின்

றன. ரொம்ப அழகுதான் இவை. எத்தனை சிற்பிகளின் உழைப்பால் உருவாயிருக்கிறது. இந்த ஒப்பற்ற ரத்தினம்! என்ன ஆழ்ந்த திட்டம்!" என்று சொல்லுபவனாயுமிருக்கலாம்.

இப்படிப் புகழ்ந்த பிறகும் கூட அந்தச் சக்கரங்கள் அவனை நசுக்காமல் விடுவதில்லை. உபாயமே இலட்சியமாகி விடுகிறது. உயிரற்ற கல், யந்திரம்; மனிதனின் எலும்பும் சதையுமாய் உள்ள உடலைப் பற்றி அது ஏன் கவலைப்பட வேண்டும்? அவனுடைய மென்மையான மனதின் சூட்சுமத்தைப் பற்றி ஏன் யோசிக்க வேண்டும்? அது போய்க் கொண்டே இருக்கிறது, வருடங்களை, ஆயுளைத் தின்று கொண்டு.

உபாயத்தை லட்சியமாக ஏற்றுக் கொண்டதும் புத்தி மழுங்கிப் போகிறது, விவேகம் மறைந்து விடுகிறது. கழுத்தைப் பிடித்து வேலை வாங்குகிறது. மனிதன் தன் சுதந்திரத்தை இழந்து விடுகிறான். அதனால்தான் உலகத்திலுள்ள மகிழ்ச்சியின் பெரும் பாகத்தை குழந்தைகளும், இலட்சியமற்ற எளிய உள்ளங் களும் உற்பத்தி செய்கின்றனர்.

மணம் விட்டு யாரால் சிரிக்க முடியும்?

ஸிவிலிஸேஷன் இஸ் ஸிவிலிஸேஷன். டாம் ரட். தோலின் கீழேயே சிறிய நரம்புகளில் விஷம் பரவிக் கிடந்தது, அறிவை எரித்து விடும் ஸிஃபிலிஸ் இருந்தது; சிந்தையில் ஸைகோஸிஸ்.

ஹெல் ... ஹெல். இந்த உலகத்திலேயே நரகமும் இருந்தது.

சரோஜினி வீட்டிலிருப்பாளா?

அறிவு அலை பாய்ந்தது- தெளிவற்ற பேச்சு, தெளிவற்ற சிந்தனை. அந்த அலைகளின் முன் ஜ்வலிக்கும் ஒளி தெரிந்தது. உப்பு அலைகள், வயிற்றைப் புரட்டியது.

நிதாயின் முகம் தெரிந்தது, முகம் அல்ல, முகமூடி, உணர்ச்சியற்ற கல்லைப் போன்ற முகம். ஒரு மூலையில் ஒரே நிலையில் நின்று கொண்டிருந்தான். நரியைப் போன்ற கண்கள். கண்ணிமைகளின் மயிர் உதிர்ந்து, அவை இமைப்பு அற்றவை யாய்த் தோன்றின. பாறையைப் போன்ற கண்கள். இல்லை, உலகம் பிறந்த அன்றே கூடத் தோன்றிய யுரேனியத்தால் செய்த கண்கள்; ரேடியம் தேய்ந்து கண்ணாடியாய் ஆகிவிட்ட கண்கள், மயிரும் கண்ணாடி. அவனுக்கு என்ன வயதிருக்குமோ? நிலை யற்றிருந்து உணர்ச்சி சமநிலை அடைந்தது. மனதின் தக் தக் கொஞ்சம் அடங்கியது. இவன் எதைத்தான் காணவில்லை? இந்த யுரேனிய மனிதன், கண்ணாடி மனிதன், மண் மனிதன், அநேகம் ஆபீசர்களையும் அவர்களுடைய ஆடம்பரத்தைம் பார்த்திருப்பான். படிப்படியாக கம்பெனி வளர்ந்து வந்தது.

நிதாயியைப் போன்ற கணக்கற்றவர்கள் வந்திருப்பார்கள், வசவைச் செரித்துக் கொண்டு, கையை உதறிவிட்டுக் கொண்டு வாழ்ந்திருப்பார்கள். வாய்ப்புக் கிட்டும் பொழுது அடுப்பின் தணலை ஊதி நெருப்பை வளர்த்திருப்பார்கள். ஒரு ராணுவ ஆபீசரைப் பற்றி நிதாயி சொல்லுவான். கோபம் வந்தால் அவர் காகிதத்தின் மேல் வைக்கும் கண்ணாடி உருண்டையை எடுத்து எறிவாராம். இன்னொருவர் எதற்கும் அடிக்கக் கையைத் தூக்கு வாராம். அந்தத் துரையை - மாக், ஹைலாண்டர், இப்படி ஏதோ பெயர் - தாடிக்கார சப்ராஸி ரஹ்மான், மியாவால்தான் அடக்க முடிந்ததாம். துரை அவனை அடிக்கத் தூக்கிய கையை ரஹ்மான் மியா பிடித்துக் கொண்டு விட்டான். பிறகு உறுமலுடன் "சாஹப், இதென்ன காரியம்? உங்களுக்கு கை கலக்க விருப்ப மானால் கீழே இறங்கி வாருங்கள்" என்றானாம். அந்தத் துரை மகிழ்ந்து போய் தோழமையுடன் கை குலுக்கினாராம். யுரேனிய மனிதன்! ரஹ்மானுக்கும் இரண்டு வெவ்வேறு உருவங்கள் இருந் தன. பாதி ஆண், பாதி பெண். அர்த்தநாரீசுவரர். பொறுத்துக் கொண்டே இருந்தான் வெகுநாள் வரை. ஒரு நாள் அந்தப் பொறுமை மடிந்து ஆண் ஹுங்காரத்துடன் புறப்பட்டது அவனுள் ளிருந்து. ஏன் வாழ வேண்டும்? அதில் என்ன ஆனந்தம்? ஏன் மரிக்கவில்லை? ஹெல், ஓ ஹெல் தலையுள் பற்றி எரிந்தது.

ஸிவிலிஸேஷன் இல் ...

மனதில் பரவிவிட்ட விஷம் உறுமியது அமைதியின்றித் தவித்தது. அதற்காகத் தானே எல்லாம்? சண்டை, அடியும் குத்தும், அணுகுண்டு வீச்சும் - ஸிவிலிஸேஷன் இல் ....

கண்கள் சிகப்பேறின. மனதுள் சிடுசிடுப்பு வளர்ந்தது. பாதி எரிந்த சிகரெட்டை நிதாயியை நோக்கி எறிந்தான். "நிதாய் ... இடியட் ... கிழட்டு முட்டாளே" என்று கர்ஜித்தான். "மக்கைப் போல என்ன முழிக்கிறாய்? இந்த பிளேட்டை எடுக்க வேண் டாம்?" சொல்லி முடியும் முன்பே நிதாயி, ஏதோ யந்திரம் போல எல்லாவற்றையும் எடுத்துச் சரியாய் வைத்தான். பிறகு ஆங்கில தினசரிப் பத்திரிகையைப் பிரித்து பலிதத்தின் முன் வைத்தான். சிகரெட் டின்னைத் திறந்து வைத்தான். அடுத்து ஐந்து நிமிடங் கள் பலிதத் ஆங்கிலப் பத்திரிகை படிக்கும் சமயம்.

ஆச்சரியமான சமாசாரம். புகழ் பெற்ற தரைப்படை சேனாதிபதி ஜெனரல் உட்ஸனின் மனைவியை, புகழ் பெற்ற விமானப்படையின் சேனாதிபதி ஏர் கமடோர் கெஜலி தன் வசமாக்கிக் கொண்டு விட்டானாம்! விவாக ரத்து கிடைக்குமாம் உட்ஸனுக்கு!

வயதான உட்ஸன் பல சண்டைகளில் கௌரவம் பெற்றவர். கிட்டிய பதவிகளும் மெடல்களும் எண்ணற்றவை. ரொம்ப உயர்வான வேலையிலிருப்பவர். இன்று குடும்பமற்றவராய் விட்டார். நாலடி, ஒன்பது இஞ்சு பலிதத் தாஸ் ஆழமான மூச்சு விட்டான். மேலதிகாரிகளின் மனதை அறியும் திறம் தன்னிடம் உண்டு என்ற தற்பெருமை இருந்தது. துக்கம் என்ன என்று அவனுக்குத் தெரியும்; ஏனென்றால் அவனும் ஒரு மேலதிகாரி.

திடீரென்று அவனுள்ளம் திடுக்கிட்டது. பத்திரிகை விஷயம் அவன் கண் முன் மிதந்தது.

சரோஜினியின் நினைவு வந்தது. அவள் முழுக்க முழுக்க அவனைச் சேர்ந்தவள். அவளிடம்தான் அவனுக்கு எவ்வளவு நேசம், எவ்வளவு காதல். கடியாரத்தில் இரண்டு அடித்து பதினைந்து நிமிடங்கள் ஆயிருந்தன. சரோஜினி வெளியில் போயிருக்கலாம். இப்பொழுதெல்லாம் ஏகப்பட்ட பார்ட்டி அவளுக்கு. குழந்தையைப் போல் ஆகிவிட்டாள். தினமும் முன்னேறுகிறாள். வாழ்க்கை மலர்ச்சி அடைந்து கொண்டிருந்தது அவளுக்கு. போகட்டும் வெளியே, திரும்பி வராமலா போகிறாள்?

★ ★ ★

மணி மூன்றரை ஆகிக் கொண்டிருந்தது.

கழுத்தினடியில் கைகளை வைத்துக் கொண்டு, சோம்பிப் படுத்திருந்தாள் சரோஜ். யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். சுகமாய் வீசிக் கொண்டிருந்த காற்றை அவள் அனுபவித்துக் கொண்டிருந்தாள். பக்கத்தில் ஒரு சிறு நோட் புத்தகம் கிடந்தது. பளபளக்கும் அட்டை ஓரத்தில் பொன் நிற வரிகள். அதில் அவள் தன் தினசரி வாழ்க்கையின் முக்கியமான நிகழ்ச்சிகள், அவள் செல்ல வேண்டிய பார்ட்டிகள், பஜனைகள் ஆகியவை பற்றியெல்லாம் எழுதி வைத்தாள்.

"வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக வாழ வேண்டும். சமயத்தைக் கால அட்டவணைக்குள் கட்டிப் போட வேண்டும். அந்த அட்டவணையை டயரியில் எழுதி வைக்க வேண்டும்" என்று யாரோ சொல்லியிருந்தார்கள்.

வெற்றி தானாகவே வராது. சரோஜினி சூன்யத்தைப் பார்த்த வாறு அமர்ந்திருந்தாள். மெல்ல கால்கள் ஆடிக் கொண்டிருந்தன. கடியாரத்தின் டிக் டிக்கைப் போல மனதில் அறிவுப் பிரவாகம் ஓடிக் கொண்டிருந்தது.

மணி சுமார் மூன்றரை – பலவித சப்தங்களை அவளுடைய செவிகள் அடையாளம் காணக் கற்றுக் கொண்டிருந்தன.

நிசப்தத்திலும் பல ஓசைகள். கட், கட் தும் - தூரத்தில். இது ஹர்ஷ். அவனுடைய வலது கை எதையாவது செய்து கொண்டே தானிருக்கும். ஆனாலும் சரோஜினிக்கு அவனிடம் கோபம் தான் வந்தது. ஏனென்றால் அவனால் துப்புரவாயிருக்க முடிய வில்லை. ஒவ்வொரு சமயம் வரம்புக்கு மீறி அழுக்காய்த் தென் படுவான்.

தூரத்தில் எங்கோ காகம் கரைந்து கொண்டிருந்தது. கூடவே இன்னும் பலவித பறவைகளின் ஓசையும் கேட்டது. எங்கோ தூரத்தில் வண்டிகள், ஜனநெருக்கம் இவைகளின் கலப்படமான ஒலி.

சலசலக்கும் காற்றின் ஓசை, மறைவில் இரு மூச்சுகளின் ஒருங்கிணைந்த நளினமான ஒலி, சேர்ந்த ஒலியில் சிரிப்பு, அடங்கிய குரலில்.

என்னவோ போலிருந்தது சரோஜினிக்கு. எழுந்து இங்கும் அங்கும் பார்த்தாள். முகம் குங்குமச் சிகப்பாய் விட்டது. எங்கும் யாரும் தென் படவில்லை.

வெய்யில் தாழ ஆரம்பித்து விட்டது. கைக்கடியாரத்தைப் பார்த்தாள். இன்னும் மூன்றரை ஆகவில்லை. அவள் தயாராகி விட்டாள். இம் முறை ஒரு வேளை ... ஜன்னல் வழியே தூரத்தில் கம்பெனியின் கட்டிடங்கள் தெரிந்தன. "அவர்" நினைவு வந்தது. கம்பெனியின் உயர்ந்த உத்தியோகஸ்தர். வேலையில் மூழ்கியி ருப்பார். ஆனால் யார்தான் வேலை செய்யாமல் இருக்கிறார்கள்? வேலை, வேலை என்று மனதிலிருந்து அன்பு, காதல் எல்லாவற் றையும் தள்ளிவிடுவதா? வீட்டிற்குத் திரும்பும் பொழுது முகம் வாடி உலர்ந்து போகிறது. சாயங்காலம் "ஹர்ஷா, கொஞ்சம் காலைப் பிடித்து விடு ... ஹோ .. ஹோ .. ஹோ .. ஹோ" அத்துடன் சரி.

ரணஜித் பாபு எவ்வளவு ஸ்மார்ட், எவ்வளவு சுறுசுறுப்பு! வாயில் சுருட்டு, டிடாப் நடை, உடை. முறுக்கி விடப்பட்ட மனிதன். அகலமான தோள்கள் மேல் ஒட்டின கழுத்து, விதி அவரைப் பெரிய பொறுப்புக்களை ஏற்கத் தயாராக்கி இருந்தது. மிஸ்டர் திரிபாடி உருவத்தில் சிறியவர். ஆனாலும் அவரிடம் ஏதோ வசீகரிக்கும் சக்தியிருந்தது. உப்பின கன்னங்கள், விஷமம் ததும்பும் அகலமான அழகிய கண்கள், அழகிய கைகள் - எங்கோ இருந்தது அந்த வசீகர சக்தி. பலர் வெளிக்கு ஒரு விதமாய்த் தோன்றுவார்கள். ஆனால் அதற்கு விபரீதமாய் நடந்து கொள்ளுவார்கள். ஆனாலும் அவர்கள் வாழ்க்கை சலசலப்புடன் நடந்தது. சிலர் தங்கள் மென்மையைக் காட்டிக் கொள்ளுவார்

கள், சிலர் தங்கள் மென்மை அற்ற தன்மையை; பிறர் அனுதாபத்தை எழுப்பும் அப்பாவித்தனத்தைச் சிலரிடம் காணலாம். அல்லது காட்டுமிராண்டித்தனத்தை வெளியிடுவார் கள் சிலர். சிலரில் கருணை, சிலரில் மூர்க்கத்தனம். மனிதனை மிருகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியும். உள்ளே நெருப்பும் எஞ்சினின் பலமும் இருந்தால், மானுட மிருகம் எவ்வளவு வசீகரமாய்த் தோன்றுகிறான்! முக்கியமாய் கூட்டத்திலோ, பார்ட்டியிலோ பெண்கள் முன் தற்பெருமைக்காக அவன் பிறருடன் மல்லுக்கு நிற்கும் பொழுது அவனுடைய வசீகரம் அதிகமாய் வீசுகிறது.

அதே மிருகம் மந்தையில் மே ... மே ... என்ற குரல் கொடுக் கிறது. தலையில் இரு கொம்புகள். எவ்வித தனித்துவமும் இல்லை. ஆடு வருகிறது -வாசலிலே அதே சூ .. சூ என்று விரட்டுகிறார்கள். கதவும் அடைக்கப்படுகிறது. திடுக்கிட்டுப் போய் ஆடு கழுத்தை வளைத்துக் கொள்ளுகிறது. அதன் கண் கள் சேற்றின் நிறம், அதன் தலையிலும் இரு கொம்புகள்.

ஓ! எவ்வளவு அற்புதக் கற்பனை! கைக் கடியாரத்தைப் பார்த்தாள். மூன்றடித்து நாற்பது நிமிடங்கள் - திரும்பவும் "அவரை" நினைத்துக் கொண்டாள். டிபன் பண்ணி வைத்திருந் தாள். நிதா டீ போட்டுக் கொடுத்து விடுவான். ஆனால் அவனுக் காக இன்னும் அதிகமாய் ஏதாவது செய்ய வேண்டும். சரோஜினி யோசிக்க ஆரம்பித்தாள். இப்பொழுதெல்லாம் அவர் சாப்பிடும் சமயம் சரோஜினிதான் லெக்சர் செய்தாள். இப்பொழுது வாழ்க்கையைப் பற்றியும் சுகத்தைப் பற்றியும் சௌக்கியத்தைப் பற்றியும், பிறரைப் பற்றியும் பேசினாள். பலிதத் முன் மாதிரி அரட்டை அடிப்பதில்லை. உண்ணும் போதும் வேலைப் பொறுப்பை அவனால் இறக்கி வைக்க முடியவில்லை போலும். பிறகு பாதி இராத்திரி வரை பைல்களுடன் வேலையில் ஆழ்ந்தி ருப்பான். என்னதைக் கண்டான் வாழ்க்கையில்? ஆனால் யார் என்ன சொன்னாலும் பிரயோசனம் இல்லை. அவரவர்கள் இருக்கிறபடிதான் இருப்பார்கள். என்னவாகிவிட்டது? மூன்றே முக்கால் அடித்து விட்டதே! தன் டைரியை எடுத்துப் பார்த்தாள். திடீரென்று மோட்டாரின் ஹார்ன் சப்தம் கேட்டது. தெரிந்த சப்தம் அது. இதோ நெருங்கி விட்டது. எழுந்திருக்க வேண்டும்.

ரணஜித் பாபுவின் விலை உயர்ந்த கார் வந்து நின்றது. முதலில் அவர் இறங்கினார்; பின்னாலே மிலி குழந்தையைப் போல் கவலையற்றவளாய் இறங்கினாள். சட்டம் இடப்பட்ட படம்

போல் கதவண்டை ஒரு நிமிடம் தயங்கினாள் சரோஜினி. நெஞ்சம் நிமிர்ந்து தணிந்தது.

இன்று ஒரு சிறு 'அவுட்டிங்' இருக்கப் போகிறது. தூரத்தில் எங்கேயோ ஒரு மைதானத்தில் இறக்கமான பூமியில் வரிசை வரிசையாய் மரங்கள் வளர்ந்தன. அந்த வனத்தின் மணத்தை மானசீகமாக அனுபவித்தாள் சரோஜினி. அவளுடைய கண் களில் விசித்திர திருஷ்டியில் உருகிய பொன் மயமான வெயில் தெரிந்தது. மனதில் சூன்யமும் கூடவே வருத்தியது. அந்த வனத்தை நோக்கி மிதக்கும் அன்னப் பறவையைப் போலச் சென்று கொண்டிருந்த மிலியின் உருவம் அவளுடைய அகக் கண்ணில் தெரிந்தது. எப்போதும் போல் ஒரு வேளை மிலி பின் தங்கி வரக்கூடும். மெல்லிய குரலில் ரணஜித் பாபு, "என்ன யோசனை உங்களுக்கு?" என்று கேட்டார். மரத்தின் மறைவிலி ருந்து பறவைகள் இனிமையாக குர் .. குர்.. குர் என்று கூவும். இனிமையான கற்பனை அவளை புளகாங்கிதமடையச் செய்தது.

★ ★ ★

சரோஜினி வெளியே போவது சரிதான். பலிதத்திற்கு அது கர்வமாயிருந்தது. வீட்டோடு அடைந்து கிடப்பவனல்ல அவன், வேலையுள்ள மனிதன். தன் வாழ்க்கையை எள்ளிலிருந்து பனை மரமாக வளர்த்துவிட்டான். பிறருக்கு அவன் உபதேசம் செய்யும் நிலைக்கு வந்துவிட்டான். "என்னைப் பார். என்னைப் போல் வேலை செய்தாயானால் நீயும் வாழ்க்கையில் வெற்றி அடைய முடியும்", என்று சொல்லலாம்.

சரோஜினியின் விஷயம்? அதுவும் அவனுக்கு கர்வப்பட வேண்டிய விஷயம்தான். தங்கள் காரியம் ஆவதற்காக எந்த சந்தர்ப்பத்திலும் புகழைப் பாட சமூகத்தில் ஒவ்வொரு நிலை யிலும் யாராவது இருப்பார்கள். முழு மனதுடன் செய்ய மாட்டார் களாயிருக்கலாம் ... ஆனால் மேலுக்கு புகழைச் சொரிவார்கள். அன்றொரு நாள் அப்படித் தான் ஒரு வெளிதேசத்து கண்டிராக் டர் நடு சாஹுபிடம் ஏதோ வேலையாய் வந்திருந்தான். பேச்சோடு பேச்சாக அவன் பம்பாயின் நடனக் கலையைப் பற்றி விவரித் தான். மெல்ல மெல்ல சுப்ராங்கியின் நடனத்தைப் பற்றிக் கேட்டான். அவளைப் புகழ்ந்து பேச ஆரம்பித்தான். ஆயிரம் ரூபாய் பெறுமான விஷயம்தான் அவனுடைய காரியம். ஆனால் அதை விட எவ்வளவோ அதிகமாய் லாபம் கிட்டியது அவனுக்கு. பலிதத்தையும் புகழ்ந்து பேசினார்கள் பலர். கேட்டுக் கேட்டு

அவனுக்கு நம்பிக்கை வந்துவிட்டது. அந்தப் புகழ் பொய்யாய் இருக்க முடியாது என்று அவனுக்குத் தோன்றியது.

சரோஜினியின் வளர்ச்சிக்கு வேண்டிய எல்லா வித சௌக ரியங்களையும் செய்து கொடுப்பது தன் கடமை என்று எண்ணி னான் பலிதத். ஏழு சுரங்களை சாதகம் செய்தால் என்ன வேண்டுமென்றாலும் பாட முடியும்.

மேலும் அவன் உழைப்பாளி, கம்பெனி வேலையில் கம்பெனி யின் நலத்திற்காக உயிரைக் கொடுத்து உழைப்பவன். சமயம் கிடைத்தால் தனக்காகவும் முயலத்தான் வேண்டும்.

நடுவில் அவனுடைய செயல்படும் திறமையைக் காண்பித்துக் கொள்ள வாய்ப்பு கிட்டியது. அதனால் அவன் மனிதரை மேய்த் தான். வேலைப் போட்டியில் அவன் தன் குறுகிய உடலை ஈடுபடுத்தும் பொழுது, தன் கீழதிகாரிகளின் பயந்த கண்களைக் கண்டான். அவன் யாரோ ஒருவனின் ஜீவனோபாயத்தைப் பிடுங் கும் காரியத்தில் ஈடுபட்டிருக்கும் பொழுது, அந்த அதிருஷ்டம் கெட்டவனின் உருக்கமான வேண்டுகோளைக் கேட்டான். அவனது நடுக்கத்தை உணர்ந்தான். அப்பொழுது பலிதத் தன் அதிகாரத்தின் பெருமையை அனுபவித்தான். அவனால் ஒவ்வொரு சிறு விஷயத்திற்காகவும் கத்த முடியாது. அவனுக்கு பலன் தான் முக்கியம். அதனால் தன் பேனாவைக் கூர்மையான கத்தியைப் போல் செலுத்தினான். ஐதீகத்தின் பெயரில் வதை செய்து செய்து அவனுக்கு உள்ள நிறைவு ஏற்பட்டது.

தெரிந்தவர்கள் அவனிடம் யமனைப் போல் பயந்தார்கள். அவனுக்கு அதில் திருப்தி. பயம் வேலையில் முன்னேற்றத் துக்கு அவசியம் என்று நம்பினான். தன்னை அதிகம் அலட்டிக் கொள்ளாமல் அமைதியாய் ஆரோக்கியமான முகப் பொலிவுடன் இருக்க வேண்டும். தன் வதைத் தொழிலை விரும்பி அதற்கான வழிகளை அவன் தேடினான். கோள் சொல்பவர்களுடன் தாராளமாய் பழகினான். அதில் அவனுடைய நிறைய சமயம் செலவாயிற்று. செய்ய வேண்டியதைச் செய்து புகழ் தேடிக் கொண்டான்.

மிஸ்டர் 'ஷா' விடம் மட்டுமே அவனுக்குப் பயம். அங்கு அவனுடைய எந்த யுக்தியும் பலிக்கவில்லை. அந்த மனிதனின் குணம் நிமிடத்திற்கு நிமிடம் மாறிற்று - எது அசல் எது போலி என்று புரிய முடியாதபடி. எப்படி இவரிடம் நடந்து கொள்ள வேண்டும் என்று அவனுக்குப் புரியவில்லை. புகழ்ந்து கொண்டி ருக்கும் பொழுதே அவன் மேல் அடி விழுந்தது. காயத்தை நக்கிக் கொடுத்துக் கொண்டிருக்கும் பொழுது 'பேஷ், பேஷ்'

என்று மெச்சினார். சிரித்துக்கொண்டிருக்கும் பொழுதே அவருடைய முகத்தில் கவியும் இருளைக் கண்டு அடங்கிப் போக வேண்டி இருந்தது. திரும்பத் திரும்ப முயற்சித்து, திரும்பத் திரும்ப அடிபட்டு அதிருப்தி வளர்கிறது; ஆனால் நம்பிக்கை தளரவில்லை.

பயம் மட்டும் மாறவேயில்லை. அந்த முதல் நாள் சந்திப்பின் நினைவு, ஸிட்டவுன், கெட் அவுட்டின் புயல் கர்ஜனை, அவன் செவியில் ஒலித்துக் கொண்டிருந்தது. முதல் சந்திப்பில், முதல் சம்பாஷணையில் இடப்படும் உறவின் அஸ்திவாரத்தின் பலம் கடைசி வரையில் நிலைக்கிறது - பெரியவனான பிறகும் பள்ளிக் கூட வாத்தியாரைக் கண்டதும் தானாக தலை குனிகிறது. மரியாதையாய் "ஸர்" என்று வாய் சொல்லுகிறதே, அதே போல.

முதலில் சாஹப் என்றும் பிறகு மிஸ்டர் "ஷா" வென்றும் பலிதத் அவரைப் பூஜித்தான் - ஆனால் பலனில்லை. கல்தான் அவர். ஆனால் கல்லைப் பற்றி ஒரு நிச்சயம் உண்டு. அதன் பாவங்கள் மாறுவதில்லை. அதாவது அதற்கு உணர்ச்சியே இல்லை. ஆனால் பிழைப்பிற்காக கோவிலில் எழுந்தருளியிருக் கும் கல்லான தெய்வம் மனதாலும், கடுமையிலும் கல்லாயிருந்தா லும், நடத்தையில் பயங்கரமானவர். அங்கு பூஜையில் அமைதி இல்லை. மேலும் மேலும் பூஜையைக் கேட்டது அந்தத் தெய்வம் - முயற்சி செய்வது வீண். பலிதத் தாஸ் அங்கு முன்னேற முடியவில்லை.

வேலை உயர்வின் காரணமாய் பலிதத்திற்கு மிஸ்டர் "ஷா" வுடன் பழக அவசியப்பட்டது. அடிக்கடி அவரைக் காண வேண்டி இருந்தது. நிற்க வைத்தேதான் சாதாரணமாய் பேசு வார் அவர். சில சமயம் திடீரென்று உட்காரவும் சொல்லுவார். அன்றும் அப்படித் தான் தலை குனிந்தபடி நின்று கொண்டிருந் தான் பலிதத். வேறு எவருடனோ பேசிக் கொண்டிருந்த அவர் திடீரென்று, "பேசாமல் என்ன, கனவு கண்டு கொண்டா நிற்கிறாய்? கனவு காண்பவர்களுக்கு இங்கு இடமில்லை. என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய் அந்த விஷயத்தைப் பற்றி?" என்று கர்ஜித்தார். அவன் பதில் சொல்ல ஆரம்பித்தான். அதற்குள் "முதலில் கேட்டுக் கொள் நான் சொல்லுவதை" என்று கத்தினார். வந்திருந்த ஆள் முறுவலித்தான். அந்த மனிதர் யாராவது சாதாரண, கல்வியற்ற முழங்கால் மட்டும் தூக்கின வேஷ்டி கட்டின கிராமவாசியாயிருக்கலாம். ஆனால் அந்த சமயம் அவன் சாஹபின் கண்களில் பெரிய ஆள். ஏனென்றால் அவனிடம் சிக்கியிருந்தது சாஹபின் தன் நலம். முன்பு

பலமுறை முயற்சித்தும் சாஹபின் தரிசனம் அவனுக்குக் கிட்டாமல் கூட இருந்திருக்கலாம். ஆனால் அன்று சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். மேலும் உட்கார்ந்திருப்பான். அழுத்தலாகப் பேசுவான். பலிதத் நின்றவாறு கேட்டுக் கொண்டிருப்பான். வெளியில் போய் அந்த மனிதன் 'கம்பெனியின் பெரிய துரை ரொம்ப சரளமாய்ப் பழகுகிறவர். அவருடைய வேலைத் திறமையைப் பற்றி சொல்லி முடியாது. நல்ல மனிதர். முழு ஆபீசையும் கலக்கி என் வேலையைப் பற்றி பதில் அளித்தார். சாதாரண ஜனங்களிடம் அவருக்கு அலாதி அனுதாபம் உண்டு' என்று பிரசாரம் செய்வான்.

ஆனால் பலிதத் பெரியவனாகி விட்டான். அவனுடைய தன்னம்பிக்கையும் வளர்ந்து விட்டது. அதன் ஜ்வாலை தீவிரமானது. அது எல்லாவற்றையும் செரித்துக் கொள்ளக் கூடியது. அவனுடைய வெற்றி நோக்கம் மழுங்காமல் அவனை உந்திவிட்டது.

ஒரு முறை பெரிய துரையுடன் கம்பெனியின் வேலையாய்ப் புறப்பட்டான். அவர்கள் போன இடத்தில் அனேக விதத் தொழில்கள், கணக்கற்ற ஊழியர்கள், கம்பெனியின் ஃபாக்டரி ஒன்று அங்கிருந்தது. தொழிலாளர்களின் காலனியும் அங்கு தான். பலிதத் முன்னமேயே செய்தி அனுப்பியிருந்தான். அதனால் எங்கும் தோரணங்கள் தொங்கின. தொழிலாளிகளின் தலைவர்கள், தொழிலாளிப் பெண்கள், சங்குநாதம், குறவை எல்லாம் அவரை வரவேற்றன. இதை எல்லாம் கண்டு மிஸ்டர் "ஷா" மனமகிழ்வார் என்று பலிதத் எதிர்பார்த்தான். ஆனால் அவர் வண்டியைக் கூட நிறுத்தவில்லை. அது ஹாரனை சப்தித்துக் கொண்டு ஜனத்திரளை விலக்கியவாறு வேகமாய் முன்னேறியது. பயந்து கொண்டே "ஸர் இது கம்பெனியின் இலாகா. அதனால் மக்கள் பெரிய துரையைக் கண்டு மரியாதை செய்யக் கூடியிருக்கின்றனர். எவ்வளவு ஆழ்ந்த அன்பு ..." என்று பலிதத் ஆரம்பித்தான்.

"தூ!" என்று பெரிய சப்தத்துடன் துப்பினார் பெரிய துரை. ஏதோ காட்டு மிருகத்தைப் போல் கர்ஜனையும் இருமலுமாய் வசவுமாரி பொழிந்தார். "அன்பு, மரியாதை, இதெல்லாம் அர்த்தமற்றவை. எந்த புத்திசாலி இதை எல்லாம் ஏற்பாடு செய்தானோ? வேலை ஒன்றையும் காணவில்லை, இந்தத் தமாஷா தான் தெரிகிறது. யார் இதெல்லாம் செய்கிறான் என்று நான் அறிய விரும்புகிறேன்."

அவருடைய நஞ்சுப் பார்வை ஒரு பக்கம் ஓடியது. மக்கள் காற்றில் வளையும் கமுக மரங்களைப் போல் குனிந்து சலாம்

செய்தனர். மிஸ்டர் 'ஷா' வின் வண்டி அவர்களூடே போய்க் கொண்டே இருந்தது. அவருடைய முகம் விகாரப்பட்டுப் போயி ருந்தது. பல்லைக் கடிக்கும் சப்தம் கேட்டது. சிரிப்பா, விரக்தியா என்று அறிய முடியாத ஒரு உதட்டு நெளியும் காணப்பட்டது.

“படி அளக்கும் பெரியவரிடம் உள்ளத்திலிருந்து பக்தி புறப் படுகிறது. அதை நிறுத்த முடியாது” என்று வினயத்துடன் பலிதத் சொல்லவும் மிஸ்டர் 'ஷா' வெகுண்டெழுந்தார். “உள்ளம் - உள்ளம்!” பிறகு வசைமாரி - 'ஏமாற்றலும் பலகீனமும் இருக்கும் இடத்தில் தான் உள்ளத்தைப் பற்றி பேச்சு எழுகிறது. நான் ஸென்ஸ்! நீ ஒரு பெரிய இடியட்'.

“ஹுஜூர்” என்று ஒப்புக் கொண்டான் பலிதத். திரும்ப அவர் கர்ஜிக்க ஆரம்பித்தார். “அடிக்கடி உள்ளத்தைப் பற்றி பேசுகிற வன் மடையன். எனக்கு அந்த வித ஆபீசர் அவசியமில்லை. நினைவிருக்கட்டும். நாம் கம்பெனியின் ஆபீசர்கள், நாம் யந்திரங்கள் மட்டுமே. வேலையுடன்தான் நமக்குத் தொடர்பு, உள்ளத்துடனல்ல. கம்பெனியின் கிரேனைப் பார்த்திருக்கிறாய் அல்லவா? எஞ்சினையும் பாய்லரையும் பார்த்ததேயில்லையா நீ? நாமும் அவை தான். மெஷின் கெட்டுப் போனால் அதை உள்ளம் என்று சொல்லுவாயா? இடியட், நாம் கத்திகள், தெரிந்து கொள். ஒரு சமயம் நதிக் கரையை வெட்ட வேண்டுமென்றால் வெட்டு வோம். மற்றொரு சமயம் கழுத்தை வெட்டுவோம்.”

மாலையில் 'ஷா' வுடன் ஒரு பிரதேசம் வழியே காரில் சென்று கொண்டிருக்கையில் அங்கு சில கூலியாட்கள் வெறுமனே இங்கு மங்குமாய் உலவுவதைப் பார்த்து பலிதத் சொன்னான்: “சோம்பேறிகள். இங்குள்ள மேஸ்திரிக்கு சரியாக வேலை வாங்கத் தெரியவில்லை போலும்”இதைக் கேட்டு ஷா மகிழ்வா ரென்று அவன் நினைத்தான்.

ஆனால் ஷா உணர்ச்சியற்ற குரலில் கூறினார் —

“இவ்வளவு கூடவா தெரியாது உனக்கு? இந்தத் தொழிலாளி களால்தான் நம் பிழைப்பு நடக்கிறது என்று புரிந்து கொள்.”

இளம் வெய்யிலில் அவருடைய முகத்தில் வியர்வை உறைந்து அழுக்காய்த் தோற்றமளிக்கிறது. தொழிலாளிகளின் எதிர்கால கலகத்தின் முன்னோடியைப் போல மிஸ்டர் 'ஷா' கம்பீரமான குரலில் “நீ ஒரு முட்டாள். பிறருடைய கஷ்டங்களைப் புரிந்து கொள்ளுவதில்லை. உனக்கு வேண்டுவது லாபமும், மோசடியும் தான். அதனால் தான் உன் அபிப்பிராயம் தன்னலமுள்ளதாக வும், தயை அற்றதாகவும், யோசனை இல்லாததாகவும் இருக் கிறது. உன் வேலையின் அடிப்படை என்ன என்று எப்பொழுதா

வது தெரிந்து கொள்ள முயற்சித்திருக்கிறாயா? அதிருப்தி பிறந்தால், அது வளர்ந்து வளர்ந்து கடைசியில் முழு ஸ்தாபனத் தையும் நசித்து விடும். அப்பொழுது நீ எங்கே போவாய்? யோசித்துப் பார்த்திருக்கிறாயா? உன்னிடமிருந்து இரண்டு நல்ல வார்த்தையை எதிர்பார்க்கின்றனர் தொழிலாளிகள். கூடவே கொஞ்சம் அனுதாபமும். அது கூட உன்னால் முடியாவிட்டால், நீ ஆபீசர் எப்படி ஆக முடியும்?"

அப்புறம் முயற்சியை அறவோடு விட்டு விட்டான் பலிதத். அவன் ஏதாவது சொன்னால் அதற்கு நேர் எதிராய்ப் பேசினார் மிஸ்டர் 'ஷா'. தங்கள் கீழ் உழைப்பவர்களின் அபிப்பிராயத்திற்கு நேர் விபரீதமாய்ப் பேசி அவர்கள் கன்னத்தில் அறைவது, மேலதிகாரிகளின் விதிகளில் ஒன்றாய் இருக்கலாம்.

பலிதத் எல்லாவற்றையும் மனத்துள் எழுதிக் கொண்டான். ஆனால் எவர் எதிரிலும் உசிதமற்றுப் பேசுவது தன்னால் இயலாத செயல் என்று தெரிந்து கொண்டான். தன் எதிர்ப்பை எழுத்து மூலம் தான் செய்ய வேண்டும். பேச்சு மூலம் முடியாது.

மிஞ்சியிருந்த பிரயாணத்தை அவன் மௌனமாய் மிஸ்டர் 'ஷா'வின் பக்கத்திலமர்ந்து கழித்து விட்டான். யோசித்துப் பார்த்தான். விசித்திரமான மனிதன் தான் இந்த மிஸ்டர் 'ஷா'. மனிதர் ஒருவரே. ஆனால் வெவ்வேறு நிலைமைகளில் அவர் வெவ்வேறு உருவம் தரித்தார். வேலையைச் செய்து முடித்தி ருந்தாலும், அவர் 'அது முடியவில்லை' என்று திட்டக் கூடும். வேலையைச் செய்யாமலே இவருடைய அனுதாபம் கிட்டவும் கூடும். இரக்கம் தோய்ந்த வாயுடைய புலியோ அவர்?

அவனுடைய உணர்ச்சிச் சரடு சிக்கல் பட்டது. அவனுக்கு முதலும் முடிவும் புரியவில்லை. 'ஷா'வின் எதிரில் அவனுடைய வெற்றி யுக்திகளெல்லாம் புத்தகப் படிப்பாய் மட்டுமே நிற்கின் றன. இந்தப் பெயர் போன பிரசித்த கம்பெனியைப் புகழ்கிறவர் களின் பேச்சை அவன் கேட்டதுண்டு. அவர்கள் மிஸ்டர் 'ஷா'வின் வேலைத் திறமையை ஆகாயத்துக்குத் தூக்கிப் பேசுவார்கள். எந்த நிலைமையையும் சமாளித்து விதம் விதமான உருவங்க ளுடன், விதம் விதமான அபிநயங்களுடன் கம்பெனியின் நலத்திற்காக வேலை செய்பவர் என்ற நற்பெயர் கிட்டியிருந்தது அவருக்கு.

அவர்கள் அவருடைய தன்னம்பிக்கையைப் புகழ்வதில்லை, நியாயம் விதி இவைகளையும் புகழ்வதில்லை. அவனும் செய்வ தில்லை. ஆனாலும் அவனால் மிஸ்டர் 'ஷா'வின் உவப்பைப் பெற முடியவில்லை.

ஆனாலும், அந்த நிலைமையிலும் அவன் திட்டம் இடுவதை விடவில்லை. ஒரு திட்டம் மடிந்தால் இன்னொன்று. தள்ளிக் கொண்டே முன்னேறி விட்டான் பலிதத். மண்புழு மண்ணினடியில் தரையை வெட்டிவிடுவது போல், அவனும் இங்கும் அங்குமாய் அலைந்து அதே வேலையைச் செய்தான். அதுதான் அவனுடைய வாழ்க்கைக் கிரமம்.

★ ★ ★

திடீரென்று ஒரு நாள் மிஸ்டர் 'ஷா'விற்கு மாற்றலாகி விட்டது. வெளி மனிதர்களுக்குப் புரியாத ஒரு முக்கியமான சரித்திர நிகழ்ச்சி அது. கம்பெனி ஊழியர்கள் அதன் மகத்துவத்தைப் புரிந்து கொண்டனர். நகரிலிருப்பவர்களும், கிராமத்திலிருப்பவர்களும் அதைப்பற்றி அறியார்கள். வெளி உலகத்தார் மெஷின் ஓடுவதை மட்டுமே கவனிப்பார்கள். எங்கிருந்தும் இது புலப்படும். சிம்னியில் புகை வந்து கொண்டிருக்கும் வரையிலும், மெஷினில் ஒலி கேட்டுக் கொண்டிருக்கும் வரையிலும், கைகளும் வேலையற்று இருக்க முடியாது. இது தான் வழக்கம். ஒருவன் வருவான். ஒருவன் போவான். அதனால் வேலையில் எவ்வித மாறுதலும் நிகழாது.

மக்கள் பிறக்கும் பொழுதே சரித்திரத்தில் பங்குள்ளவர்களாகி விடுகிறார்கள். அதன் கிரமமான தாரையில் அவர்களுடைய பெருமை கலந்து போய் விடுகிறது. அப்படிப் போகாமல் அடித்து வைத்தது போல் உட்கார்ந்திருப்பவர்களும் இன்றியமையாதவர்கள் அல்ல. அவர்கள் பிறந்திராவிட்டாலும் ஒன்றும் குடி முழுகிப் போயிருக்காது. சூரியன் உதித்துக் கொண்டுதானிருப்பான். பூமி எப்போதும் போல் செழிப்பாகவும், விசித்திரமாகவும் இருந்து கொண்டுதானிருக்கும். இதுதான் உலக நியதி - சுகமும் துக்கமும் மாறி மாறி வரும் மனித வாழ்வு.

பலிதத், மனதில் பனுவின் வீட்டைக் கற்பனை செய்து கொண்டான். ஈஸிசேரில் காலைப் பரப்பி உட்கார்ந்து கொண்டு பாதி கண் மூடியபடி, ஸண்டுதாவை நோக்கிச் சுருக்கமாய், "மாற்றலுமாச்சு மண்ணுமாச்சு. நத்திங் மாட்டர்ஸ். கர்ணன் மடிந்தால் ஐந்து பேர். அர்ஜுனன் மடிந்தாலும், அதே ஐந்து. அதனால் நமக்கென்ன? லாபமோ நஷ்டமோ இல்லையே" என்று சொல்லுவானாயிருக்கும்-

ஆனால் பனுவின் பாவனை சாதாரண மனிதனுடையதைப் போன்றதே. அவன் தினம் ஒவர் கோலாவது அடிப்பான் அல்லது கார்னர். அதனால் அவன் விசித்திரமானவன்.

பயங்கரமான வெற்றிப் போரிலும், போட்டியிலும் பலிதத்தால் பனுவை மறக்க முடியவில்லை. அவனைத் தன் சீடனாக்கிக் கொள்ள முடியும் என்று நம்பினான். அந்த நாளும் நெருங்கிக் கொண்டுதானிருந்தது. பெரிய துரையின் மாற்றலால் ஏற்பட்ட மின்னல் அதிர்ச்சி சூழ்நிலையில், அதில் நீந்திக் கொண்டே பனுவை நினைத்துக் கொண்டான் பலிதத். அவனிடம் அனுதாபம் காண்பிக்க விரும்பினான், அல்லது பனுவின் கொள்கைகளின் தவறுகளை எடுத்துக் காட்டி தன் கொள்கை யின் பெருமையை நிரூபிக்க விரும்பினான்.

பெரிய துரையின் மாற்றல் விஷயம் நாலா பக்கமும் பரவி விட்டது. முக்கியமான சமாசாரம் அல்லவா? கம்பெனி ஊழியர் கள் கூடிக்கூடி அதைப்பற்றியே பேசினார்கள். அவர் போகும் முன் யாரைப் பற்றியாவது இரண்டு பக்கம் புகழ்ச்சி எழுதலாம், அல்லது இரண்டு பக்கம் நிந்தை. யார் தலையெழுத்து எப்படியோ, யார் இலையில் என்ன விழுமோ? அவர் போனால் யாருடையவாவது திறமை கூடலாம். யாருடையவாவது திறமை குறையலாம். வயிற்றுப்பாட்டைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்த திட்டக் குழுக்களில் ஒருவித உதறல் எடுத்தது. தேனீக் கூட்டில் கல் எறிந்தால் எழும் கலவரத்தைப் போல்.

ஆனால் இதெல்லாம் அவர் போகிறாரே என்பதற்காக மட்டு மல்ல - இன்னொருவர் வருகிறாரே என்பதற்காகவும் கூடத்தான். வரப் போகிறவர் எப்படி இருப்பார் என்பதைப் பற்றி நிறைய ஊகங்களும் எதிர் பார்ப்புகளும் இருக்கும். பழையவர் போய் புதியவர் வருகிறார். அந்த நினைவே ஆனந்தமாயிருந்தது - ஏன், எப்படி என்று சொல்ல முடியாது.

அடிமை வாழ்க்கையிலேயே தங்கள் நாட்களை எல்லாம் கடத்த விதிக்கப்பட்டவர்கள் பிறரின் அதிகாரம், நியமம், பிடிவாதம் இவைகளின் முன் தலை குனிந்து, அந்தக் கொடுங் கோல் ஆட்சியின் ஊடே சுதந்திரமாய் சிரிக்க முயற்சிக்கும் பொழுது, யாராவது தங்களைக் கவனிக்கிறார்களா என்று அறிய இங்கும் அங்கும் பார்ப்பார்கள். சுதந்திரமாய் மனதுள் யோசிக்கும் பொழுது கூட அவர்கள் உள்ளம் வெட வெட என்று நடுங்கும், ஏதோ பெருத்த தவறு செய்வதுபோல். கல்லுக்கு அடியில் நசுங்கிக் கிடக்கும் வெளிறிய புல், பழைய கல் நல்லதா அல்லது புதுக்கல் நல்லதா என்பதைப் பற்றி நினைப்பதே கிடையாது. அதே போல் அவர்கள் மனதுள் கைதியாய்க்

கிடக்கும் எதிர்ப்பு அடங்கியே கிடக்கும். இது சூழ்நிலையில் மாறுதல் மட்டுமே.

அதனால் புது சாஹப் வரும் முன்பே அவரைப் பற்றி ஒரு நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் எல்லோரையும் அலைக்கழித்தது.

பழையவரிடம் மரியாதை முன்னைவிட அதிகரித்தது, பயத்தினால். அவர் கை இன்னமும் பேனாவைப் பிடித்தபடி இருந்ததே. அதனால் எப்பொழுது என்ன நடக்குமோ, கடைசி வரை அவரிடம் அதிகாரம் இருந்தது. போய்க் கொண்டே பேப்பர் மேல் இரண்டு வரி எழுதி, ஒரு வாழ்க்கையை முடித்து விட முடியும் அவரால்.

வேலை செய்து கொண்டே இருந்தார் மிஸ்டர் 'ஷா', இரட்டிப்பு ஊக்கத்துடன். தூரத்திலிருந்து பார்த்தால் மரியாதை தோன்றியது. மேலதிகாரிகள்தாம் எவ்வளவு உணர்ச்சி அற்றவர்கள்! கையெழுத்து இட்டு சார்ஜைக் கொடுத்து விட்டு புறப்பட்டு விடுகிறார்கள். இரும்பு மனிதன் தான் மிஸ்டர் 'ஷா'. பலிதத் தன் அபிப்பிராயத்தைப் பிறர் அபிப்பிராயத்துடன் ஒப்பிட்டுப் பார்த்து இரு சாராரும் பரஸ்பரம் மெச்சிக் கொண்டனர். இதனால்தான் கம்பெனியின் வேலை தலைமுறை தலைமுறையாக நடந்து வந்திருக்கிறது, வளர்ச்சி அடைந்திருக்கிறது. ஏனென்றால் வேலை நிற்பதேயில்லை, என்றனர் அவர்கள். மனிதன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும். இங்கே ஆனால் என்ன, அங்கே ஆனால் என்ன? எங்கும் பொறுப்பு அவருடையது தான்.

வேலை செய்கிறவனுக்கும், வேலை வாங்குகிறவனுக்கும் வித்தியாசம் இந்தப் பொறுப்பில்தான் இருக்கிறது, அதிகம் வேலை செய்வதில் இல்லை.

மிஸ்டர் 'ஷா'வின் சௌகரிய அசௌகரியங்களையும் பற்றிக் கவனிப்பதில் எல்லோரும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். பிரயாணம் ரொம்ப நீண்டது; அதனால் கட்டில், அலமாரி, முதலிய சாமான்கள் ஏலம் விடப்படும். கூடப் போகும் சாமான்களின் பாக்கிங், வண்டி ஏற்பாடு, ஆட்கள் ஏற்பாடு என்று பலவித வேலைகள் மிஞ்சின. இதைத் தவிர சமயம் கிட்டும் பொழுதெல்லாம் அவருடைய சமீபத்தில் எங்கேயாவது இருப்பது, அவருடைய கண்களில் தென்பட்டுக் கொண்டிருப்பது, இதெல்லாமும் வெகு அவசியம். கடைசியில் அவர் எழுதும் பொழுது நினைவு வரலாமல்லவா!

இந்த முயற்சி எல்லாம் வெளியில் தென்படாமல் உள்ளுக்குள்ளேயே நடந்தது. வேலை தினம் போல நடந்து கொண்டிருந்தது.

புதிய சாஹபும் கடைசியில் வந்து விட்டார். சிவந்த மேனி, நல்ல உயரம், கபடமற்ற தோற்றம், சிரித்த முகம், இது தான் மிஸ்டர் சர்மா. பேச்சிலும், நடத்தையிலும், விதேசி நயம். பெரிய மோட்டார் கார் அவரிடம் இருந்தது. பழையவரை வழி அனுப்பவும், புதியவரை வரவேற்கவும் ஒரு சிறிய சபை அன்று முற்பகலில் ஏற்படலாயிற்று. ஒரு க்ரூப் ஃபோட்டோவும் பிடிக்கப் பட்டது. இரு அதிகாரிகளின் கழுத்திலும் பெரிய பூ மாலைகள். நினைவு பசுமையாயிருக்கும் இந்த ஃபோட்டோ மூலம். பிறகு அதன் பிரதிகளை வாங்கி எல்லோரும் சட்டமிட்டு, சுவரில் தொங்க விடுவார்கள். நாளாக ஆக அதன் மேல் தூசி படிந்து மங்கலாய்த் தெரியும். கறையான் ஏறும். பூச்சிகள் குடி புகும். எதிர்காலத்தில் எப்பொழுதாவது அந்த போட்டோ கடந்த காலத்தை நினைவூட்ட உபயோகப்படலாம். அவ்வளவுதான்.

ஃபோட்டோவுக்குப் பிறகு இரு துரைகளுடன் கூட அமர்ந்து சிற்றுண்டி. அங்கும் அவரவர்கள் மதிப்பிற்கேற்றபடி பக்கத் திலோ தூரத்திலோ ஏற்பாடு. பிறகு ஒன்றிரண்டு சிறிய சொற் பொழிவுகள் அடிமைத்தனத்தைப் பிரதிபலிக்கும் சொற்கள். தொண்டை அடைத்த பேச்சு.

ஒரு அத்தியாயம் முடிவடைந்தது. இன்னொன்று தொடர்ந்தது. கால் கட்டு அதுவேதான், கடுமையானது, குளிர்ச்சியானது. 'ஷா' போனார். 'சர்மா' வந்தார்.

முதலில் சில நாள் பழைய யுகத்தின் கட்டுப்பாடே நடந்தது. எதிர்பார்ப்புடன் வாழ்வது மனித இயற்கை - சந்தேகப்பட்டுக் கொண்டல்ல.

முதலில் தலைமை குமாஸ்தா வஸந்த் பாபு ஆரம்பித்தார். அவருடைய மேஜை மேல்தான் பொது அபிப்பிராயம் உருவாகும். அப்புறம் மெள்ள மெள்ள ஆபீஸ் முழுதும் பரவும்.

"இதோ பார்" தலைமை குமாஸ்தா நுரு பாபுவிடம் குசுகுசுத் தார். "இருளைத் தொடர்ந்து வெளிச்சம் வருவது இயற்கையின் நியமம். கம்ஸன் போனான். பூமியின் பாரம் குறைந்தது. என்ன?"

"ஓ என்ன மனுஷன் அவன். மனிதனல்ல அரக்கன், சாட்சாத் அரக்கன். எப்பொழுதாவது என்னைக் கூப்பிட்டால் நான் அப்படியே பயத்தில் உருகிப் போய்விடுவேண். கன்னத்தி லடிப்பதைப் போன்ற பேச்சு. பேச்சு பேச்சாகவா இருந்தது. ஏதோ இடி விழுவது போலல்லவோ ஒலித்தது! யார் மேல் எப்பொழுது குதிப்பானோ என்ற நடுக்கம்."

"அவமானம் கொஞ்சமா?" வஸந்த் பாபு சொன்னார். "சேவகம் என்ற ஒரே காரணத்திற்காக தலையைக் குனிந்து

கொண்டு எல்லாவற்றையும் சகித்துப் போக வேண்டி வந்தது. ஆனால் கடவுள் பெரியவர். ஒரே மாதிரியாய் நிலை இருப்ப தில்லை. அவன் இருந்தவரை இருந்தான், இப்பொழுது இல்லையே. இப்பொழுது வந்திருக்கும் சாஹப் தன் கண்ணிய நடத்தையால் எல்லோரையும் அடிமை கொள்ளுகிறார். அவமரியாதையும், வசவும் இனிமேல் கிடையாது. இனிமேல் நிம்மதியுடன் மூச்சு விடலாம்."

"அந்த ஆள் ரொம்பக் கெட்டவன் - மிருகம். இவர் எவ்வளவு நல்லவர்."

"இவர் எங்கே, அவர் எங்கே!" வஸந்த் பாபு வியந்தார். "மனிதனின் வேர்களைப் பொறுத்திருக்கிறது அவனது குணம். இவர் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருடைய பழக்க வழக்கங்களைக் கண்டாலே தெரியவில்லையா? வேலை செய்வது பொழுது போக்கிற்காக, ரொம்ப பெரிய மனிதர். நெய்யும் பாலும் அவரை வளர்த்து விட்டிருக்கின்றன."

"அது முகத்திலிருந்தே தெரிகிறதே. என்ன தேஜஸ், என்ன பேச்சு. ஒரு முறை அவரைக் கண்டாலே போதும். மனிதன் வசியப்பட்டுப் போவான். படிப்பும் அதிகம் இவருக்கு. அதனால் தான் இந்த இளம் வயதிலேயே இவ்வளவு பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்."

இந்த சமூகத்தில் 'ஷா' விற்கு இடமில்லை. அழுகின பொருளை நீக்கின பிறகும் அதன் நாற்றம் பின் தங்குவதைப் போல் பேச்சு நடந்தது மிஸ்டர் 'ஷா' வைப் பற்றி. சில நாட்களுக் குப் பிறகு அந்தப் பேச்சும் இருக்காது. அவர் பெயரைக் கூட யாரும் சொல்ல மாட்டார்கள்.

இப்பொழுது சர்மா தான் எல்லாம்.

ஹரிபாபு சியாம்பாபுவிடம் சொல்லிக் கொண்டிருந்தார். "புதியவர் எவ்வளவு புத்திசாலி தெரியுமா? பழையவர் கழுதை மாதிரி இரவு பகலாக வேலை செய்தும் கூட ஃபைல்களுக்கு முடிவேயில்லை. இவர் தொட வேண்டியதுதான் – வேலை உடனே ஆகிவிடுகிறது. ஆபீஸில் எங்கும் இதே பேச்சுத்தான். ஃபைலை அனுப்ப வேண்டியது தான் தாமதம், உடனே திரும்பி விடும், மின்னலைப்போல். சிலருக்கு எவ்வளவுதான் புரிய வைத் தாலும் புரிந்து கொள்ளத்திறனில்லை. வேறுசிலர், பேசி முடிப் பதற்குள்ளேயே உன் பேச்சைப் புரிந்து கொண்டு விடுவார்கள்.

"அப்படித்தான் தோன்றுகிறது" சியாம் பாபு ஆமோதித்தார். "நேற்று இவருடைய டென்னிஸ் ஆட்டத்தைக் கவனித்துக் கொண்டிருந்தேன். என்ன மாஸ்டர்லி ஸ்ட்ரோக்ஸ்!"

பலிதத்தும் சரோஜினியிடம் சொன்னான்—"தெரியுமா சரோஜ்! எங்கள் புதிய சாஹப் வந்திருக்கிறாரே—பார்க்க வேண்டும் நீ அவரை. இவ்வளவு இளம் வயதிலேயே எவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறார், வேலையைப் பற்றி! ரொம்ப நல்ல, பண்புள்ள மனிதர். வேலையிலும் கெட்டிக்காரர். பிறர் உள்ளத்தையும் அறிந்து நடப்பவர். இப்படிப்பட்டவர்களைக் காண்பது அரிது!

"நிஜமாகவா? ஒரு முறை இங்கு அழைத்து வாருங்களேன். அதில் என்ன தவறு?" என்றாள் சரோஜினி.

"கூப்பிட்டால் கட்டாயம் வருவார். ரொம்ப சரளமானவர். நான் பொய் சொல்லுகிறேன் என்றா நினைக்கிறாய்? வழியில் கண்டால் நிறுத்தி குசலப் பிரசனம் செய்வார். இதற்குள்ளேயே எல்லோரும் அவரை விரும்ப ஆரம்பித்து விட்டார்கள். உண்மையாக இவ்வித உத்தியோகத்தில்தான் சந்தோஷம்".

"ரொம்ப சரி. வேண்டியது அவதிப்பட்டாயிற்று —இனிமேல் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். அரே ஹர்ஷ், கொஞ்சம் இவருடைய காலைப்பிடித்துவிடு பார்க்கலாம்".

படுக்கையில் படுத்தவாறு பலிதத் வரப்போகும் சுகத்தைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருந்தான். அவனுக்கு சுகமாயிருந்தது. எதிர்காலம் ஒளி மிக்கதாயிருக்கும். நேற்று நடந்தது போலிருந்தது. ஆனால் எவ்வளவோ முன்னேறி விட்டான். புதிய சாஹபும் அவருடைய இனிய பண்பும் நம்பிக்கையை அளித்தன.

யோசித்துக் கொண்டே அவன் உணர்ச்சி வசப்பட்டு விட்டான். வேலை செய்பவன் எதை விரும்புகிறான்? வெறும் செல்வச் செழிப்பையா? அது முக்கியம்தான். இல்லாவிடில் அவன் வேலைக்கு வருவானேன்? கடமையைத் தீவிரமாகச் செய்து கொண்டு நேர்மையின் கொடியை பறக்க விட அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை. அதற்காக வாழ்க்கையை வீணடிக்க அவன் தயாராயில்லை. இந்த மனிதப் பிறவி அரிதானது. அவன் முட்டாளுமல்ல, வழிதவறுபவனுமல்ல.

செல்வப் பெருக்குடன் கூடவே அவனுடைய திறமையும் மெருகு பெற்றுக்கொண்டே, எல்லோர் கண்ணெதிரிலும் அவன் மேலும் மேலும் உயருவான். பிறர் வியப்புடன் அவனையே பார்த்துக் கொண்டிருக்க அவன் திரும்பத்திரும்ப வேலையில் உயர்வு பெற்று தன் திறமையையும் கெட்டிக்காரத்தனத்தையும் பிரமாணம் செய்தவாறு இருப்பான்.

இதைத் தவிர மேலதிகாரிகளின் இனிய நடவடிக்கையும் விசுவாசமும், கௌரவமும் சேர்ந்து கவலையற்ற ஒரு தளர்ந்த நிலை வந்து விடுகிறது.

பலிதத் படுத்துக் கொண்டிருந்தான். ஹார்ஷ் காலைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தான். இதுதான் அவனுக்கு மாலை நேரப் பொழுது போக்கு.

பலிதத்தின் மனதில் அனுபவங்களின் துண்டுகள் கலந்து போய்க் கொண்டிருந்தன. தன் சுகத்தை எடை போடும் பணியில் அவனுக்கு பிறர் துக்கங்களும் தென்படுகின்றன. எவ்வளவோ துக்கம் பார்த்தாயிற்று அவன். அவனுடைய கடந்த கால வாழ்க்கைக்கும் நிகழ் காலத்திற்கும் இடையில் நிராசை, துக்கம், ஏமாற்றம் இவை எல்லா நிலையிலும் பரவிக் கிடந்தன. கண்ணை மூடிக் கொண்டால் அவைகளின் ஒலி கேட்பது போலத் தோன்றியது. பலர் தங்களையே வருத்திக்கொண்டு வேலை செய்தார்கள். ஆனால் அவர்களுக்கு ஒன்றும் கிட்டவில்லை. இடுப்பை ஒடித்துக் கொண்டே வேலையைத் தொடர்ச்சியாய்ச் செய்தனர் பலர். அதில் தான் தங்கள் எதிர்கால சுகம் என்ற உயிரற்ற ஆசையுடன். அதற்காக யுக்திகளையும் திட்டங்களையும் கணிக்க அவர்களிடம் சமயமில்லை. வீட்டில் அதே மூங்கில் கொடி, மனை, பாய், உண்ண தடிமனான அரிசி, அதே வறுமை, ஐந்து நாட்கள் கூடத் தள்ளமுடியாத சம்பளம், பிறகு கடன், பரட்டையான உலர்ந்த தலைமயிர், உடுப்பதற்கு கிழிசலும் பழையதும், கண்ணை மூடிவிட்டால் நாளைக்கு ஒன்றும் கிடையாது. வேலை பனையின் நிழலைப் போன்றது. எவ்வளவோ யுக்தி செய்தும் கூட ஒன்றும் கிட்டாதவர்களும் இருந்தனர். எத்தனையோ பேர் அப்படிப்பட்டவர்கள். பேதி கண்டு சோமய்யா பட்நாயக் இறந்து போனான். வீட்டை கிளப் போல அலங்கரித்திருந்தான். வீட்டில் எப்பொழுதும் கூட்டம். எல்லோருக்கும் சிற்றுண்டி மரியாதைகள் நடத்துவான். கம்பெனியின் முக்கிய ஆபீஸிலிருந்து யார் வந்தாலும் அட்டையைப் போல் அவனுடன் ஒட்டிக் கொள்ளுவார்கள். வெற்றிலை பாக்கு, டீ, நாஸ்தா எல்லாம் செய்து வைப்பான். தனியாகக் காணும் பொழுது "என் பேச்சு எடுபட்டதா? என்னமாவது கேட்டாரா? என் ப்ரமோஷன் எப்பொழுது நடக்கும்? என்னமாவது தெரியுமா? என் பெயர் போயிருக்கா?" இத்தியாதி. கண் முன் முதிய சோமய்யாவின் உருவம் மிதந்தது. மெல்லிய சிறிய காலும் கையும், பலகீனமான முகம், வாலிப காலத்து உடை அவன் மேல் ஒட்டாமல் தொங்கியது. வீட்டில் இரண்டாம் கலியாணத்து மனைவி. அவனுடைய நம்பிக்கைகளுக்கு உரம் இட்டவாறு அவளைச் சூழ்ந்து கொண்டனர் பலர். அந்த உறவு அவர்களுக்கு லாபகரமாயிருந்தது. விசேஷ நாட்களில் பெரிய துரைகளின்

வீடுகளுக்குக் கூடை நிறைய பழங்களும் தின்பண்டங்களும் அனுப்புவான். அவனுடைய பலவீனமான சரீரத்தை காலரா முடித்துவிட்டது. நம்பிக்கையுடன் ஊசலாடிக் கொண்டிருந்த அவனுக்கு ஒரு வேளை மரணத்தின் நிம்மதி கிட்டியிருக்கலாம். அதுதான் அவனுடைய கேஸின் டிஸ்போஸல். கற்பனை பயத்தில் நடுங்கினான், பலிதத்.

சோமய்யா பட்நாயக் போய்விட்டான். அவன் மனைவி – அவளும் அவனுடைய வெற்றிக்காக உபயோகப் படுத்தப்பட்ட ஆயுதங்களில் ஒன்று. எப்படி ஆகிவிட்டது அவளுடைய நிலைமை. எங்கே இருக்கிறாளோ அவள். அவளுடைய கை உணவை உண்டவர்கள் எத்தனை நாள் வரை அவளைப்பற்றி நினைவு வைத்துக் கொள்ளுவார்கள்?

"சரோஜ், சரோஜ்" என்று கூப்பிட்டான்.

"என்ன விசேஷம்"?

"இல்லை, ஒன்றுமில்லை."

ஏங்கட் ராவ், பனு எல்லோரும் என்ன செய்து கொண்டிருப்பார்களோ? ரூபாய்க்கு ஒன்றரைச் சேர் அரிசி வாங்குவார்களோ? வெற்றி எவ்வளவு தூரத்தில் இருந்ததோ அவர்களுக்கு!

மாலை நேரம். பனு பீடி புகைத்துக் கொண்டிருப்பான். பாவம் நிலைமையை சமாளிக்கத் திறமற்ற பனு! ஏதாவது படித்துக் கொண்டிருப்பான். அவன் அறையில் விளக்கெரிந்து கொண்டிருக்கும்.

அவனிடம் ஒன்றுமில்லை. ஆனாலும் அவன் சந்தோஷத்தைப் பற்றிய தவறான அபிப்பிராயத்தை தன்னுள் வளர்த்தான். வயிற்றினடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டு, உடலெல்லாம் சாம்பல் பூசின சந்நியாசியும் சுகம் என்ன என்று தவறாக எண்ணுகிறான். பிச்சைக் காரனும் முட்டாளும் அப்படியே நினைக்கின்றனர். "அடே ஹர்ஷ். இன்னும் கொஞ்சம் பலம் போட்டுபிடி."

வறுமையில் சுகம் கிட்ட முடியுமா என்ன? திரும்பத் திரும்ப பாத்திரத்தில் ஈயம் பூசி, துணியில் ஒட்டுப் போட்டு வாழும் வாழ்வும் ஒரு வாழ்வா?

மழையைப் போல் பலிதத்தின் மூளையில் வாழ்க்கையின் கதைகள் பொழிந்தன. எவ்விதமான அலங்காரமும் இன்றிப் பொழிந்தன. தன் அனுபவங்களால் சோதித்து அவைகளை அளவிட தயாராயிருந்தான். முட்டாள் பனு, வெறும் வயிற்றில் சிரித்துக் கொண்டிருந்தான்! ஆனால் எல்லாம் இருப்பவர்களுக்குள்ளும் சிலர் தங்களிடம் குறைவிருப்பதாக நினைத்துக்

கொள்ளுவார்கள். ராவ் சாஹப், நடு துரை, அவருக்கு இன்ஸோம்னியா. இரவு முழுவதும் வராந்தாவில் ஈஸிசேரில் அமர்ந்து தூக்கமின்றித் தவித்துப் போகிறார். செழிப்பான முகம் வாடிப்போகிறது. அன்று பலிதத்தின் கையைப் பிடித்துக் கொண்டு தன் துக்கத்தைச் சொல்லி அழுதார். அவர் துக்கம் லேசானதா? ஆயிரத்தி முன்னூறு ரூபாய் மாதச் சம்பளம் அவருக்கு. வருமானவரி போகிறது. இன்ஷூரன்சுக்காக நிறையக் கட்ட வேண்டியிருக்கிறது. பெரிய கார் அதன் செலவு சுமார் இருநூறு ரூபாய், மாதத்திற்கு. ஒரு வீடு கட்டிக் கொண்டிருந்தார். அதற்காகக் கடன் வேறே. வீட்டுச் செலவிற்கு எங்கிருந்து பணம் வரமுடியும்? தீர்க்கமான மூச்சுடன் "எங்கும் திறந்து கிடக்கிறது வழி. தரித்திரம் என்னைப் பீடிப்பானேன்?" என்றார். அதற்கு மேல் வேலையிலும் அவமானம். அவருடனேயே வேலையில் புகுந்த மீர் மதன் கான், பஹதூர் ஆகி விட்டான். ஆனால் அவர் இன்னும் பஹதூர் கூட ஆகவில்லை. மீர் மதன் கான் பெரிய துரையின் ஆபிஸில் ஆஃபிஷியேட் செய்யவும் ஆரம்பித்துவிட்டான். ஆனால் அவர் இருந்த இடத்திலேயே இருந்து விட்டார். இவ்வளவு கவலைகளின் நடுவில் தூக்கம் எப்படி வரமுடியும். மிருகமானால்தான் குறட்டை விட்டுக் கொண்டு தூங்க முடியும். மனிதனால் எப்படி மறக்க முடியும்?

நடு துரை தன்னை ரொம்ப துக்கப் பட்டவன் என்று நினைத்துக் கொண்டார். அவர் மூலமே அவருடைய துக்கத்தைப் பற்றிக் கேட்ட பலிதத்திற்கு அழ வேண்டும் போலிருந்தது. தானும் துக்கப்பட்டவன் என்று தோன்றிற்று. ஆனாலும் அவனால் சிரிக்கமுடியும். சிரிப்பது முட்டாள்தனமல்லவா?

அவனுக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. இப்பொழுது கிட்டும். உயர்வு கிட்டும், அதிருஷ்டம் இருந்தால், புதிய சாஹபின் அன்பைப் பெற முடிந்தால்.

மெல்ல மெல்ல ஹர்ஷ் எழுந்து போய் விட்டான். பாபு தூங்கி விட்டார். "சாப்பாடு கொண்டு வரவா?" என்று கேட்க வந்தாள். சரோஜினி. பலிதத் தூங்கிக் கொண்டிருந்தான். ஒரே நிதானமாய் நெஞ்சம் எழும்பி இறங்கிக் கொண்டிருந்தது. குறட்டை பலமாய் இருந்தது.

கையைப் பிடித்து உலுக்கி அவனை எழுப்பியவாறு, 'சாப்பிட வேண்டாமா? எழுந்திருங்கள்' என்றாள்.

★ ★ ★

வாலிப மிஸ்டர் சர்மா மரியாதைக்கு உரியவர்தாம். ஏனென்றால் அவர் ஒரு மனிதன், அதுவும் வாலிபன்.

மனதிலும் உடலிலும் வாலிபத்தைக் காப்பாற்றிக் கொள்பவனுக்கு வாழ்க்கை விலை மதிப்பற்றதாய் அமைகிறது. கண்களை மறைக்க எந்தத் திரையுமில்லை, மனதையும் எந்த உறையும் மூடி வைக்கவில்லை. காயத்தின் வடு இல்லை. இந்திரியங்கள் கூர்மையாயிருந்தன – கொடுப்பதற்கும் வாங்கிக் கொள்ளுவதற்கும். அவன் கற்குவியலில் முளை விட்ட பசுமையான மரம். அதுதான் அவனுடைய கர்வமும், கௌரவமும்.

முதலிலிருந்தே அவருக்குத் தன்னைப்பற்றி இந்த அபிப்பிராயம்தான் இருந்தது. அவருடைய விருப்பமின்றி, முயற்சி இன்றி, சிரமமின்றி எல்லாம் நடந்துவிட்டது. அவர் ஒரு பெரிய வீட்டு அருமைப் புதல்வனாய்ப் பிறந்தார். ஒரு துரும்பை எப்படி இரண்டு துண்டாக்குவது என்று அவர் அறியார். அறிய அவசியமுமில்லை. அவராகவே ஏதாவது செய்வது என்பது நடக்காத விஷயம். பிறகு, வாழ்க்கையில் படிப்படியாய் ஏறிக் கொண்டே போனார். அதற்காக அவர் முயற்சியும் செய்யவில்லை, இச்சைப் படவுமில்லை. பிறந்ததிலிருந்தே அவர் சாஹேப் ஆகவே இருக்க வேண்டியிருந்தது. அவர் பிறந்த வீட்டில் தகப்பனை டாடி என்றும் தாயை மம்மி என்று அழைத்தனர். அந்த வீட்டில் எல்லாப் பழக்க வழக்கங்களும் அலாதிதான். அந்தப் பண்பை அவரும் ஏற்றுக் கொண்டார். வீட்டிலோ, ஆங்கிலப் பள்ளியிலோ அதை ஆட்சேபிக்க யாருமில்லை. அதனால் கல்வியின் முதற் படி கண் மூடி, காதடைத்து குடும்பப் பண்புடன் ஒத்துப் போவது. இதை டிஸிப்ளின் என்பார்கள். அப்புறம் என்ன வேண்டுமென்றாலும் செய்து கொள்ளலாம். நடத்தையில் டிஸிப்ளின், நடை தன்னிஷ்டப்படி -இதன் பெயர் தான் 'சுயேச்சத்தன்மை'. டிஸிப்ளின் பெயரில் தன்னிஷ்டப்படி நடப்பது 'தான்' என்னும் தன்மையின் வளர்ச்சி.

இவை இரண்டும் அவருக்குத்தானே வந்து சேர்ந்தன. பண முடை அவரை எப்போதும் பாதித்ததில்லை. அதனால் அவராகவே உயர்வு அடையும் பாதையில் முன்னேறினார். உயர்ந்த கல்வி, அதுவும் அனாயாசமாகக் கிட்டியது. பண்புடன் ஒத்த படிப்பு. அதில் அறிவுத்தாகம் இருந்ததா இல்லையா என்பதைப் பற்றி யோசிக்க அவர் தொந்திரவு எடுத்துக் கொள்ளவில்லை. உயர் கல்வி அவருடைய சமூகத்தில் ஃபாஷன் –அதை அனுசரித்து அவர் நடந்து கொண்டார். அதனால் அந்தப் படிப்பு அர்த்தமற்றதாயிருந்தது. சமூகத்தில் அது அவசியம் என்ற

நிர்ப்பந்தம் இருந்திரா விட்டால் அவர் ஒரு வேளை படித்தே இருக்க மாட்டார். அந்த உயர் கல்வி தாய் தந்தையாரும், சமூகமும் விரும்பியதைப் போலவே இருந்தது.

வேலையும் சுலபமாய்க் கிடைத்தது. அதைப் பற்றி நினைக்கும் முன்பே கிட்டிவிட்டது. தந்தை விரும்பினார். அவருக்கு கம்பெனியின் மேல் நிலையில் ரொம்ப செல்வாக்கு இருந்தது. வேலை செய் என்று அவர் சொன்னார். சமூகமும் அதை எதிர் பார்த்தது. அதனால் வேலையை ஏற்றுக் கொண்டார்.

கம்பெனியின் நியமத்தைப் பின்பற்றுவதற்காகவும் டிஸிப்ளின் நலத்திற்காகவும், அவர் தயாராய் பேட்டிக்கு வந்தார். அங்கு ஐந்து மேதாவிகள் உட்கார்ந்திருந்தனர். அவரைக் கீழிருந்து மேல் வரை பார்த்தார்கள். சில கேள்விகள் கேட்டனர். பிறகு காகிதத்தில் மார்க் கொடுத்தனர். கேள்விகள் வெகு சுலபமானதாயிருந்திருக்கலாம். முதல் வகுப்பு மாணவன் கூட பதில் சொல்லக் கூடியவை. 'ஆறு பருவங்கள் எவை?" என்பதைப் போல். அல்லது 'பிருதிவிராஜ் ஏன் தோற்றுப் போனார்' என்று. 'மின் விளக்கு எப்படி எரிகிறது?' 'குழாயில் எப்படி தண்ணீர் வருகிறது?' 'ஈயால் எந்தெந்த நோய்கள் புறப்படுகின்றன?' 'இக்பால் எப்படிப்பட்ட கவி?' இப்படிப்பட்ட கேள்விகளுக்கு பதில்கள் சுலபமாயிருந்தன. இதைப்பற்றி அவர் தன் தந்தையை விசாரித்தார். அதற்கு, 'அவர்கள் உன் புத்தியைப் பரீட்சித்தார்கள். ஸைகலாஜிகல் டெஸ்ட். அதை அவ்வளவு சுலபமாய் நினைத்து விடாதே,' என்று பதில் கிடைத்தது. தன்னம்பிக்கை வெகுவாய் மீண்டது. ஆனாலும் மனதுள் சந்தேகம் மறையவில்லை, அது ஒரு ஃபால்ஸ் என்று.

இந்த இண்டர்வியூவிற்குப் பலர் வந்திருந்தனர். சர்வகலாசாலையில் பெருமைமிக்க பண்டிதர்—ஃபர்ஸ்ட் கிளாஸ். ஃபர்ஸ்ட், அடியிலிருந்து கடைசி வரை ஃபர்ஸ்ட் —அவர் தோற்றுப் போனார். அதற்குக் காரணங்கள் கண்டுபிடித்தார் மிஸ்டர் சர்மா—ஸைகாலஜிஸ்ட். புத்தகத்தை உருப்போடுவதால் இங்கே பிரயோசனமில்லை. இன்டர்வியூ போர்ட், கண்களை நோக்கியே பதில்களைப் பிழிந்தெடுத்தது. அதிலிருந்து, பரீட்சிக்கப்படுபவர்களின் உள்ளமும் முழு மனமும் தெளிவாய்த் தெரிந்தது அந்த போர்டுக்கு.

இந்த நம்பிக்கை, பாண்டேயின் தோல்வியால் நழுவிற்று. பாண்டே முதலிலிருந்து கடைசி வரையில் சர்மாவுடன் படித்தவன். படிப்பில் ரொம்ப கெட்டிக்காரன், வாத்தியார்களின் கண்ணின் மணி. பேச்சுத் திறமையும், எழுத்து வன்மையும் இருந்தும்

கூட பாண்டே ஏழை. சூழ்நிலை அவனைப் போர்வீரனாக்கியது. பாண்டே, சர்மாவிற்கு நேர்மாறானவன். அவனுடைய யுக்தியும் வித்தியாசமாயிருந்தது. "போட்டியில் மனிதனுடைய பரீட்சை ஆகிறது. கஷ்டப்படுவதால் புத்தி வருகிறது. சோம்பலால் நாசம் தான் ஆகிறது". என்று சொல்லுவான். அதற்கு சர்மா சிரித்த வாறு, "கால் பூமியில் வளரும் மரம் குறைபாடுகளுடனேயே வாழ்கிறது. அதன் கோணலும் மாணலுமான உருவத்தில் கௌரவமும் கிட்ட வழியில்லை. அங்கு பிடிவாதமாய் வாழ்வ தில் அர்த்தம் இல்லை. இயற்கையின் நீதியின் உதாரணம் இது. இதே நீதியை அனுசரிக்கும் மிருகம் எந்த சூழ்நிலையையும் தன்னுடையதாக்கிக் கொள்ளுகிறது." என்று சொல்லுவான். பதிலுக்கு பாண்டே "வாழ்க்கையை உக்கிர பாவத்துடன் பார்க்க வேண்டும். தீவிரமான உணர்ச்சியுடன் அனுபவிக்க வேண்டும். எல்லாவற்றையும் கடுமையாய் ஆராய வேண்டும்". என்பான். திரும்ப சிரிப்புடன் சர்மா "இது ஆரோக்கியமற்ற மனதின் சின்னம். நோயுற்ற மனம் மனிதனை ஒருபக்ஷவாதியாகவும், பைத்தியமாகவும், சகிப்புத் தன்மை அற்றவனாகவும் ஆக்கி விடுகிறது. நோயற்ற மனிதன் பாலின் மேலாடையை உண்ணவும், ஊற்றின் மேல் நிலையிலேயே நீந்திச்செல்லவும், சகஜமாய் சரள மாய் வாழ்க்கையில் கலந்து கொள்ளவும் செய்வான். எந்த விஷயத்திற்கும் அதிக முக்கியத்துவம் கொடுக்காமலும் இருப் பான்..."

அந்த இன்டர்வியூவில் பாண்டே மண்ணைக் கவ்வினான். 'ஸைகாலாஜிகல் டெஸ்ட்' என்று அதைத் தனக்குத்தானே விளக்கிக் கொண்டார் சர்மா. பாண்டேயிடம் அநேக விதமான காம்ப்ளெக்ஸ்கள் இருந்தன. அவன் போய் அரசியல், புரட்சி, எதிர்ப்பு முதலியவைகளில் ஈடுபட வேண்டும். அவன் கவலை யற்று வாழ்பவனல்ல.

மனத்தின் ஆழத்தில் ஒரு சிறு விஷயம் கரகரத்தது. பாண்டேக்கும் தன் பிதாவைப் போன்ற பிதா இருந்திருந்தால்?

ஆனால் அவனுடைய தன்னம்பிக்கை இதை ஒப்பவில்லை. பிரபுத்துவம் எல்லோருக்கும் கிடையாது என்ற நம்பிக்கை அவனுள் வேரூன்றியிருந்தது. அதற்காக பொறுக்கி எடுக்கப் பட்ட சிலரே உள்ர். சிலரே பல்லக்கில் போக முடியும். பிறர் சுமக்கும் வேலைதான் செய்ய முடியும். அது விதியின் தீர்ப்பு. அதை எதிர்ப்பவன் முட்டாள் மட்டுமல்ல. கட்டுப்பாடற்றவன். எதிர்ப்பாளி சமூகத்திற்கு அவன் ஆபத்தும் கூட.

சர்மாவின் கொள்கைகள் எல்லாம் தெளிவானவை. அதுவும் அவருடைய குணம், விசேஷம், தன் அனுபவங்களிலிருந்து பிறக்கின்றன கொள்கைகள். பிறகு அவை எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றன. அவையே நிலைத்து விடுகின்றன. இவைகளை ஒட்டி வாழ்வது தான் சமூகத்தின் பலமான அடிவாரம், ஆரம்பம் எல்லாமே. இந்தக் கொள்கைகளை மாற்றி அமைக்க முயற்சி நடக்கும் பொழுது அழிவு தான் கிட்டுகிறது.

காலேஜில் சர்மா பாண்டேயிடம், "உனக்கு அதிகச் சுதந்திரம் வேண்டுமா? நம் சமூக அமைப்பில் சுதந்திரம் குறைவாகவே இருக்கிறது? வரம்பு கடந்த தீவிரவாதத்தை விட்டு விட்டு நல்ல புத்தியுடன் கவனித்தாயானால், மக்கள் கைகளில் விலங்கில்லை என்றும், வாயில் பூட்டு இல்லை என்றும் ஆலோசிக்க எவ்வித மறுப்புமில்லை என்றும் நிலைமையைப் புரிந்து கொள்ளும் திறமையை யாரும் இஞ்ஜெக்ஷன் கொடுத்து அடக்கிவைக்க வில்லை என்றும் தெரிந்து கொள்ளுவாய். சுகதுக்கங்களுடன் குடும்பத்துடன் வாழ்ந்து, அனுபவிக்க எல்லோருக்கும் சுதந்திரம் இருக்கிறது. நீ வயிறு நிறைய உண்ணலாம்–யாரும் பிடுங்கிக் கொள்ளமாட்டார்கள்.

நீ இஷ்டம் போல் லவ், ரொமான்ஸ் செய்ய முடியும், யாரும் உன்னைத் தடுக்க மாட்டார்கள். நீ தாராளமாய் சம்பாதித்து, பணம் சேர்த்து அதை எந்தத் தொழிலில் வேண்டும் என்றாலும் முதலீடு செய்யமுடியும்.

சட்டம் விதிகளைத் தட்டாமல் தேசத்தை பலமுற்றதாகவும் சக்திசாலியாகவும் வளர்த்தி விட முடியும். அதைக் கண்டு விரோதிகள் பயப்படுவார்கள். உன் இஷ்டம் போல் நடந்து கொள்ள அதிகாரம் வேண்டுமானால் இடுப்பை வளைத்துக் கடுமையாய் உழை. பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளாமல் தூர இருந்து விட்டு, இலை போடும் பொழுது மட்டும் எனது உனது என்று உரிமை கொண்டாடினால் நடக்காது. நீ காரியத்தில் இறக்கினாயானால், எல்லாம் நாளா வட்டத்தில் சரியாய் விடும் என்று புரிந்து கொள்ளுவாய்.

God is in his heaven, all is right with the world அது இன்று மட்டுமல்ல. All was right with the world. மனிதனின் துக்கத்திற்குக் காரணம் அவனேதான். பூதக் கண்ணாடியால் நீ உடுத்தியிருக்கும் துணியைப் பார்க்க விரும்பினாயானால் அதில் ஓட்டைகளே தெரியும். இதற்கு யார் உத்தரவாதி? பெரிய, சிறிய என்ற வேற்றுமைகள் ஏன் என்று கேட்கிறாய்? இதை உன்னால் எப்படி மாற்ற முடியும்? வாழும் உலகத்திலும் மரம் கொடிகளின்

உலகத்திலும், கல், ஆகாயம் எங்கும் சமமின்மையைக் காண்பாய். நீர் தன் சம மட்டத்தை நாடுகிறது. பூமி கீழும் மேலுமாய் இருப்பதால் அதன் ஓட்டம் தடைப்படாமலிருக்கிறது இல்லையென்றால் ஓட்டம் நின்று விடும். உலகத்தில் ரொம்பத் துன்பம் என்கிறாய். அது உண்மைதான். அதற்குக் காரணம் கடவுளுக்குத்தான் தெரியும். துக்கம் இல்லாவிட்டால் சுகத்தை புரிந்து கொள்ளமுடியாது. அமாவாசை இல்லாவிட்டால் பௌர்ணமியை அனுபவிக்க முடியாது. ஹிந்து தத்துவ சாஸ்திரத்தின் மூலக் கொள்கையே இதுதான். இது யுக யுகமாயுள்ள அனுபவம். இன்றைய பேத்தல் அல்ல" என்றான்.

பாண்டேயும் பதிலுக்கு, "இரு ஊக்கமற்றவர்களால் நிறுவப்பட்ட விதி புத்திஜீவிகளுடையது அல்ல" என்றான். இன்னும் ஏதோ சொன்னான். சர்மாவிற்கு நினைவில்லை. பிடிக்காத விஷயத்தை புத்தி உள்ளவன் நினைவில் வைத்துக் கொள்ளுவதில்லை.

உலகம் சுகத்திற்காகத்தான், வேண்டாத விஷயங்களுக்காக அல்ல. பாண்டே தோற்றுப் போனான். அதில் ஆச்சரியமில்லை. பைத்தியம் தன் கொள்கைகளைப் பரப்பியவாறு எவ்வளவுதான் உற்சாகத்துடனிருந்தாலும், உலகம் "இவன் ஒரு பைத்தியம்", என்று விடாமல் வற்புறுத்திக் கூவும். பாண்டேக்கும் அதுதான் ஆயிற்று. அவன் தன் லட்சியங்களின் கொடியை உயரப் பிடித்து, கோவணம் மட்டும் அணிந்து உண்ணாவிரதம் செய்து தன் உயர் கொள்கைகளைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறான. வழி நடக்கும் பொழுது ஒரு கார் வந்து விட்டால் தெறிக்கும் சேற்றிலிருந்து தப்ப பாதையின் ஓரத்தை நோக்கி அவன் குதிக்கும் பொழுது அவனுடைய உயர் தன்மை சோதிக்கப்படுகிறது. அந்த 'உயர்ஜாதி' யைக் காப்பாற்றிக் கொள்ள எதெல்லாமோ செய்ய வேண்டி வரும். செய்யவும் செய்வான் அவன். நெஞ்சிலும், முதுகிலும் அடிகளை வாங்கிக் கொண்டு தன் வீரத்தை நிரூபிப்பான். நாளாவட்டத்தில் அவனுடைய பலம் முறிந்து போகும். வாலிபத்தின் மிடுக்கு மறையும். மன பலம் கூட இருக்காது. அவன் இந்த நொறுங்கிப் போன எலும்புக் கூட்டிற்குள் வாழ்வான். ஆனால் கொஞ்ச நாட்கள் வரைதான். அவனுக்கு இந்த உலகில் இடமில்லை. அவனுடைய கொள்கைகளுக்கு இந்த சமூகத்தில் இடமில்லை.

தன் கொள்கைகளில் திடமான நம்பிக்கை உள்ளவர் மிஸ்டர் சர்மா, ஊக்கமற்றவர்.

தன்னையே ஆராய்ந்து, தன் மன மந்தத்தை நிலையாய் வைத்துக்கொள்ள இரண்டு அவசியங்களைக் கண்டெடுத்தார். காமன்ஸென்ஸ் அதாவது சூழ்நிலையைப் பற்றி விழிப்புடன் இருந்து வேலை செய்வது, அப்புறம் பிறர் விஷயத்தில் தாராள மனப்பான்மை—அதாவது முடிந்த மட்டும் பிறரிடம் தயையும் அனுதாபமும் காண்பிப்பது.

இந்த குணங்கள் எல்லாம் அவரிடம் இருந்தன. அதனால் அவர் பிச்சைக்காரர்களுக்குப் பிச்சையிட்டார். அவருடைய பொது அறிவுக்கு அப்பாற்படாத நிலைமைகளில் ஏதாவது உதவி செய்யவும் செய்தார். பிறருடைய துக்கங்களுக்கு அனுதாபம் காட்டினார். இதை எல்லாம் செய்துவிட்டுத்தான் தன் கடமையைச் செய்துவிட்ட திருப்தியை அடைந்தார். எப்பொழுதும் சிரித்த முகத்துடனும், கவலையற்றவராயும் தென்பட்டார். கடமை என்பதற்கு விவரணம் என்ன?

வெறும் பேச்சில் அனுதாபத்தைக் காண்பிப்பது கடமை அல்ல என்று பாண்டேயும் அவனைச் சார்ந்தவர்களும் கூறினர். சமூகத்தில் சில அற்பமான குறைபாடுகளை நீக்குவது கடமையல்ல. பிச்சைக்காரனுக்குப் பிச்சையிடுவது, துக்கப் பட்டவர்களை சமாதானப்படுத்துவது.இதெல்லாம் சமூகத்தின் பல காயங்களில் ஏதாவது ஒன்றின் ஓரத்தில் கொஞ்ச மருந்து தடவுவதைப் போலத்தான். இதனால் காயம் குணப்படுவது மில்லை, பரவாமல் இருப்பதுமில்லை. சமூகத்தின் எல்லா வித நோய்களுக்கும் மருந்து அவசியம். மற்றபடி தற்காலிக் கருணை மனிதனின் மனிதத் தன்மையை அவமதிப்பதாகும். இதனால் துக்கம் குறைவதில்லை. தன்னையும் பிறரையும் ஏமாற்றிக் கொள்ள உதவுகிறது. அவ்வளவுதான். இதை எவனாவது சொன்னால் பைத்தியம், தீவிரவாதி, ஒருபட்சவாதி என்று அழைக்கப்படுகிறான்.

சர்மா சிரித்தார். சுகத்தின் மாயையை மறுக்கக் கூடியவர்கள் வெகு சிலரே என்று யோசித்தார்.

மன நிம்மதி, சூடாகத்தேநீர், சிகரெட், அப்புறம் வெளியில் புறப்பட்டால் வழியெல்லாம் சலாம், தன் சொந்தக் கொள்கை களுக்கு இயைந்த வாழ்க்கை, போட்டியற்ற நிலைமை....பெண் சுகம். சர்மா சிரித்துக் கொண்டேயிருந்தார்.

மனிதனின் முயற்சி எல்லாம் சுகத்திற்காகத்தான், இல்லை என்றால் பச்சை மாமிசம் புசித்து, குகைகளில் வசித்தவனுக்கு மெல்ல மெல்லப் பண்படைந்து, அறுபது மாடி வீடுகளைக் கட்டி

வசிக்கத் தோன்றியிருக்குமோ? பாண்டேயும் தன் கொள்கை களைப் பிடிவாதமாய்க் கடைப்பிடிப்பவன் என்றால், அந்த இன்டெர்வ்யூவிற்கு ஏன் வந்தானாம்? சர்மாவிற்கு வேடிக்கை யாயிருந்தது. உண்ணாவிரதம் செய்பவர்கள் ரகசியமாய் ரொட்டி யும் வெண்ணெயும் உண்டார்கள். அதை நம்பத்தான் வேண்டும். ஏனென்றால் சுகத்தை நோக்கிச் செயல்படுவது மனித இயற்கை

அதனால் மக்கள் நலத்தைப் பற்றியும் மோட்சத்தைப் பற்றியும் யோசிப்பதில் என்ன பிரயோசனம்? இதற்காக ராமச்சந்திர பிரபு முதல் புத்தர், காந்தி வரையில் எல்லோரும் முயற்சி செய்தனர். அவர்கள் அசாதாரன மனிதர்கள். எக்ஸெப்ஷன். எக்ஸெப்ஷன் ப்ரூவ்ஸ் தி ரூல்! அவர்களும், அவர்களுடைய சம கால நிலைமையும், மனிதன் சுகத்தைத் தான் நாடுகிறான் என்று நிரூபித்தன. தன் எல்லைக்குள் சந்தோஷமாயிருக்க விரும்பு கிறான் மனிதன். அந்த மகிழ்ச்சியில் திளைத்து அவன் சமூகத்தை நாடுகிறான், ஆட்டு மந்தையை நாடுகிறான். அவனைக் கவனித்துக்கொள்ள ஒருவனையும், டிஸிப்ளினையும் நாடுகிறான். இதற்கு மாறாக நினைக்கும் பாண்டேயும் அவனை ஒத்த பிறரும் மூளை சரியாக இல்லாதவர்கள் என்றே சொல்ல வேண்டும்.

அதனால் கம்பெனியின் உயர்ந்த பதவிகளுக்குச் சர்மா ஏற்ற வர்தான் ஏன், எதனால், என்றெல்லாம் கேட்பவர் அல்ல அவர். அவசியப்பட்டால், அவருடைய கடமை உணர்ச்சி உத்வேகப் பட்டு கொல்லவும், அடிக்கவும் தடியைச் சுழற்றவும் தயங்காது. அந்தக் கொடுரமான கடமை உணர்ச்சி அவரைப் பின் வாங்க விடாது. அவசியப்படாவிட்டால் எல்லாமே மாறிவிடும். தேநீர், சிகரெட், பிறருடன் பேசி மகிழ்வது எல்லாம்தான். இந்த விவகாரத்தின் லேபிள் 'சமூகக் கடமை', 'மனிதன் ஒரு சமூக மிருகம்', என்று புத்தகங்கள் சொல்லுகின்றன. பிறர் ஒருவருக்கு கஷ்டத்தைத் தரும் தவறு ஒன்று நேர்ந்து விட்டது என்றால் அதை வெறும் தர்க்கத்தால் சமாளிக்க முடியாது. மன்னிப்பைக் கோரி உசிதமாய் ஏதாவது சொல்ல வேண்டும். அதற்கும் சாஸ்திரத்தில் சூத்திரம் இருக்கிறது. 'தவறு செய்வது மனித இயற்கை'. மனிதனே, மனிதனின் குற்றங்களுக்காக பச்சாதாப்படுவதில் அர்த்தமில்லை. "கதஸ்யசோச்னா நாஸ்தி" என்று சாஸ்திரமே எடுத்துக் காட்டுகிறது. அப்புறம் கவலையில்லை. பண்டைக் காலத்தில், துறவிகள் தங்கள் தவறுகளுக்காக சவுக்கால் தங்களேயே அடித்துக் கொள்ளுவார்கள், உடலை வருத்திக் கொள்வார்கள். பட்டினி கிடப்பார்கள். இதெல்லாம் முட்டாள்

தனம். அதற்குப் பதில் –"மன்னித்துக் கொள்ளுங்கள்", "ப்ளீஸ் எக்ஸ்யூஸ் மீ" "ஐ அம் ஸாரி", இம்மாதிரி ஏதாவது யதேஷ்டம்.

ஃபார்வர்ட் அவுட் லுக், அத்தியந்த கலாசாரம் கலந்த ருசி, பெரிய மனிதத் தன்மை இதெல்லாம் ஆதியிலிருந்தே இருக்க வேண்டும். பிறவியிலிருந்தே, அவர் பெரிய மனிதர். வேலையிலும் பெரியவர், எண்ணத்திலும் பெரியவர்.

சர்மா பார்க்க நன்றாயிருந்தார். பூரிப்பும், வாலிபமும் ஆரோக்கியமும் உடையவராயிருந்தார். மனமும் நோயற்றிருந்தது. அதனால் கலவரமற்ற மனதுடன், ஆனந்தத்தையும் சுகத்தையும் தேடுவதில் முழு உற்சாகத்துடன் ஈடுபட்டார். தோட்டத்தில் வளர்க்கப்படும் குரோட்டன்ஸைப் போன்றவர் மிஸ்டர் சர்மா. அதன் வேர் பூச்சட்டியுள் அடக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், அதனால் அந்தக் கட்டுப்பாட்டால், அதற்குக் கஷ்டம் தோன்றுவதில்லை. அதைக் கவனிக்க பலர். மண்ணை மாற்ற ஒருவன், ஜலம் விடஒருவன், அழகாக வெட்டிவிட ஒருவன். இந்த வேலை எல்லாம் தானாகவே நடந்து போகின்றன. ஏனென்றால் இந்தச் சேவை அதற்கு உரித்தானது. பூந்தொட்டியில் வளரும் 'ப்ரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' குரோட்டன் தன் கோணல் மாணலான அலை பாயும் இலைகளை ஆட்டியபடி, தன் சிறப்பைக் கீழே வளரும் புல் செடிகளிடம் காண்பித்துக் கொள்ளுகிறது. அது காய்ப்பதும் இல்லை, பூப்பதும் இல்லை. ஆனாலும் அதற்கு மரியாதை கிட்டுகிறது. ஏனென்றால் அது விசேஷமான செடி. தோட்டத்தில் அதன் பதவி உயர்ந்தது. மண்ணில் விழுந்துவிட்டாலும் யாராவது அதைத் தூக்கி விடுவார்கள்–தட்டி அலங்காரமாய் நிறுத்துவார்கள். அவர்களைத் தோட்டத்தில் மாலிகள் என்று சொல்லலாம். அல்லது சமூகத்தில் சேவகன் என்றோ, மாமனார் என்றோ, நண்பன் என்றோ அழைக்கலாம். தோட்டம் இருக்கிற வரை அதுவும் இருக்கும். அது சமூகத்தின் நோக்கு. சமூகம் இருக்கும் வரை, கடவுள் உள்ள வரை, உலகம் நன்றாய் நடந்து கொண்டு போகும் வரை, அதுவும் இருக்கும்.

அதனால் அந்தப் பெரிய மனிதத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்ளுவது அவன் அறம். அந்த அறத்திற்காகப் போர் புரியக் கடவுளே அவனை உத்தரவிட்டுள்ளார்.

வெள்ளைத் தோல் மனிதர்கள் பண்படைந்து இந்தக் கடமையை நிறைவேற்ற வெளி தேசங்களுக்கும் போனார்கள். இந்த விஷயத்தை இந்தத்தியாகத்தை, கவி கிப்லிங் புரிந்து கொண்டார். அதைப் பிற பண்படைந்த தேசங்களும் மதித்து கௌரவித்தனர். வெள்ளை மனிதனின் சுமையைத் தூக்கிக்

கொண்டு அவர்கள் இருண்ட காடுகளுள் ஒளியை ஏற்றினார்கள். காட்டை வெட்டி அங்கு நாகரீகத்தின் உயர் மன்றங்களை எழுப்பினார்கள். சோம்பி உறங்கிக் கொண்டிருந்த பூமி இந்த நாகரிகத்தைக் கண்டு பலமுறை விழித்தது, திடுக்கிட்டது. பிறகு கொட்டாவி விட்டவாறு திரும்பிப்படுத்துக் கொண்டது. அப்புறம் திடீரென்று எழுந்து நடனமாட ஆரம்பித்தது–யுகத்தின் சிவ தாண்டவம்.

★ ★ ★

இந்த அறத்தின் மகத்துவத்தை ஒவ்வொரு நாட்டிலும் மரியாதையான, உயர் குலத்தைச் சேர்ந்த, விசேஷமானவர்கள் காப்பாற்றி வந்துள்ளவர்கள். இவர்கள் நாட்டின் வீர மக்கள். சர்மா, அவர்களுள் ஒருவர், அதனால் மரியாதைக்கு உரித்தானவர்.

பலிதத் பேசிக் கொண்டிருந்தார். "சியாம்பாபு, சாஹப் எவ்வளவு கல்ச்சர்ட், தெரியுமா? ஆச்சரியந்தான். ஃபைலுடன் அவருடைய வீட்டிற்குப் போயிருந்தேன். உள்ளே கூப்பிட்டு உட்காரச் சொன்னார். கம்பீரமான பேச்சு, சிரித்த முகம், 'தயவு செய்து கொஞ்சம் உட்காருங்கள். நடுவில் இங்கு சுற்றிப் பாருங்கள். உங்களுக்குப் பிடித்தமான பொருள் ஏதாவது தென்படலாம்.' என்றார். எவ்வளவு மரியாதை, எவ்வளவு இதமான நடத்தை. ரொம்ப விநயமுள்ளவர்தான். அவருடைய உத்தரவை மீறலாகாது என்று அறை முழுவதும் சுற்றிப் பார்த்தேன். என்னத்தைச் சொல்லுவது? அங்கு சொப்பன உலகமே தான்! நடி தடியாய்ப் பளபளக்கும் எண்ணற்ற புத்தகங்கள் – நான் இது வரை அந்த மாதிரி பார்த்ததேயில்லை. சுவரெல்லாம் சித்திரங்கள் – வெகு உயர்தரமானவை. எனக்கு என்ன தெரியும், இதைப்பற்றி எல்லாம். அவரே படம் தீட்ட வல்லவர் என்று நினைக்கிறேன். எல்லாவற்றையும் விட விசேஷமாக இருந்தன மண் பொம்மைகள் – ஒரு பொருட்காட்சியைப் போலவே இருந்தது. அவைகளில் ஒன்று சாதாரண அழுக்குப் பிடித்த மனிதனொருவன் – பிறகு விறகைத் தூக்கிப் போகும் குருடன் ஒருவன், பிச்சைக்காரன் ஒருவன், இப்படியாக இருந்தன. அவருடைய உள்ளம் தான் எவ்வளவு விசேஷமானது!"

சியாம் பாபு பெரு மூச்சுடன் "பிழைப்பைப் பற்றிக் கவலை இல்லை என்றால் மனிதன் இப்படி எல்லாம் இருக்கலாம். கிரிக்கெட்டில் பெயரும் புகழும் பெற்று ஒரு முறை ஆஸ்திரேலியா போய் வர நான் விரும்பினேன். நான் பொய்யா

சொல்லுகிறேன்? அக் காலத்தில் எனக்கு நல்ல பெயர். நீங்கள் கட்டாயம் கேட்டிருப்பீர்கள். அன்றும் இன்றும், ஒன்றுமே சரியாய் வரவில்லை. இப்பொழுது கம்பனி வேலைதான் மிஞ்சியது!" என்றார்.

"நீங்கள் என்னைச் சரியாய்ப் புரிந்து கொள்ளவில்லை... முக்கியமான விஷயத்தை...."

"அது என்ன விஷயம்?" சியாம் பாபு கொட்டாவி விட்டுக் கொண்டே கேட்டார். "இதெல்லாம் எனக்குப் புரிவதில்லை. சிக்கலான விஷயங்களையும் நீண்ட லெக்சர்களையும் கேட்டால் என் தலை வலிக்க ஆரம்பித்து விடுகிறது. காக்காய் பிடிக்க வேண்டும் என்றால் செய். முழு மனதுடன் நன்றாக என்னைத் தேய்த்துப் பிடித்து விடு. உன் கை பலத்தைக் காண்பி. அதை விட்டு விட்டு இப்படி மூக்கால் அழுவதில் என்ன லாபம்? எனக்கு அதில் நம்பிக்கையில்லை. உனக்குச் செய்ய வேண்டும் போலிருந்தால் உரக்க ஏ சர்மா, என்று கூப்பிடு."

"அடடே-நீங்கள் தவறாக நினைத்து விட்டீர்கள். இது முகஸ்துதி அல்ல; உண்மையான விஷயம். சாஹப் ஆர்டிஸ்ட் தான், பெரும் ரசிகர்."

ஃபைல்களை இடுக்கிக் கொண்டு காத்திருந்த கோபால் பாபுவின் காதிலும் விஷயம் விழுந்தது. சாஹப் ஆர்டிஸ்டா? இலங்கையில் ஷூரி நாமமா? அவர் உண்மையாகவே ரசிகரா? அவர் புரிந்து கொள்ளுவாரா? கடந்த காலத்தில் அடைந்து போய் துருப்பிடித்துப் போயிருந்த ஜன்னல் திறக்க முடியுமா? முடியாது. இணைப்புகளில் துரு ஏறிவிட்டது. இனிமேல் திறக்க முடியாது.

பலித்தின் உருண்டை முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றார் கோபால் பாபு. அந்த முகத்தின் ஒரு பக்கம் கொஞ்சம் தொங்கியது. வாயில் வெற்றிலையை அடக்கி வைத்திருந்ததால் கன்னம் உப்பியிருந்தது. சிகரெட் கேஸிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு, பிறகு அந்தக் கேஸை சியாம் பாபுவின் பக்கமாய்த் தள்ளிவிட்டான். கையில் நெருப்புக் குச்சியை ஏந்தியவாறு "சாஹப்பிற்கு பெய்ன்டிங்கைப் பற்றித் தெரியும். அவர் வீட்டில் நிறைய இருக்கின்றன. அவ்வளவு உயர்ந்த மனோபாவம் இல்லாவிடில் ஒரு மனிதன் இவ்வளவு வேலைக்கு நடுவில் இதிலெல்லாம் அகப்பட்டுக் கொள்ள மாட்டான். வீட்டுச் சேவகன் என்ன சொன்னான் தெரியுமா? சாஹப் ஸிதார் வாசிப்பாராம்!" என்றான்.

ஸிதாரா? கோபால் பாபுவின் நெஞ்சில் அவா எழுந்தது. அவரும் ஒரு காலத்தில் இனிமையைப் பிழிந்து கொட்டி ஸிதார் வாசித்ததுண்டல்லவா?

ஸிதார் விஷயத்தைச் சொல்லி ஏதோ பெரிய வெற்றி அடைந்து விட்டதைப் போல் பெருமிதத்துடன் பலிதத் சியாம் பாபுவைப் பார்த்தான். அவனுடைய கண்கள், 'இடியட், உனக்கு என்ன புரியும்?' என்று கூறுவதைப் போலிருந்தது.

சியாம் பாபு சிகரெட் பாக்கெட்டின் மேல் எழுதியிருந்ததைத் திருப்பித் திருப்பிப் படித்துக் கொண்டிருந்தார்.

கோபால் பாபு பழைய கதையை யோசித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் சித்திரமும் வரைந்தார், ஸிதாரும் வாசித்தார். யாரும் கற்றுக் கொடுக்கவில்லை அவருக்கு. ஆனாலும் அவர் குழந்தைப் பருவத்திலிருந்தே வரைய ஆரம்பித்து விட்டார் கத்திரிக்காய், பூ முதலியவைகளிலிருந்து வீடு, கிராமம், குளத்தின் கரை ஆலமரத்தின் கீழ் மாலை வேளை, தாயை நோக்கி ஓடிவரும் கன்று, இன்னும் எவ்வளவோ. மெல்ல மெல்ல மாடல்களைத் தேடி படம் வரைய ஆரம்பித்தார். இப்போதும் அவரிடமிருந்தன சில படங்கள். பல தோற்றங்களில் மனைவியைச் சித்திரித்தார். அலங்காரங்களுடனும் கையில் வெற்றிலை ஏந்தியவாறும், சிரித்த முகத்துடன், லுங்கி கட்டியவாறும் காய்கறி நறுக்கும் பொழுதும், தண்ணீர் பாய்ச்சும் பொழுதும் என்று பல தோற்றங்கள், அடியில் ஒரு மூலையில் சிறு எழுத்துக்களில் தன் பெயரையும் எழுதினார், கோ. க்ரு. மி. என்று.

அப்புறம் ஆர்ட் பிடுங்கி எறியப்பட்டது. கடைசியில் ஒரு பெண் கோபவசப்பட்டு, கடுகடுக்கும் முகத்துடன் கையில் துடைப்பத்துடன் குழந்தையை அடிக்கப் போகும் காட்சியைச் சித்திரிக்க முயற்சி செய்திருந்தார்.

வெகு நாட்களுக்கு முன் நடந்த விஷயம் இது. அப்பொழுது நான்கு குழந்தைகள் தாம் அவருக்கு. ஸ்கெட்ச் மட்டுமே ஆகியிருந்தது. அவருடைய மனைவி, "இப்படி நீங்கள் வரைந்தால் நான் அரளியின் விதையை–" என்று கூறி விட்டாள்.

இதேபோல் ஸிதாரையும் கற்றுக் கொண்டார். அந்த நாளும் ஆயிற்று. இன்று ஒரு சாஹப் அகப்பட்டிருக்கிறார். அவர் உண்மையாகவே கலை ஞானம் உள்ளவராயிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

அவர் சித்திரம் வரைந்து கொண்டு ஸிதார் வாசித்துக் கொண்டும் கலையை வளர்த்திய பொழுது, அவர் மனதில் பிறர் தன்னை

அறிந்து புகழ வேண்டும் என்ற அவா எழுந்ததேயில்லை. தன் சொந்த மகிழ்ச்சிக்காகவே எல்லாம் செய்தார். சாதனை ஒரு மயக்கம் போலத்தான். அதில் அவர் செலவழித்த நேரத்துக்கு அளவில்லை. க்ஷவரம் செய்ய மறந்து விடுவார். வீட்டிற்கு சாமான் வாங்கவும் விட்டுப்போகும். இன்னும் எவ்வளவோ முக்கியமான வேலைகளும் மறந்துபோகும். நிறையத் தியாகம் செய்ய வேண்டி வந்தது. நிறைய நஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டி வந்தது. இதை எல்லாம் அவர் பொருட்டாக மதிக்கவில்லை. சோர்வடைந்த உடல் ஆனந்தமான வெறியில் திளைத்தது. அப்பொழுது அவர் பிறர் புகழுக்காக ஆசைப்படவில்லை.

ஆனால் பயிற்சி விட்டுப் போனதிலிருந்து அவருள்ளிருந்த கலாரசிகன் மடிந்து போய் விட்டான். எப்பொழுதாவது யாராவது தன் சிருஷ்டிகளை மதித்துப் புகழமாட்டார்களா என்று நினைக்க ஆரம்பித்தான். ஆனால் உலகம் மதிக்கவில்லை. யாராவது வந்து "கலைஞர் பி.க்ரு. மி யார்? நன்றாக வரைகிறார்." என்று கேட்பார்கள் என்று எதிர்பார்த்தான். யாருமே வரவில்லை. மெல்ல அந்த எதிர் பார்ப்பும் அணைந்து விட்டது. திடீரென்று இன்று–

வியர்வையில் நனைந்து ஃபைல்களுடன் நின்றார் கோபால் பாபு. இரண்டு வார்த்தை சொல்ல விரும்பினார். இதற்குள் ரணஜித் பாபு வந்து சேர்ந்தார். "ஹோ, ஹோ உட்காருங்கள் உட்காருங்கள்" "சரி கோபால் பாபு. கொஞ்சம் பொறுத்து வாருங்கள்". என்றார் சியாம் பாபு.

"அடடே உட்காரவில்லையே நீங்கள், சர்மா பாபுவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்." ரணஜித் பாபு வாயில் பைப்புடன் நின்று கொண்டிருந்தார். சர்மாவின் பெயரைக் கேட்டதும் கண் கள் பளிச்சிட்டன, முகத்தில் சிரிப்பு மலர்ந்தது. நின்று கொண் டே, "பெரிய மனிதர்களைப் பற்றிய பேச்சு இப்படி எளிதாய் முடிந்து விடுமா?" என்றார்.

"அப்படி இல்லை. உங்கள் அபிப்பிராயத்தையும் கேட்போம். சொல்லுங்கள்" என்றார் சியாம் பாபு.

"மோஸ்ட் ஸ்போர்ட்டிங்க் ஷர்ட்" என்றார் ரணஜித் பாபு. பிறகு நாற்காலியிலமர்ந்து புகையை உள்ளுக்கு இழுத்தார். கொஞ்ச நேரம் வரையில் எல்லோரும் அவரைப் பார்த்தபடி, சர்மா துரையைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தனர். அப்புறம் பஜனை ஆரம்பித்தது. ரணஜித் பாபு, "விந்தையான மனிதன்

அவர். இதோ அவருடன் வேட்டை ஆடப் போயிருந்தேன், காலையில்தான் திரும்பி வந்தேன்". என்றார்.

பலிதத் "நிஜமாகவா?" என்று ஆச்சரியத்தில் கத்தி விட்டான். அவனுக்கு ரணஜித் பாபுவே விந்தையான மனிதராகத் தோன்றினார். புதிய துரை வந்ததும் வராததுமாய் எப்படி இவரால் சகஜமாய் பழக முடிந்தது?

"வேட்டையா?" சியாம் பாபு உரக்கக் கேட்டார். "எனக்கு ஏன் சொல்லவில்லை? மைனிங் ஏற்பாடுகள் நடந்து வரும் என் இலாகா ரொம்ப வசீகரமான காட்டுப் பிரதேசம், வேண்டிய மிருகங்களுண்டு, கூடச் செல்லத் திறமையான மனிதர்களும் இருக்கிறார்கள். நீங்கள் சொல்லியிருந்தால்..."

"உங்கள் இலாகாவின் பக்கமாய்ப் போகவில்லை நாங்கள். அவர் பறவைகளைச் சுடவே விரும்பினார். சில கொக்குகளும், சில உள்ளான்களும் கிடைத்தன. இதற்காகத்தான் போனோம். ஆனால் உண்மையான உத்தேசம் வேறு, திறந்த வெளியில் இங்கும் அங்கும் உலவியவாறு பேச விரும்பினார்!

"என்ன சொன்னார்? என்ன சொன்னார்!" எல்லோரும் உற்றுக் கேட்டனர். ரணஜித் பாபு சிரித்தவாறு, "ஆமாம். அவருடன் பழக நல்ல வாய்ப்பு கிட்டியது எனக்கு. ஆனால்–" என்று சொல்லி நிறுத்தினார்.

பலிதத் தன் நாற்காலியை இன்னும் பக்கத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டு, வில்லைப் போல் வளைந்து விறைப்புடன் உட்கார்ந்து கொண்டான். சியாம் பாபு தன் விசாலமான முகத்தை இரு கைகளிலும் தாங்கியவாறு அமர்ந்திருந்தார்.

புகையை விட்டவாறு ரணஜித் பாபு "ரொம்பச் சரளமான மனிதர். மனம் திறந்து பேசுகிறார். அந்தப் பேச்சில் விலை மதிப்பற்ற அன்பும், அறிவும் உள்ளன. நவநாகரிகமான கொள்கைகளை உள்ளவர். நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து விளையாடவேண்டும் என்றும், சுறுசுறுப்பாய் இருக்க வேண்டுமென்றும், சந்தோஷமாயிருக்க வேண்டும் என்றும் விரும்புகிறார். இத்தனை நாட்களுக்கப்புறம் சிகப்பு நாடாவின் விலங்கை தளர்த்திவிடவும், இந்த அழுக்குச் சுமையை இறக்கி வைத்து இளைப்பாறவும் ஒரு மனிதர் அகப்பட்டார். அவருடைய ப்ரோகிராம் என்ன தெரியுமா?-பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை எல்லோர் – குடும்பத்தினருடனும் பரிச்சயம் செய்து கொள்ளப் போகிறார். எல்லோர் வீட்டிற்கும் போய் வருவார் விருந்தினராய்! ஹோ, ஹோ, ஹோ, "

எல்லோரும் சேர்ந்து சிரித்தனர். சபை கலைந்தது. வேலை ஆரம்பித்துவிட்டது. சாஹப், நல்லவர், மிக்க நல்லவர்.

★ ★ ★

"ரோஜ், நீயும், சிகரெட் பிடியேன்" என்றவாறு மிலி கேஸை நீட்டினாள். "நீ மாறி இருப்பது உண்மைதான். ஆனால் பல விஷயங்களில் ரொம்பப்பின் தங்கி விட்டாய்."

கார் போய்க் கொண்டிருந்தது. சரோஜினி சிரித்தவாறு "சொல்லேன். உன் வாயில் பூட்டியில்லேயே. என்ன?" என்றாள்

"உம். என்ன சொல்லுவாய், உன்னால் புரிந்து கொள்ள முடியாது, ஒன் திங்க் லீட்ஸ் டு அனதர்' என்றுதானே? ஒரு பழக்கத்தை ஆரம்பித்துக் கொண்டாயானால் மனம் தானாகவே இன்னொன்றை நோக்கி வளைகிறது. நீ சிகரெட் பிடித்துப் பார், அப்புறம் தெரியும்."

சரோஜினி கலகல வென்று சிரித்தாள். "என்ன ஆகும்? ஒரு வேளை எனக்கு இரண்டு இறகு முளைத்து புர்ர்—என்று பறந்து போய்விடுவேனாயிருக்கும், வேறு என்ன"?

ஸ்டியரிங்கைப் பிடித்திருந்த டிரைவருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. அதை இருமலில் மறைத்துக் கொண்டான்.

அவனுடைய குறையே அதுதான். அவன் வண்டியை ஒட்டுகிறவன் மட்டுமே, வண்டியின் ஒரு பாகமாக மாறிவிட்டான். ஆனால் அவனுக்குக் கண்கள் இருந்தன. பார்க்க முடியும். காதுகள் இருந்தன. கேட்பான், வண்டியுள் அவன் உடல் இருந்தது. எதிரே நீண்ட வழி.

"என்ன குளிர்!—டிரைவருக்கு இருமல் வந்துவிட்டது பார். அக்கா மயங்கிக்கிடக்கிறாள். மனதினுள் சூடு பிடித்தவாறு. நாமோ உலகம் உறங்கும் பொழுது விழித்திருக்கிறோம். சூடு கட்டாயம் வேண்டும். இந்தா சிகரெட் பிடி."

ஒரே ரீதியில் போய்க் கொண்டிருந்தான் டிரைவர். ஹார்ன், க்லச், ஸ்டியரிங்க், கியர்—எதிரே நீண்ட வ்ழி, ஐந்து வருடங்களாய் இந்த அடிமை வாழ்வு. பிழைப்பிற்காக மட்டுமா? ஆனால் தன் மனித உணர்ச்சிகளை இழக்கவில்லை அவன். ரகசியத்தில் நடக்கும் விஷயம் அது. மெல்லிய குரலில் பாடியவாறு தன் நண்பர்களிடம் 'வெளியில் விஷயங்களைச் சொல்லக்கூடாது', என்ற சத்தியத்தை வாங்கிக்கொண்டு எல்லா விருத்தாந்தத்தையும் கொட்டி விடுவான். விஷயமும் பரவிற்று. சரோஜினியின் நடவடிக்கைகளும் அம்பலமாயின.

மிலி கல கலவென்று சிரித்தாள். அப்படிச் சிரிக்கும் பொழுது அவள் தன் வசம் இழந்து தடுமாறினாள். டிரைவர் எதிரே பார்த்துக் கொண்டிருந்தான். மனதுள் அந்தச் சிரிப்பின் ஒலி.

தண்ணீரைப் போல தளும்பியது நினைவு. மனம் குதூகலிக்கும் பொழுது வெள்ளத்தின் நீரைப் போல் மேல் வரை உணர்ச்சி பொங்கி விடுகிறது. அருமையான சந்தர்ப்பங்கள் இவை.

பிறகு வெள்ளம் வற்றிவிடுகிறது, திரும்பிப் பார்ப்பதில்லை.

நீண்ட பெரு மூச்சுடன் டிரைவர் எதிரே நோக்கியபடி போய்க் கொண்டே இருந்தான். வாழ்க்கை இப்படித்தான், புழுதி படிந்ததாய், காரமற்றதாக இருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது.

"இதோ பார் ரோஜ்," மிலி சொன்னாள். "உன் பெயர் சரோஜ்–யாராவது விளக்கும் பொழுது 'சாரோஜ்' என்று ஒலிக்கிறது. ஆங்கிலத்தில் அதற்குப் பொருள் "துக்கம். அந்த ச" வை நீக்கி விட்டால் அதிலிருந்து 'ரோஜ்' மலருகிறது. அதாவது ரோஜாப்பூ. அதனால் என்ன நஷ்டம்? இதே மாதிரி எல்லாவித பழக்க வழக்கங்களையும், பரம்பரைகளையும் வெட்டி எறிய வேண்டும். அப்பொழுது ரோஜாப்பூ மலரும். அப்படியும் உன் மடம், வெட்கம், உன் சந்தேகம் எதுவும் போகவில்லை. நீ ஒரு மாணிக்கம். உன்னை அலங்கரித்துக் கொண்டாயானால் எப்படி இருப்பாய் தெரியுமா? இன்னமும் நீ சிகரெட் பிடிக்க மறுக்கிறாய். நடனமாடவும் ஒப்ப மாட்டேன் என்கிறாய். உன்னுடைய ஃபிகரும், உடல் கட்டும் நடனமாடுவதற்காகவே உருவாகியுள்ளன"

"என்ன லாபம்"?

"அழகாயிருப்பதில் ஏதாவது லாபமிருக்கிறதா? உன்னுள் இருக்கும் குணங்கள் மலர முடிந்தால், அப்பொழுது பரிபூரண மான வாழ்க்கை என்ன என்பதை அறிவாய். ஒரு சுவாரஸ்யமான நாவலைப் போல் நீ பாதி வழி வரை வந்துவிட்டுப் பிறகு பின் வாங்குகிறாய். நாம் நவநாகரிமானவர்கள், வாழ்க்கை சோக மயமானது, அது நிச்சயமற்றது. அதனால் நாம் பழைய காலத்துப் பழக்க வழக்கங்களைக் கடைப் பிடிக்கத் தயாரா யில்லை. இந்த நிமிடத்தில் கிடைக்கும் சுகம் தான் நிசம். அதை நழுவவிட்டால் பிறகு திரும்பி வராது."

மிலியின் இந்தத் தத்துவத்தை சரோஜினியால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் தொட முடிந்தது. அனுபவிக்க முடிந்தது. தொட்டால் அழுகை வரும் போலிருந்தது. பிறர் துக்கம் தன் வரையில் பரவி விட்டதைப் போல். இந்த

ஸ்பரிசத்தால் சரோஜினியின் மனதில் ஒரு அந்தரங்கக் கேள்வி எழுந்தது. "அது சரி, நீ ஏன் கலியாணம் செய்து கொள்ளவில்லை இன்னும்?" என்று கேட்டாள்.

சிரிப்புடன் சிரிப்பாய் பேச்சை மாற்றி, "சரி, நீ ஏன் கலியாணம் செய்து கொண்டாய்?" என்றாள் அவள். "இல்லை நிசமாகச் சொல்லு, நீங்களிருவரும் இரண்டு மென்மையான மலர்கள். தத், எனக்கு சரியாய் சொல்லத் தெரியவில்லை. உனக்கு எல்லாவற்றையும் அனுபவிக்க மனம் இருக்கிறது. விசாலமான மனம். கலியாணம் செய்து கொள்ளேன் உனக்கு வரனா கிடையாது? வரன்; வீடு வாசல், குழந்தை குட்டி எல்லாம் உன்க்குப் பிடிக்குமே."

மிலி சிரிப்பதை நிறுத்திக் கொண்டாள். எல்லோரும் இருந்திருந்தால் இந்தக் கேள்வியை ஒரே வெட்டாய் வெட்டிப் போட்டிருப்பாள். ஆனால் சிரித்தவாறு அவள் சரோஜினியின் மேல் சாய்ந்தாள். அதே சிரித்த முகத்துடன் வார்த்தைகளை அளந்து, நிறுத்தி, மிலி பேசினாள்.

"ஒரு கதை சொல்லுகிறேன், கேள். கதை என்றும் சொல்ல முடியாது. ஒருவன் எவ்வளவு தூரம் ஓடுகிறானோ அவ்வளவு காயமும் காலில் பட்டுக் கொள்ளுகிறான். ஒருவன் எவ்வளவு கேட்கிறானோ, அவ்வளவே பெறுகிறான். இது உனக்குத் தெரியும்.

இதை நாம் தலைமுறையாகக் கேட்டு வந்துள்ளோம். ஆனாலும் நாம் ஏன் அந்தப் பழகிய வழியிலேயே போய்க் கொண் டிருக்கிறோம்? பூவைப் பறிக்கக் கையை நீட்டுவாய், முள் குத்தும்; அதிர்ந்து போவாய். உலகத்தில் எல்லோருக்கும் முள்ளும் அதிர்ச்சியும் பிடிக்கவேண்டும் என்பது அவசிய மில்லை. பிடிக்காவிட்டால்?"

"அப்பொழுது மலர் நல்லதில்லையா", என்று சந்தேகப் பட்டாள் சரோஜினி. " இல்லை என்று யார் சொன்னார்கள்? அறியாதவர்கள் முதலில் கொஞ்சம் பட்டுக் கொள்ளுவார்கள். பிறகு மெல்ல மலரைப்பறித்துக் கொள்ளுவார்கள். அது கிட்டும் வரை அவர்களுடைய உள்ளம் தவித்துப் போகும். அறிந்தவர்கள் மெல்ல மூக்கைப் பூவிடம் கொண்டு போய் அதன் மணத்தை நுகர்ந்துவிட்டு வருவார்கள் – இதோ நான் உன்னை மணந்து பார்ப்பதைப் போல் பேஷ்! என்ன வாசனை இந்த ரோஜாவிறகு! மிஸ்டர் தாஸ் இங்கிருந்தால் என் மேல் பொறாமை கொள்ளுவார்".

"தத்." பேச்சை மாற்றி சரோஜினி பேசினாள். "வீடு வாசல் யாருக்குத்தான் கரிக்கும்?"

"அதில் நம்புகிறவர்களுக்குக் கரிக்காது. இக்காலத்தில் யாரை நம்ப முடிகிறது? இதை அறியாதவர்கள் முட்டாள்கள், நாட்டுப் புறங்கள். இது கலியுகம் என்பதை ஏன் மறந்து விடுகிறாய்? இந்த யுகத்தில் சத்தியம் கிடையாது. நம்பிக்கை கிடையாது. ஒன்றுமே கிடையாது."

சரோஜினி தன் இரு கரங்களையும் மிலியின் கழுத்தைச் சுற்றிப் போட்டவாறு "சரி, சரி விடு பேச்சை. நான் ஒன்றும் கேட்கவில்லை" என்றாள். மிலியின் பேச்சு அவளுக்கு விவஸ்தை கெட்டதாய்த் தோன்றியது. ஆனால் அவளுடைய பேசும் விதம், குரல், கண்களின் வீச்சு, முகத்தின் சாயை, எல்லாமாகச் சேர்ந்து அவள் பால் ஒரு விதக் கருணையை எழுப்பின. ஒரு கண நேரத்திற்கு அவளுடைய புதிய உருவம் தெரிந்தது. இது இன்றைய மிலி அல்ல. இது ஒரு கடந்த காலத்தின் தீனக் குரல்.

"கேவலம் கொடுக்கல் வாங்கலுக்குள் கட்டுப்பட்டிருக்கிறது நம் சமூகம். அதற்காக இந்தச் சமூக விளையாட்டு எதற்கு? வழியில் யாரையாவது வணங்கி மரியாதை செய்தால் அவன் உன்னிடம் இரண்டு வார்த்தை சொல்லமாட்டானா என்ன? பழைய சமூகம் நோயற்றதாகவும் நம்பிக்கைக்குப் பாத்திர முள்ளதாகவும் இருந்திருக்கலாம். அப்பொழுது ஒரு காரியம் நடத்தினால் மற்றொன்று தொடர்ந்திருக்கும். பிறகு காலம் மாறிவிட்டது பருவம் மாறுவதைப் போல. மனிதன் வீட்டில் அடங்கிக் கிடந்தான். அவனை எழுப்ப எந்த மணியும் அடிக்கவில்லை. திடீரென்று ஒரு நாள் கடுமையான வெய்யில், சகிக்க முடியாத உஷ்ணம், ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாய் போர் மூண்டது. நேற்று சோக மயமாய் இருந்த நகரம் இன்று சாம்பல் குவியல். அதே மாதிரி பழைய சமூகம், பழைய கோயில் எல்லாம் தரைமட்டமாகி விட்டன. இங்குமங்குமாய்ச் சுற்றி அலைந்து மனிதன் கொதித்துப் போகிறான். இது பஞ்சமல்ல. பஞ்சத்தை விடக் கொடூரமானது. பஞ்சம் சில நாட்கள் இருக்கும். மழை பெய்ததும் பஞ்சம் மறைந்துவிடும் என்று எல்லோரும் அறிவார்கள். ஆனால் இது, இந்தக் கொடுமை எப்பவாவது மறையுமா? யுகம் மாறிவிட்டது. உன்னால் என்ன செய்ய முடியும். பூகம்பம் வந்தால் உன்னால் என்ன செய்ய முடியும்?"

"இதெல்லாம் பெரிய விஷயங்கள் மிலி. இதை எல்லாம் புரிந்து கொள்ள நான் என்ன படித்திருக்கிறேன்."

"புரிந்து கொள்ளமாட்டாயா நீ?. கண் முன்னால் இருப்பதைப் புரிந்து கொள்ளும் முன் கண்ணை மூடிக்கொண்டு விடுவாயா? ஆயிரமாயிரம் வருடங்களுக்கும் முன் மக்கள் வாழ்ந்த இடங்களையும் வீடு கட்டின இடங்களையும் தோண்டிப் பார்த்தால் மண்ணில் கூட வேர் தெரியாது. குப்பைதானே அவை எல்லாம். காற்று வாக்கில் பறந்து போய்விடும். இதுதான் இந்த யுகத்தின் தோற்றம். சுவரில்லை. கூரையில்லை. எவரிடமும் நம்பிக்கையில்லை. வழியில் யாராவது நண்பன் தென்பட்டால், அவன் உனக்கு மையுடன் விஷத்தைக் கலந்து கொடுப்பான். இன்று நீ உண்டு. நாளைக்கு இல்லை."

"நீ இவ்வளவு யோசித்து அதற்காக வருத்தப்படவும் செய்கிறாயே மிலி. சிரித்து விளையாடவும் முடிகிறது உன்னால். உன்னைப்போல் இவ்வளவு விஷயங்களை என்னுள் வைத்துக் கொண்டேனானால் என்னால் அப்புறம் ஒரு கவளம் கூட சாப்பிட முடியாது. மனிதன் இவ்வளவு ஆலோசித்தால் அவனுக்குத் தன்னிடமே வெறுப்பு பிறக்கும். உலகத்திலுள்ள ஏழை எளியவர்களைப் பற்றி நினைத்துக் கொண்டேயிருக்கலாம். ஆனால் அவர்களுடன் ஒன்றாக முடியாது. அதனால் காட்டிற்குப் போய் துறவி ஆகிவிட வேண்டும். எங்கள் மிலி தேவி யோகினியாய் விடுவாள். அப்பொழுது தான் ஒரு யோகி கிடைப்பான். விடு பேச்சை, வேறு எதையாவது பற்றி பேசுவோம்."

"அதுதான் நீ செய்யும் தவறு. துறவி ஏன் ஆக வேண்டும்? ஒருமுறை துக்கப்பட்டவன் உலகத்தைத் துறக்க எண்ணுகிறான். எப்பொழுதுமே துக்கம் சகிப்பவன் இந்தத் துக்கத்தை சுகமாக நினைத்து எப்படி வாழ்வது என்று யோசிக்கிறான். நாம் இலையை உண்டு துறவறம் பூணவா இவ்வுலகில் பிறந்தோம்? அல்லது சுகமும், இன்பமும் அனுபவிப்பதற்காகவா? நமக்கு எவ்வளவு கிட்டியுள்ளதோ, அவ்வளவு தான். அதை வைத்துக் கொண்டே சந்தோஷமாயிருப்போம்."

"போதும். அதுதான் நானும் சொல்வது. கலியாணத்தைப் பண்ணிக் கொண்டுவிடு. நான் ரணஜித் பாபுவிடம் சொல்லுகிறேன்." அந்தப் பெயரைச் சொல்லும் பொழுதே அவள் முகம் குங்குமச் சிகப்பாய் விட்டது. முகத்தை மறுபுறமாய் திருப்பிக் கொண்டு, "ஆஹா, நம் நீலிதான் எவ்வளவு சுகமாய் தூங்குகிறாள்." என்றாள்.

"இந்த யுகம் இம்மாதிரியான சுகத்தைத்தான் விரும்புகிறது. எது எப்பொழுது கிடைக்கிறதோ, பிடுங்கிக் கொள். மேலேயிருந்து அணுகுண்டு மாரி, கீழே யுத்தமும் பஞ்சமும். இந்த சுகம்

பிறகு கிடைக்குமோ கிடைக்காதோ. சுகத்தைக் கொள்ளை யிட்டுச் சேகரித்துக்கொள். வீடு வாசல் என்று நினைத்துக் கொண்டிருந்தாயானால் அதை எல்லாம் நீ உருவாக்கிக் கொண் டிருக்கும் பொழுதே எல்லாம் புதைந்துபோய் விடும். இந்த யுகத்துடன் நாமும் இந்த வினாடியின் பக்தர்கள். இறக்கையை விரித்துக்கொண்டு வேண்டுமானால் பறந்து போய் விடு. இந்த யுகத்தில் எதுவும் நிச்சயமில்லை. பழைய கால கஜக் கோலால் நம்மவரை அளக்க அவசியமில்லை."

சரோஜினி பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தாள். "அப்புறம்? முழுக்கச் சொல்லிவிடு. பாக்கி வைப்பானேன்?" "இதோ கேட்டுக் கொள். அதனால்தான் நாம் முன்னேற வேண்டும். காலத்துடன் ஒத்துப் போக வேண்டும் என்றுதான் நான் சொல்லு வது. எல்லோரும் மடிவதாயிருந்தால் நீ மாத்திரம் உயிர் வாழ உனக்கு என்ன அதிகாரம்? எல்லோரும் எரிந்து போவ தாயிருந்தால், நீ மட்டும் தப்பிப் போக ஏன் முயல வேண்டும்? நவநாகரிகத்தை ஏற்றுக்கொள், நங்கூரத்தைத் தூக்கிவிடு".

"பிறகு?"

"கேட்டுக் கொண்டிருப்பவர்களின் எல்லையற்ற தைரியத் திற்கு வந்தனம். ஆனால் இதையும் கேட்டுக்கொள். உங்கள் தைரியம் இந்த யுகத்திற்கு உகந்ததல்ல, இந்தக் காலத்தில் தைரியமும் அவசியமில்லை. அதைரியம்தான் எதிர்பார்க்கப் படுகிறது. புத்தகத்தைப் படித்துக்கொண்டிருக்கும் பொழுதே, திட்டுவது சாதாரணம். சொற்பொழிவைக் கேட்டுக்கொண் டிருக்கும் பொழுதே 'ஹோ ஹோ' என்று கத்துவது, அழுகிய முட்டை, வாழைப்பழம், இவைகளை விட்டெறிந்து–இதுவும் சாதாரணம். இல்லாவிடில் எப்படித் தெரியும் நீங்கள் சுதந்திரமானவர்களென்று? உங்கள் தனித்தன்மையும் , விசேஷ குணமும் எப்படி வெளிப்பட முடியும்! ஆனால் இதையும் சொல்லிவிடுகிறேன். லிப்ஸ்டிக், ரூஜ், பவுடர், வானிடி பாக், ஹைஹீல் ஷூ இதெல்லாம் நம் மன நிலையைக் குறிப்பனவல்ல. இது யுகத்தின் உடை நாகரிகம். முன்பு பெண்கள் மரவுரி உடுத்தினர். அந்த உடைக்கும் அவர்களுடைய மனோ நிலைக்கும் எவ்வித சம்மந்தமும் இருக்கவில்லை. உயிர் நித்தியமானது, காலமற்றது."

"காபிடல், காபிடல்–" நீலி கையைத் தட்டியபடி எழுந்தாள். "அது சரிதான். காபிடல் என்றால் முதல். முன்னாலேயும் காபிடல். பின்னாலேயும் காபிடல். உத்தேசமும் காபிடல். அதற்காகத்தான் இந்தத் தாவா. நம் கிளப்பிற்காகக் கொஞ்சம்

சந்தா சேர்ந்துவிட்டதென்றால் இனிமேல் வீடு வீடாய்ப் போவானேன்?" என்றாள் மிலி. "உன் லெக்சர் ரொம்பத் தீவிர மாயிருந்தது." என்றாள் நீலி. சரோஜினி வியப்புடன் "நீ இதுவரை லெக்சரா செய்தாய் மிலி?" என்று கேட்டாள்.

"ஷ்யூர், இல்லாவிட்டால் எப்படிப் பொழுது போகும்? இது தானே வேடிக்கை! நீ யாரையாவது அவனது குடும்பத்தைப் பற்றிக் கேட்டால் அவன் ஒரு லெக்சர் அடிப்பான். நீ உள்ளத் தின் விஷயத்தைப் பற்றி கேட்க விரும்புகிறாய். ஆனால் உள்ளம் எங்கேயிருக்கிறது? கட்டைதான். ஆனாலும் தவிலடிக்கத் தெரிந் தால் அந்தக் கட்டையை வெட்டி அடித்து அழகான வாத்தியம் செய்யலாம். கேட்கவும் நன்றாயிருக்கும்."

"அம்மாவ்! நீலி, நீயும் தூங்கிக் கொண்டிருக்கவில்லையா?"

"பார்வைக்கு இருப்பது போல் உண்மையாகவே இருக்க வேண்டிய அவசியமில்லையே." என்றாள் நீலி. "இதையே பார், பார்க்க ஒரு கிட்டி. ஆனால் உண்மையில் பட்டி."

"கிட்டி, பட்டி இதெல்லாம் என்ன"?

இரு சகோதரிகளும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர். மிலி புரிய வைத்தாள். "கிட்டி என்றால் நல்ல புத்திசாலி, பட்டி என்றால் அனுபவமற்றவள். பார்க்க புத்தி சாலியாயிருக்கலாம். ஆனால் உண்மையில் மிக்க சரளமானவள் அதாவது உலக அனுபவமற்றவள்."

"ஒரு கினி பிக்கைப் போல், எவ்வளவு சாதுவானவள் இவள்.' என்றாள் நீலி. சரோஜினி மகிழ்வுடன் "நீங்கள் எல்லாம் படித்த பெண்கள். இந்தச் சந்தையில் வாங்கி விற்கக் கூடியவர்கள்" என்றாள். எல்லோரும் சிரித்தனர். "வியாபார யுகமல்லவா" என்று ஆரம்பித்தாள் மிலி.

வண்டி நின்றது. விஷ்ணு பாபுவின் வீடு. அவர் கம்பெனியில் வேலை செய்பவர். லுங்கி அணிந்து, பீடியைப் பிடித்தவாறு உலவிக் கொண்டிருந்தார். மூவரும் கையில் தொங்கிய தோல் பைகளுடன் டக்.. டக்.. என்று உள்ளே நுழைந்தனர். இங்கிருந்து தான் வசூல் ஆரம்பம். கொஞ்சம் பொறுத்து விஷ்ணு பாபு உள்ளே அழைக்கப்பட்டார். அவரும் போனார்.

★ ★ ★

ஒழுங்கான ஏற்பாடு மிக்க அவசியம். எல்லோரும் ஒன்று சேர்ந்தால்தானே அது முடியும்? எவ்வளவு குப்பை, எவ்வளவு வேலை. அம்மாடி!

கூடையுடன் போய்க் கொண்டிருக்கும் ஆள் வெற்றிலையை பாதையிலேயே துப்புகிறான். வீட்டுப் பெண் ஜன்னலைத் திறந்து நடு வழியில் குப்பையைக் குவிக்கிறாள். குப்பை கூளம், அழுக்கு, கஞ்சி, தண்ணீர் எல்லாவற்றையும் அதில் கொட்டுகிறாள். வழியெல்லாம் ஒரே அழுக்கு, ஈ மொய்த்துக்கொண்டு – சீ.

மனிதன் தன் குழந்தையின் மூக்கைத் துடைத்துவிட தயங்கு கிறான். அதன் தலையோ பேன் கூடுதான். பெண்கள் இன்னும் அதிகமாய் அழுக்கு–கிழிந்த உடை, பரட்டைத் தலை, அழுக்குப் படிந்த துணி, ஒரே கறுப்பு மயமான நகங்கள். அழகற்ற மேனி. கஞ்சி குடிக்கக் கூடவா வேளையில்லை? சமயா சமயமற்ற உணவு, ஆரோக்கியத்திற்கு ஒவ்வாத பதார்த்தங்கள். ஐயோ! என்ன அலட்சியம் இவர்களுக்கு – மனிதரல்ல இவர்கள், மிருகங் கள் தாம்.

நாட்டின் தோற்றமும் மாறும் – இவர்கள் வேறு விதமாய் வாழ்ந்தால். அழகிய வீடு, தோட்டம் ஆரோக்கியமுள்ள மனிதன். பசு, பூ, பழம், என்றிருந்தால் நாட்டில் லட்சுமி குடி கொள்ளு வாள்.

ஆனால் எங்கே அதெல்லாம்? தூங்கி வழிந்து கொண்டு மக்கள் வாழ்கின்றனர், எதையும் கவனிக்காமல். அவர்கள் யோசிப்பதெல்லாம் தங்கள் சாண் வயிற்றைப் பற்றித்தான்; காலம் மாறுகிறது. ஆனால் குருட்டு நம்பிக்கை மடிவதில்லை, எதுவும் மாறுவதில்லை.

இதற்கெல்லாம்தான் ஏற்பாடு வேண்டும், ஒத்துழைப்பு வேண் டும்.

சரோஜினி யோசித்துக் கொண்டிருந்தாள். கூண்டை விட்டு வெளிவந்து மரக்கிளையில் பறவையைப் போலமர்ந்து யோசித் தாள். இந்தக் கழகம், சமிதி என்ற உலகில் இதுதான் முதல் முறையாய் அவள் வருவது. கிளப் கட்டிடம் எழும், கூடவே நாரி கல்யாண சமிதியும் பிறக்கும். யோசிக்க யோசிக்க எத்தனையோ விஷயங்கள் தெளிவாயின. நாலாபுறமும், மண்டிக் கிடந்த வறுமை கண்ணில் பட்டது. அவள் புதிதாக வேலையில் ஈடுபடு கின்றவள். அதனால் உற்சாகமும் அதிகம். உணர்ச்சியிலும், வேலை செய்வதிலும் ஒரு கதகதப்பு. சந்தா சேகரிப்பதிலும், பிரசாரம் செய்வதிலும் அல்லது இவைகளைப் பற்றி பேசுவதி லும் ஏதோ பெரிய வீரச் செயல் செய்வதைப் போல் தோன்றிற்று அவளுக்கு. சொற்பொழிவு கூட நடத்தத் தயங்கவில்லை அவள். எதுதான் செய்யவில்லை அவள்?

ஏற்பாடுகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தாள். முதுகில் கதர் மூட்டையுடன், இடுப்பு வளைந்து, செருப்பில்லாத காலுடன் ஒருவன் போய்க் கொண்டிருந்தான். வீடு வீடாகப் போவான், வெய்யிலை லட்சியம் செய்யாமல். தொடை சதை முழங்கால் வரை தொள தொளத்தது. தடி, வேஷ்டி, வியர்வை அவன் உடலை நனைத்தது. ஊண் உறக்கத்தைப் பற்றிக் கவலையில்லை அவனுக்கு. கதர் விற்பவன் அவன். சர்க்கார் பிரச்சாரம் செய்பவன்."கிராமியத் தொழிலுக்கு அடிவாரம் இடு" என்று அஹிம்சையின் குரல். வீட்டைத் துறந்தவன், வியாதி வெக்கையைப் பற்றிக் கவலைப்படமாட்டான் அவன். அவன் உணர்ச்சியின், பாவனையின் ஒரு உருவம்.

பெயரும், புகழும், சௌக்கியமும் அவனுக்கு வேண்டாம். ராம ராஜ்யத்தைத் தேடி அலைபவன் அவன். அவன் மடிந்து போனாலும் உயர்ந்த பாவனை நிற்கும். அந்த பாவனையை தங்கள் ரத்தத்தோடு கலந்துகொண்டு எழுந்து நிற்பார்கள் பலர். சேற்றிலும், வெய்யிலிலும், மண்ணிலும், வெள்ளத்திலும், புயலி லும், கல்லடியையும், வசவையும், எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு வாழ்வார்கள். எங்கும் அவர்கள் பெயர் அற்றவர்கள், தியாகத்தின் பிராமண உயிர்கள்.

சரோஜினியும் யோசித்தாள். மிலியும் யோசித்தாள். அவரவர் கள் வழியில்.

கவர்ச்சிகரமான உடையுள் எறிகுண்டை மறைத்தவாறு ஓசை செய்யாமல் நடக்கிறான் ஒருவன். குண்டை எறிகிறான். ரயிலைக் கவிழ்க்கிறான். மனிதனைக் கொல்லுகிறான். எல்லோரையும் அழ வைக்கிறான். உலகத்தை தூள் தூளாக உடைத்தெறிகின் றான். கண்ணெதிரில் இம்சை, நெருப்பு, புகை, புதிய இரத்த நதி. இவைதாம் அவனுடைய வழி–கடுமையானது. வாழ்க்கை நிம்மதி அற்றது, நிலை அற்றது. திருடனைப் போல் ஒளிந்து மறைகிறான். இன்றில்லாவிட்டால் நாளைக்கு எங்கேயாவது அவனுடைய கைங்கரியம் நடக்கும். அவனுக்குக் கிடைக்கும் பரிசு துப்பாக்கிக் குண்டு அல்லது கழுத்தில் கயிறு. எப்பொழுது என்ன கிட்டும் என்று சொல்ல முடியாது.

சரோஜினியும் ஒரு கனவு காண்கிறாள். உலக இயலை மாற்றும் கனவு காண்கிறாள். ஏழை விவசாயிகள் பக்திப் பரவசத்தில் ஒன்று கூடி பஜனை செய்வதாகவும், புராணங்க ளைப் பற்றிப் பேசுவதாகவும் கனவு காண்கிறாள். கல்கி அவதாரம் இதோ சமீபத்து விட்டது. பன்னிரண்டு கைகளில் வாளேந்திய மதம் பிடித்த யானை தான் வரும் அடுத்து. கண்ட்

ரோல் காலம் இது. ரூபாய்க்கு ஒன்றரைப் படி அரிசி! பஞ்ச காலத்தில் கூட இதைவிட அதிகம் கிடைத்தது. கலி காலம்தான் இது. கல்கி வர தாமதமில்லை.

மாறிய உலகத்தில், விவசாயிகள் நதியின் பிரவாகத்தைத் தடுத்து மின்சாரம் விளைவிப்பார்கள்; பிறகு வயல்களில் நீர் பாய்ச்சப்படும். காடுகளை அழித்து, மண்ணைத் தோண்டி தாதுக்களை எடுப்பார்கள். யந்திரம் வேலை செய்யும்–யந்திரம் வயல்களில் வேலை செய்யும். மெஷின் உற்பத்தி அவசிய மாகிறது–வறுமையை எதிர்த்துப் போராட.

அதனால் பூஜாரி வழி சொல்லுகிறார். மங்களமான ஆரத்தியு டன் மங்கள வேண்டுகோள் விடுக்கிறாள். 'சர்வே பவந்து சுகின : சர்வே ஸந்து நிராமயா' – கிராமங்களிலும் நகரங்களிலும் ஒவ்வொரு வீட்டிலும் அமைதியிருந்தால் இந்தப் பாவம் நீங்கும். பூமியில் சொர்க்கத்தை நிலை நிறுத்த ஒரே ஒரு வழிதான். பஜனை, யாகம், ஹோமம்.

கண்ணை மூடிக்கொண்டு தியானித்தவாறு லட்சியவாதி வழி சொல்லுகிறான். "இவ்வளவு துக்கம் ஏன் உலகில்? உலகில் ஊண் இல்லையா? வாழ்பவர்களின் நிலை இதுதானா? இந்த விஷமத்திற்கும், துக்கத்திற்கும் காரணம் விநியோகத்தில் உள்ள குறைபாடுகள்தாம். செல்வத்தின் அதிகாரத்தை, அநீதியை, நீக்க முடிந்தால், விநியோக ஏற்பாடுகளைச் சீர்திருத்த முடிந்தால். பூமி ஒரே நாளில் மாறி விடும். கொடூரமான வறுமையும், பீதியும் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அதனாூல், எல்லாம் நலமாய் நடந்தேற ஏற்பாடும் ஒத்துழைப்பும் அவசியம். எல்லோர் மனதிலும் இந்த ஆயுதம் தான் தெரிகிறது. வழி வெவ்வேறு.

சரோஜினி இதை சந்தா மூலமாகவும் பேச்சு மூலமாகவும் நிலை நிறுத்த நினைத்தாள். எல்லோரும் ஒழுங்காகச் சந்தா கொடுத்தார்களானால், முதல் வளரும். அதை வைத்துக் கொண்டு நாரீ சமிதியின் வேலை முன்னேறும். வேலை அப்படி ஒன்றும் கஷ்டமில்லை. கல் உடைக்க வேண்டாம்., செக்காட்ட வேண்டாம். நெல் குத்தவும் வேண்டாம். எல்லோரும் கிளப்பில் ஒருவரையொருவர் அறிந்து கொள்ளலாம். கொஞ்சம் கற்றுக் கொள்ளலாம். கொஞ்சம் கற்றுக் கொடுக்கலாம். அப்படித்தான் பண்பு வளர வேண்டும். கவர்ச்சியாய் உடுக்கவும் துப்புரவாய் இருக்கவும் கற்கலாம். க்ரோஷியா வேலை கற்றுக் கொள்ளலாம். அலங்கரிப்பு வேலையில் நிபுணத்துவமும், ஆடல் பாடல்களில் ஈடுபாடும் வளரலாம். நம் வீடுகள் இவைகளை இழந்து

சாரமற்றுப் போயின. இந்தக் கலைகளால் மனதில் சுறுசுறுப்பும் வீட்டில் களிப்பும் நிறைகின்றன. மனம் பூரித்திருந்தால் சரீரத்தில் உயிர் இருக்கும். மனதிற்கும் உடலுக்கும் ஆழ்ந்த சம்பந்தம் உண்டு. மனமும் உடலும் பசுமையுடனிருந்தால் வீட்டிலும் பசுமை குடிகொள்ளும்.

ஆரோக்கியத்தைப் பற்றியும் பேச்சு நடக்கும் அந்தக் கிளப்பில். எதை உண்டால் பலம் பெறக் கூடும், எப்படி வசித்தால் நோய் நொடிகளுக்கு இரையாகாமல் வாழலாம், என்ற விஷயங்கள் ஆராயப்படும். எல்லோரும் கொசுவலையை உபயோகித்தால், கொதிக்கவிட்ட தண்ணீரை உபயோகித்தால் இவ்வளவு மலேரியா இருக்குமோ? நியமத்துடன் டாக்டரிடம் போய் வந்தால் இப்படி நோய்கள் வளர முடியுமா? சாதாரண அறிவை வளர்க்கக் கூடிய பேச்சு, நாட்டைப் பற்றியும் வெளிநாடுகளைப் பற்றியும் பேச்சு, இதெல்லாமும் அங்கு நடக்கும். பெண்ணின் மங்களத்திற்காகத்தான் எல்லா முயற்சியும்—பெண் மங்களமாயிருந்தால் நாடும் மங்களமாயிருக்கும். அவள் குடும்பப் பெண்; எதிர்காலத்துத்தாய். அவளுடைய மடியில் வரப்போகும் யுகம் தவழுகிறது. சிறிய கிளப் அறையிலிருந்து நாடெங்கும் பரவும் இந்தத் திட்டங்கள். இதற்காக சந்தா வேண்டும். ஒரு ரூபாயானாலும் அது கோடி ஜனங்களுக்கு சுகத்தை அளிக்கும். பணம் கொடுத்தால் மட்டும் போதும்.

அந்த மலரும் உற்சாகத்தில் எதுவுமே நடக்கக் கூடியதாகத் தோன்றிற்று அவளுக்கு.

இதை எல்லாம் கேட்டு விட்டு 'ம்' கொட்டின பலிதத்திடம் கோபம் கொண்டு மேலே ஏறிப் போய்விட்டாள். நினைக்க நினைக்க அவளுக்கு பலிதத்தின் லாயக்கின்மைதான் தெரிந்தது. கோபமும் வெறுப்பும் அவளுள் கொதித்தெழுந்தன. செருப்பை அவிழ்த்து எறிந்த பொழுதும், கைக் கடியாரத்தை ஒதுக்கிடமாய் வைத்த பொழுதும், புடவையை மாற்றிக் கொண்ட போதும், ஒரு எண்ணம்தான் அவளை அலைக்கழித்தது – இந்த மனிதன் அவளுடைய அன்பிற்குகந்த பாத்திரனல்லன்.

மௌனமாய் உட்கார்ந்திருந்தாள். பலிதத் வந்தான். "ரொம்ப கம்பீரமாயிருக்கிறாயே, சரோஜ்?" "ஆலோசிப்பவன், கம்பீரமாயிருக்கிறான். ஆலோசிக்காதவன் எதையும் புரிந்து கொள்ளுவதில்லை." என்றாள். "ஓ? அப்பொழுது நீ யோசிப்பவள் இல்லையா? யோசி!, யோசி."

சரோஜினி பதில் சொல்லவில்லை.

"என்னதான் யோசிக்கிறாய்? சொல்லேன்." என்றான்.

"சொன்னாலும் உங்களுக்குப் புரியாது."

பலிதத் அவள் முகத்தைப் பார்த்தவாறு "குழந்தை விஷயமா? அது கடவுளின் இச்சை. சரியான உணவு கூட இல்லாத ஏழைக்கு டஜன் டஜனாய் பிறக்கும். கொஞ்சம் சுமாராயிருந்தால் ஒன்று கூடப் பிறக்காது. ரொம்ப நாளாய்ப் பார்க்கிறேன். நீ, ஏதோ யோசித்துக் கொண்டே இருக்கிறாய். இதைப் பற்றி யோசிக்க என்ன இருக்கிறது. தலை எழுத்துப் போல் நடக்கும்".

ஆனால் பலன் நேரெதிராய் அமைந்தது. புயலைப் போல் எழுந்து போய்விட்டாள். அங்கிருந்து. தன் தோல்வியைப் மறைத்தபடி உரத்த குரலில், "இதோ பார், கேள், வெட்கமாய் விட்டதா உனக்கு? வயிற்றில் பசி, முகத்தில் வெட்கம்! ஆனால் குழந்தை பிறந்த பிறகு அப்படி இருக்காது உன் முகம். உன் குழந்தை மனமும் மாறி விடும். எப்பொழுது பிறக்க வேண்டுமா அப்பொழுது தான் பிறக்கும். புரிந்து கொள்."

போய்க்கொண்டே திரும்பிப் பார்த்தாள் சரோஜினி. "என்ன நினைக்கிறீர்கள் நீங்கள். சொல்லுங்கள் பார்க்கலாம்" என்றாள்.

"எல்லாம் புரிகிறது எனக்கு".

"அதில்லை. சமூக சேவையைப் பற்றி உங்கள் மனதில் கொஞ்சங் கூட அனுதாபம் இல்லையா, நீங்கள் மனிதர்தாமா?"

"நான் மனிதனா இல்லையா என்பது உனக்குத் தெரியும்! சரி, இதை எல்லாம் விட்டுத் தள்ளு. நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல், தூண் நிறுத்த வேண்டுமா, விளக்குப் போட வேண் டுமா. எல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். சந்தா கணக்குப் புத்தகத்தை என்னிடம் கொடு, லாபமிருக்கும். திரியைத் தூக்கி விடுபவன் கையில் எண்ணெய் படாமலா இருக்கும்? இதிலெல்லாம் என் ஒத்துழைப்பு கிடைக்கும் உனக்கு."

"அந்த மாதிரி ஒத்துழைப்பு அவசியமில்லை. எங்கள் அபிப் ராயத்தை அங்கீகரிக்காதவர்களின் உதவி வேண்டாம்." பேச்சைத் தொடர்ந்து, "அப்படிப்பட்டவர்களின் பழக்கமும் வேண்டாம், என்று சொல்கிறாய் அல்லவா? ஹோ ;சரோஜ், நீ கொள்கைக்காக மல்லுக்கு நிற்கிறாயே – முழுக்க முழுக்க நாகரிகமடைந்துவிட்டாய்! அரே நேற்றுத்தான் உனக்கு அ ஆ என்று ஆரம்பித்து வைத்தேன். நீ இவ்வளவு ஏறிவிட்டாயே. பெண் இனம் அசுரனைப் போல் வளர்வார்கள் என்று சொல்லுவார்களே, உண்மைதான் அது."

கோபத்துடன் சிரித்தாள் சரோஜினி. "வேடிக்கைதான் உங்கள் முகஸ்துதி"

"பேச்சால் வசீகரிக்க முடியும் என்று நான்தான் முன்னமேயே சொன்னேனே!"

"இந்த வசீகரத்தால் என்ன லாபம்? எங்கள் கொள்கையில் தான் உங்களுக்கு நம்பிக்கை இல்லையே"

"எதில்? நன்கொடை சேகரித்து உலகத்தை காப்பாற்று வதிலா? நிறைய நம்பிக்கை இருக்கிறது. நீ சந்தா சேகரி, சபை கூட்டு. பேர் கிட்டும் எனக்கு. யார் அந்த அம்மாவின் கணவன்? அதோ போகிறாரே அவர், என்று என்னைச் சுட்டிக் காண்பிப்பார்கள். போர் வீரன் மடிவான், புகழ் கிட்டும் போர்த் தலைவனுக்கு. சந்தாவின் குறிப்பு நோட்டை என்னிடம் கொடு போது...; அப்புறம் பார்ப்பாய் என் சாமர்த்தியத்தை".

"நீங்கள் சாட்சாத்–"

"சரியாய்ச் சொன்னாய். வெளியார் கண்களுக்கு முட்டாளாகத் தெரிபவன்தான் புத்திசாலி. ஆனால் எல்லோரும் சிரித்து சிரித்து களைப்படையும் பொழுது அவன் சிரிக்கிறான், புரிந்து கொள்."

சரோஜினி மற்றொரு அறைக்குள் போய்விட்டாள். அவள் பின்னழகை வியந்தபடி பலிதத் யோசனையிலாழ்ந்தான். 'நிசமாகவே ஆச்சரியம்தான். ஒவ்வொரு பேச்சையும் எவ்வளவு திடமாகச் சொல்லுகிறாள்! தன் திறமையை அடிக்கு அடி நிரூபிக்கிறாள். தெரியாதவர்கள் இவளை பி.ஏ.யோ, எம்.ஏ.யோ என்று நினைப்பார்கள்.'

எவ்வளவு விரைவாய் முன்னேறிவிட்டாள். ஆலின் சிறு வித்தானாலும் பெரிய ஆலமரம் அதனுள் இல்லையா? உலகம் ஆச்சரியமானதுதான்!

அந்த அறையுள் சரோஜினி இருந்தாள். அவள் ஒரே விஷயத்தைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தாள். பலிதத் எதை நினைத்துக் கொண்டு அப்படிச் சொன்னான்? பிறகு சிரித்தானே - ஏன்? அவன் காது வரை ஏதாவது எட்டி இருக்குமோ? ஏதாவது தெரியுமோ அவனுக்கு?

சரோஜினி வெறித்த பார்வையுடன் வெளிப்பக்கமாக நின்று கொண்டு தன் அந்தரங்கத்தைப் பரிசீலித்தாள். நெற்றியில் வியர்வை துளிர்த்தது. உதடுகள் செயற்கையாய்க் கோணின.

சந்தேகம் பிறக்கிறதும் மறைவதும் சாதாரணம். ஆகாயத்தில் மேகங்களின் திரட்டும், குளிர் காற்று தினசரி விளையாட்டு. உணர்ச்சிகளின் தீவிரத்தைப் போல், காற்று தானாகவே எழும்புகிறது. கண், கண் என்று கர்ஜிக்கிறது. பிறகு சக்தியை இழந்து விடுகிறது. அடிமைத்தனம் அதற்கு ஒரு விளையாட்டைப் போல.

சரோஜினி அவளுடைய உணர்ச்சியில் காற்றின் தன்மையை அடைந்தாள்.

பலிதத்தின் வீட்டினுள், அந்த இருண்ட குகையுள், அவளுக்கு வேகம் இல்லை. சோம்பி ஊசலாடினாள். வெளியில் போகக் காத்திருந்தாள். ஒரு முறை வெளியே வந்தாள். பிறகு தன் வேகத்தைக் காண்பித்தாள். காற்றாகவே மாறிவிட்டாள்.

சுபதினம் வந்து விட்டது.

நாரீ சமிதியின் ஆரம்ப நாள்–மாலை வேளை. கணக்கற்ற ஆண்களும் பெண்களும் அழைக்கப்பட்டு வந்திருந்தனர். முக்கிய அதிதி கம்பெனியின் சாஹுப் மிஸ்டர் சர்மா.

அவர் வருவார். உற்சாகம் கரை புரண்டோடியது. நம்பிக்கை அலை வீசியது.

சரித்திர விசேஷம் கொண்ட நிகழ்ச்சி.

கூட்டம் கூட்டமாய் வந்து கொண்டிருந்தனர்.

பெண் என்றாலே போதுமே. எதுவாவது இருக்குமா என்று எதிர் பார்ப்பது மனித இயற்கை.

பீடா, பீடி, சிகரெட் இவைகள் தட்டுக்களில் வைக்கப் பட்டிருந்தன. சிலர் கைத்தடியுடனும், சிலர் வெறுங்கையுடனும், சிலர் கையில் டார்ச்சுடனும் வந்திருந்தனர். சிலர் வேஷ்டி கட்டியிருந்தனர். சிலர் ஸுட் அணிந்திருந்தனர். நடந்து வந்தார் கள். பலர் காரில் வந்தனர். சிலர், ஜோடியாகவும், தனியாகவும் வந்தனர். மக்கள் கூடிக் குழுமினர். இன்று ஆரம்ப நாள். ஆண் மனதில் பெண்ணைப் பற்றிய ஆவல் தளும்பியது. எவ்வளவோ திட்டினாலும் திருப்தியில்லை. விஷ்ணு நாய் வேஷம் பூண்டு அலைந்தாராம், சிவனின் அன்பைத் தேடி. விஷ்ணுவின் சந்தானமான மனிதனும் அப்படி அலைந்தான். ஆரம்ப நாள் மாலை, கதவு திறக்கும், திரை தூக்கப்படும், எதிர்பார்த்துக் கிடந்தவர்களுக்குக் கிட்டும் ஆச்சரியம்.

மனதில் பெண், வாயில் வீண் பேச்சு. கிழவன் கோபாகான் மின்னும் கண்களுடன் திரைப்பக்கமாய் பார்த்தவாறு நின்றான். கண்ணாடியை மேலும் கீழுமாய் அசைத்துக் கொண்டு பக்கத்தில் நின்ற வாலிபனை மிரட்டிக் கொண்டு இருந்தார். "என்ன தீனபந்து, நான் சொன்னதைச் செய்தாயா, உன்னால் ஒன்றும் ஆகாது. இரு, இரு, ஒரு பாடம் கற்பிக்கிறேன் பார்". கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டார். கிழ உடலுக்கு ஓய்வு கிட்டியது. தெம்பும் திரும்பியது. திரைப்பக்கமாய்ப்

பார்த்தவாறு திட்ட மறந்து விட்டார். "உம், நான் என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்?"

வாலிபன் தீனபந்துவின் வாயுள் இரண்டு பீடா திணித்திருந்தன. வசவு கேட்டுக்கேட்டு வியர்வை ஒழுக ஆரம்பித்தது. "முடிவேயில்லையா? கோபாகான் எப்பவும் இருக்கப் போகிறதில்லை" என்று தேறினான்.

குள்ள சரீரமுள்ள அகணி ராவுத் தீவிரமாய் சிகரெட் புகையை உள்ளிழுத்துக் கொண்டும் வெளியே விட்டுக் கொண்டும் இருந்தார். கடை, விலை வாசிகளைப் பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நடத்திக் கொண்டிருந்தார். ஆனால் கண்கள் திரையை நோக்கி இருந்தன.

பருத்த உடலைக் கொண்ட சியாம் பாபுவால் வெப்பத்தைத் தாளமுடியவில்லை. இங்கும் அங்குமாய் உலவிக் கொண்டிருந்தார். பசி எடுப்பதாய்ச் சொல்லிக் கொண்டிருந்தார். மூலைக்கு மூலை வேலையைப் பற்றிப் பேச்சு நடந்து கொண்டிருந்தது. தினசரி பிழைப்பு, சுகமும் ஒரு புறம் நடந்து கொண்டிருந்தது. நாலைந்து பேர் பேசாமல் தலை குனிந்தபடி கேட்டுக் கொண்டிருந்தனர்.

எங்கும் ஒளிமயம், காகிதப்பூ, காகித மாலை காற்றில் சலசலத்தன. திரை நடுக்கம் காட்டிற்று. ஆனால் எழவில்லை. நாற்காலிகளில் ஒன்று கூடக் காலியாயில்லை.

அப்புறம் கொஞ்ச நேரத்தில் வாய்க்கு வாய், "சாஹப் வருகிறார். சாஹப் வருகிறார்" என்று கலகலப்பு எழுந்தது. திடீரென்று எல்லோருக்கும் தங்கள் பிழைப்பின் நினைவு வந்தது. சாஹப் அவர். கம்பெனியின் ஆபீசர். அவர்களுடைய பாக்ய விதாதா. எல்லா நம்பிக்கைக்கும், பயத்திற்கும் ஆதாரம். சூழ்நிலை மாறிவிட்டது. கேலியும், வேடிக்கையும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. எல்லோரும் வேலையே குறியாக இருந்தார்கள். சவுக்கடி பட்டதைப் போல் எல்லோரும் அடித்துப் புடைத்துக்கொண்டு எழுந்து நின்றனர். சாஹபை அடுத்து நிற்க அதிகாரம் உள்ளவர்கள் மேல் வழியாய்ப் போயினர். 'சாஹப், 'சாஹப்' என்று முணு முணுத்துக்கொண்டு ஓடினார் கோபாகான். பட்டன்கள் எல்லாம் அவிழ்ந்து விட்டிருந்தன. பரேடிற்குப் போகும் ஹவில்தாரைப் போல் வேகமாய்ப் போனார் சியாம் பாபு. மெல்லிய கால்களை அசைத்து மானைப் போல் துள்ளிக்கொண்டு போனார் அகணி ராவுத். அவர் நடையில் மென்மை தெரிந்தது. பலிதத் பாபு முதலிலிருந்தே வெளிவாயிலில் காத்திருந்தான். தள்ளலும் நெட்டலும் ஆரம்பித்துவிட்டன.

எல்லோரும் பிறருடைய தோளில் கையூன்றி, கொஞ்சம் எம்பி நின்று, கழுத்தை உயர்த்த முயற்சித்து கொண்டிருந்தனர். கூட்டம் நெட்டித் தள்ளியது—"சாஹப், சாஹப்".

அனைவரும் முன் வாயிலின் ஒரு பக்கமாய் நின்றனர். எல்லோருக்கும் முதலில் நின்றாள் சரோஜினி. சாஹப்பின் வண்டி மெல்ல மெல்ல வந்து கொண்டிருந்தது. அதைத் தொடர்ந்து ரணஜித் பாபுவின் மோட்டார், பிறகு பிறருடையவை. என்ன அலங்காரம், என்ன ஒளி, கண்ணைப் பறிக்கும் மோட்டாரின் வெளிச்சத்தில் சரோஜினியின் உடல் சமுத்திரத் தின் நீல வர்ண நீரிலிருந்து எழும்பி வருவதைப் போல் தோன் றிற்று. அவளுடைய மிலி, நீலி, பிந்து இன்னம் பிறரும் நின்றனர். சரோஜினியின் கைகளில் பெரிய ஒரு பூமாலை ஊஞ்சலைப் போல் ஆடியது. சர்மாவின் கழுத்தில் பாம்பைப் போல சூழ்ந்து கொள்ள விரும்பியது போலும் அந்த மாலை! அதற்குத் தகுந்தாற் போல் சரோஜினியின் முகத்தில் புன்சிரிப்பு லேசாகத் தவழ்ந்தது. வண்டி நின்றது. கதவண்டை சிறிய கூட்டம் ஒன்று, மேலதிகாரிகள் வணக்கம் செய்தார்கள். சாஹப் இறங்கினார். உடனே சங்கும் குரவையும், மங்களமாய் ஒலித்தன. கூடவே மெல்ல முன்னேறினார் சர்மா. பக்கத்திலிருந்த ரணஜித் பாபு சிரித்தவாறு. "இந்த வரவேற்பு பாரத நாட்டுப் பாணி, இந்தப் பிரதேசத்தில் வழக்கம்" என்று புரிய வைத்தார். "பேஷ், பேஷ்" என்று சர்மா ஆமோதித்தார். கண் முன் ஒரு அலை எழும்பியது. எதிரே சராஜினி நின்றாள். இருவரும் வணங்கி ஆன பிறகு, அவள் மாலையைத் தூக்கினாள். அவளை ஒட்டினார் போல மிலி, நீலி, பிந்து, மூவரும் நின்றனர். சாஹப் கழுத்தைத் குனிந்து நீட்டினார். சரோஜினி மாலையை அணிவித்தாள். மாலை நீண்டு அவருடைய கைகள் மட்டும் தொங்கின. சரோஜினியின் நெஞ்சம் படபடத்தது. என்னவெல்லாமோ யோசித்து வைத்திருந்தாள். ஆனால் சொல்ல முடியவில்லை. ஏதையோ நினைத்து தன்னை மறந்திருந்த சர்மாவிற்கு யாரோ பக்கத்தில் பேசுவதைப் போலக் கேட்டது. தலை தூக்கிப் பார்த்தார். குள்ளன் பலிதத்தாஸ் பரபரப்புடன், சரோஜினியின் பக்கமாய்ச் சைகை செய்தவாறு, "மை வைஃப் என் மனைவி." என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

நிலைமை சமாளித்துக் கொண்டது. ரணஜித் பாபு எல்லோரை யும் பரிச்சயம் செய்து வைத்தார். கழுத்து மாலையைத் தடவியபடி, மேல்நாட்டு மரியாதையுடன் சர்மா, "உங்களுக்கு

ரொம்ப கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் எனக்கு பெருத்த கௌரவத்தை அளித்து விட்டீர்கள்" என்றார்.

சர்மா சபை மண்டபத்தை நோக்கி அழைத்துக்கொண்டு போகப்பட்டார். நிகழ்ச்சி ஆரம்பித்து விட்டது.

நண்பர்கள் வழியிலேயே பாராட்டினார்கள் பலிதத்தை. "மிஸ்டர் தாஸ், நீங்கள் ரொம்ப பாக்கியசாலி" என்றனர். ரணஜித் உயர்ந்த புகழைச் சொரிந்தார். "என் சார்பாக பாராட்டுகளை சேர்த்து விடுங்கள், மிஸ்டர் தாஸ். நானே ஏன் சொல்லக்கூடாது என்று கேட்கலாம், நீங்கள். என்னால் எவரையும் நேருக்கு நேர் புகழ முடியாது. இது என் பலவீனம் என்று வைத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

பிற ஊழியர் குமாஸ்தாக்கள் எல்லோரும் ஒன்றும் பேசாமல் தங்கள் சிரிப்பால் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். தூரத்திலிருந்து அவளை நோக்கி ஏதோ சுட்டிக் காட்டிப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் என்ன சொல்லுகிறார்களோ, என்று பலிதத் யோசித்தான். கட்டாயம் சரோஜினியின் புகழாய்த் தானிருக்கும். சரோஜினியின் சமாஜம், அன்றைய நிகழ்ச்சி. எல்லாம் தீவிர சர்ச்சைக்குரிய விஷயமாயிருக்கும். அதனால் எல்லோரும், சிறியவர்களும் பெரியவர்களும் அதைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்ல விரும்பினார்கள். நேருக்கு நேர் கீழ் வேலை செய்பவர்களைப் புகழ சம்மதித்தால், கம்பெனி வேலையில் ஹானி ஏற்படும் என்று நினைத்த பலிதத் அவர்களிடம் கொஞ்சம் விறைப்பாகவே நடந்து கொண்டான்.

அடுத்த நாள் சாஹபின் ஸ்டெனோ வந்தான். தெற்கத்தியன் ஒருவன். ரகசியங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டி வெறும் புன்சிரிப்போடு பழக்கத்தை நிறுத்திக் கொள்பவன். அவனிடமிருந்து எந்த விஷயமும் வெளிவராது. அப்படியும் அவன் தானாகவே வந்து "சாஹப் ரொம்ப இம்ப்ரெஸ்ட் ஆயிருக்கிறார்." என்று குசுகுசுத்துவிட்டுப் போனான்.

மனிதனுக்கு வேறு என்ன வேண்டும்? இதுதானே உத்தியோகஸ்தர்களுக்கு சுவர்க்கம்!!

ஆனால் இந்த ஆனந்தத்தைப் பற்றி சரோஜினியுடன் தாராளமாய்ப் பேச வாய்ப்பு கிடைப்பதே இல்லை. அந்த இரவிற்குப் பிறகு சரோஜினியின் கம்பீரமான முகத்தில் எப்பொழுதும் யோசனையையும் கவலையையும் கண்டான். பொறுப்பான பதவி கௌரவச் சின்னம்தான். ஆனால் கூடவே கவலையும் உண்டு அதில் என்று புரிந்து கொண்டாள். முன்பெல்லாம் எவ்வளவு பேசுவாள் தன் வீட்டுப் பொறுப்புகளைப் பற்றி! காய்கறி

நறுக்குவது, அடுப்பு மூட்டுவது அடுக்களை வேலை இத்தியாதி. "என் வேலையை ஒரு சில நிமிடங்களுக்காவது உங்களால் சமாளிக்க முடியுமா? அரிசி எப்படி சாதமாகிறது? ஆண் வர்க்கத்தைச் சேர்ந்த நீங்கள் இதைப் பற்றி என்ன அறிவீர்கள்? என் வேலையைக் கேலி செய்கிறீர்களே. அடுப்பை மூட்டியதும் வீட்டில் எப்படி களை கட்டி வருகிறது, என்பதைப் பற்றி எப்பவாவது நீங்கள் யோசித்ததுண்டா? அடுப்பு எரியாவிட்டால் உலகம் குளிர்ந்து போய்விடும். அது அக்னிதேவனின் இருப்பிடம். அதன் பெருமையை நீங்கள் ஆண் எப்படி அறிவீர்கள்?" என்றெல்லாம் பெருமை அடித்துக் கொள்ளுவாளே "ஆண்களிடம் அக்னியில்லை, பெண்களிடம் இருக்கிறது. ரொம்ப சரி. உள் நெருப்பு உடலில் தெரிகிறது. ஹே, ஹே, ஹே பெண்கள் நெருப்பல்ல. சாஸ்திரம் என்ன உரைக்கிறது? அவர்களிடம் நெருப்பு இருக்கிறது. ஆனால், அதில் விழும் விதை முளை விடுவதில்லை. என்ன அப்படி வயதாய் விட்டது? விதி இருந்தால் தனியே வரும்." எப்படி ஆனாலும் அவள் தன் அடுக்களையைப் பற்றி கர்வப்பட்டுக் கொண்டு பார்க்கிறாள். உண்மையான பொறுப்பு என்ன என்று யோசிக்கிறாள். ஏதாவது, புதிய திட்டம் வகுத்துக் கொண்டிருப்பாள் மனதுள். அவளுடைய கம்பீர மௌனமும் பலிதத்திற்குப் பெருமையாயிருந்தது.

உலகம் சிரிக்கிறது. பலிதத்தாவின் பாக்கியத்தைப் பற்றி, மனதின் குதூகலத்தில் அவனுடைய உணர்விலும் புதிய வெளிச்சம் எழுகிறது. அந்த ஒளியில் முன்பு எப்பொழுதும் கவனிக்காத பல சாதாரண விஷயங்கள் தெரிகின்றன. தோட்டத்தில் மலர் என்ன அழகு! வீட்டில் நின்று கொண்டு தூரத்தைப் பார்க்கும்பொழுது காணும் மண்ணின் வசீகரமான தோற்றம் எவ்வளவு இதமாயிருந்தது! கிணற்றடியில் உயர்ந்து வளர்ந்திருக்கும் ஈரப்புல்லின் மேல் படும் கடும் வெய்யில் எவ்வளவு கவர்ச்சிகரமாகவும், சகஜமாகவும் தெரிகிறது! கண்கள் அதைக் கண்டு குளிர்ச்சி அடைகின்றன. அப்பால் யாருடையவோ காளை நின்று கொண்டிருந்தது. என்ன உயரமும் தாட்டியுமாய் இருந்தது அது! அதன் உடல் பளபளத்தது. நிசமாகவே ஈ கூட வழுக்கி விடும்.. அதன் மேலிருந்து. மகிழ்ச்சியில் மனம் இளகி கருணையும் தோன்றுகிறது. "எத்தனை நேரமாய் கத்திக் கொண்டிருக்கிறான், பாவம் பிச்சைக்காரன். அடே ஹர்ஷ் ஒரு பிடி பிச்சை கொண்டு வாடா."

இரண்டு நாட்களுக்கப்புறம், காலையில் டீயுடன் தினசரிப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தான். ஒரு செய்தியைக்

கண்டு உவப்புடன் கூவி அழைத்தான்."சரோஜ், சரோஜ் வந்து பாரேன் என்ன அச்சாயிருக்கிறதென்று".

சாவகாசமாய் படித்தாள் சரோஜினி. பலிதத் உற்சாகத்துடன் பேசிக் கொண்டேயிருந்தான். "இதைப் பார், சரோஜினி என்று அச்சாகி இருக்கிறது. 'இ' மாத்திரி இல்லை போலும் அச்சில். மற்றதெல்லாம் சரியாயிருக்கிறது. உன்னால் என் பெயரும் பேப்பரில் வந்து விட்டது சரோஜ். ரொம்ப நன்றாக எழுதியிருக்கிறார்கள்."

"இந்த விதமான எத்தனையோ செய்தித் துணுக்குகள் தினம் வெளிவருகின்றன. எத்தனையோ வேலையற்ற பெண்களின் பெயர்களும்தான் நீங்கள் ஏன் இப்படிப் பரபரக்கிறீர்கள். பெயர் பேப்பரில் வந்தால் அதனால் என்ன? வந்தால் வந்தது அவ்வளவுதான்."

"பெரிய சாஹபின் பெயரும் வந்திருக்கிறது. உண்மையில் அவர்தான் இதற்குக் காரணம். அவர் இல்லை என்றால் இது சாத்தியமா? யார் கேட்பார்கள்? எல்லா நாடுகளிலும் அறம் அரசனைப் பொறுத்திருக்கிறது. அவனுடைய உத்தரவும் ஆதரவும் இல்லாவிடில் ஒன்றும் நடக்க முடியாது" பினாச்ரயே நவர்த்ததே கவிதா வனிதா, லதா".

சரோஜினி பொய் கோபத்துடன், "வாயில் வந்ததை எல்லாம் என்ன இப்படி சொல்லிக் கொண்டே போகிறீர்கள், ராஜா யார்? அந்த ராஜாவிற்காக எந்தக் கவிதை, வனிதா, லதா? என்ன கஷ்டம் இது. உங்களுக்கு என்ன வந்துவிட்டது? ஏன் இப்படி ஆகிவிட்டீர்கள்?"

பலிதத் கம்பீரமாய் தலையை ஆட்டியபடி, "கேள், சரோஜ், உனக்குத் தெரியாது. இது ரொம்ப முக்கியமான நிகழ்ச்சி ஆக்கும். பேப்பரில் புகழ் வருவது சாதாரண விஷயமா என்ன? இது ஒருவனுடைய வார்த்தையல்ல, தேசத்தின் அபிப்பராயம். இந்த கௌரவத்திற்காக மக்கள் எதை வேணுமானாலும் செய்யத் தயார். பணச் செலவு, தியாகம் , ஒன்றுமில்லாமல், நமக்கு அது கிட்டி இருக்கிறது. எவ்வளவு பேர் இதைப் படிப்பார்கள் என்று யோசித்துப்பார். நாடெங்கும் படிப்பார்கள். நம் மொழியிலிருந்து பிற மொழிகளில் வெளிநாடுகளில் இந்த சமாசாரம் வெளிவரும். உலகம் முழுவதும் பரவி விடும். ஆப்பிரிக்காவிலும் அமெரிக்காவிலும் மக்கள் "யார் இந்த பலிதத் தாஸும், சரோஜினி தாஸும்" என்று யோசிப்பார்கள். தெரிந்ததா சரோஜ். அவ்வளவு மலிவென்று நினைத்து விடாதே இந்தப் பத்திரிகைகளை" என்றாள்.

"இதில் கிராக்கி என்ன? நான்கு பைசா விலை பேப்பருக்கு. அது மலிவல்லாமல் என்ன? ஒரு முறை படித்துவிட்டால் அப்புறம் அது துடைக்கவோ, பொட்டலம் கட்டவோ தான் பிரயோசனப்படும். இல்லாவிடில் அடுப்பை மூட்ட. இதையா நினைவு வைத்துக் கொள்வார்கள் மக்கள்! உங்கள் பேச்சே விந்தைதான்!

"பாரேன், நீ"

★ ★ ★

ஆனால் பார்த்தது அவன்தான். எங்கோ சஞ்சரித்துக் கொண்டிருந்த உணர்வுடன் அவன் கண்டான். ஒரு முறை பார்த்தால் மறக்க முடியாத அந்தப் பெரிய கார், அவனுடைய வீட்டு வாயிலை அணுகிக் கொண்டிருந்தது. வழியே போய்க் கொண்டிருந்தவர்கள் அங்கேயே நின்றுவிட்டனர். அயலில் வாழ்பவர்கள் மிஸ்டர் சர்மாவிற்கு வணக்கம் செய்ய ஓடி வந்து கொண்டிருந்தனர். இந்தப் பக்கமாய் கையைக் காட்டி குசுகுசுத்துக் கொண்டிருந்தனர். இங்கேதான் வருவார். என்ன செய்வது என்று புரியவில்லை பலிதத்திற்கு.

"சரோஜ், சரோஜ்—" உள்ளே போய் பைத்தியம் போல் இந்த அறையிலிருந்து அந்த அறைக்கு ஓடினான். ஷர்ட் ஒன்றை இழுத்துப் பார்த்துவிட்டு, 'அழுக்கு என்று எறிந்து விட்டான். ஸாக்ஸை எடுத்து மோப்பம் பார்த்துவிட்டு அதையும விட்டெறிந்தான். கயிற்றில் துணிகள் தொங்கி, எல்லாவற்றையும் இழுத்து மூட்டை கட்டி ஒரு மூலையில் மறைத்து வைத்தான். வராந்தாவில் தெரிந்த குப்பைத் தானே பெருக்க ஆரம்பித்தான். திரும்ப உரத்தகுரலில், "சரோஜ், என் பாண்ட் ஷர்ட் . . . அப்புறம், ஹர்ஷா, ஹர்ஷா, நிதாய்." நாற்காலியைத் தூக்கிக் கொண்டு இங்கேயும் அங்கேயுமாய் ஓடினான். தலை வாரவில்லை என்று நினைவிற்கு வந்தது. கண்ணாடியின் முன் போய்க் குதித்தான். சவரம் செய்து கொள்ள முடியவில்லை. வியர்வை வழிந்தது முகத்தில். பான்டை போட்டுக் கொண்டிருக்கும் பொழுது, உள்ளே ஒன்றும் அணியவில்லை என்று நினைவிற்கு வந்தது. பாத்ரூமிலிருந்து வெளியே வந்த சரோஜினி, "என்ன விஷயம்.?" என்று கேட்டாள்.

"சாஹப், சாஹப், என் துணி எல்லாம் எங்கே?" அலமாரியை திறந்து அவனது உடைகளைக் கொண்டு வந்தாள் சரோஜினி. உடுத்திக் கொண்டிருக்கும் பொழுதே வெளியிலிருந்து நிதாய்

வந்து "சாஹப், வந்திருக்கிறார். உங்களைத் தேடுகிறார். வெளியில் உலாவிக் கொண்டிருக்கிறார்." என்றான்.

"அரே, உட்கார நாற்காலி கொடுக்கவில்லையா? இடியட்" நிதாயி, "அவர் உட்கார மறுத்துவிட்டார். தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்." என்றான். எப்படியோ ஒரு வழியாகத் தயாரானான் பலிதத், கோட், டை முதலிய அலங்காரங்களுடன், சரோஜினி வந்து, "ஏன், இன்னுமா போகவில்லை? தலைப்பாகையைக்கட்டி முடிவதற்குள் கச்சேரி முடிந்து விடும்." என்றாள். பளீரென்று ஒரு அறை விட்டாற் போலிருந்தது. அந்த அடியுடன் வெளி ஏறினான். பலிதத். படபடக்கும் மனதுடன் மிஸ்டர் சர்மாவை அணுகினான். அவர் ஷூவின் முனையால் சுரண்டி ஒரு கத்தரிச் செடியின் வேரை பரிசோதித்துக் கொண்டிருந்தார். ஆவலுடன் பின் புறமிருந்து பலிதத். "குட் மார்னிங் ஸர், ப்ரின்ஜல்ஸ், ஸர், . . ." என்று தொடங்கினான்.

வியப்புடன் மிஸ்டர் சர்மா திரும்பி அவனைப் பார்த்தார். அவரையும் அறியாமல் "குட் மார்னிங்" என்று சொன்னார். பலிதத் உற்சாகத்துடன் பேசிக் கொண்டே போனான். ஏதோ ரிபோர்ட்டைப் படிப்பதுபோல. "இது முக்தகேசி கத்தரி. நிறையக் காய்க்கும் ஜாதி. இதற்கு முக்கியமாய் வேண்டுவது கடுகு புண்ணாக்கின் உரம், நல்ல அழுகிய சாணியாயிருந்தால் இன்னமும் விசேஷம்."

சிரித்துக் கொண்டே அவனை அணுகி, அவன் கழுத்தை தட்டிக் கொடுத்தவாறு, சர்மா சாஹப் "எக்ஸெலெண்ட், நீங்கள் மிகவும் விசித்திரமானவர்." என்றார். பிறகு "உங்கள் மனைவி எங்கே." என்று கேட்டார்.

★ ★ ★

மயங்கியவனைப் போல எங்கேயோ தூரத்தில் பார்த்துக் கொண்டிருந்தான் பலிதத். வெளி வாசல் திறந்து கிடந்தது. மோட்டாரும் இல்லை. வேறு யாருமே இல்லை. நினைக்க நினைக்க ஒரு காட்சிதான் தெரிந்தது அவனுக்கு. மோட்டார் போய்க் கொண்டே இருக்கும் காட்சி. எங்கேயோ தூரத்தில் போய்க் கொண்டிருந்தது, கண்ணுக்குத் தெரியாமல். பிறகு சரோஜினி நன்றாய் உடுத்தி, தோல் பையுடன் காரில் உட்காருவது தெரிந்தது. அப்புறம்? – பேச்சு ஆரம்பித்திருக்கும் என்று ஊகித்தான். அவள் அந்த சங்கத்திற்காக வரைந்திருந்த திட்டங்களைப் பற்றிப் பேசுவாளாயிருக்கும். எப்பவும் தயார்

அவள், விஷயம் நன்றாய் அறிந்தவள். கொஞ்சங் கூட சங்கோசமில்லை அவளுக்கு. அவளைக் கண்டதும் அவர், "வாருங்கள் மிஸஸ் தாஸ், உங்கள் சமிதியின் நிலைமையைப் பாாத்து வரலாம்" என்றார்.

அவள் முன்னேறி இருந்தாள், கௌரவிக்கப்பட்டாள். அதை வைத்துக் கொண்டு அவன் சுலபமாய் அடுத்த படிமேல் காலை வைக்கலாம்.

அப்படியும் பழைய ஐதிகம் எங்கிருந்தோ வந்து அவனைச் சூழ்ந்து கொண்டது. மனம் சோர்ந்து போயிற்று. எண்ணங்கள் கலவரப்பட்டுப் போயின. பின் வாங்கி, பின்வாங்கி கடைசியில் ஒரு சுவரிடம் வந்து நின்றுவிட்டான், மனம் "துக்கம் எது, சுகம் ஏது?" என்று கேட்டது. நடுவே முதுகெலும்பிலிருந்து எழும் ஒரு நெருப்பு அலை தலைக்குள் பாய்ந்தது. பிறகு வழக்கமான பணக்கணக்கும் எதிர்கால ஆசைகளின் கனவும் அவனை ஆட்கொண்டு விட்டன. வாய் கொஞ்சம் திறந்தபடி வெளியிலேயே பார்த்தவாறு இருந்தான். கண் திறந்த பொழுது கதவடைக்கும் சப்தம் கேட்டது. நிதாய் வாயிலை அடைத்துக் கொண்டிருந்தான்.

நிதாயிடம் கோபங் கொண்டு ஆபிசரின் ஹோதாவுடன் பலிதத் அவனைத் திட்டினான். "ராஸ்கல், எல்லா காரியத்திலும் சோம்பல். கதவை அப்படித் திறந்தே வைத்து விட்டாய்! ஏதாவது பசு, ஆடு உள்ளே வந்திருந்தால் தோட்டம் காலியாயிருக்கும். உன் அப்பனா பார்ப்பான் இதெல்லாம்! நீங்கள் எல்லாம் எதற்காக இங்கே இருக்கிறீர்கள்?.

"ஹுஜுர்" கையைப் பிசைந்து கொண்டு நிதா சொன்னான். "ஹுஜுர், இதில் என் தவறு என்ன ஐயா."? என்றான்.

"திரும்ப வாயாடுகிறாயா? என்னைத் தெரியுமா, உனக்கு?" கோபமாய் உள்ளே போனான் பலிதத்.

தெரிந்தும் தெரியாமலும் நாம் நம்மையே ஆராயும் பொழுது பிறர் பலர் நினைவிற்கு வருகிறார்கள். அவர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தே நாம் நம்மை அறிந்து கொள்ளுகிறோம். அவர்கள் தாம் நமக்குத் தராசும் எடையும், வாழ்க்கையில் ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் பொழுதும் மனிதன் தன் நன்மை தீமைகளை ஆராய்ந்தவாறு செல்லுகிறான். அப்பொழுது தன்னை அளந்து கொள்ளஅநேக வாய்ப்புகள் கிட்டுகின்றன. சிறிய அளவோடு தன்னை ஒப்பிட்டுப் பார்த்து மகிழ்ந்து போகிறான். நிதா சப்ராஸி, ஹர்ஷை தன் கண் முன்னால் நிறுத்தி புளகாங்கித மடைந்தான். பெரிய அளவில், பலிதத்தோடு தன்னை ஒப்பிட்டு

பார்க்கிறான். அங்கு அவனுக்கு ஏமாற்றம் தான் கிட்டுகிறது. ஊசியைப் பனையோடு ஒப்பிட முடியுமா? சாதாரண மனிதன் தனக்குச் சமமான அளவைத் தேடியவாறு இருக்கிறான். அந்த ஆராய்ச்சியில் ஒரு சமயம் பெரியவனாகவும் மறுசமயம் சிறியவனாகவும் தோன்றுகிறான். பலிதத் பனுவை நினைத்துக் கொள்ளுகிறான். சர்மா பாண்டேயை.

★ ★ ★

பாண்டேயை நினைக்கும் பொழுதே ஏதோ நெஞ்சை அடைத்தது. அவனுடைய தீர்க்க யோசனையும் ஆழ்ந்த தத்துவமும் நினைவிற்கு வந்தன. "மனிதனின் மூளை கடவுளின் உருவாக்கத்தின் சாரம். ஜீவனுக்கு லட்சியம் உண்டு. உயிருடன் வாழ்வதில் எதிர் காலத்துப் பொறுப்பும், நிகழ்காலத்துப் பொறுப்பும் மனிதனைச் சாருகின்றன. வாழ்க்கை போக விலாசத்துக்காக அல்ல. அது ஒரு சாதனை. மனிதனின் வாழ்க்கை மிருக வாழ்க்கையைப் போல் இயற்கை விதிகளுள் அடங்கிக் கிடப்பதில்லை", என்றெல்லாம் பாண்டே பேசுவான்.

சர்மா ஈஸிசேரிலிருந்து எழுந்து, பரபரப்புடன் வராந்தாவில் ஒரு முறை சுற்றிவந்தார். பாண்டேயின் பெயர் எப்பொழுது நினைவிற்கு வந்ததோ ? தெரியவில்லை. ஆனால் மனம் தளர்ந்து விட்டது. எப்பொழுதும் பிறர் உழைப்பை அனுபவித்து அனுபவித்து, சொந்தக்கை தடுமாற ஆரம்பித்தது. இது என்ன வீண் பசசாதாபம் ! ஒவ்வொரு வினாடியும், மரணம், மரணம், எங்கும். இவ்வுலகில் எல்லாவித வாழ்க்கையும் ஒருமிக்க அமுக்கப்பட்டுக் கிடப்பது அவருக்கு நினைவு வந்தது. பட்சி பறக்கிறது. அதற்கும் தன் நிலை உண்டு. புல்லால் மூடப்பட்ட சிறு இடத்தில் கூட எத்தனையோ உயிர்கள் வாழ்கின்றன. அந்தத் தாழ்மையிலிருந்து இலையும் கிளையுமாய் உள்ள பெரிய ஆலைப் பார்க்க முடியும். ஒரு மட்டத்திலுள்ள வாழ்க்கை மற்றொரு மட்டத்திலுள்ள வாழ்க்கையைப் பற்றி அறியாமலிருக் கலாம். ஆனால் அப்படியும் எதிர்ப்பின்பலனை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. புழுவின் உலகம் காலடியில் நசுக்கப்பட்டு அரைந்து போகிறது. துப்பாக்கி வெடியால் பட்சி உலகத்தில் பிரளயமே உண்டாகிறது. பாண்டேயின் உணர்ச்சி வசப்பட்ட உலகம் சர்மாவின் ராஜ போக நிலையைப் பரிகசித்தது. அதன் நெடியால் திடுக்கிட்டு எழுந்தார் மிஸ்டர் சர்மா. பிரக்ஞை திரும்பியது. பாண்டேயும் அவனுடைய கொள்கைகளும் எங்கேயோ, எவ்வளவு தூரத்திலேயோ அல்லவா இருந்தன.

மேகங்கள் மறைந்தன. அரண்மனையைப் போலிருந்தது, சர்மாவின் வீடு. விசாலமான தோட்டம், கவர்ச்சியான அலங்காரங்கள். புழுதியோ, கலவரமோ, கண்ணை உறுத்தும் வறுமையோ எங்கும் இல்லை. வியர்வை கூட இல்லை – வீட்டினுள் அதுவும் உலர்ந்து விடுகிறது. எலும்பு உரம் உண்டு பூக்கள் பெரியதாய் மலர்ந்திருந்தன. ஒவ்வொரு இதழும் ரத்தம் சொட்டியது.

வியர்வையால் தான் உலகத்து எல்லாவித கைவேலையும், திறமையும் இயங்குகின்றன. இது சுறுசுறுப்பற்ற, சோம்பிய ஐதிகம்.

பூசைக்காக பலி, அதுவும் ஒரு ஐதிகம் தான். எல்லாவித வழக்கங்களும் இருந்தன, இருக்கின்றன. இருக்கும். இல்லாமலிருக்கும் பேச்சே இல்லை.

தினசரி தொழில்களடங்கிய இந்தக் கோணலான உலகில் இது அழகாபுரி. என்ன அழகு!

இது சிருஷ்டி சிற்பம். கலையின்றி, தத்துவத்திற்கு என்ன அர்த்தம்? பாண்டே கலையை அறியாதவன். வாழ்க்கையைப் பற்றிச் சொற்பொழிவு செய்பவர்கள், வாழ்க்கையை வென்றவர்களா? பாண்டேக்கு வாழ வாய்ப்பு எப்பொழுதுதாவது கிட்டியதுண்டா? மக்கள் தங்களுடைய புதிய தத்துவம் என்று சொல்லுவது அவர்கள், தங்கள் வாழ்க்கையில் ஏமாற்றமடைந்து உமிழும் பொறாமை விஷம் மட்டுமே.

ஒளியிடும் முகம், உதட்டில் சிரிப்பு, மெல்ல சீட்டி அடித்தவாறு வீட்டின் நாலாபுறமும் சுற்றி வந்தார். இங்கு எதற்கும் ஒரு உத்தேசமும், லட்சியமும் இருந்தது. ரோஜாத் தோட்டம் தன்னை விரும்பிப் பறிப்போரை எதிர் பார்த்துக் கிடந்தது. தோட்டம் முழுவதுமே, "பார் என்னைப் பார்" என்று கூப்பிட்டது. விதம்விதமான நிறங்களில் பூத்து மண்டிக் கிடந்த அந்தத் தோட்டம் கண்ணைப் பறிக்கும் கவர்ச்சியைப் பரப்பியது. எதற்கும் ஒரு கோள், குறி, இருந்தது. மென்மையான கதகதக்கும் சோபா, தனி அறை, அழகிய திரைச்சீலை, தோட்டத்தை நோக்கிச் செல்லும் அகன்ற பாதையும் எதிரே இருந்த வெளியும், எல்லாம் வாழ்க்கை ஆனந்தத்திற்காக, அனுபவிப்பதற்காக. பாண்டேயும் அவனை ஒத்த பிற முட்டாள்களும் இதையெல்லாம் அறியார்கள். அறிந்தால் துறவு வேஷம் மாறிவிடும். தெரியதாதனால், ஆராய்ச்சியும் சண்டையும், தவறான எண்ணமும், பிடிவாதமும் நிலைத்து நிற்கின்றன. அதனால் முதலில் விஷயத்தை சரியாய் புரிந்து கொள்வது

அவசியம். குலைக்கும் நாய்க்கும் தெரியும் – தனக்கு ஒரு வேளையாவது வயிறு நிறைய உணவு அவசியம் என்று. யார் என்ன சொன்னாலும் சுகத்தை விரும்புகிறவன் அதை அனுபவிக்கத்தான் செய்வான். அரசன் ஆள்வான். ஆயிரம் நாய்கள் அவனைப் பார்த்து குலைத்தாலும். இயற்கையாகவே சுகப் பிரியர்கள் வெட்கப்படுவதில்லை. முட்டாள்கள் கத்துவார்கள். அதிர்ஷ்டமில்லாதவர்கள் கலகம் செய்வார்கள். ஆனால் இவர்களை யார் கவனிப்பார்கள் ?

யோசிக்க யோசிக்க ரத்தம் கொதித்தது. கழுத்து வீங்கி இறுகியது. கூர்மையான பார்வை திடப்பட்டது. உதட்டின் நெளி கல்லைப் போல் முனையைக்காட்டிற்று. எதிரிலிருந்த பெரிய கண்ணாடியில் அவருடைய உருவம் தெரிந்தது. ஒரு ஆண், வலிமையான ஒரு ஆண் மகன். மென்மையை கைக்குள் பிடித்து வைக்க அவன் விரும்பினான். நசுக்க விரும்பினான். அமுக்க விரும்பினான். இறுகப்பிடித்துத் தரையில் மோத விரும்பினான். தலைமுறை தலைமுறையாய் யுகயுகமாய் மனித உள்ளத்தில் அடங்கிக் கிடக்கும் குணங்கள் சில சமயம் வெளிப்படுகின்றன. மூல புருஷன் அவதாரம் செய்கிறான். அவனுக்கு சுகம் வேண்டும். இன்பம் வேண்டும். ஏகாதசியில் நீர் கூட அருந்தாத பட்டினி அவசியமில்லை. தன் லட்சியத்தின் வெற்றியைக் கோருகிறான். உபாயத்தின் நன்மை தீமைகளுள் அவன் அகப்பட்டுக் கொள்ளுவதில்லை. எவ்விதத் தடையையும் அவனால் சகிக்க முடியாது. எதுவாயிருந்தாலும் அதை சவுக்கால் அடித்து அடித்து வழியிலிருந்து அகற்றுவது அவனுடைய இயற்கை. அடித்தும் உதைத்தும் தடைகளை நீக்குவது அவனுக்கு இயற்கையாய் வரும்–குதிரை களைத்துப் போய் வியர்வை ஒழுகினாலும், வாயிலிருந்து நுரையைத் தள்ளினாலும் அதைத் தன் தொடைகளிடையில் அமுத்திப் பிடித்துக் கொண்டு குதிக்க வைப்பதும் அவனுடைய இயற்கை. அந்தக் குதிரை வீரன் உன் மத்தனாகவும் கூடும். அந்தச் செவ்வாய் கிரகத்தின் இரத்தவர்ண புருஷன் வாய்ப்பு கிடைக்காததால் மட்டுமே ஹிட்லரையும் நெபோலியனையும் போல் செயல்படவில்லை. அவனுள்ளிருந்த அவாவும் குரூரமும் வித்தியாசமாயில்லை. அவனுக்குப் பலமளிக்க செல்வமும், பத்து நண்பர்களும் இருந்தனர். அதுதான் அவனுடைய உயர்குலப் பிறப்பு. "ஸம்பவாமி யுகே யுகே'. சர்மா சாஹப் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார்.

சிறகு வெட்டப்பட்ட எரிமலை உலவிக் கொண்டிருந்தது. அதன் வெளி உடல், நன்றாய் உடுத்தி கவர்ச்சிகரமாயிருந்தது.

வாழ்க்கை சந்தோஷத்தைக் கொடுத்தது. இன்னமும் கொடுக்கும். உடலுள் காமத்தின் தகதகவென்று எரியும் நெருப்பு, அதன் பசி தீரவே தீராது.

அதுதான் அதன் ஒளி, அதன் யௌவனம்.

அதுவும் சிருஷ்டிபிதாவின் ஆசீர்வாதம் தான்.

யந்திரம் போய்க்கொண்டிருந்தது. ஜீவன் இன்பத்தை நுகர்ந்தது – எவ்விதக் கலக்கலும் இன்றி.

"கண் இல்லை, காது இல்லை, பட்டுவிட்டால் என் தவறில்லை"

ஆனாலும் எல்லாம் தானாகவே கிட்டியதால் கொடுமை செய்யவும் நிர்ப்பந்தம் செய்யவும் அவசியப்படவில்லை.

அவர்களாகவே வந்து தம்மை அர்ப்பித்துக் கொண்டனர். அந்த அர்ப்பணத்தை நிராகரிப்பது குரூரமானதாகும்.

அவருடைய உள்ளம் விசாலமானது; கலக்கமில்லை, துக்கமில்லை, எவ்வித சங்கை கூட இல்லை.

எது கிட்டினாலும் அது அவருக்குக் கிட்ட வேண்டியதுதான்– அவருடைய பதவிக்கு ஏற்ற படையல் தான்.

விட்டில் பூச்சிகள் வந்தால் அது விளக்கின் தவறா ?

ஆரம்பம் நினைவிற்கு வந்தது. அவர் அப்பொழுது பதினைந்து வயதானவர். வேலைக்காரி விலாசியா. ஆனால் அவள் எப்பொழுதும் துப்புறவாய் உடை அணிந்து, தலைவாரி கவர்ச்சிகரமாய் இருப்பாள். நன்றாய் ஆங்கிலத்தில் பேசுவாள். அவளுடைய நடையில் நம்பிக்கையும் ஆசையும் திடமாயிருந்தன. எப்பொழுதும் சிரித்தவாறு இருப்பாள்.

விலாசியா பெரிய வீட்டு அலங்காரம், அவள் ஒரு ஆயா. அவரை முறைப்படி அலங்கரித்து வைக்கும் பொறுப்பு அவளைச் சார்ந்தது. விலாசியா முகத்தைத் துடைத்துவிடுவாள், உடை அணிவிப்பாள். குளிப்பாட்டவும் செய்வாள். சரியாய் பதினைந்தாவது வயதிலிருந்து உடலின் சில அங்கங்களுக்கும், மனதின் அடியிலிருந்த உணர்ச்சிக்கும் நடுவில் உள்ள சம்பந்தம் தெளிய ஆரம்பித்து, ஒரு விளியும் பதிலுமாய் கேட்டது. அந்தக் குரல் மிருகத்தின் காட்டுத் தன்மையின் குரல். பசுவின் வேஷம் கொண்ட முகத்தில், என்றைக்கோ ஒரு நாள், விலாசியா வெறும் வேலைக்காரி மட்டுமா என்று மனதுள் குரல் கேட்டது.

விலாசியா சிரித்தாள் – அவளுடைய குரலும், பல்வரிசையும், சிறிய கன்னங்களும் நினைவிற்கு வந்தன. அவளிடம் எவ்வித

விசேஷ அழகுமில்லை. நினைவில் பதிந்திருந்த அந்த முகத்தை அகற்றிவிட்டு பார்த்தபொழுது, ஒரு பரிச்சயமற்ற உணர்ச்சி அலை எழும்பி, விலாசியா வேலைக்காரி மட்டுமல்ல என்பதை அவனுக்குக் காட்டியது. அவளும் ஒரு மனுஷிதான்.

பதினைந்தாவது வயதில் விலாசியா அவனுக்கு மனித உடலைப் பரிச்சயப்படுத்தி விட்டாள். என்ன ஆச்சரியம்!

விலாசியா அவனுடைய பொம்மையாய் மாறினாள்.

வாலிபம் விரும்பும் மர்மங்களும், ஆவல்களும் வானவில்லைப் போல் ஒளிர்ந்தன. அவன் தனிமையில் அதன் வினோதமான நரம்புகளுக்கு பயிற்சி அளிக்க முயற்சித்தான். இது ஒன்றும் புதிய விஷயமுமல்ல, ரகசியமானதுமல்ல என்று சீக்கிரமே தெரிந்து கொண்டான். சோம்பின சமூகத்தில் மெல்ல மெல்ல ஆராய்ச்சி செய்ய எல்லோருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. எவரும் ஒன்றும் சொல்லுவதில்லை. ஆனால் தெரிந்து புரிந்து கொண்டனர்.

வெளியிலிருந்து பூட்டப்பட்ட அறையின் சிறு விஷயத்தையும் மூடி மறைக்க முடிகிற குணத்தைத்தான் பெரியதனம் என்று சொல்லுகிறார்கள். அது தான் டிஸிப்ளின் – வேறு என்ன?

நாட்கள் ஓடின. எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் நினைவின் ஆழ்ந்த வெள்ளத்தில் எத்தனையோ முகங்கள் நீந்திப் போகும், முழ்கும், திரும்ப நீந்தும். அவன் நிறைய விளையாடினான். பொம்மையை எடுத்து வீசி எறிந்தான், தொலைத்தான், திரும்ப எடுத்துக் கொண்டான். ஒரு விஷயம் அவனுக்குத் தெளிவாயிற்று. உலகத்தில் மனிதர்கள் நடுவில் உள்ள உறவு வெறும் விளையாட்டு உறவு தான், அதைப்பற்றி யோசிப்பது அனாவசியம் பராமரிப்பதும், அனாவசியம். விளையாட்டுதான் முக்கியம். வாழ்க்கையில் 'தி ப்ளே இஸ் தி திங்' முன்னேறிக் கொண்டே போனார் துரை மகன் சர்மா. பின் வாங்கவேயில்லை.

யாரோ வரும் அடி ஓசை கேட்டது.

"ஓ. மிஸஸ் தாஸ்! என்ன விஷயம். வாருங்கள் வாருங்கள். உங்களைப் பற்றியேதான் நினைத்துக் கொண்டிருந்தேன், என்றால் நீங்கள் நம்ப மாட்டீர்கள். உணர்ச்சி மனிதனின் தனி அதிகாரத்திற்குட்பட்டது, இல்லையா? யோசிக்காமல் வாழ முடியுமா மனிதனால்? எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது."

★ ★ ★

மாலை வேளை. டென்னிஸ் விளையாடிக் கொண்டிருந்தனர். ஒரு பக்கம் சர்மாவும் சரோஜினியும், மறுபக்கம் ரணஜித் பாபுவும், சியாம் பாபுவும். பார்த்துக் கொண்டிருந்தனர் மிலியும் நீலியும், கண்டிராக்டர் ஸக்லத்வாலாவும்.

ரணஜித் பாபு தோற்றுக்கொண்டிருந்தார். அவருக்கு கோபமும் வந்து கொண்டிருந்தது. விசேஷ காரணம் எதுவுமில்லை. சியாம் பாபு காலேஜ் நாட்களிலிருந்தே நல்ல தேர்ந்த விளையாட்டு வீரர். அகல முகமும், தேர்ந்த விளையாட்டுமாய் அவர் அங்கே தன் பெருமையைக் காட்டிக் கொண்டிருந்தார். ரணஜித் பாபுவும் நன்றாய் விளையாடுகிறவர்.

ஆயினும் மிலி நீலியின் கேலிச் சிரிப்பை கேட்க வேண்டி வந்தது. அந்தச் சிரிப்பு அரைத்த மிளகாயைப் போல் அவர் உடலில் மோதி எரிச்சலை ஊட்டியது. ஸக்லத்வாலாவும் சர்மாவின் விளையாட்டை மெச்சி ஜயஜயகாரம் செய்தார். ஏனென்றால் இந்த வருடத்து பெரிய பெரிய காண்டிராக்ட் களைப் பிடிக்கும் வேளை வந்துவிட்டது. அவருக்கு ரணஜித் பாபுவின் தயவு இனிமேல் வேண்டாம். ஏனென்றால் நேரே சர்மா சாஹறை அணுகும் நிலையை எட்டி விட்டிருந்தார்.

சர்மாவும் மனம் விட்டு விளையாடிக் கொண்டிருந்தார். பலமான ஸர்வீஸ், வேகமான ஓட்டம், திறமையான ப்ளேசிங் எல்லாமாகச்சேர்ந்து பந்தை மயக்கி அவர் இஷ்டம் போல் ஆடச் செய்தன. அவருடைய நிற்கும், ஒடும் விளையாடும் பாணிகள் கவர்ச்சியை வீசின. முழு மனதோடு, தன் திறமையை எல்லாம் கொட்டி விளையாடினார். அவர் பக்கம் சரோஜினியும் விளையாடினாள். கண்களை அகலமாய் விரித்து, உதட்டைக் கடித்தபடி அவள் புயலைப் போல் ஓடிவரும் பொழுது, ரணஜித் பாபுவின் மனதில் திரும்பத் திரும்ப 'நதிங் ஸக்ஸீட்ஸ் லைக் ஸக்ஸெஸ்' என்று தோன்றியது. நிசமாகவே சர்மா கெலித்துக் கொண்டிருந்தார். மிலி "இன்னும் கொஞ்சம் பலம் போடு அண்ணா, இன்னும் கொஞ்சம்" என்று கூவிக் கொண்டிருந்தாள்.

ரணஜித் பாபு சரோஜினியைப் பார்த்துக் கொண்டிருந்தார். எவ்வளவு அழகாய் சர்மாவுடன் ஒத்து விளையாடக் கற்றுக்கொண்டு விட்டாள், சரோஜினி ! தன் திறமையில் அவளுக்கு முழு நம்பிக்கை இருந்தது. பிரசித்த விளையாட்டு வீரர் சியாம் பாபு கூட அவள் விளையாட்டை பார்த்துப் பிரமித்தார். சியாம் பாபுவிற்கு என்ன வந்து விட்டது?

சியாம் பாபுவால் முழுத் திறமையுடன் விளையாட முடியவில்லை. அந்தத் திறமையை உத்தியோக பந்தத்தின்

தலை பின் இழுத்தது. அவருக்கு எதிராய் விளையாடுகிறவர் அவருடைய மேலதிகாரி. நிலைமைக்குத் தகுந்தாற் போலத் தானே ஏற்பாடு செய்ய வேண்டும் ? மழையைப் பார்த்து குடையைத் திறக்கிறோம். அன்றாட பிழைப்புக்காகத் தான் எல்லாம். அதனால் தான் டென்னிஸ் விளையாடுவது அவசியம். அங்கு பெரிய மனிதர்களுடன் பழக வாய்ப்பு கிட்டுகிறது. அந்த வாய்ப்பை சரியாய் உபயோகித்தால் வழி பிறக்கும். டென்னிஸ் விளையாடிக் கீழிருந்து மேலேறினவர்கள் தங்கள் மேலதிகாரி யைத் தோற்கடித்தா அப்படிச் செய்தார்கள் ? அவரை அவமானித்தா ? இல்லை. அவரை விளையாட வைத்து, வெற்றி பெறவைத்து ! சியாம் பாபுவின் நீதி தெளிவாய்த் தெரிந்தது. ரணஜித் பாபுவைப் பார்க்கும் சமயம் சியாம் பாபுவின் விளையாட்டு வீரம் தலை தூக்க முயற்சித்தது. சட்டென்று கடிவாளத்தைப் பிடித்து இழுக்க வேண்டி வந்தது. சர்மா சாஹிப் விளையாடட்டும், அது தான் சரி.

சரோஜினி உடலை வளைத்து கையை உயர்த்தி ஸ்ட்ரோக் அடிக்கும் பொழுது சியாம் பாபு பார்த்துக் கொண்டே நின்று விட்டார். இங்கும் அங்கு அவர் இடம்மாறி ஆடும்பொழுது சரோஜினிக்கு சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது.

சியாம் பாபுவுக்கு தன் விசேஷ ஸ்ட்ரோக் நினைவு வந்தது. ஆனால் அவரால் அதை அடிக்க முடியவில்லை. அவருடைய அடி குண்டைப் போல் வேகம் உள்ளது. ராக்கெட்டின் வலையைக் கிழிக்கவல்லது என்று சொல்லுவார்கள். ஆனால் எதிரில் சரோஜினி நின்றாளே! அதுவும் சரிதான். அதனால் ரணஜித் பாபு கண்டது சியாம் பாபுவின் கரடி ஆட்டம் மட்டுமே. எதிரே சர்மா சாஹப் காளையைப் போல் எகிறி எகிறிப் பந்தடித்தார். பக்கத்தில் அவள் ஒரு பட்டாம் பூச்சி காற்றில் பறப்பதைப் போல கையிலகப்படாமல் ஆடினாள்.

எத்தனை நேரம்தான் இப்படியே விளையாடுவது? விளையாட்டில் சுவை இல்லை. துக்கம் இருந்தது. ஏதோ நோய்வாய்ப் பட்டவரைப் போல, விகாரமடைந்த மனதுடன் எதையோ யோசித்தவாறு இருந்தார். மனதுள் அவர் எரிந்து சாம்பலாய்க் கொண்டிருந்தாலும் அது வெளியே தெரியாமல் சிரித்துச் சிரித்து விளையாட வேண்டிய நிர்ப்பந்தம்; விளையாடத்தான் வேண்டும். பிடிக்காவிட்டாலும், சமூக மரியாதையை அலட்சியம் செய்தாலும், கடைசியில் மிஸ்டர் சர்மா அவருடைய மேலதிகாரியாச்சே, என்ன செய்வது ?

எப்படியோ அந்த விளையாட்டும் முடிந்தது. சர்மா எழுந்து விட்டார். அப்புறம் சமூக மரியாதையை அனுசரித்து சரோஜினிக்கு அவளுடைய கோட்டை அணிந்து கொள்ள உதவி செய்தார். ரணஜித் பாபு தன் நிலை இழந்தார். அதற்குள் ஒரு இழுப்பில் கோட்டை அணிவித்து விட்டு சர்மா விடை பெற்றுக் கொண்டார். கூடவே 'வாருங்கள் உங்களை வீட்டில் விட்டு விடுகிறேன்' என்று சொல்லி சரோஜினியையும் அழைத்துப் போனார். இருவரும் காரில் உட்கார்ந்து கொண்டனர். ரணஜித் பாபு மேலதிகாரிக்கு நமஸ்காரம் செய்தவாறு அதே நிலையில் நின்று கொண்டிருந்தார். மோட்டார் போய் விட்டது. ஸக்லத்வாலா அவரை மேலும் டென்னிஸ் விளையாட அழைத்தார்.

★ ★ ★

விளையாட்டு முடிந்து விட்டது. எல்லோரும் போய் விட்டனர். ரணஜித் பாபு மட்டும் மிஞ்சினார். தன் வீட்டுத் தோட்டத்தில் ஈஸிசேரில் படுத்தபடி எங்கேயோ பார்த்தபடி இருந்தார். ஆனால் பார்ப்பதற்கு அங்கு ஒருவருமில்லை, ஒன்றுமில்லை. சூன்யத்தில் மனம் ஊசலாடியது. எல்லாவித ஆடம்பரமும் ஒழிந்து போய் விட்டது. மிஞ்சி நின்றது ஆதாரமற்ற சூன்யம். அதில் நிலைமையைப் பொறுத்து ஒளிரும் தான் என்னும் தன்மை வளைந்து, உடைந்து போயிற்று. அதன் மறைவிலிருந்து ஆகாசத்தின் தன்மையைக் கொண்ட வெறுமை வெளிப்பட்டது.

ரணஜித் பாபு உட்கார்ந்திருந்தார் – கடந்தகால ரணஜித் பாபு. எல்லாம் சூன்யமென்றும், அர்த்தமற்றதென்றும், இரண்டு வினாடி காலமே நிலையுள்ளதென்றும் எப்பொழுது ஒரு மனிதன் எண்ண ஆரம்பிக்கிறானோ, அவனுக்கு உலகம் இறுக்க முள்ளதாய்த் தோன்றுகிறது.

ஊண் உணவைப் பற்றி கவலையற்றவனாய் விடுகிறான், சோகமடைகிறான். ஒரு திரைக்குப் பின் மற்றொன்று தெரிகிறது. உருவமாற்றம் மட்டுமே தென்படுகிறது அவனுடைய கண்களுக்கு. வெய்யில் நிழலின் விளையாட்டு அதிகரிக்கிறது. இருள் கவ்வ ஆரம்பிக்கிறது. மனிதன் ஒளியின் ஒவ்வொரு கிரணத்திலும் இருளைக் காண்கிறான். இருளின் ஒளி தெரிகிறது. இருளும் ஒளியும் கலப்பில்லாத சிருஷ்டி சாத்தியமல்ல என்று புரிகிறது அவனுக்கு. இருளின்றி அன்பின் ஒளி கிடையாது. பிறகு தலையைத் தூக்கி சூனியத்தைப்

பார்க்கிறான் — அவனுடையது என்று சொல்லித் கொள்ள ஒன்று மில்லை. ஒரே சூனியம் தான்.

ஆதிகாலத்திலிருந்து இந்த சூனியத்தில் இருந்த பிராணிகளுக்கு கணக்கில்லை. இந்த சூனியத்தில் தவசிகள் வாழ்நாளெல்லாம் யோகத்திலாழ்ந்திருந்தனர். யோகி தன் சுற்றுப்புறத்தில் சில வினாடிகளுக்காக மட்டும் அதே சூனியத்தில் இருக்கிறான். அந்த சமயம் எல்லோரும் ஒன்றே. உலக சிருஷ்டியில் அவர்கள் பரிதாபமானவர்கள். அவர்களிடம் ஒன்றுமே கிடையாது. அவர்களுக்கு உலகம் அர்த்தமற்றதாய் தோன்றுகிறது.

ரணஜித் பாபு உட்கார்ந்து பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார். பகல் மறைந்து விட்டது. இருள் கவ்வ ஆரம்பித் திருந்தது. ஆகாயத்தில் எண்ணற்ற நட்சத்திரங்கள் மின்னின. இவை எல்லாம் அழிவற்றவை. ஆனால் அப்போதைய மன நிலையில் கண்டு களிப்பது இயலவில்லை. இப்போது அவர் இருளைத்தான் விரும்பினார்.

இவ்விதம் தியானத்தில் அமர்ந்திருப்பதால் ஒரு வேளை ஆத்மாவிற்கு சச்சிதானந்த சொரூபத்தின் அறிவு கிட்டலாம். உடல் கறையான் புற்றாகி விடலாம். இக்காலத்து அரசன் பழங்காலத்து வால்மீகி ஆகிவிடலாம். ஆனால் மண்ணும் நீரும் கலந்த இந்தப் பெரிய உலகத்தின் ஈர்ப்பு சக்தியை உயிரால் தட்ட முடிவதில்லை. அரிதாய் எப்போதவாது வெளிப்பட முடிந்தாலும் இரட்டிப்பு வேகத்துடன் மீண்டும் உலக வாழ்க்கையில் ஈடுபடத் தவித்துப் போவான் — கரையைச் சேரும் மீன் மீண்டும் நீருள் குதிக்கத் தவிப்பதைப் போல்.

இருளில் ரணஜித் பாபுவின் தன்மை இது! ஐயோ! எவ்வளவு தீவிரமாய் எண்ணத்துள் புகுந்து கொள்கிறாள் அவள்! சரோஜினி தன்னுடன் அடக்க முடியாத புயலையும், வஜ்ரத்தைப் போன்ற கர்ஜனையையும், சம்ஹாரத்தின் நாதத்தையும், துவம்சத்தின் உக்ரத்தையும் கொண்டு வருவது போல் தோன்றி னாள். அவளை ஊழியின் வேகம் என்றும், கடும் இருள் என்றும், கர்ஜனையுடன் எழும் பிரளய தாண்டவமென்றும் சொல்லலாம். உலகம் பிறந்த நாள்முதல் புயலின் தன்மை மனிதனின் உதிரத்துடன் கலந்து விட்டது. தலைமுறை தலைமுறையாக அது அப்படியே இருந்து வந்தது. மனிதனால் அதை அழிக்க முடியவில்லை. பண்பு என்னும் மறைவில் அது அடங்கிக் கிடந்தது. புதிய உருவத்தில் வெளிப்பட்டு துவம்சம் செய்ய விரும்புகிறது, அந்த ஆதி காலத்துப் புயல். ஆதிகால மனிதன்

வெட்டிய தலைகளின் மாலையைக் கொண்டு வருகிறான், காதலில் எதிரியைக் காண்கிறான், காதலியின் முன் எதிரியின் கொய்த தலையை வைக்கிறான். கல்லுளியுடன் ஆவேசமாய்ச் சுற்றி வருகிறான். அவனுடைய நகங்கள் நீண்டவை, விஷமுள்ளவை, உடலெல்லாம் மிருகத்தைப் போல் மயிர். எதிரியின் கொய்த தலையைத் தேடி அலைகிறான் – ஆவேசத்துடன் ஐயோ! சரோஜினி.

★ ★ ★

"நீங்கள் இவ்வளவு ஆஸ்திகனா ? நிசமா? நீங்கள் இப்படி பேச்சுக்கு பேச்சு கடவுளை இழுக்கிறீர்களே ! எங்கேயாவது துறவறம் பூண்டு விடுவீர்களோ என்று பயமாயிருக்கிறது".

"நிசமாகத்தான், சரோஜ், குளித்துவிட்டு பகவத் கீதையைப் பாராயணம் செய்யும் பொழுது எனக்கு ரொம்ப அமைதியாயிருக் கிறது. யார் எனக்கு எல்லாம் அளித்தது, கொஞ்சம் யோசித்துப் பார். "நான் தான் செயல், நானே செய்கிறவனும். என்னைத் தவிர வேறு கதி கிடையாது". ஆரம்ப நாட்களை நினைவு படுத்திக் கொள், எவ்வளவு தூரம் வந்து விட்டோம்! மேலே நடப்பதையும் பற்றி யோசிக்கிறேன். மோட்டார் இருக்கும் ; ஒரு வீடு, நிலபுலன், கொஞ்சம் முதல், உனக்கு எவ்விதக் குறைவு மிராது. என்னை உலகம் தூற்றாது. நான் என் கடமையைத் தான் செய்கிறேன். ஆனால் நான் நன்றி கெட்டவனல்ல. அடிக்கு அடி கடவுளின் கருணை உள்ளம் தெரிகிறது. இவ்வளவு தூரம் வந்தாயிற்று. எனக்கு வயசாகவில்லை. மனதில் வலு இருக்கிறது. முதலில் கடவுளை வணங்கி விட்டுப் பிறகு பிற விஷயங்களைப் பற்றி யோசிக்கிறேன்".

சரோஜினி சிரித்துக் கொண்டு "நீங்கள் முதல் விஷயத்தை யோசியாமல் கடைசியைப் பற்றி யோசிக்கிறீர்கள். அப்படி கடைசியைப் பற்றி யோசிக்கிறவர்கள் துறவிகளாய் விடுவார்களாம். மனிதனின் முடிவு சுடுகாட்டில் தான். உடல் எரிந்து சாம்பலாய் விடுகிறது. ஒன்றும் இருப்பதில்லை. ஆத்மா பறந்து விடுகிறது, கூட எதையும் எடுத்துப் போகாமல். இது தான் சாஸ்திரம்".

"மாலை போடு அப்பொழுது".

"ஒரு முறை தவம் கலைந்தால் திரும்பத் தவம் செய்ய முடியாது, என்று தெரியுமே உங்களுக்கு. அந்த வழி இனிமேல் திறவாது உங்களுக்கு. ஏன் இந்த பேச்செல்லாம் ? கார் வாங்க வேண்டுமானால் வாங்குங்கள். வீட்டைப் பெரிதாக்க வேண்

டுமானால் அப்படியே ஆகட்டும். ஆனால் இந்தத் துறவு வேடம் வேண்டாம்."

"இல்லை, இல்லை, வேடிக்கை போதும் இங்கிருந்து ஆபிஸ் வரைக்கும் வெயிலில் நான் நடந்து போவது பார்க்க நன்றாய் இருக்கா ? எனக்கும் கஷ்டமாயிருக்கிறது. சொந்தமாய் வண்டி இல்லாவிட்டால் என்ன தொந்திரவு தெரியாதா? உனக்கு எல்லாம் தெரியும். யோசித்துச் சொல். கார் அவசியமா இல்லையா?

"கட்டாயம் அவசியம் தான். இதைப் போல் கேட்க வேண்டுமா என்ன ? ஆனால் வாங்குகிறதானால் மிஸ்டர் சர்மாவின் வண்டியைப்போல் பெரிதாய் வாங்க வேண்டும். அதில் என்ன சுகமாயிருக்கிறது தெரியுமா? அதன் மெத்தையில் உட்கார்ந்தால் எங்கோ சூனியத்தில் ஊசலாடுவதைப் போல் ஒரு விவரிக்க முடியாத உணர்ச்சி கிட்டுகிறது அதில் உட்கார்ந்தவுடனேயே தூங்கத் தோன்றுகிறது. அந்த ாதிரி வண்டி வாங்கமுடியுமா உங்களால்".

பலிதத் திடுக்கிட்டுப் பார்த்தான்.யாரோ அவன் காதில் கொதிக்கும் எரிமலைக் குழம்பைக் கொட்டியது போலிருந்தது. நெஞ்சை வலித்தது. சரோஜினி எங்கோ சூனியத்தில் அமிழ்ந்து போவதைப் போல் தோன்றினாள். கூடவே அவளுடைய மனச்சாட்சியும் விழுந்து தொலைந்து போவதைப் போன்ற ஒரு பிரமை.

இவள் அவனுடைய மனைவி. அவளால் சர்மாவின் காரில் கிட்டும் சுகத்தைப் பற்றிப் பேச முடிந்தது.

சரோஜினி அவனைப் பார்த்துத் திருப்தி அடைந்தாள். அம்பு இலக்கில் தவறாமல் பட்டுவிட்டது. அடங்கிய சிரிப்புடன், "ஏன் வாயடைத்துப் போய்விட்டது? பணத்தைப் பற்றி கவலையா? நிசம்தான். இதெல்லாம் அவரவர் பண பலத்தைப் பொறுத்திருக்கிறது. மிஸ்டர் சர்மாவின் வண்டியைப் பார்த்திருக்கிறீர்கள். உங்களால் அப்படி ஒன்று வாங்க முடியுமா?"

"புரிந்து கொள்" பலிதத்தால் "சரோஜ்" என்று சொல்ல முடியவில்லை. அது அவளுடைய காதல் பெயர். "புரிந்து கொள் நீ. பணமுடை இல்லை. கடவுள் அவ்விஷயத்தில் வஞ்சனை செய்யவில்லை. பணம் ஒரு பொருட்டல்ல. அதற்காக விசேஷ முயற்சி அவசியமல்லை. அவர்களாகவே பார்த்து வாங்கி வீட்டிற்குக் கொண்டு வந்து விடுவார்கள். ஆனால் பணம் சம்பாதிப்பது ஒரு விஷயம், மக்கள் கேலி வேறே விஷயம்"

"மக்கள் கேலியா?", வில்லைப் போன்று வளைந்த புருவங்களுடனும், முகத்தில் ஆவல் தெறிக்கவும், உலகத்தை வென்று விட்ட ஒருவிதப் பெருமிதத்துடனும் சரோஜினி கேட்டாள். "பெரிய வண்டி வாங்கினால் மக்கள் சிரிப்பார்கள் என்று பயந்தால், அப்பொழுது எல்லா பெரிய மனிதர்களும் அதற்கு இலக்காய் இருப்பார்கள். மக்கள் சிரிப்பார்கள் என்று நீங்கள் பின் வாங்குவீர்களா ?" 'நீங்கள்' என்பதை கொஞ்சம் பலத்துடன் சொன்னாள். சரோஜினியிடம் எவ்வளவு நேர்மை, எவ்வளவு எளிமை, எவ்வளவு அழகு!

ஆனாலும் அந்த எளிமையின், நேர்மையின் அடியில் மறைந்து கிடந்த குரூரத்தை பலிதத் உணர்ந்தான். உள்ளம் எரிந்தது. வெற்றி வாதியின் உருவம் மறைந்தது. ஒரு சாதாரண மனிதன் புறப்பட்டான். பின்பு அவள் முகத்தைப் பார்த்து மெல்ல மெல்ல அடங்கி விட்டான். சரோஜினி சிரித்துக் கொண்டிருந் தாள். அந்த முகத்தைப் பார்த்து அவனால் எல்லாவற்றையும் மறக்க முடியும். "இத்தனை காலத்திற்குப் பிறகு தோன்றி யிருக்கிறது. நானும் கார் வேண்டும் என்று பிடிவாதமா செய்தேன் ? வேலையுண்டு. ஃபைல் உண்டு என்றிருக்கிறீர்கள். கார் இருந்தாலும் உங்களை எவ்வளவு தூரம் வரை என்னால் அழைத்துப்போக முடியப் போகிறது. உழைக்கத் தெரியும் உங்களுக்கு, அவ்வளவு தான். சுகம் என்பதைக் கொஞ்சமாவது அறிந்திருக்கிறீர்களா? ஒரு மணி நேரம் உலவி வந்தீர்களானால், அமைதியும், ஆனந்தமும் கிட்டும்."

பலிதத் பூரித்துப் போனான். எப்பவும் போல் தன் செயல்படும் திறமையை விளக்கியவாறு, "முழுவிஷயமும் உனக்குத் தெரி யாது. இந்தக் கார் அப்படி என்ன தானாகவே கிடைத்து விடுமா என்ன? 'ஸேட்ஜி கார் இல்லாமல் ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. நான் சொல்லுவது உங்களுக்குக் கட்டாயம் புரியும் என்று நம்புகிறேன். என்று நான் சொல்ல வேண்டியதுதான். "பாபுஜி, ரொம்ப நல்லது" என்பான். அவ்வளவு தான்" என்றான்.

★ ★ ★

அன்று இரவு ஸகலத்வாலாவின் வீட்டில் ஒரு பார்ட்டி இருந்தது. காரணம் ஒன்றுமில்லாவிட்டாலும் இந்த மாதிரி விசேஷ பார்ட்டிகள் வருடம் முழுவதும் யார் வீட்டிலாவது நடந்து கொண்டிருக்கும்.

இந்தப் பார்ட்டியின் விசேஷம் என்ன என்றால், அது சாதாரண மனிதர்களின் கண்ணில் விரலைக் குத்தி, மேலதிகாரி

களின் நிலை சாதாரண மனிதர்களின் நிலையிலிருந்து வித்தியாசமானது என்று அறிவுறுத்தியது. வெளியில் "ஒத்து, ஒத்து. ஜாக்கிரதை. ஓடிப்போ" என்று ஒலித்தது அந்த அறிவுறுத்தல். பெரிய பாதை, பெரிய காம்பௌண்ட், உள்ளே அகன்ற மைதானம், பெரிய தோட்டம், ஏற்றத்தில் பெரிய வீடு. பெரிய முன் வாயில், அதன் பக்கத்தில் பிச்சுவாவுடன் கூர்க்கா காவல்காரன். நாக்கைத் தொங்கவிட்டபடி உள்ளே ஒரு நாய் நின்றது. "நகரு, நகரு, இங்கே வேலையில்லை." கொஞ்ச தூரத்தில் புழுதி படிந்த அழுக்கு வீதி. ஒன்றுடன் ஒன்று சேர்ந்தாற் போல் வீடுகள், கும்பலும் நெரிசலுமாக.

உள்ளிருந்து பலவித வெளிச்சங்கள் ஒளி வீசின. அகன்ற பாதையில் வெளிச்சத்தில் மின்னியவாறு நின்றன வரிசை வரிசையாய் கார்கள். வழிபோக்கனின் கற்பனையில் இதுதான் இந்திர பவனம். வேறொன்றும் இல்லாவிட்டாலும் தூரத்தி லிருந்து பார்த்து மகிழ முடியுமல்லவா? ஏன் இப்படி என்று ஆராய்ந்து, ஐந்து விரல்களும், சமானமல்லவென்றும், பூர்வ ஜன்ம பாக்கியம் என்றும் சமாதானமடைகிறான்.

பூகம்பம் வந்து மக்கள் நசுங்கி மடிகிறார்கள். பஞ்சம் தொடருகிறது. இந்த பாக்கியமும் பூர்வ ஜன்ம பலன்தான். மனிதத் தன்மை நொறுங்கி மண்ணோடு மண்ணாய் மறைகிறது. வழிப்போக்கர் தன் ஐந்து விரல்களைப் பார்த்துக் கொண்டு விதியின் நியமத்திற்கு தலை வணங்குகிறான். இருபக்கமும் இவ்விரண்டு விதமான பாக்கியங்கள், நடுவில் நீண்ட முடிவில்லாத சுக துக்கங்களின் சாசுவதமான பாதை.

உட்புற ஹாலில் ஒரு நீண்ட மேஜை கிடந்தது. பூவேலை செய்யப்பட்ட ஒரு துல்லிய வெண்மையான விரிப்பு அதை முழுவதும் மூடி மறைத்தது. அதன் மேல் விதவிதமான அலங்காரத் தட்டுகளிலும், பாத்திரங்களிலும் உணவுப் பதார்த்தங்கள் பரிமாறப்பட்டிருந்தன. நாற்காலிகளும், சுவரும், எவ்விடமும் மின் ஒளி வீசியது. எங்கும் ஒரு மாயா லோகம் உருவாக்கப்பட்டிருந்தது. மாயாவிகளைப் போன்ற விருந்தினர் பட்டாளம்.

சாப்பாடு நடந்து கொண்டிருந்தது– திராக்ஷைக் கொத் தொன்றை தன் வாயண்டை கொண்டு வந்தவாறு குபேரன், ஸக்லத்வாலா, "ப்ளாக், கறுப்பு மார்க்கெட் இதெல்லாம் என்ன? பொறாமைப் படுகிறவர்கள் பெயர் வைக்கிறார்கள், புத்தியில் வாதவர்கள் இதை எல்லாம் கேட்கிறார்கள், வியாபாரத்துடன் எவ்வித சம்பந்தமும், இல்லாதவர்கள் அதை மனனம் செய்கின்

றனர். நாலா பக்கமும் கறுப்பு மார்க்கெட், லஞ்சம் இவைகளின் ஆரவாரம். ஒரு பொய்யான பயம் காரணமாய் மக்கள் ஆரவாரம் செய்கின்றனர். பேப்பரில் பிரசுரிக்கின்றனர். இதை எல்லாம் கேட்டு சாதாரண மனிதனின் நெஞ்சு வெடிக்கிறது. வியாபாரம் எப்போதும் வியாபாரம் தான் என்று அவர்கள் புரிந்து கொள்ளுவதில்லை" என்றான்.

மறுபுறம், பிரசித்த வியாபாரியான பன்னாலால் சாப்பாட்டிலேயே கவனமாய், கழுத்து நரம்புகள் புடைக்க வேகமாய் உண்டு கொண்டிருந்தான். "ரொம்ப சரி நீங்கள் சொல்லுவது. வியாபாரத்தில் லாபம் இருப்பதைப் போலவே நஷ்டமும் உண்டு. நஷ்டமடையும் பொழுது வியாபாரி மண்ணைக் கவ்வுகிறான். அதனால் லாபம் கிட்டும் பொழுது இரண்டு காசு சம்பாதிக்க அவனுக்கு அதிகாரமுண்டு. வியாபாரி எவருக்கும் கெடுதல் செய்ய நினைப்பதில்லை. நாங்கள் எல்லோருடையவும் நலத்தையே விரும்புகிறோம். கடவுளே, மனிதனுக்கும் பசுவிற்கும் நல்லதைச்செய், எல்லோருக்கும் மங்களமும் லாபமும் கிட்டட்டும். ஆனால்" எங்களைக் கரிக்கிறவர்களும் பலமுள்ளவர்தாம். உலக வழக்கமே அப்படி ஆகிவிட்டது."

ஸக்லத்வாலா சிரித்தபடி, "நீங்கள்சொல்லுவது உண்மை தான், உங்களைத்தான் அதிகமாய்த் திட்டுகிறார்கள் மக்கள்" என்றான்.

"அது என் தலையெழுத்து" என்றான் பன்னாலால். "கோசேவா என்று கேட்டாலும், நாசேவா என்று கேட்டாலும் நான் மறுக்காமல் நன்கொடை அளிக்கிறேன். அதில் எவ்வளவு செலவாகிறது என்று எனக்குத்தான் தெரியும். அப்புறம் ஏழை எளியவர்களுக்கு அன்னதானம், சிலருக்கு மிட்டாய் . ."

ஸக்லத்வாலா, "இன்னொரு விஷயம். உன் காரியத்தை முடித்துக் கொடுத்த குமாஸ்தாவிற்கு ஏதாவது தர வேண்டாமா? இரவு பகலாய் அவன் ஏன் உனக்காக உழைக்க வேண்டும்? பிறர் வேலை எல்லாம் ஒதுக்கி விட்டு உன் வேலையை ஏன் முதலில் செய்வான்? அவனுக்குக் கொடுப்பது புண்ய காரியம். கொடுத் தால் அவனைக் கெடுக்கிறாய் என்பாய். கொடுக்கா விட்டால் வசவை வாங்கிக் கட்டிக் கொள்ளுவாய். இவ்வுலகத்தில் புண் ணியமும் இல்லை. சத்தியமும் இல்லை . ."

"ராம்-ராம் என்று சொல்" பன்னாலால் பேச்சைத் தொடர்ந்தார். "இந்த மாதிரியான உலகம் நிலைக்காது. சந்தா கொடுத்தபிறகு, அன்னதானம் செய்தபிறகு, மிஞ்சியதில் பெரும் பாகத்தை வருமான வரி முழுங்கி விடுகிறது. நாங்கள் லாபமா

பண்ணுகிறோம்? மக்கள் வந்து உள்ளே பார்க்கட்டும். உழைத்தால் தான் வரும்படி. கூலி ஆள் வேலை செய்து தனக்காக சம்பாதிக்கிறான். நாங்கள் உழைப்பது பிறருக்காக, மிஞ்சி நிற்பதெல்லாம் இந்நாட்டிற்காகத்தான். இங்கேயே வியாபாரத்தில் செலவாகும். பத்துப்பேர் பிழைத்துப் போவார்கள். வேலை கிடைக்கும். யாரும் எதையும் கட்டிக் கொண்டு போகப் போவதில்லை".

"அதுவும் சரிதான்"

பலிதத் சியாம்பாபுவைத் தன் முழங்கை முட்டால் குத்தினான். "கேட்டுக் கொள் சியாம் பாபு. வியாபாரத்தின் மேம்பட்ட நீதிகளை. கவனமாய்க் கேளுங்கள். இவர்களுக்கு நம் கம்பெனியுடன் ஆழமான சம்பந்தம் உண்டு. சர்மா பாபுவும் வரவில்லை. ரணஜித்பாவும் வரவில்லை. ஏனோ? இருவரும் வேட்டை ஆடப் போயிருந்தனர் – என்னவாயிற்று?"

"அதெல்லாம் பெரிய விஷயம்" – சியாம் பாபு பதிலளித்தார். அவருக்கு சாப்பாட்டில் தியானம்

"சாயங்காலம் திரும்பி வருவதாகப் பேச்சு. மிஸ்டர் சர்மாவாவது வருவார் என்று நினைத்தோம். அவர்களில்லாமல் ஒன்றும் சரியாயில்லை."

'உம்' கொட்டினார் சியாம் பாபு. சாப்பாடே கவனமாய்.

பக்கத்தில் இரு பெண்களிருந்தனர் – குமாரி நாக், ஸ்ரீமதி பால். ரவீந்திர சங்கீதத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். "ரவீந்திர சங்கீதம் எப்படி"–குமாரி நாக் ஆரம்பித்தாள். பேச்சை முடிக்காமல் தன் நீண்ட சிவந்த நகங்களைப் பார்த்தாள். அங்கு ஒரு பதிலும் கிட்டவில்லை அவளுக்கு.

"அந்த சங்கீதத்தில் இருக்கும் ஒலியும், வேகமும் பசுமையும் வேறு எதிலும் கிட்டாது. அதற்கு உவமையே கிடையாது" என்றாள் ஸ்ரீமதி பால்.

"ரவீந்திர சங்கீதத்தில் என் மனம் ஈடுபடும் பொழுதெல்லாம் விவரிக்க முடியாத ஒரு உணர்ச்சி என்னை ஆட்கொள்ளுகிறது." சிரித்துக் கொண்டே சொன்னாள் குமாரி நாக். ஸ்ரீமதி பால் கனவுலகில் மிதப்பதைப்போல் மென்மையாய். – "நான் சொல்லுகிறேன் அந்த உணர்ச்சியைப் பற்றி. ஏதோ ஒன்று, மென்மையும் கடுமையும் கலந்த ஒன்று, நாலா பக்கமும் சூழ்ந்து தழுவிக் கொள்ளுகிறது. எல்லாம் இளகி உருகுவதைப் போன்ற உணர்ச்சி உள்ளத்தை ஆட்டுகிறது. ஸ்தூலமும் சூட்சுமமும், சூட்சுமமும் ஸ்தூலமும் எல்லாம் ஒன்று கலந்து எல்லையற்ற ஒரு பாதையில் வேகமாய் ஓடுகின்றன. அதுதான் ரவீந்திர சங்கீதம் –

எல்லையற்ற ஒன்றின் அசைவு" என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினாள்.

ஸ்ரீமதி பால் குமாரி நாக்கின் பக்கமாய் கோணலாய்ப் பார்த்துக் கொண்டு, தன் சாதாரண நிலையிலிருந்தாள். தன் தாய் மொழியை ஆங்கிலக் கொச்சையில் பேசினாள்.

"இது தான் ரவீந்திர சங்கீதம். புரிய வைக்க முடியாது என்னீர்களே நீங்கள் ?" குமாரி நாக் " ரொம்ப சரி, ரொம்ப சரி" என்று ஆமோதித்தாள்.

தூரத்திலிருந்து அவர்கள் பக்கமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார் நவகிஷோர் பாபு. பவுட்ரும் கிரீமும் அவருடைய சியாமள நிறத்துடன் கலந்து ஒரு புதிய நிற முகமூடியாய்த் தெரிந்தன. எண்ணெய் சொட்டும் நீண்ட முடியை நடுவில் வகுத்து இரு புறமும் தொங்க விட்டுக்கொண்டிருந்தார். தொள தொளப்பான குர்தாவும் பூவேலை செய்த மேல் துணியும் அணிந்திருந்தார். அவருடைய மனத்திரையில் ஸ்ரீமதி பாலும் குமாரி நாக்கும், மேஜையும் பிறவும் மாறி மாறி ஆடினர். தன் கண்கள் வழியாய் அவர் விருந்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் திருப்தியும், களிப்பும் தாண்டவமாடின. எவ்விதத் தடையுமின்றி எல்லோரும் விருந்துண்பதில் தங்களை இழந்திருந்தனர். எவ்விதக்கலவரமும் இல்லை. எல்லோரும் ஒருவரை ஒருவர் உபசரித்தவாறு உண்டனர். "இன்னம் ஒரு துண்டு எடுத்துக்கொள்ளுங்களேன்". அங்கு எல்லோரும் கூட்டாளிகள், வாழ்க்கையில் தங்கள் தங்கள் வழியே அவரவர் தனித்தன்மையைக் காப்பாற்றியபடி செல்பவர்கள்.

பதார்த்தங்களின் விலையைக் கணக்கிட்டபடி, தலை குனிந்து உண்டு கொண்டிருந்தார் தீனபந்து பாபு. விலை உயர்ந்த பொருள்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டார். ஹரிபாபு நடுவில் பேச்சை ஆரம்பித்தார். "ஹோ. ஹோ, ஹோ ஹோ தீனபந்து பாபு ரொம்ப புத்திசாலி. ஹோ, ஹோ – "

"ராமால் வரமுடியவில்லை." என்றார். தீனபந்துபாபு. "வெளியூர் போக முயற்சி செய்து கொண்டிருக்கிறானாம். நடுதுரை தன் பெண் விஷயத்தை அவனிடம் சொல்லப் பார்க்கிறார் – நானும் முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அந்தப் பெண் ஒத்து வருமா? அவன் வெளி நாட்டிற்குப் போக பைத்தியமாய் அலைகிறானே?"

"இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யுங்கள்" என்றார் தளேசுவர் பாபு. "அப்புறம் ஆகா விட்டால் என்னைக் கேளுங்கள். ஏதாவது சாக்கில் அவளுடைய

நடனத்தைக் காண்பிக்க முடியாதா? பார்ப்பவர்களின் தாகத்தைத் தணிக்கும்படி வெகு சாந்தமாய் ஆடுகிறாள் அவள். எல்லோரும் உணர்ச்சி வசப்பட்டுப் போகின்றனர். அடுத்த மாதம் ஒரு நடன நிகழ்ச்சி இருக்கப் போகிறது. இங்கு ராமை வரச் சொல்லுங்கள், அப்புறம் என்ன நடக்கிறது பாருங்கள்".

"ஹோ! ராம் வருவானா? நம்மைப் போலவா அவன்?. வெளியூர் மோகம் பிடித்தாட்டுகிறது அவனை."

"அப்படிச் சொல்லிவிடாதீர்கள். எப்படியாவது காரியம் ஆக வேண்டும். ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்தால் கோடிப் புண்ணியம் உண்டு. தெரியாத விஷயமல்லவே உங்களுக்கு? வரன் உத்தமனாயிருந்தால் நடுதுரையை அவன் வெளியூர் போகும் செலவை ஒத்துக் கொள்ளலாம் அல்லவா? அவரிடம் இல்லாத பணமா ? பேச்சை ஆரம்பிக்கட்டுமா நான்?" என்றார் ஹரிபாபு

"எனக்கு தைரியமில்லை. என்னை அவன் 'சித்தப்பா என்று அழைக்கிறானே தவிர உறவு ஒன்றுமில்லையே!"

அப்புறம் அவர்கள் உத்தியோக விடயமாய்ப் பேச ஆரம்பித்து விட்டனர். அதற்குத் தான் வேளை சமயம் ஒன்றும் கிடையாதே.

★ ★ ★

சரோஜினி மேஜையருகே அமர்ந்திருந்தாள். ஒருபுறம் அடங்காப் பசியுடன் சியாம் பாபு இருந்தார். எதையும் கவனியாமல் கருமமே கண்ணாயிருந்தார். சரோஜினி நன்றாய் அலங்கரித்துக் கொண்டு வந்திருந்தாள். எதைப் பற்றிப்பேசுவது, எப்படிப் பேசுவது என்றும் மனதில் உருப்போட்டு வைத்திருந்தாள். ஆனால் எதுவும் எடுபடவில்லை. அவளால் அன்று மலர முடியவில்லை,

முழுச்சித்திரமாக அவளால் சோபிக்க முடியவில்லை. அதன் ஒரு அம்சமாகத்தான் இருக்க முடிந்தது. அத்தனை ஒலிகளுமாகச்சேர்ந்து எழுப்பிய கலவரத்தில் அவளுடைய குரல் தனியாய் ஒலிக்கவில்லை.

அவளுடைய தனிப்பெருமை அன்று ஏனோ அடங்கிக் கிடந்தது.

அன்று அவளுடைய தன்மைக்கு ஒளி ஊட்ட, அதை பிடித்திழுத்து வெளியில் நிறுத்தி பிரகாசிக்கச் செய்ய, அங்கு யாரும் இல்லை. எல்லோரும் அவரவர்களின் நண்பர்களுடன் சேர்ந்து சேர்ந்து கட்டுண்டு கிடந்தனர். அவளைக் கவனிப்பார் யாருமில்லை. சர்மா இல்லை, ரணஜித் பாபுவும் இல்லை. வெளியில் மேகம் திரண்டு கவிந்தது.

நட்சத்திரங்கள் ஒளி மங்கி அணைந்து போயின. கும்மிருட்டு ஆகாயத்தில் ஆயிரமாயிரம் நாகங்கள் படமெடுத்தாடுவது போல் ஆயிரம் மின்னல்கள் பளிச்சிட்டன. இன்று என்னவோ எல்லாம் ரொம்பத் தீவிரமாயிருந்தது. நிமித்தமாயிருக்குமோ? பிறகு ஆகாயத்தின் ஒவ்வொரு இருண்ட மூலையிலிருந்தும் கட, கட என்று கம்பீரமாய் மேகத்தின் உடுக்கை ஒலித்தெழுந்தது. பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே நிமிடத்திற்கு நிமிடம் ஒளியும் இருளும் மாறி மாறித் தாக்கின. காற்று வீசிற்று. வெளியில் இயற்கையின் உன்மத்த நடனம் நடந்து கொண்டிருந்தது. உருவமில்லை அதற்கு. வேகம் மட்டுமே இருந்தது.

நெஞ்சம் வேகமாய் அடித்துக் கொண்டது ஏன்? அது என்ன பயம். அது என்ன கோள் ? என்ன நிமித்தம் ? ஒன்றும் புரியவில்லை. அடர்ந்த இருட்டில் காற்று தலை விரித்தாடிக் கொண்டிருந்தது.

கையில் ஸ்பூனுடன் உட்கார்ந்திருந்தது சரோஜினியின் உடல். மனம் அங்கில்லை, அது பறந்து விட்டது. பறந்து மரண உலகத்திற்குத் திரும்பி விட்டது. மரணம் ஏன் என்று சரோஜினி யோசித்தாள். ஆனால் திரும்பத் திரும்ப அவள் மனம் மரண உலகத்தையே நாடியது. இதுதான் விஷயம். மரணத்தைத் தான் சுட்டிக் காட்ட விரும்பியது அவள் மனம். இடியின் ஒலி, மின்னலின் குரூரம், புயலின் வேகம் எல்லாம் மரணத்தின் அழைப்பு. சுடுகாடும், பாதி எரிந்த கட்டையும், தனி ஆளின் மேலிருந்த கழுகுகளும், கற்றாழையும், எருக்கம் புதர்களும், எல்லா மரணம் மரணம் என்று அலறின. பக்கத்திலிருந்த காட்டிலும் அதே நிலைமை தான், புயலில் பெரிய பெரிய மரங்கள் நிலை பெயர்ந்து, அடியற்று விழுந்தன. பெரிய மரங்களை மின்னல் தொட்டு ஒரே நிமிடத்தில் காடு இருந்த இடம் தெரியாமல் எரிந்து போய் விட்டது. வெளியில் ஒளியும் இருளும் மாறி மாறி வீசி மனதைக் கலக்கின.

நெஞ்சம் தக் என்று நின்று விட்டது. பறவைகள் மரணத்தைக் கண்டு கலங்கி தங்கள் கூடுகளை நோக்கிப் பறந்தன. மரணம் ஏன் ? அங்கு அமர்ந்திருந்த பிறர் எல்லோரும் அரட்டை அடித்துக் கொண்டும் , சாப்பிட்டுக் கொண்டும் இருந்தனர். கண் எதிரில் வாழ்க்கை மின்னிற்று. பளபளத்தது. மரணம் எங்கே ?

ஆழ்ந்த மூச்சு விட்டாள் சரோஜினி. சர்மாவும், ரணஜித் பாபுவும் வேட்டையாடப் போயிருப்பது அவளுக்கு நினைவு வந்தது. ஒரு வேளை அவளை மகிழ்விக்க வேண்டியே கூடப் போயிருக்கலாம். பெண்ணின் முன் ஆடவன் எவ்வளவு சீக்கிரம்

பூரித்துப் போகிறான். – அம்மாடி! சந்திரனையே பிடித்துக் கொண்டு வரத் தயாராகிவிடுகிறான். 'நம்மால், பெண் இனத்தால் இவ்வளவு சாதிக்க முடியுமா ? இவ்வளவு சக்தி இருக்கிறதா நமக்கு?" என்று மனதுள் வியந்தாள் அந்த பேதை.

இந்த ஆண் வர்க்கமே ஒரே மாதிரி தான். ஒரே விதமாய் நெஞ்சை நிமிர்த்தி மார் தட்டுபவர்கள், பெருமை பேசுபவர்கள். பெண்ணின் முன் ஒரே விதமான தாழ்மை, கண்ணாலேயே முழுங்கும் நோக்கு. ஒருவித பரபரப்பு. எல்லோரும் கோழைகள் – பேச்சில் மட்டுமே அவர்களுடைய கடுமை, காரியத்தில் அல்ல. ஆனால் அவர்களுடைய உருகு நிலை வெவ்வேறு ! எல்லோரும் ஒரே விஷயத்தைச் சொன்னாலும் அவர்கள் கையாளும் உபாயங்கள் வெவ்வேறு. பெண்ணைக் கண்டவுடன் சிலர் தங்கள் அறிவை விளம்பரப் படுத்திக் கொள்ளுவார்கள். சிலர் தாழ்மையின் அவதாரமாய் நடந்து கொள்ளுவார்கள். சிலர் தற்புகழ்ச்சியில் இறங்கி விடுவார்கள். எல்லாம் அந்த ஏழை 'நானி'ன் விளம்பரங்கள் தாம். பெண்ணின் முன் அந்த "நான்" வயிற்றைக் காட்டி, தட்டை நீட்டி பிச்சை கேட்கிறான்.

'பசி பொறுக்க முடியவில்லை!' என்கிறான். குழந்தைப் பருவம் முதல் அவனுக்கு ஊண் அளித்த, அரவணைத்த தாயின் நினைவு அவன் மனதை விட்டு அகலுவதே இல்லை. பெண்ணைக் காணும் பொழுது அந்தத் தாயின் நினைவில் தன்னை இழந்து அன்பும், உணவும் யாசிக்கிறான். ஆண் குழந்தை ஆணாய் வளருவதில்லை. பெண்ணின் தலைப்பில் கட்டுண்ட பொம்மையாகிவிடுகிறான். தன்னைப் பற்றி அவன் எவ்வளவுதான் ஜம்பம் பேசிக் கொண்டாலும் பீமனின் பலத்தை ஹிடும்பி கட்டாயம் அறிவாள்.

இவர்களும் அப்படித்தான். அறியும் முன் அவர்களைப் பற்றி மனதில் எவ்வளவோ கனவுகள், எவ்வளவோ ஆவல்கள். அனால் நேருக்கு நேர் எதிர்ப்பட்டவுடனேயே எல்லாம் ஆவியைப் போல் காற்றுடன் ஒன்றிவிடுகின்றன. ஒன்றும் புதிதில்லை எவரிடமும். அந்தச் சுவையற்ற விசித்திரமற்ற தன்மை மூச்சை அடைந்தது. அவர்களிடம் வீரமும் இல்லை, கண்களில் கர்வமும் இல்லை. வெற்றுப் பேச்சும், வெறியும் தான் அந்த மண் பாண்டங்களிடமிருந்து எதிர்பார்க்க முடியும், பின் ஏன் இதெல்லாம் ? படிப்படியாய் ஆராய்ச்சியில் ஆழ்ந்த சரோஜினி கேள்விக் குறியுடன் நின்றுவிட்டாள். எங்கேயோ மறைந்து கிடந்த அந்தப் பழைய சரோஜினி கேள்விக் குறியுடன் நின்றுவிட்டாள். எங்கேயோ மறைந்து கிடந்த அந்தப் பழைய சரோஜினி மெல்லத்

தலையை நீட்டினாள். எளிமையான, ஒளிமயமான, நாட்டுப்புற சரோஜினி. இருளில் இருந்து கொண்டு, கடுமையான வெய்யிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொண்டாள். தரித்திர நிலையிலும் வாழும் இச்சையை இழக்கவில்லை அவள். கசப்படையாமல் ஈடுபடுத்திக் கொண்டாள். கடவுளை வணங்கியவாறு, சிரித்த முகத்துடன் அந்தக் குடும்ப வாழ்க்கையில் இப்பொழுது கொஞ்ச நாட்களாக உலவி வந்த சரோஜினி அந்தப் பழைய, அடக்கமான குடும்பப் பெண்ணின் வெளி உருவம் மட்டுமே.

இன்று அந்த சரோஜினி அடக்கமின்றி அங்கு எல்லோருடனும் அமர்ந்து "நான் ஏன் இங்கு இருக்கிறேன்"? என்று தன்னையே கேட்டுக் கொண்டிருந்தாள். இருபுறமும் மேஜையருகே உட்கார்ந்திருந்தனர். உயிரற்றவர்கள். அவர்களுள் எவ்வித விசித்தரமுமில்லை, முழுமையும் இல்லை. பானைகளைப் போல் அமர்ந்திருந்தனர். ஒரு வேளை அவர்களுடைய துர் அபிப்பிராயங்களில் கொஞ்சம் பேதம் இருக்கலாம். ஆனால் அதுவும் மேல் பூச்சுத்தான்.

திரும்ப மின்னிற்று அந்த ஆயிரம் தலை மின்னல். தன்னை இழந்து உட்கார்ந்திருந்தாள் சரோஜினி. பழையவள் அல்ல, புதியவள் தான். முகத்தில் ஒருவித சோகக்களை, நிம்மதியின் நிழல், உணர்ச்சி லேசாய் அவளை அலைக்கழித்தது. ஆனால் எதற்காக என்று அவளுக்கு புரியவில்லை. பொம்மையைப்போல் உட்கார்ந்திருந்தாள் ஆடாமல், அசையால், சமூக கட்டுப்பாடிற்கிணங்கி, அவள் உட்கார்ந்துதான் இருக்க வேண்டும்.

★ ★ ★

ஆனாலும், அந்தப் பொம்மையின் கண்களில் எரிச்சல் எடுத்தது. உணர்வு விழித்துக் கொண்டது. நினைவு திரும்பியது. சர்மா வரவில்லை. ரணஜித் பாபுவும் வரவில்லை.

"நீங்கள் ஒன்றுமே சாப்பிடவில்லையே மிஸஸ் தாஸ்"

"ஓ! நிறைய சாப்பிட்டு விட்டேன் போதும்" என்றவாறு சரோஜினி வழக்கம் போல் மனம்விட்டுச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அங்கு ஒளியைப் பரப்பியது.

நடு இரவு. அஷ்டமி சந்திரன் கருமேகங்களினூடே புறப்பட்டிருந்தான். கீழே மண் மேடுகள், நீர்க் குழிகள், மரங்களை வெட்டும் நிலாக் கிரணங்கள் – எல்லாம் அந்த மங்கிய வெளிச்சத்தில் தெரிந்தும் தெரியாமலும் இருந்தன. அஷ்டமி சந்திரன் ஒழுகிப் போய்க் கொண்டிருந்த மேகங்களின்

இடையில் கண்ணா மூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. அதற்குத் தகுந்தாற்போல் பூமியிலும் இருட்டும் ஒளியும் மாறி மாறி விளையாடின. இந்த சத்திய அசத்தியத்தின் விளைவான மாயையும் அதுபோலவே ஒரு சமயம் தெரிந்ததாகத் தோன்று கிறது, மற்றொரு சமயம் பரிச்சயமற்றதாய்த் தெரிகிறது.

வெறிச்சோடின பாதையில் இரு கார்கள் ஒன்றை ஒன்று தொடர்ந்து போய்க் கொண்டிருந்தன. முதல் வண்டியில் சர்மாவின் குருதி தோய்ந்த சரீரம் கிடந்தது. பக்கத்தில் அமர்ந்திருந்த ரணஜித் பாபு வெளியில் பார்த்துக் கொண் டிருந்தார். இரவின் மாயை அவரையும் மயக்கியது. நிழல்கள் எழும்பி பார்வையை மறைத்தன. எங்கோ தூரத்தில் தெரிந்த ஒளி மெல்ல மெல்ல இரவின் கருமையில் கரைந்து மறைந்தது, அவருடைய மனப்பிடை பெரும் உருவெடுத்து எல்லாவற்றையும் அமுக்கி அழித்ததோ என்று தோன்றும்படி.

இதோ வந்துவிட்டனர். பரிச்சயமான எல்லைக்குள்.

தெரிந்த குளம், பழைய செங்கல் சூளை, அப்புறம், கம்பெனியின் ஃபாக்டரிகள், அதன் கட்டிடங்கள், பிறகு நீண்ட பாதை, பரிச்சயமான வீடு, மைதானம் எல்லாம். காருள் கிடந் தார் சர்மா இரத்த வெள்ளத்தில் மிதந்தவாறு. அவர் பிழைப் பாரா ? நெஞ்சில் குண்டு பட்டவர்கள் பிழைப்பதுண்டா ? இன்னும் சில மணி நேரம் தான். பிறகு சாவு, பிணம், எல்லாம் பொய், எல்லாம் கனவு. இந்த பயங்கரப் பொய், கனவினூடே பிணத்துடன் பறந்து கொண்டிருந்தார் ரணஜித் பாபு, மரண தூதனாய்.

எங்கும் நிசப்தம், வெறுமை, பேச்சற்ற சூனியம், உணர்ச்சியும் பேச்சற்றுவிட்டது. இதெல்லாம் உண்மையாயிருக்க முடியாது. கண்ணைப் பறிக்கும் ஒளியும், வானவில்லை ஒத்த காட்சிகளும், தெளிவான உருவங்களும் எங்கே போய்விட்டன ? இருளில் போய்க் கொண்டிருந்தது. இரத்தம் தோய்ந்த ஒரு பிணத்தின் ஊர்வலம், உடலின் யௌவனமும், அழகும், அருவி யைப் போல் பாயும், உல்லாசமும் எல்லாம் முடிந்துவிட்டன. இருண்ட இரவும் மங்கின சந்திரனும் மட்டுமே மிஞ்சின.

ரணஜித் பாபு பைத்தியம் பிடித்தவரைப் போல வெளியில் பார்த்துக் கொண்டிருந்தார். அவரை அறியாமலே தலை மயிரைப் பிய்த்துக்கொண்டபடி ஷர்ட்டின் முன் பக்கம் திறந்து கிடந்தது. கண் வெறிச்சோடியது. நிம்மதியில்லை மனதிற்கு, யாரோ கழுத்தைப் பிடிப்பது போல் தோன்றிற்று. முகம் நெருப்பில் பட்டதைப் போல் வதங்கிப் போயிருந்தது. துடித்துக்

கொண்டிருந்த அவருடைய உள்ளம் அமைதியை நாடியது. ஐயோ! முடிவே இல்லையா. இந்தச் சித்திரவதைக்கு!

வெறிச்சோடியது பாதை. காரின் விளக்கு வெளிச்சத்தில் வீடுகளும், நேம் ப்ளேட்டுகளும் தெரிந்து மறைந்தன. பரிச்சய மான சூழ்நிலையில் அவருடைய மனப்புயல் இரட்டிப்பு வேகத்து டன் திரும்பியது. பழைய நினைவுகள் அவரை அலைக்கழித்தன. மனவேதனை அதிகமாயிற்று. இந்த மனவேதனையின் ஊடே நினைவில் மிதந்து வந்தாள் சரோஜினி. கூடவே, அவளால் இனிமேல் சர்மாவுடன் உலாவவோ, டென்னிஸ் விளையாடவோ போக முடியாது என்று அறிவு உறுத்தியது. தன் நினைவற்றுக் கிடந்த அந்த சரீரமல்லவா அவளைத் தன் வசமாக்கிக் கொண்டு விட்டிருந்தது!

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். சர்மா என்னவோ முணு முணுத்தார். அவர் தன் எண்ணங்களைத் தெரிந்து கொண்டு விட்டிருப்பாரோ ? ரணஜித் பாபு திருடனைப் போல நாலா புறமும் நோட்டம் விட்டார். வெறும் பிரமைதானோ ? வியர்வை சொட்ட ஆரம்பித்தது. சரோஜினி மெல்ல மறைந்தாள்.

எல்லாம் பொய், நடப்பதும் பொய் தான், பின் வண்டியிலிருந் தவர்கள் விபத்து நடந்தபொழுது கூட இருந்தனர். எல்லாம் அறிவார்கள். சுற்றி வளைத்து "நான் குற்றமற்றவன். இதற்கு பொறுப்பாளி நானல்ல" என்று தன்னையே சமாதானப்படுத்திக் கொள்ளுவதைப் போலிருந்தது ரணஜித் பாபுவின் பாவனை.

குற்றமற்றவன்! குரல் அவருக்கே சாரமற்று உண்மையற்று ஒலித்தது. நெஞ்சினுள் புறப்பட்ட யுக்திகளும் வாதங்களும் அங்கேயே புதைந்துவிட்டன. "இதோ பின் வண்டியில் வருபவர் கள்தாம் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தனர். சர்மா என் துப்பாக்கியை எடுத்துப் பரிசீலித்துக் கொண்டிருந்தார். அதன் கனத்தை, அதன் சக்தியை. துப்பாக்கியில் குண்டிருந் தது. ஸேஃப்டி காச் எப்படி நெகிழ்ந்ததோ தெரியவில்லை. அவருடைய விரல் குதிரைமேல் பட்டுவிட்டது. "துப்பாக்கி லோடட் ஸர்" என்று சொல்லி முடிப்பதற்குள் வெடி சப்தித்தது; ஒரு விபத்து நடந்துவிட்டது. ஓ! அப்புறம் – கடவுளே நல்ல மனிதனை இப்படியா தண்டிப்பது ? அகால மரணம். தேவனைப் போன்ற சர்மா சாஹப் இப்படியா இறக்க வேண்டும் ?

ஆனால் அவராலேயே அதன் விளக்கத்தை ஒப்புக் கொள்ள முடியவில்லை. பிராண பயம் அவரை உலுக்கி எடுத்துக் கொண்டிருந்தது. துப்பாக்கியில் ரவை ஏன் இருக்க வேண்டும். யார் வைத்தார்கள் அதை ? ஸேஃப்டி காச் எப்படி அவிழ்ந்து

கொண்டது ? மனதில் ஏன் அந்த ஆவல் கலந்த எதிர்பார்ப்பு ? காலையிலேயே மாலை நடக்கப்போகும் விபத்தைப் பற்றி மனக் குறி அறிவிக்கவில்லையா ? தூரத்தில் தெரிந்தது சரோஜினியின் நிழல். கழுகும் நரியும் புசிக்கும் சாவை – ஐயோ! என்ன பயங்கரம்.

ஆஸ்பத்திரி வந்துவிட்டது. கார் நின்றது. எல்லோரும் கவலை தோய்ந்த முகத்தினராய் இறங்கினர். திடீரென்று எங்கும் ஓட்டமும் கலவரமும். சர்மாவை ஸ்ட்ரெச்சரில் படுக்க வைத்து உள்ளே கொண்டு போனார்கள். மொடமொடக்கும் துல்லிய வெள்ளை உடை அணிந்த நர்ஸ்களும், டாக்டரின் கம்பீரமான முகமும், ஆஸ்பத்திரியின் விளக்கு வெளிச்சமும் எல்லாமே அருவருப்பாய், ஏதோ கனவைப் போலிருந்தன. அந்தக் கனவில் மிஸ்டர் சர்மா ஏதோ முணு முணுத்தார், தெளிவற்ற குரலில். "நான் மறக்கவில்லை என்று பலிதத் தாஸிடம் சொல்லி விடுங்கள். அவருடைய பிரமோஷனுக்காக எழுதிவிட்டேன். சீக்கிரம் தலைமை அதிகாரி பதவி கிட்டிவிடும் அவருக்கு. சொல்லுவீர்களா ? பிறகு நீங்கள் வரலாம் கட்டாயமாய்" – என்றார்.

முகத்தைத் திருப்பிக் கொண்டு ரணஜித் பாபு நின்று கொண்டு இருந்தார். சர்மா, இவர்தான் கண்மூடி, பேச்சற்றுக் கிடந்தார். உயிரிருக்கிறதா இல்லையா தெரியவில்லை. டாக்டர் அவருடைய நெஞ்சைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். எங்கும் மௌனம். மின்விசிறி சுழலும் சப்தம் மட்டுமே கேட்டது. வெளியில் அதே கனத்த இருள். எல்லாம் பொய். எல்லாம் கனவு. கல்லைப் போல் அதன் மேல், அந்தப் பொய்யின் மேல் தைரியமாய் நிற்க வேண்டும். ஆனால் தன்னிடமிருந்தே விடுதலை கிடைக்க முடியாது. உள்ளே சுவர் இடிந்து, தலைமுறைகள் நழுவி, எல்லாம் நசுங்கிப் பொடிந்து போய்க் கொண்டிருந்தது. இது தான் வாழ்க்கையா ? அல்லது இது பயமா ? அல்லது துன்பமா ? கண்களை நிமிர்த்தினால், எல்லாம் பொய், எல்லாம் கனவு என்று தெரிந்தது. வெளியில்தான் என்ன இருட்டு. கனவு என்று ஒத்துக் கொண்டால் வாழ்க்கையை எவ்வளவு வசீகரமாய் அமைத்துக் கொள்ள முடியும். அதில் மூழ்கி ஆனால் ஒட்டாமல் வாழலாம். எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும். பலாபலன்களில் பங்கு கொள்ளாமல், அதால் கட்டுப்படாமல் இருளில் காலத்தை எப்படியாவது போக்கினால் போதும் – குறைவுமற்று விருத்தியுமற்று, முன்னோக்கியுமில்லாமல் பின் வாங்கவுமில்லாமல் உடல் அதிர்ந்தது. நரம்புகள் விண் என்று தெறித்தன. உணர்விற்கும் அப்பாற்பட்ட தெளிவில் காற்றுக் கூட தொடுவதைப் போலத்

தோன்றியது. வியாதியால் நொந்து போயிருந்த தன்மை காற்றுப்பட்டு துடித்துப் போயிற்று. நினைவு தெளியத் தெளிய, மனதுள் வேதனை ஊற்று ஒன்று புதிதாய் புலப்பட்டது. அதை மூடிவிட வேண்டும். ஒளித்துவிடவேண்டும் ஏழு பாளங்களுக்கடி யில். அப்படியும் வாழ்க்கை கறை பட்டுவிட்டது. ஆனால் மனம் அதை ஏற்கவில்லை. நெற்றியில், சுட்ட புண்ணை ஒத்து களங்கத்தின் தழும்பு தெரிந்தத. வரப்போகும் எந்தப் புலர்வும் அன்றைய காலை விடிவைப் போல் ஒளிமிக்கதாய் இருக்காது. மனநோய் ஒரு போதும் அகலவும் அகலாது. ஐயோ! என்ன துன்பம் இது!

ஒரு கர்ஜனை எழும்பியது அந்த உதிரம் தோய்ந்த தேகத்திலிருந்து. டாக்டர் கவலையுடனும் பார்த்துக் கொண்டிருந் தார். யாரோ இங்கேயும் அங்கேயும் ஓடிக் கொண்டிருந்தான். மிஸ்டர் சர்மாவைச் சேர்ந்தவனோ அவன் ? குழாயில் தண்ணீர் நிற்கும் பொழுது எழும் கலகலப்பு சர்மாவின் தொண்டையில் ஒலித்தது. அப்புறம் ஒரே மௌனம். இதோ சர்மா தூங்கிக் கொண்டிருக்கிறார். ஆனால் சர்மா இல்லை.

★ ★ ★

இரவோடு இரவாய் சமாசாரம் பரவி எல்லோரும் கூடிவிட்டனர். ஆஸ்பத்திரியின் மைதானத்தில் ஏகக்கூட்டம். முதலில் வந்தவர்கள் பின்பு வந்தவர்களுக்கு ஆஸ்பத்தி '. ல் ஒரு அறையைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தனர். வெறும் சுவர் கணக்கற்ற காலத்தின் சூட்டையும் மழையையும் தாங்கி நின்ற சுவர். உள்ளே எல்லாம் ஒரே வெளுப்பு மயம். ஒரே ஒரு கதவு, ஜன்னல் மூடப்பட்டிருந்தது. அந்தப் பக்கம் பார்த்தவர் களின் மனத்திரையில் ஒரு பயங்கரம் நிழலாடியது. உயிருடனிருப்பவர்கள் மரணத்தைக் காணும் பொழுது அவர்களுடைய உடல் நடுங்குகிறது. அவர்களுடைய திருஷ்டியே வேறுவிதமாயிருக்கும். ஒரு எல்லையற்ற சத்தியத்தின் முன் தலைகுனிந்து, ஒன்றிரண்டு நிமிடங்கள் மௌனமாய், இறந்த வனை மட்டுமே மனதில் நிறுத்தித் தங்கள் அனுதாபத்தைக் காட்டிக் கொள்ளுவார்கள். பிறகு அவர்களுடைய அடங்கிக் கிடந்த உயிர் வேகம் பெருத்து வீங்கி வெளிப்படும். மரணத்தைப் பார்த்துவிட்டுப் போய் திரும்பவும் வாழும் சமூகத்துடன் கலந்து கொள்வார்கள்; வெற்றிலை போட்டுக் கொண்டோ, சிகரெட் பிடித்துக் கொண்டோ பேச்சில் ஈடுபடுவார்கள். அங்கும் அன்று

அப்படிப்பட்ட பேச்சு நடந்து கொண்டிருந்தது. மனம் விட்டுப் பேசினார்கள் எல்லோரும். அதில் உண்மையும் பொய்யும் கலந்திருந்தன. கேட்டதும் கேட்காததும் இருந்தது. ஊகமும் கற்பனையும் இருந்தது. எல்லாமாகச் சேர்ந்து சமூகத்தின் அபிப்பிராயமாக வெளிப்பட்டது. நியாயபீடத்தின் தீர்மானமாக அல்ல. அந்த அபிப்பிராயத்தை உருவாக்க உபயோகப்பட்டன. ரணஜித் பாபுவின் விஷயமும், சரோஜினியின் விஷயமும், பலிதத் தாஸின் விஷயமும், இன்னும் பல விஷயங்களும். அந்த அபிப்பிராயத்தைத் தங்களுடன் கொண்டு போனார்கள் பலர், பிறகு அதைப்பந்துமித்திரர்களுடன் பகிர்ந்து கொண்டனர். எல்லோரும் சர்மாவைப்பற்றி அறிந்திருந்தனர். அவருக்காக அனுதாபம் கொண்டனர். உயிருடன் இருந்தபொழுது! அவர் கைக்கெட்டாதவாராயிருந்தார், வெகு உயரத்தில் இருந்தார். மரணத்தில் வெகு சமீபத்தில் வந்துவிட்டார். அவர்களைச் சார்ந்தவராய் விட்டார். எல்லோரும் அவரைப் பற்றியே நினைத்தார்கள். அவருக்காக அங்கலாய்த்தார்கள். அவருடைய சொந்தக் குடும்ப விஷயங்கள் கூட பொது உடைமை ஆகிவிட்டன. அவருடைய சுக துக்கங்களைப் பற்றிப் பேச எல்லோருக்கும் அதிகாரம் கிட்டி விட்டது. அவர் நீதி நியமங்களுக்காக எதைத்தான் செய்யவில்லை! இன்னும் எவ்வளவோ செய்திருப்பார். ஆனால் இறந்து போய்விட்டார். அவருடைய பெயர் மட்டும் மிஞ்சி நின்றது ஒரு மனிதனின் பிரதிநிதியாய்.

மனிதனுக்கும் மனிதனுக்கும் நடுவிலிருந்த ஆழமான வெள்ளத்தை, குருதியும் சதையுமான உடல் ஏற்படுத்திய அகழியை, அவர் தாண்டி எல்லோருடனும் இணைந்துவிட்டார்.

என்றும் போல் சரியான சமயத்தில் எஞ்சின் வேலை செய்ய ஆரம்பித்தது. காரியாலாயத்திலும் வேலை மும்முரமாய்த் தொடர்ந்து எல்லோரும் அவரவர்களின் வேலையில் ஈடுபட்டிருந்தனர். பலிதத்தாஸும் வேலை செய்து கொண்டிருந்தான். சரியாய் ஒரு மணிக்கு தலைமை ஆபீஸிலிருந்து தந்தி வந்தது – அன்று விடுமுறை என்று. அபீஷியல் மீட்டிங் நடந்தது. சாஹேப்பின் ஆத்மாவிற்காகப் பிரார்த்தனை செய்தபடி மூன்று நிமிடம் எல்லோரும் மௌனமாய் நின்றனர். பத்துநிமிடம் சொற்பொழிவு நடந்தது. பிறகு எதிர்பாராமல் கிட்டிய விடுமுறையை அனுபவிக்க எல்லோரும் அவரவர் வீட்டை நோக்கிச் சென்றனர்.

பலிதத்தும் வீட்டிற்குத் திரும்பினான்.

தனி அறையில் முகத்தை மறைத்துக் கொண்டு அழுதவாறு படுத்திருந்தாள் சரோஜினி. பலிதத் அவள் பக்கத்தில் கூடப் போகவில்லை. மூளை கொதித்தது அவனுக்கு. மனதாழத்தில் எரிச்சல் கண்டது.

இது அவனுடைய வீடு. இவள் அவனுடைய மனைவி. வெளி அறையில் தலையைக் கைக்குள் ஏந்தி தனியாய் உட்கார்ந்திருந்தான்.

★ ★ ★

சரோஜினி வீட்டிலிருந்தாள். அந்தப் பக்கமே பார்த்துக் கொண்டு எல்லோரும் போவதைக் கண்டாள். அவர்களுடைய ஆவலையும், பேச்சையும் ஊகித்துக் கொண்டு தலை குனிந்தாள்.

யாரும் வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லை. ஆனாலும் தன் மனதை ஆராய்ந்து பார்த்தபொழுது, உலகத்தோர் தன்னைப் பற்றி வாய் திறந்து சொல்லாத எல்லாப் பேச்சும் அவளுக்குக் கேட்டது. பேச்சுக்குரிய அர்த்தமும் வேகமும் அதில் இருந்தது. மனம் பேதலித்தது. ஏன் இப்படி ? அவள் யாருக்கு என்ன கெடுதல் செய்தாள் ? உலகத்திற்குத் தன்மேல் ஏன் இவ்வளவு கோபம் ? ஏன் இவ்வளவு வெறுப்பு ? ஏன் குற்றச் சாட்டு ?

கட்டாயம் குற்றம் சாட்டினார்கள் அவளை. அதை மறைக்க முடியாது. குசு நசுப்பு ஆயிரம் காத நீள வாயுடைய தவில் ஆச்சே கிராமத்தில் அப்படித்தானே விஷயம் பரவும். அவளுக்கு அதெல்லாம் நினைவிற்கு வந்தது. எந்த தூரத்திலிருந்தோ மிதந்து வரும் பேச்சு உமியைப் போல் உலகில் எங்கும் மறையாமல் பரவிவிடுகிறது. காற்றுடன் கலந்து எதிரொலிக்கிறது. கிராமத்துக் குளத்துள் ஒரு கல்லை விட்டெறிந்தால் அது சுழன்று கரையில் மோதுகிறதைப் போல அந்தப் பேச்சும் அப்படித் தான். சுழன்று சுழன்று பரவுகிற எதையும் ஒளிக்க முடியாது. ஐயோ!

ருசுவைத் தேடிற்று அவளுடைய சந்தேக மனம். எதிர் வீட்டு மிருக டாக்டரின் மனைவி தன் முற்றத்திலிருந்தவாறு இப்பக்கம் கடுமையுடன் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் இங்கு வருவதில்லை. ஏனோ ? ஒரு வேளை மனதுள் கேலியாய் சிரித்துக் கொண்டிருப்பாள். அவளிடம் தான் கம்பளி நூல் பின்னக் கற்றுக் கொண்டிருக்கும் பொழுதே, தான் ஒரு படி மேலேறிவிட்டோம் என்பதையும், அதன் பிறகு தானாகவே அந்த நட்பை திரஸ்கரித்துவிட்டாள் என்பதையும் சரோஜினி மறந்து விட்டாள். யாருமே இப்பொழுது அவளைக் காண வருவதில்லை.

மிலி, நீலி, அவளை அறவே ஒதுக்கிவிட்டனர். நொடிப் பொழுதில் அந்நியமாகிவிட்டாள். தானாகவே மற்றொரு சமூகத்தின் பக்கமாய் சென்றுவிட்டதை மறந்து விட்டாள், சரோஜினி. கூடவே தானாகவே மிலி, நீலி, நடமாடின சமூகத்தைவிட்டகன்றுவிட்டாள். மிலி கடிதம் எழுதியிருந்தாள். "தினம் தினம், நச்சரிக்க மாட்டேன் உன்னை. நீ சாட்சாத் 'சரோஜ்' அல்லவா! உன்நிஷ்டை மெச்சத்தகுந்ததுதான். ஆனாலும் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்" என்று. இதற்கு என்ன பொருள் ? என்ன தான் இல்லை.

நிதாயி சலனமற்றிருந்தான். அவனுடைய முகமூடிக்குள் மறைந்திருந்த முகத்திலும் குற்றச்சாட்டின் சாயல் தெரிந்தது. அவனும் யோசிப்பானாயிருக்கும். வெளியில் சந்தைக் கூட்டத்தில் ஏதாவது சொல்லாமல் இருக்க மாட்டான். அப்பொழுது' அவனது முகம் எப்படி இருக்குமோ ? என்ன பயங்கரமான உல்லாசம் அதில்! லஜ்ஜையற்ற பாவனை ! இதை எல்லாம் கற்பனையில் கண்டு சரோஜினி வெலவெலத்துப் போனாள். அந்த மீசை முளைக்காத ஹர்ஷும் இஷ்டம் போல் கதை கட்டிப் பரப்பிக் கொண்டிருப்பான். காரணமின்றி அவன் மேல் வசை மாரி பொழிந்தாள் சரோஜினி, அனாவசியமாய்க் கோபித்துக் கொண்டாள். அந்தப் பையனை நன்றாய் அடித்துப் புடைக்க அவளுடைய கை ஊறிற்று. ஆனால் பலிதத்திடம் உள்ள பயத்தால் தன்னை அடக்கிக் கொண்டாள்.

உண்மையாகவே பலிதத்திடம் பயந்தாள் அவள். நாலடி, ஒன்பது இஞ்சு மனிதன் அவன். தானுண்டு தன் வேலையுண்டு என்று அறையிலேயே அடைந்து கிடப்பவன். ஆனால் அவளைக் கட்டிப் போட்டிருந்தான். அவனை ஏறெடுத்துப் பார்க்கவே அவள் தைரியப்படவில்லை. பேசக்கூட ஒய்வில்லாமல் வேலையில் மூழ்கிக்கிடந்தான். இரவிலும் நேரம் கழித்து வீடு திரும்பினான். நடு ராத்திரி வரை விளக்கடியில் ஃபைல்களுடன் உட்காருவது வழக்கமாய்விட்டது. சரோஜினி படுக்கையிலிருந்த அவனையே பார்த்துக் கொண்டிருப்பாள். வேலை முடிந்து எழுந்து வந்தால் அவளுக்கு முதுகைக்காட்டியபடி படுத்துக் கொள்ளுவான். ஒன்றிரண்டு பெருமூச்சுக்கள் கேட்கும், பிறகு குறட்டை. ஒரு வேளை எப்பவும் இது தான் வழக்கமாயிருந் திருக்கலாம். அவன் வேலை செய்யும் ஆளல்லவா ? அந்த வேலையில் தன்னை மறந்து கிடந்தான். மனைவியைப் பற்றி மூளையைக் குழப்பிக் கொள்ள அவசியமில்லை என்று நினைத்தான். ஆனால் இப்பொழுது சரோஜினிக்கு தன்

கணவனின் அலட்சியம் உறுத்திற்று. வேண்டும் என்றே, தன்னைக் கஷ்டப்படுத்துவதற்காகவே அவன் இப்படித் கம்பீரமாயிருப்பதாக நினைத்தாள். பாய்வதற்கு வாய்ப்பை எதிர்ப்பார்த்துக் காத்துக் கிடந்தான் போலும். தன்னைப் காப்பாற்றிக் கொள்ள எவ்வளவோ முறை அவனைக் காயப்படுத்தும்படி பேசினாள். பல்லைக் கடித்தாள். ஒரு பூனை தற்காப்புக்காக நாயின் முன் வாலைச் சிலிர்த்துக்கொண்டு, பல்லைக் காட்டிக் கொண்டு நகங்களை வெளியில் நீட்டி நிற்பதைப் போல் அவளும் தயாராய் நின்றாள். ஆனால் பலிதத் அவள் முன் வருவதேயில்லை, சண்டைக்கும் தயாராகவில்லை அவன். அவனுடைய வெப்பமற்ற அலட்சியம் அவளுள் பயத்தை மூட்டியது. அவளுடைய 'தான்' என்னும் தன்மை, பெருமை, அந்தப் பயத்தின் முன் கலகலத்துப் போவதை அறிந்தாள் அவள். அந்த நொறுங்கிய தன்மையே அவளுக்கு சரணாகதி. ஒரு மூலையில் கிடந்தாள் தன் காயங்களை நக்கியபடி. அந்த இருளில் அவளுடைய உடல் பலம் கொட்டிப் போயிற்று. பசி நீங்கிற்று. தலையை வலித்தது, உடல் சுட்டது. சோம்பல் அவளை ஆட்கொண்டது. அந்தக் களைப்பில் உறக்கம் அவளுக்குக் கொஞ்சம் ஆறுதலாயிருந்தது. ஆனால் அந்தக் கனவு உலகத்திலும் அவளைப் பயமும், கவலையும் பிடிக்கவே அவள் திடுக்கிட்டு எழுந்தாள். வியர்த்துக் கொட்டிற்று அவளுக்கு. அவளால் பொறுக்க முடியவில்லை. எழுந்து வேறொரு பக்கமாய்ப் போய் படுத்துக் கொண்டாள். அப்பொழுது அவளுக்குத் தன் நிலைமை நன்றாய்ப் புரிந்தது. அந்த நிலைமையில் தூக்கம் என்பது வேதனையில் தோய்ந்து திரிவது என்றும், விழிப்பு என்பது வேதனையின் தக தகக்கும் ஜ்வாலையில் துடிப்பது என்றும் புரிந்து கொண்டாள்.

குழந்தைப் பருவத்தில் தான் கேட்ட கதைகள் நினைவிற்கு வந்தன. வாழ்க்கையில் இருந்த இந்தத் தவிப்பும், பயமும், பயங்கரமும் – இவை தானோ அந்தக் கதைகள் விவரித்த ரௌரவ நரகம்?

உணர்ச்சி இறங்க ஆரம்பித்தது.

இப்படி ஒரே நிலையில் ஒரே நினைவில், உட்கார்ந்திருந்த பொழுது அவளுக்குத் தற்கொலையின் எண்ணம் மனதுள் எழுந்தது. ஆனால் தைரியம் வரவில்லை. இயற்கையின் இந்த அசட்டைக்கு புதிய காரணம் தேடினாள். சரோஜினி, எல்லாவற்றையும் மறந்தாள். துர்சிந்தனையை மறந்தாள். வழக்கத்தை மறந்தாள். அப்படியும் அவள் உடலுள் புதிய

ஒழுக்கின் பிரவாகம் விடாமல் பாய ஆரம்பித்தது. புதிய வெள்ளம், புதிய உணர்ச்சி அவளை இருளிலிருந்து ஒளியை நோக்கியும், நோயிலிருந்து நோயற்ற தன்மைப் பக்கமாகவும் இழுத்துக்கொண்டுபோயிற்று.

தன்னுள், உதிரமும் மாமிசமும் ஒன்றுகூடி உருக்கொண்டிருந்த ஒரு உயிரின் அசைவை உணர்ந்தாள். கனவுத் துண்டங்கள் ஒன்று சேர்ந்து உண்மையாகவே முழுமை பெற்றுவிட்டன/. அந்த முழுமையை முதலில் தன்னுள்ளும் பிறகு வெளியிலும் அனுபவித்தாள். அவளுடைய கற்பனையை ஆதாரமாகக் கொண்ட அந்தக் கண நேர சுகம், துக்கத்தை விரட்டிவிட்டது. அவளுடைய உதிரத்தில் உதித்த அந்த சுகத்தை அவள் அனுபவிக்க அனுபவிக்க, அது மேலும் மேலும் விருத்தி ஆகிக் கொண்டே போயிற்று. சிருஷ்டிமயமான தன் பெண்மையை உணர்ந்தாள். அந்த சிருஷ்டிக்கும் சக்திதான் அவளுடைய பெருமை என்றும் சிருஷ்டியின்பெருமையை எடுத்துக் காட்டின. பூமி தன் பசுமையை நிலை நாட்டிக் கொள்ளத் தேடும் மேகத்தின் துளியை அவள் உள்ளமும் உக்கிரமாய்த் தேடியது. தன் உள் வளர்ந்த சிருஷ்டியே அவள் ஆதாரமாகவும், உடலும் அவளும் அதை ஒட்டி நின்றவையாகவும் தோன்றியது அவளுக்கு. தெளிவற்ற அந்த சிருஷ்டியிடம் தன்னை அர்ப்பித்துக்கொண்டு, நிமிடத்திற்கு நிமிடம் வளர்ந்து கொண்டே போனாள். துக்கம் எங்கே போயிற்று ? சோகம் எங்கே ? எல்லாம் வாழ்க்கையின் விளையாட்டு மட்டுமே. கண்டிராத அந்த வரப்போகும் சுகத்தின் அலை மேலெழுந்து பாய்ந்து வந்து கொண்டிருந்தது. தன்னையே மதித்து, அந்தப் பெருமையில் முழுமையை அடைந்து நிமிர்ந்தாள், சரோஜினி. இனிமேல் அவளுக்கு வேறு யாரும் அவசியமில்லை. அவளும், அவளுடைய ஒவ்வொரு நரம்பின் நுண்ணியத்திலிருந்தும், உணர்வின் சக்தியிலிருந்தும், "நான் வந்து விட்டேன்". "நான் இருக்கிறேன்", என்று கூவிக் கொண்டிருந்த அவளுள் இருந்த தெளிவற்ற அந்த சிருஷ்டியும் மட்டும் போதும். வேறு யாரும் வேண்டாம்.

"அது யாருடையது?"

கவலை மேகத்தைப்போல் மனதில் தோன்றியது. நீண்ட மூச்சில் அதுவும் கலைந்துவிட்டது. வாழ்க்கை அனுபவங்களும், சமுத்திரத்தில் தோன்றும் கணக்கற்ற சுழல்களைப் போல், மறைந்து விட்டன. வெகு சில நாட்களுக்குள் அவள் உலகத்தை நிறைய பார்த்துவிட்டாள் – அனேக மக்களை, அனேக

சூழ்நிலைகளை. இன்று சிப்பிக்குள் ஸ்வாதி நட்சத்திரத்தின் துளி விழுந்துவிட்டது. சிப்பி முடிக்கொண்டுவிட்டது.

எத்தனையோ மேகங்கள் வரலாம். பொழியலாம். பிறகு மறைந்துவிடலாம். அதனால் அதற்கென்ன ? சிப்பி பாதிக்கப்படாது. சர்மா - ஆழ்ந்த துக்கமாய் மாறிவிட்டார். மறக்கப்பட்டவராய் விட்டார். மறுகரையிலுள்ளவர் அவர். கனவுலகில் வாழ்பவர். ரணஜித் பாபு. உடம்பு சுகமில்லாமல் நீண்ட விடுமுறையில் போய் விட்டதாக பலிதத் அன்று வந்து சொன்னான். கட்டை மரத்தைப் போல் எல்லாவற்றையும் ஒதுக்கி விட்டாள் அவள். அவளுடைய மெய்மறந்து போயிருந்த மனதில் கணக்கற்ற ஒளிப்பிழம்புகள் சேர்ந்த நெருப்பின் அலை ஒன்று எழும்பியது. ஆனால் அதுவும் அணைந்துவிட்டது.

எவ்வளவோ குமாஸ்தாக்கள், எவ்வளவோ அதிகாரிகள், சமூகத் தொண்டர்களின் குழுக்கள்—மெல்ல எல்லாம் மறைந்து கொண்டு வந்தன அவள் மனதிலிருந்து. காலையில் எழும்பொழுது இரவில் பட்ட கொசுக்கடியோ, அதன் ரீங்காரமோ நினைவிருப்பதில்லை அல்லவா ?

சிருஷ்டியின் நிழலுருவங்களாய் அவர்கள் வந்தனர். பிறகு போய்விட்டனர். பின் தங்கிவிட்டது அவர்களுடைய இயற்கையின் மாயை பண்டைக் காலம் முதல் இரு பிராணிகள் தாம் உண்மை - ஆணும் பெண்ணும். இங்கேயோ அங்கேயோ என்பது நிகழ்ச்சிக் கிரமத்தைப் பொறுத்தது. இங்கில்லாவிடில் அங்கே இருக்கலாம். பூமி வித்தை ஏற்றுக்கொண்டுவிட்டது; முளையின் வெப்பத்தைப் பெற்றுவிட்டது. அது வெடித்து முளை வெளிப்படுவதை எதிர்பார்த்து நிற்கிறது சிருஷ்டி. கர்ப்பமாய்விட்ட களிப்பில் கர்ப்பிணி மண்ணை ஆராயப் புகுவதில்லை. அது முழுமையைப் பெற்றுவிட்டது. இதுவே யதேஷ்டம். மண் தன்னைப் புரிந்து கொண்டுவிட்டது. அது சிருஷ்டியின் முடிவற்ற சுரங்கம். அங்கு இயற்கையைக் காணலாம். இயற்கையின் மாயையின் கனவைக் காணலாம். போனவர்கள் நிழலுலகில் கலந்து போயினர். இருந்தவர்கள் உள்ளே இருந்தார்கள் - பெயரற்று. ஜாதி தேசம் அற்று, எவ்விதக் கட்டும் அற்று. சரோஜினி புதிய உருவத்துடன், தன்மையுடன் திரும்பிக் கொண்டிருந்தாள்.

இந்த அரிய வாழ்க்கை ஆச்சரியம் நிரம்பியதாய்த் தோன்றியது அவளுக்கு. உலகத்தின் நிலைக்கு கணக்கற்ற மட்டங்கள், வரம்புகள் உண்டு. தன்னுள் தோன்றியிருக்கும் விசித்திரத்தில்

அவள் தன்னை மறந்து பிற விஷயங்களைத் தள்ளிவிட்டாள். அவள் கனவு முழுமையுடன் நின்றது.

★ ★ ★

தன் குலக்கொழுந்து தன் மனைவியின் கர்ப்பத்தில் வளர்ந்து வருவதைப் பற்றி அறிந்த பலிதத்தின் மகிழ்ச்சி எல்லையற்றுக் கரைபுரண்டது. ஒரே ஒரு இழுப்பில் அவனுடைய பல நாள் மௌனமான சந்தோஷம் மறைந்துபோய்விட்டது. அவனுடைய பழைய தன்மையும், உடலும் முன்போல் மனைவியின் எதிரில் சிறகடித்துக்கொண்டு பேச ஆரம்பித்துவிட்டது. "என்ன அதிசயம் சரோஜ்! இவ்வளவு நாட்களுக்கப்புறம் . . ."

கண்ணாடியின் எதிரிலமர்ந்து க்ஷவரம் செய்து கொண்டிருந்தான். "இவள் பலஹீனமடைந்திருக்கிறாள். தெரிகிறதா ? நிறைய கமலா ஆரஞ்சு சாப்பிடவையுங்கள். ஆஸ்டோகால்ஸியம் டாப்ளெட்டும், வைட்டமின் காம்பளெக்ஸும் எழுதிக் கொடுக்கிறேன். மாதத்தில் ஒரு முறையாவது மூத்திரப் பரிசோதனை இருக்க வேண்டும்." என்று சொல்லிவிட்டு, சிரித்துக்கொண்டே போய்விட்டாள் லேடி டாக்டர்.

கண்ணாடியில் அவனுடைய உப்பின உருண்டை முகமும், கஜ அகல நெஞ்சும் தெரிந்தன. அன்று மட்டுமாவது மீசையை வழிக்காமல் விட்டு விடுவது என்று தோன்றிற்று அவனுக்கு. பிறர் முகத்தில் மீசை ஒரு வித வீரக் களையை எடுத்தக் காட்டியதைக் கண்டிருந்தான். எல்லாவற்றிலும் வெற்றி வீரன் அல்லவா அவன் ? கட்டாயம் மீசை பொருந்தும் அவனுக்கும். "தெரியுமா சரோஜ், எனக்கு ரொம்ப துக்கமாயிருக்கிறது. வேலை மும்முரத்தில் உன்னைக் கவனிக்க எனக்கு சமயமே கிட்டவில்லை. உன்னை எங்கும் வெளியிலும் அழைத்துப் போக முடியவில்லை என்னால். ஆனால் இது எனக்குக் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டிய விஷயம். என் ஜாதகத்தில் முப்பொத்தொன்பதாவது வயதில் எனக்கு குழந்தை பாக்கியம் உண்டென்று எழுதியிருக்கிறது. கூடவே இடமாற்றல், பதவி உயர்வு, மனைவியின் உடல் நோய் என்று எழுதியிருக்கிறது. அது தான் சரியாய்விட்டதே. என் முயற்சிகளின் பலனை எல்லாம் திரட்டிக் கொண்டு பிறக்கப் போகிறான் என் மகன். பார்த்துக் கொண்டே இரு, எனக்கு மேலதிகாரியின் பதவி கிடைக்கும் போலிருக்கிறது. அதை நினைத்துப்பார். ஓ! சரோஜ், சரோஜ்."

தலை குனிந்து மயங்கியவளாய் உட்கார்ந்திருந்தாள் சரோஜ். வெட்கமும், மகிழ்ச்சியும், அவளை ஆட்கொண்டன. பாக்கிய

வதி அவள். அவனுக்கு வந்த அதிருஷ்டமெல்லாம் அவளால் தானே! அவள் காரணமாகத்தானே அவன் உயர்ந்து கொண்டே போனான்! அவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. தனக்கே உரியவள் அவள் – ஒரே மனம் ஒரே ஆத்மா. வீடு வாசல் குடும்பம் எல்லாம் அவளுக்காகத் தானே, தன் மனைவிக்காக.

முறுவலித்தவாறு, அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் பலிதத். அவன் கண்களில் அந்த ஸனாதன சுவாமிகளின் சாயை தெரிந்தது – அதே தன்னம்பிக்கை, அதே கனவு மயக்கம், எவ்வித நிலைமையையும் தனதாகப் பாவித்து அதை அடக்கி வாழ விழையும் இயற்கை, அதே ஆசைகள், அந்தப் பரிச்சய மான தேகத்திடம் ஈர்ப்பு. அவன் கணவன். மனைவியைக் குருட்டு நம்பிக்கையுடன் விரும்புவது அவனுக்கு இயல்பு. அவநம்பிக்கை கொள்வது இயல்பல்ல. கண்ணாடியில் அவளுடைய அழகிய மெருகேறிய சரீரம் தெரிந்தது. தனது கரத்தைத் தூக்கி வளைத்து சதைப்பற்றைப் பார்த்தான், பெருமன்தான்.

"ஏ ஹர்ஷா, எண்ணெய் தேய்த்து மாலிஷ் செய், வா" என்று கர்ஜித்தான். பிறகு சரோஜினியைப் பார்த்தவாறு இருந்தான். எப்படியாவது அவளது உடலில் பலம் வரவேண்டும். நிதாயியை உடனே கடைக்கு அனுப்பினான் மருந்து வாங்கி வர. "கூடவே ஒரு ரூபாய்க்கு நல்ல ஆரஞ்சுப் பழம் வாங்கிக் கொண்டு வா" என்று உத்தரவிட்டான்.

"உன் உடம்பைப் பார்த்துக்கொள், சரோஜ், நியமமாய் மருந்து சாப்பிடு. இல்லாவிடில் குழந்தை எப்படி வளரும்? இதில் வெட்கப்படவோ, பயப்படவோ ஒன்றுமேயில்லை. ரொம்ப சாதாரண விஷயம்தான். அலட்சியமாக இருந்துவிடாதே. எதுவானாலும் ஒளியாமல் என்னிடம் சொல்லிவிடு. எல்லா ஏற்பாடும் செய்து விடுகிறேன். நோயாளி ஒத்துழைக்காவிட்டால் எப்படி? ஆனால் இது நோயல்ல, நினைவிருக்கட்டும். அனாவசியமாய் கலவரப்படாதே."

ஒரே மூச்சில் வேகமாய் எவ்வளவோ விஷயங்களைச் சொல்ல விரும்பினான். எவ்வளவோ விஷயங்களிலிருந்தன அவனுள். ஆனால் மூளையில் தன் கதையே சுழன்று கொண்டிருந்தது. அவன் நிறைய பணம் சேர்த்துவிட்டான். சோற்றுக்கவலை கிடையாது. இனிமேல் வேலையில் படிப்படியாய் ஏறி, இதோ ஏற்ற பெரிய பதவியை அடையப் போகிறான். ஆனால் குலமணி இன்றிச் செல்வம் அர்த்தமற்றதாயிருந்தது. பெருமையை இழுத்துக் கொண்டு போகக் கயிறும் இல்லை. "அதிகம் வேலை செய்யாதே, களைப்பாயிருக்கிறதா? படுத்துக்கொள் சரோஜ்.

பொழுது விடிந்து விட்டால் தான் என்ன ? நீ படுத்திரு, எனக்கு அவசரமேயில்லை. உனக்கு மருந்து கொடுத்துவிட்டுப் பிறகு போகிறேன். நீ தூங்கு."

சரோஜ் உண்மையாகவே படுத்துக் கொண்டுவிட்டாள். இவன் தான் அவளுடைய கணவன். திடீரென்று மனம் விட்டு அழ வேண்டும் போலிருந்தது அவளுக்கு. தலையணைக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

"நிமிர்ந்து படுத்துக் கொள் சரோஜ. ஹா! மறந்து போய்விட்டேன். காரைப் பற்றி இன்று தீர்மானமாய் சொல்ல வேண்டும். இல்லை என்றால் நீ எப்படி வெளியே போவாய் ? இன்று எல்லாம் சரியாய்விடும். நீ அலட்டிக் கொள்ளாதே."

★ ★ ★

அன்றாட வாழ்க்கை பழைய மஞ்சள் ஏறிப்போன ஏடுகளைப் போல் பறந்து போய்க் கொண்டிருந்தது. புதிய ஏடுகள் திறந்து கொண்டன. சில சமயம் புதிய அனுபவங்களுடன் பழைய சூழ் நிலைகளும், பழைய உணர்ச்சிகளும் ஒன்று சேர்ந்து சுவாரஸ் யத்தைத் தருகின்றன. ஒவ்வொரு சமயம் கடந்த காலத்தில் பிரிந்து உலர்ந்து போன நினைவு திரும்பவும் ஓடிந்து வளைந்து கண் முன் தெரியலாம். கழிவிரக்கம் நெஞ்சை அடைக்கிறது. ஆனால் உற்பத்தி செய்யும் சக்தி அதற்கில்லை. நினைவின் சந்துஷ்டி மட்டுமே அதற்குக் கிட்ட முடியும் மறந்தாலும் அந்த நினைவு முழுமையான பிரதிபலனைத் தருவதில்லை. ஏனென் றால் நடுவில் சமயம் என்ற பிரவாகம் ஒழுகுகிறது.

தன் மோட்டாரின் பின் ஸீட்டில் சுகமாய்ச் சாய்ந்து கொண்டு யோசித்துக் கொண்டிருந்தாள் சரோஜினி. முன் ஸீட்டில் டிரை வருடன் உட்கார்ந்திருந்தான் பலிதத். வண்டியின் நுணுக்கங் களை அறியும் ஆவலுடன் அடிக்கடி கேள்வி கேட்டவாறு இருந்தான். தானே வண்டி ஓட்ட கற்றுக் கொள்ள விரும்பினான்.

இது மிஸ்டர் சர்மாவின் வண்டி. சர்மாவின் மரணத்திற்குப் பிறகு அவருடைய உறவினர் வந்து எல்லா சமான்களையும் மலி வாய் விற்றுப்போனார். பலிதத் காரை வாங்கிக் கொண்டான்.

"தெரியுமா சரோஜ், சர்மாவின் வண்டியைப் போல் ஒன்று வேண்டுமென்று கேட்டாயே. இதோ பார் சர்மாவின் வண்டியே கிடைத்துவிட்டது பாவம். அவருக்கு எவ்வளவு ஆசைகள்! ஒருவர் வாங்குவதை மற்றொருவன் அனுபவிக்கிறான். இது தான் உலக நியதி போலும். எப்படியானாலும் எனக்குக் கிடைத்துவிட்டது. சர்மா இருந்திருந்தாலும் சந்தோஷப்பட்டிருப்பார். வண்டியு ன்

ஒரு மேற்கத்திய கண்டிராக்டர் வந்திருந்தான். "ரொம்ப நல்ல தாய்ப் போச்சு. உங்களுக்குப் பிடித்துவிட்டது. அம்மாவிற்குப் பிடித்துவிட்டால் என் முயற்சி வெற்றி பெற்று விட்டது என்று திருப்தி அடைவேன். மொத்தம் பதினோராயிரம் ரூபாய். கொஞ்சமா ? என்றான்".

இது தன் வண்டி. 'தன்' யார் ? சர்மாவுடையதா ? அவர் தான் போய்விட்டார், பலிதத்துடையதா ? அவன் பணம் கொடுக்க வில்லை அதற்கு. அந்தப் பதினோராயிரம் ரூபாய் கொடுத்த வனை இனிமேல் எப்பொழுதாவது சந்திப்பானா இல்லையா ? ஏனென்றால் பலிதத்திற்கு மாற்றலாய்விட்டது. வண்டியை உபயோகிப்பவனுக்குத்தான் உரியது வண்டி. அது அவனுடையதே ஆகும்.

எல்லாம் அப்படியே இருந்தது. அதே வண்டி, அதே நீண்ட நேர் ரஸ்தா, இருபுறமும் உயர்ந்த மரங்களின் வரிசை. இந்த மாலை வேளையில் எல்லாப் பிராணிகளும் தங்கள் தங்கள் இல்லத்தை அடைய விரும்புகின்றன. பறவை தன் கூட்டை நோக்கிப் பறக்கிறது. அவனுக்கு அந்த வழியும் சூழ்நிலையும் பழக்கமானவை.

கொஞ்சம் தூரத்தில் கம்பெனியின் மரமறுக்கும் மில்லின் சிறிய டிப்போ இருந்தது. பக்கத்தில் வனத்தின் நடுவில் கம்பெனியின் பங்களா, ரோடின் ஓரமாய் அதன் சுற்றுச் சுவர். உள்ளே என்ன இருக்கும் என்று அனுமானிக்க முடியும். நுழைந்த வுடன் இருபுறமும் ஒட்டு மாவின் சோலை. பிறகு ரோஜாப் பாத்திகள். செழிப்பாய் வளர்ந்து பூத்துக் கொட்டியிருக்கும். அவன் யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே அது தாண்டிப் போய்விட்டது. திடீரென்று பிரும்மாண்டமான தேக்கின் அடி தெரிந்தது. இடது புறத்தில் பாதி வெட்டப்பட்டிருந்த ஒரு குன்று. இங்கே இந்த வேளையில் கரடி உலவுவதாக வதந்தி. ஏதோ கறுப்புப் பாறையைப் பார்த்துவிட்டு "அதோ தூரத்தில், அது கரடியா ?" என்று சரோஜினி கேட்டு வைத்தாள்.

பிறகு கல் டிப்போ, கொஞ்ச தூரத்தில் மலை அடிவாரத்தில் சிறிய ஒரு பங்களா. பின்புறத்தில் ஒரு ஏரி. மேட்டு நிலத்து மரத்தடியில் ஏதோ வன தேவதையின் சந்நிதி. மரத்துடன் கட்டப்பட்டிருந்த ஒரு நீண்ட மூங்கில் மேல் பறந்தது ஒரு வெள்ளைக் கொடி. அந்த இடத்திற்கு அது ஒரு அடையாளம். பங்களாவின் பின் இருந்த ஏரியில் உயர்ந்த கல் ஒன்றிருந்தது. அதிலமர்ந்து பார்த்தால் சூரியாஸ்தமனத்தின் மனோரம்மியம் தெரியும் – மீன்களின் விளையாட்டும் தெரியும்.

ஒன்றிலிருந்து மற்றொன்று நினைவிற்கு வருகிறது. பழைய மறந்து போன நினைவுகள் புதுமை பெற்று மலரைப் போல் விரிகின்றன. இத்துடன் ஆகிவிட்டது ஜால வித்தை.

சர்மா இல்லை ரணஜித் பாபு இருந்தும் இல்லாததற்குச் சமானமாய் போய்விட்டார். உலக மக்கள் எவரும் பிறருக்காக வாழ்வதில்லை. வழிப்புழுதியுடன் நினைவுகளும் கலந்து போகின்றன. எத்தனையோ பரிச்சயங்கள், எவ்வளவோ அறிமுகமானவர்கள், பாதையின் கணக்கற்ற புழுதித்தூள்கள் – எதையும் பிரித்தறிய முடியாது. விசேஷ அனுபவங்கள் கூட நாளடைவில் தெளிவற்றுப் போகின்றன. போனது போனதுதான் –புதிது வரும்.

மாலை மயங்கி மயங்கி இருள் படர ஆரம்பித்துவிட்டது. வண்டி போய்க் கொண்டிருந்தது. சரோஜினியின் துக்க உணர்ச்சி கடைசி எதிர்ப்புக்கு தயாராயிருந்தது. பச்சா தாபத்தை எதிர்க்க அவளுடைய வாழும் தன்மை படை எடுத்து நின்றது. எல்லாம் முடிந்துவிட்டது என்று யார் சொன்னார்கள்? அவளுக்கு உடல், ஆராக்கியம், உயிர் வேகம் எல்லாம் இருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக அவளை வாழ்வுடன் இணைத்த நூல் அவளுள் வளர்ந்து கொண்டிருந்தது. அதனால் அவள் சஞ்சலப்பட்டாலும், அவள் தன் மனதுள் பலவித ஆவல்களை ஒழுகவிட்டு, கற்பனையில் திருப்தி அடைந்தாள்.

இருளுடன் மனதில் அந்த ஆவல்களின் வெப்பம் பொங்கி எழுந்தது. அவளது கண்கள் மாமிசாஹாரி மிருகத்தின் கண்களைப் போல் ஒளிர்ந்தன. சர்மா போய்விட்டார், ஆனால் அவருடைய வண்டி சரோஜினிக்காக இருக்கிறது. சர்மா போய்விட்டார். ஆனால் அவள் இருந்தாள். இந்த உலகம் நாம் அனுபவிப்பதற்காகத்தான். ஆனால் அனுபவிக்கும் சக்தி அவரவர் உள்ளத்தைப் பொறுத்தது. சர்மா போகட்டும், ரணஜித் பாபுவும் போகட்டும். வசுதா என்றும் பசுமையுடனிருப்பாள். சரோஜினியும் நெருப்பைப்போல் இருப்பாள். வெப்பமடைந்த பூமியைப் போல் அவள் எல்லாவற்றையும் உறிஞ்சி எடுத்துக் கொள்ள விழைந்தாள். தாய்மையின் உருவமான பெண்ணின் தாகம் உறிஞ்சித் தணியவிரும்புகிறது. ஆனால் யாரை உறிஞ்சுவது? மோட்டார் 'ஸை . . . ய் . . .' ப் என்ற ஓசையுடன் போய்க்கொண்டிருந்தது. வெளிச்சத்தில் முன்னே வழி தெரியத் தெரிய, பின்னே அது முடிந்துகொண்டே வந்தது அப்பவும் முன்னே நீண்டு கிடந்தது திறந்த ராஸ்தா.

சூடேறிய உடலிருந்து மூச்சுடன் தன் உணர்ச்சிகளையும் சுதாரித்தபடி அந்தப் பழைய ஊரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தாள் சரோஜினி. அவளுடைய சிறிய பழைய வீடு தெரிந்தது. அந்தப் பையன் உடற்பயிற்சி செய்வானே முன்பு என்று நினைவு வந்தது. புல்லாங்குழல் ஊதுவான் அவன். யார் யாரோ கண் முன் தோன்றினார்கள், மனத் திரையில் மஹாபாத்ர பெரிய ஆபீஸர். அப்பொழுது அவள் அவரைப் பார்க்க மட்டுமே செய்தாள். அவள் மனக் கதவு திறக்கவில்லை மூடிக்கிடந்தது. ஆனால் அன்று அவள் மனதில் தோன்றியது இன்று உண்மையாய்விட்டது. பழைய நினைவுகள் அவள் கண் களைத் திறந்தன. காரணங்களை ஆராய்ந்தவாறு, கடந்த கால சிக்கல்களைப் பிரித்தவாறு அவள் அந்த ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். ஆனால் மாறின நிலைமைகள் போனதெல்லாம் போயிற்று. அவள் எண்ணமெல்லாம் தன்னைப் பற்றித்தான். ஒரு வேளை எதிர் காலத்தில். . .

இரவு ஒன்பது மணி, ஊரின் விளக்கெல்லாம் அவர்களை நோக்கி ஓடி வருவதைப் போன்ற ஒரு பிரமை. திடீரென்று பலிதத், "தூங்கிவிட்டாயா சரோஜ் ?" என்றாள்.

"இல்லை".

"வழியெல்லாம் ஒரே அமைதியாயிருந்ததே. நன்றாய் களைப் பாறி இருப்பாய் இல்லையா ? அது தான் சரி. டாக்டர் உன்னை வேண்டிய மட்டும் ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்லியிருக் கிறார். உன் உடம்புக்கு இவ்வளவு நீண்ட பிரயாணம் நல்ல தில்லை. எப்படியும் புது வண்டி ஆரம்பத்திலிருந்தே உபயோகப் பட்டுவிட்டது. ஓடும் இந்த வண்டியில் ஒரு டம்ளர் தண்ணீர் வைத்தால் அது கூடச் சாயாது என்று சொல்கிறார்கள் அப்படிப் பட்ட வண்டி இது. உனக்கு எப்படி இருந்தது ? இதோ வீடும் வந்துவிட்டது".

பரிச்சயமான பலிதத்தின் ஆபீஸ் தெரிந்தது. பிறகு அந்தக் குறுகிய பாதை அதன் இரு பக்கமும் வீடுகள். கடைசி வீடு பலிதத்தின் பழைய இல்லம். அதன் வாசலில் ஆரஞ்சுமரம், பப்பாயா மரம், பக்கத்தில் சமையலறை – குடும்பப் பெண் சரோஜினியின் உத்தியோக இடம். பழைய குளத்தின் ஈரவாசனையைப் போல அந்தப் பழைய வாழ்க்கையின் அமைதி மேலே படுவதைப் போல் தோன்றியது அவளுக்கு. கண்கள் மூடிக் கொண்டன. அது பசுவின் வாழ்க்கை, கண்கள் பார்த்தன. ஆனால் அங்கு அனாவசிய பதிலற்ற கேள்விகளை எழுப்பி விட்டுக் கொண்டு, வெளிப் பார்வைக்காக ஓட்டமும், சாட்டமும்

கிடையாது. அமைதியான வாழ்க்கை. வண்டி திரும்பிக் கொண்டிருந்தது. இடது பக்கம் அந்தப் பரிச்சயமான பாதை. சரோஜினி, "அங்கே எங்கே போகிறாய் ? வழி மறந்து விட்டதா ? அரே டிரைவர், பாதை இடது பக்கம் இருக்கிறது. தாண்டிவிட்டது." என்று கத்தினாள்.

வண்டி போய்க் கொண்டிருந்தது. ஹோ ஹோ, என்று சிரித்தவாறு பலிதத் "சரி தான் நாம் போகும் வழி, சரோஜ், நாம் அந்தக் குறுகிய பாதையிலா திரும்பிப் போவோம் ? நீ யார் என்று மறந்துவிடுகிறாய். பெரிய துரையின் வீடு, நம் வீடு இதோ வரப் போகிறது. நாம் நம் இலக்கை அடைந்துவிட்டோம். அதோ நம் வீடு, தெரிகிறதா ? " என்றான்.

சரோஜினியின் உடலில் மின்சாரம் பாய்ந்தது. ஆமாம், அவளுடைய நிலைமை மாறிவிட்டது. நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு, கடுமையான கடமை நோக்குடன், எதிரே தெரிந்த காம்பௌண்டின் பெரிய வாசலைப் பார்த்தவாறு இருந்தாள்.

★ ★ ★

ஆபீஸ் கட்டிடத்தை அடுத்து சிறு தோட்டம் ஒன்று விசேஷப் பராமரிப்பு இன்றி சோபையற்று கிடந்தது. ஆனால் அது கம்பெனி பெரிய அதிகாரிகளின் உயர் தன்மையின் ஒரு சின்னம். உட்கார கல் பெஞ்சுகளும், நடக்க மண் பாதைகளும் இருந்தன. யார் வேண்டுமானாலும் அங்கு உலவலாம். அதன் இடுப்பளவு மண்டிக் கிடந்த புல் புதர்களைத் தாண்டிக் கொண்டு கார் கராஜ்ஜை அடைய வேண்டும். எல்லா வண்டிகளும் அந்த வழியாகத் தான் போக வேண்டும். பாதையின் இரு புறத்திலும் புல் வெவ்வேறு உருவங்களில் வெட்டி விடப்பட்டிருந்தது. பக்ஷியைப் போல், அல்லது இலையைப் போல். புதர்கள் மயிலைப் போலவே யானையைப் போலவே உருவாக்கப் பட்டிருந்தன. சட்டிகளில் உயிரற்ற செடிகள் வளர்ந்தன. இங்கு மங்கும் கவர்ச்சியற்ற சில மலர்கள், சிகப்பு அரளி, மந்தாரை, ஓரத்தில் கல் வாழை, எல்லாம் உலர்ந்து கேட்பாரற்று இருந்தன. அங்கு வரை நீர் இரைப்பது சாத்தியமல்ல என்று தோட்டக்காரன் விளக்கினான். அனாவசியச் செலவென்று ஆட்சேபித்தனர் ஆபீஸர்கள். வளரும் புல்லைக் கூட வளரவிடாமல் அங்கு ஆடுகள் மேய்ந்தன. அங்கு பல மூங்கில்களை நாட்டி இருந்தனர். அவைகளைக் கூட விட்டு வைப்பதில்லை, விறகு தேடி அலையும் பெண்கள். இது தான் தோட்டம்! அதற்கு அகலமான வாசல், பூட்டிய கதவுகள்.

அந்தத் தோட்டத்தில் உலவி, பசுமையில் ஊறி, தங்கள் உடல் – மனக்களைப்பை கம்பெனியில் வேலை செய்கிறவர்கள் இழந்து புத்துயிர் பெறுவார்கள் என்ற நல்லெண்ணத்துடன் தான் அதைப் பேணினார்கள். ஆனால் அவர்களுக்கு வேலையை விட்டு எழுந்து வர ஓய்வுகிட்டினால் தானே ? தோட்டம் கிடந்தது, பாதி உயிருடன், உலர்ந்து போய்.

புதிய அதிகாரியை வரவேற்க, அபிஷேகம் செய்யக் கூட்டம் கூடியிருந்தது. அந்தத் தோட்டத்தில் மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. கம்பெனி வேலை பார்ப்பவர்கள் எல்லோரும் வந்துவிட்டனர். இங்கும் பதவிக்குத் தகுந்தாற் போல் இருக்கை. பெரிய துரை, அடுத்து அவரைவிடச் சின்னவர், தூரத்தில் குமாஸ்தாக்கள், சப்ராஸி முதலியோர்.

சிற்றுண்டி விநியோகம், நாலாவித அரட்டை, பிறகு வரவேற்புச் சொற்பொழிவு, தொடர்ந்து அதற்கு மறுமொழி.

பலிதத் சுற்றிப் பார்த்துக் கொண்டான். இது தான் அவனுடைய சேனை. அவனுடைய அதிகாரத்திற்குட்பட்டவர்கள். அதில் பலரை அவன் அறிந்திருந்தான். பலருடைய முகம் பரிசய மானதாய்த் தோன்றியது. பலர் புதியவர்கள். பழையவர்களும் புது நிலையில் புதியவர்களே. அவர்களுடன் தொடர்பு கொள்ள பலிதத் அவசரப்படவில்லை. ஏனென்றால் அதனால் கட்டுப்பாடு நெகிழ்ந்து போகக்கூடும். தெரிந்தவர்களிடமும் அவன் பேசவில்லை. ஆனால் மனதில் இரு அலைகள் வீசின. தன் உயர்வால் ஏற்பட்ட பெருமையுடன் அதிகாரமும் ஒரு புறம் அவனை புளகாங்கிதமடையச் செய்தன. கூடவே பழைய நினை வுகள் – அந்தப் பக்கத்துக் குழுவிலிருந்து பிரிந்து படிப்படியாய் ஏறிக் கொண்டே வந்துவிட்டான் – மேல் வரை. அவர்கள் என்ன நினைப்பார்களோ ? பொறாமைப்படுவார்களோ அல்லது மெச்சுவார்களோ. ஆவலை அடக்கிக் கொள்ள முயற்சித்தான். ஆனால் முடியவில்லை. இதோ, "ஏங்கட்ராவ்" ? "யெஸ் ஸார்" ரொம்ப இனிமையாக ஒலித்தது. அந்த "ஸர்!" ஏங்கட் ஆதரவின் அவதாரம். அவனுடைய முதுகு வளைந்துவிட்டது. கண் தலையை நோக்கியது. இதற்கு பிறகு என்ன ?

"ஏங்கட் ராவ்" ?

"யெஸ் ஸார்"

"எல்லாம் சரியாய் நடக்கிறதல்லவா ?"

"உங்கள் தயவில் எல்லாம் நலம், ஸார்".

"பனு எங்கே காணோம் ?" அவனுடைய பழைய கூட்டுழைப் பாளி பனு பிஹாரி பட்நாயக் இந்தக் குழுவில் காணோம். வெகு

நாட்களாய் அவனைப் பற்றிய செய்தி ஒன்றும் எட்டவில்லை. இரண்டு வார்த்தை உபதேசம் செய்ய விரும்பினான் பலிதத் "பனு உன் வழியை மாற்றிக் கொள். பிடிவாதத்தால் லாபம் ஒன்றுமில்லை" என்று எடுத்துரைக்க நினைத்தான். உபதேசம் செய்வதா ? இல்லை இப்பொழுது அவன் மேலதிகாரி, கம்பீரமாய் அவனைக் கண்டித்துப் பேசுவான். "இவ்விதம் நடந்து கொண்டாயானால் கடுமையான நடவடிக்கை எடுக்காமல் இருக்க முடியாது. கம்பெனி வேலையில் கட்டுப்பாடு இருப்பது அவசியம். என் பதவியில் வேறு எவராவது இருந்தால் என்று செய்திருக்கக்கூடும் என்று யோசித்து பார்" என்பான்.

மனதுள் இதைச் சொல்லிக் கொண்டே அவனுடைய உதடுகள் நடுங்கின, புருவங்கள் உயர்ந்தன. கூடியிருந்தவர்களை எரியும் கண்களுடன் ஆராய்ந்தான். இவ்வளவு அலட்சியமாக இருந்து விட முடியுமா பனுவால் ? நட்புரிமை கொண்டாடிக் கொண்டு சிலர் வரக்கூடும். பலர் தங்கள் இல்லாமையை அழுது கொண்டு, அவனுடைய தயவை நாடி வருவார்கள். அவர்களுடைய குறைகள் உண்மையானவையாயிருக்கலாம். ஆனால் அவன் கொஞ்சம் கூட இளகிக் கொடுக்கமாட்டான். அவனுடைய கட்டுப் பாட்டிலிருந்து பிரிய நண்பனான பனு கூடத் தப்ப முடியாது. இதோ இப்பவே அவன் தன் அலட்சியத்தைக் காட்டிவிட்டானே. அவன் வரவில்லை. நல்வாழ்த்துக் கூறவோ, குசலப்பிரசனம் செய்யவோ வரவில்லை. அவன் எங்கேயாவது பீடி பிடித்துக்கொண்டு, எதிர்ப்புப் – பேச்சு பொழிந்து கொண்டிருப்பான். வெற்று வெடிகள். ஆனால் அவனுக்கு அது தான் உகந்ததாயிருந்தது. இந்தப் பிரசார வெற்று வெடிகள் பிறகு உண்மையான நெருப்பைக் கக்கும் குண்டுகளாய் மாறிவிடலாம். பலிதத் கம்பீரமாய் யோசித்தான். சிறு கனல் பிறகு பெரிதாய் வளர்ந்து கம்பெனிக்குக் கோடி நஷ்டத்தையும் உண்டாகலாம். அடியிலிருந்தே ஜாக்கிரதையாய் இருப்பது தான் புத்திசாலித் தனம். அதனால், கழுத்தில் பூமாலை விழுந்தது – வரவேற்பு மொழிகளைக் கேட்டான் – மனசந்துஷ்டியைக் காண்பிக்க முறுவலித்தான். சரோஜினியும் வந்திருக்கலாம் என்று நினைத்தான். அது உசிதமாயிருந்திருக்கும். இவ்விதமான சமூக உற்சவங்களை அவளால் திறமையுடன் சமாளிக்க முடியும். அவள் முகத்தில் போஹினி சக்தி ஜ்வலித்தது. அதை நினைத்துப் பார்த்ததும் அவன் முகத்தில் மென்மையான முறுவல் தோன்றியது. காலங்காலமாய் நிகழ்ந்து கொண்டு வந்த நல்வாழ்த்துச் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

"உங்களுடைய திறந்த மனப்பான்மையும், மனிதத் தன்மையும், ஏழை எளியவர்களிடம் உள்ள ஆழ்ந்த அன்பும், அனுதாபமும், எல்லோருக்கும் தெரிந்ததே. உங்களுடைய திறமையும், வேலையில் கட்டுப்பாடும், புத்தி கூர்மையும் விசாலமான தூர தரிசனமும் உங்களைக் கம்பெனியின் நம்பிக்கைக்கு கௌரவத்திற்கும் பாத்திரமாக்கி உள்ளன. உங்களைப் போன்ற உத்தம புருஷன் எங்களுக்கு அதிகாரியாய் வந்திருப்பது பூர்வ ஜன்மங்களின் கர்ம பலனே ஆகும். . . "

இவ்வளவு குணங்களா அவனிடம்! நேற்று நடந்ததைப் போல் தோன்றுகிறது – இதுதான் அவனுடைய வேலை ஸ்தானம். யாரும் கேட்பாரில்லை அப்பொழுது. ஆனால் அப்பொழுதும் தன் நம்பிக்கை பலமாய் இருந்தது. அதனால் தான் அவன் அன்று சரோஜினியிடம், "நீ பார். அவர்கள் புரிந்து கொள்வார்கள், யோக்கியதை ஒளிந்திருப்பதில்லை. சாதனை வீண் போவதில்லை." என்று மார் தட்டினான்.

இன்று அவர்கள் அவனைப் புரிந்து கொண்டு விட்டார்கள். அவனுடைய உத்தியோக ஆசனம் நிலைத்துவிட்டது – அவனுக்காக மட்டும் அல்ல, அவனுடைய பிறக்கப்போகும் மகனுக்கும், தொடர்ந்து பல தலை முறைகளுக்கும் கூடத்தான். அவனால் பரம்பரையை நிலைநாட்ட முடிந்துவிட்டது.

பலிதத் பேச எழுந்து நின்றான். பெருமையுடன் பார்த்தான். "தான் பெரியவன்" என்று அவன் கர்வம் அடைந்தான். மனம் பூரித்து விம்மியது. வார்த்தைகள் தானாக வெளிவந்தன. உள்ளிருந்து வேறு யாரோ பேசுவதைப் போலிருந்தது அவனுக்கு. எல்லோரும் கேட்டுக் கொண்டிருந்தனர். சிலர் எழுதிக் கொண்டிருந்தனர்.

"கடைசியாக ஒன்றிரண்டு விஷயங்கள் சொல்ல விரும்புகிறேன். அறம் என்றால் என்ன ? அது கடவுள் பூஜை மட்டுமல்ல. கடமையைச் செய்வதுதான் உண்மையான அறம். கடமை என்றால் என்ன ? அது பல பொறுப்புகளின் கூட்டுமுகம் – தன்பால், கடவுள் பால் , எல்லாவற்றையும்விட முக்கியம் நம் வேலையின் பால் உள்ள பொறுப்பு. இந்தப்பல பொறுப்புகளுள் எதைத் தேர்ந்தெடுப்பது என்று எப்பொழுதாவது மனதில் போராட்டம் எழலாம். பெரிய பொறுப்பிற்கு முதலிடம் கொடுத்தீர்களானால் சந்தேகம் இராது. மனம் பலவீனப்படாது. கடமைக்காக தியாகம் செய்ய வேண்டி வருகிறது. பூஜைக்கு பலி இடுவதுபோல் அந்த தியாகத்தில் தான் ஆனந்தம் இருக்கிறது. வேலையில் தான் நிம்மதி கிட்டுகிறது. சோம்பல் ஒரு நோய். அதில் ஓய்வு இல்லை.

பைல்களில் மூழ்கிப்போகும்போது எனக்கு உச்சநிலை ஆனந்தம் கிட்டுகிறது. இது என் அனுபவம். வேலை மூலம் தான் நமக்கு வாழ்க்கை அனுபவங்கள் கிட்டுகின்றன. தூக்கத்தில் அவை கிட்ட வகையில்லை. எல்லோரும் என்னைப்போல் நினைக்கமாட்டார்களாயிருக்கலாம் — நான் என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். நீங்கள் யோசித்துப்பாருங்கள் . . ."

கைத்தட்டலில் அமளியின் நடுவில் எல்லோரும் வந்து அவனை சூழ்ந்து கொண்டனர். மரியாதையாய் வணங்கிவிட்டு விடை பெற்று கொண்டனர். ஏங்கட் ராவ் நிழலைப் போல் சுற்றிக்கொண்டிருந்தான். பலிதத் அவனை கூப்பிட்டான்.

"ஏங்கட் ராவ்" –

"யெஸ் ஸார்"

"கொஞ்சம் இப்படி , – ". 'வா என்று சொல்லுவதா' என்று 'வாருங்கள்' என்று தடுமாறினான். அதனால் "கொஞ்சம் இப்படி ஒரு வேலை இருக்கிறது" என்றான்.

"யெஸ் ஸார்"

"இப்பொழுது எந்த ஸீட்டிலிருக்கிறாய் ?"

"நிலம் , வீடு, பாலம், பாதை முதலிய பணிகளைச் சேர்ந்த கோதாமின் சார்ஜ் என்னிடம் இருக்கிறது".

"சரிதானே எல்லாம் ? "

"யெஸ் ஸர்"

"கை பார்ப்பது, ஜாதகம் பார்ப்பது எல்லாம் நடக்கிறதா ? ".

ஏங்கட் ராவ் சிரித்தான். "யெஸ் ஸர். உத்தரவிருந்தால் நாளைக்கு வரவா ?".

"உன் பிஹாரி நினைவிருக்கிறதா ? என்ன மனிதன் அவன்! பாக்கி எல்லோரும் சரியாய் இருக்கிறார்கள்".

"யெஸ் ஸர்".

"இப்பொழுது எங்கே அவன் ? எந்த வேலை அவன் பொறுப்பு ? இங்கே அவனைக் காணவில்லையே ஏன் ?".

"அவன் வேலையை விட்டு எவ்வளவோ நாளாய் விட்டதே, ஸர் !'

"ம் ? ஐயோ பாவம்! ஒரே அடியாய்ப் போய்விட்டானா? எப்படி நடக்கிறது ஜீவன் ? எப்படி சாப்பிடுகிறான் ?"

"அவனுக்காக கவலைப்படவேண்டாம் ஸர். அவன் க்ஷேமமாக்காய் இருக்கிறான் பெரிய மனிதன் என்று கூடச் சொல்லலாம் அவனை." "வேலையை விட்ட பிறகும் பெரிய மனிதனா ? அவன் சன்னியாசி ஆகிவிட்டானா, இல்லை அரசியலில் . . ."

"இல்லை ஸர். வியாபாரி ஆகிவிட்டான். பெரிய எலெக்ட்ரிகல் குட்ஸ் கடை ஒன்று, ரேடியோவும் விற்கிறான். ஊரில் பேர் போனவன்" –

"ஆச்சரியம்தான்"

"ஒன்றுமில்லை ஸர். இது வியாபார யுகமாச்சே. மேலும், எலெக்ட்ரிகல் வேகமாய் முன்னேறிவருகின்றது. அவன் ஆபீஸில் சண்டை போட்டுக்கொண்டு வெளியேறிய பொழுது எல்லோரும் வேறு வேலைக்குப் போவான் என்று நினைத்தார்கள். கையில் ஒரு காசு இல்லை. குடும்பமும் சிறிதல்ல. கடனும் ஏகப்பட்டதி ருந்தது ஆனால் நான் அவனுடைய கையைப் பார்த்தேன். பிறகு"

ஏங்கட் ராவை நடுவில் தடுத்து "நல்லது. அப்புறம் பேசலாம். நமஸ்காரம்" என்று சொல்லி பலிதத் விடை கொடுத்தான். ஏங்கட் ராவ் நமஸ்காரம் சொல்லிவிட்டு உடனேயே போய்விட்டான். பலிதத் தன் காரைப் பார்த்தவாறு நின்றான். அவனுடைய எரிச்சல் எல்லாம் ஏங்கட் ராவின் மேல் இறங்கியது. 'இவர்களே இப்படித்தான். கொஞ்சம் இடம் கொடுத்தால் அரட்டை அடிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஏங்கட் ராவின் பேச்சை நடுவில் நிறுத்தியது உசிதம்தான். சமயம் மாறிவிட்டது என்று அவன் புரிந்துகொள்ள வேண்டும்.

காரில் ஏறிக்கொண்டான். நேரே வீட்டெதிரில் போய் நின்றது. மனம் சரியாயில்லை. பனு பெரிய மனிதனாய் விட்டான். ஏன் ? அவன் என்ன தியாகம் செய்தான் ? முயற்சி தான் என்ன செய்தி ருந்தான் அவன் ? உல்லாசமாய் உலவிக் கொண்டிருந்தனர் பலர் – அவர்களும் முன்னேறி விட்டனர். ஏன் அப்படி ?

உலகத்தின் மேல் வெகுண்டு எழுந்தான் பலிதத். அதன் அநீயை நிந்தித்தான். தன் விஷயத்தில் அநியாயம் நடந்துவிட்டது என்று தோன்றிற்று அவனுக்கு – மனம் குமைந்தது.

பங்களாவை அடைந்தான். சரோஜினி அங்கு இல்லை – வீடு வெறிச்சோடிக் கிடந்தது.

சப்ராஸிகள் உலவிக் கொண்டிருந்தனர். ஹர்ஷா ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். காலை ஆட்டியபடி கொய்யாப்பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். சப்ராஸிகள் சலாம் அடித்தனர். ஹர்ஷா கொய்யாவை மறைத்துக் கொண்டு பலிதத்தின் ஷூ லேசை அவிழ்க்கக் குனிந்தான். சமையலுள்ளில் வேலை ஆரம்பித்து விட்டிருந்தது. பேச்சுக்கலவரம் கேட்டது. விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அலங்காரங்களும் ஏற்பாடு களும் பெரிய துரையின் வீட்டிற்குத் தகுந்தாற் போல் வெகு மேன் மையாயிருந்தன. அகன்ற வாராந்தாவின் கீழே பூந்தொட்டிகள்

வரிசையாய் வைக்கப்பட்டிருந்தன. பெரிய தோட்டம் சூழ்ந்திருந்தது. "ஏண்டா, யஜமானி அம்மா எங்கே?" பலிதத் கேட்டான். "முன்பு அங்கு வசிக்கும் பொழுது காரில் வருவாரே, அவர் வந்திருக்கிறார். அம்மாவும் அவரும் சிற்றுண்டி அருந்தினர். பிறகு இருவருமாக வெளியே போனார்கள். அவர் இரவு இங்கே தான் தங்குவார்." என்று ஹர்ஷா விளக்கினான்.

"யார் அவர்?"

"அவர் தான்! முன்பு காரில் வருவாரே" என்று திரும்ப ஆரம்பித்தான் ஹர்ஷா.கிராமஃபோன் ரிகார்டு பேசிற்று. அவன் சமாசாரம் சொன்னானே தவிர அதில் அவனுக்கு சுவாரசியம் இல்லை. "அடே, எந்த பாபு வந்தார். எத்தனையோ பேர் வந்தார் களே அன்று அங்கு. யார், ரணஜித் பாபுவா அல்லது வேறு யாராவது?"

திடீரென்று மூளை கொதித்தது. ஒரு புதிய நிலைமை இது. கீழ் உதட்டை பல்லால் கடித்துக்கொண்டான். எதிரில் இருந்த எதுவும் அவனுக்குப் புலப்படவில்லை. ஆனால் பார்வையற்ற கண்களால் கண்டான் ஒரு பயங்கரத்தை. அவனுடைய மனதிலிருந்த பூதம் இங்கு நாலாபுறமும் உலவிக்கொண்டி ருந்தது. ஆடிக்கொண்டே அவனை எள்ளி நகைத்தது. எலும்பில் நெருப்பைக் கொட்டியது. ஐயோ – என்ன வேதனை இது! எங்கே போயிற்று அவனுடைய பெரிய மனிதத்தனம்? என்ன வெற்றி இது! யாருக்காக? அவனுக்கு என்ன கிடைத்தது?

இரு கைகளாலும் தலையைப் பிடித்தபடி இருட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான். இதுதான் அவனுடைய பாதை – முடிவற்ற பாதை. இங்கு தான் அவனுடைய முற்றுப் பெறாத கதை; வாழ்க்கையில் வெற்றியைத் தேடி, பேரம் பேசி, பகல் இரவு என்று பாராமல் நாளை ஓட்டின இடம். ஆனால் அவன் உடலில் நெருப்புச் சுட்டது.

சரோஜினி திரும்ப ஊர் சுற்றப் போய்விட்டாள். "ஐயோ!" பற்றி எரிந்தது அவனுக்கு.

பலிதத் வேகமாய் எழுந்து நின்றான். நேரே ஆபீஸ் அறைக்குள் போய் உட்கார்ந்து கொண்டான். ஃபைல் குவியலிலிருந்து ஃபைல் ஒன்றை எடுத்தவாறு "சப்ராஸி" என்று கூப்பிட்டான்.

"ஹுஜூர்"

"ஸ்டெனோ பாபுவை சீக்கிரம் அழைத்து வா" என்றான்.

அப்பாடி, இதுதான் சரி, இங்குதான் நிம்மதி. இங்கு அவன் யஜமானன், இது தொழிற்சாலை. இங்க வாழ்க்கை பின் தங்கிவிடுகிறது.

